உ

சிவமயம்.

கடவுண்மாமுனிவர்

இயற்றிய

# திருவாதவூரர்புராணம்.



இது

யாழ்ப்பாணத்துச் சுன்னுகம்

அ. குமாரசுவாமிப்புலவரால்

பெரும்பாலுந் திருத்தப்பட்ட

உரையுடன்

கொக்குவில்

இ. சிவராமலிங்கையரால்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இராக்ஷதஹு ஆவணிமீ

இதன்விலை ரூபா—க.



சிவமயம்.

# உபநியாசம்.



திருவாதவூரர்புராணம் என்பது திருவாதவூரருடைய புராணம் என விரியும். திரு—அழகு, செல்வம், இலக்குமி. வாதவூரராவார் பண்டைக்காலத்திற் பரவிய பௌத்தம் முதலிய பரசமயங்களைக் கட்டழித்துச் சைவசமயமே சமயம் எனத் தாபநஞ் செய்யுமாறு சிவாஞ்ஞையினாலே வாதவூரிலே சம்புபாதாசிரிதர், அவர் பத்தினியார் சிவஞானவதியார் என்பார் இருவருக்கும் புத்திரராய் அவதரித்த ஒரு சிவபத்தர். "நன்னெறிவிடையிற் போந்தோர் நன்கணத் தலைவர் நாமம்—இன்னெறி வாதவூர ரென்னவந்துதயஞ் செய்தார்" எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடலும், "திருவாதவூரரெனுந் திருநாமந் தரித்தார்கள்" என இப்புராணமுங் கூறும். ஆதலின் இவருடைய பிள்ளைத் திருநாமமும் இதுவேயாம். இந்நாமம்பற்றியே திருவாதவூரர்புராணம் என்பதும் இந்நூற்குப் பெயராயிற்று. புராணம்=பழங்கதை. இவரை வடநூலார் வாதபுரேசர் என்பர். மாணிக்கவாசகர் என்னும் பெயரும் இவருக்கு வழங்கும்.

வாதவூர் என்பது பாண்டிமண்டலத்திலே வைகையாற்றங் கரையிலே உள்ளதோர் ஊர். இதனை "விடையேறி தங்கியவூர்" என்றும், "பழமறைதே ரந்தணர்கள் பயின்றுளவூர்" என்றும், "நீதிமாமதூகநீழனெட்டிலையிருப்பையென்றோர்—காதல்கூர்பனுவல்பாடுங்கபிலனார்பிறந்தமூதூர்" என்றுங் கூறுவர் வாதவூர் என்னும் பெயர் கலியுகத்திலே வாதராசன் வந்து வழிபாடு செய்த காரணம்பற்றி வந்த பெயர். "கடையுகம் வாதராசன்—நீதியின் வணங்கவாத புரமென நிகழுமூதூர்" என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடல். வாதராசன்—வாயு. வாதபுரம் என்பது வடமொழி. வாதவூரருடைய அவதாரம் நந்தியந்தேவருடைய அவதாரம் என்பது பின்வருந் தேவாரத்தாற் பெறப்படும்.

# உபந்நியாசம்.

## தனித்திருத்தாண்டகம்

குராமலரோ டார்மதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் பவனைப்பே ரியம்பக் கொண்டார்
இடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே.

நந்தீசன்—நந்திதேவன். வாசகன்—மாணிக்கவாசகன். பராபரன்—மேலானபரன். இதனால் இவரவதாரமன்றி இவர் மூவருக்கும் முன்றுதித்தவர் என்பதும பெறப்படும்.

வாதவூரரோ வேதம், வேதாங்கம் முதலிய சாத்திரங்களையும், சைவசாத்திரங்களையும், மற்றைச சாத்திரங்களையும முற்றக் கற்றவர். "மறைமுடிவிற் பயில்கருத்தும் மனனியமெய்ப் பொருள்விருப்பும்—கறைமிடற்றோன் றிருவடிக்கீழ் மெய்யன்பும் கடுந்துயர்நோய்—பறையவரு மிம்மூன்றும பரிந்தியல்பாக் கிடைத்தமன—நிறை" வுடைமையும், எண்வகைப்பத்தியும் பெற்றவர். திருவாசகம, திருக்கோவை என்னும் பிரபந்தங்களுஞ் செய்தவர். செயற்கரிய அற்புதங்களுஞ் செய்தவர் "மத்தனெனும் புத்தனுடன் பெருவாது வென்று" சைவஸ்தாபநமுஞ் செய்த சமயகுரவர்.

### எண்வகைப்பத்தி

### திருக்குற்றாலப்புராணம்.

விம்மிதம்புளகம்போர்த்தல்விழிப்புனன்மொழிதள்ளாடல்
செம்மைசோசரியையாதிதிருத்தொண்டுதுதியாநம்
அம்மவோதிருப்பணிக்கென்றீட்டுவதழிதருண்மை
எம்மையாளுடையான்றொண்டரெணவகைப்பத்திமாதோ.

இத்துணைப் பெருமை வாய்ந்த இப்பத்தசிகாமணியின் கதை கூறும் இப்புராணம எத்துணையுஞ் சிறந்தது என்று யாமெல்லாம் போற்றல் வேண்டும். அன்றியும் இது சிவபுராணம் எனவுஞ் சொல்லப்படும். எப்படியெனிற் கூறுதும். இப்புராணகதை ஆலவாயவிர்சடைக் கடவுள் செய்தருளிய அற்புதம் அமைந்த அறுபத்துநான்கு திருவிளையாடற் கதைகளுள் ஒன்று. அதுவும் சரி

பரியான திருவிளையாடற் கதை. திருவிளையாடற் கதைகளுக்கு முதனூல் ஆலாசிய மான்மியம். அதற்கு முதனூல் "குன்றெறிந்த வேள் வழிபடுங் குறுமுனிக்குரைத்தான்—அன்றுதொட்டஸ்தகத் திய சங்கிதையாகி—நின்றது" எனப்படுஞ் சங்கரசங்கிதை. சங்கர சங்கிதை காந்தபுராண சங்கிதைகள் ஆறனுள் ஒன்று. காந்தபுரா ணம் சிவபுராணம பத்தனுள் ஒன்று. சிவபுராண சிரவணத்தாற் பாவம் நீங்கும்! புண்ணியம் ஓங்கும்! பத்தி வாய்க்கும்! பரகதி கிடைக்கும்! அருளொனுங் குழவியும் அணையும்!

காசிரகியம்.

திருத்தகு சிவபு ராண சிரவண விசேடத் தாலே
உருத்தகு பாவ நீங்கும் புண்ணிய மொருங்கு மேவும்
மருத்தகு பத்தி வாய்க்கு மாதேவ னருளுண டாகும்
கருத்தகு தீமை யெல்லாங் கழன்றுமேற் கதியுண் டாமால்.

இப்புராணகாரர் வரலாறு புலப்படவில்லை இப்புராணம் ஈண் டைச் சைவாலயங்களிலே பெரும்பாலும் படித்துப் பொருளும் சொல்லப்பட்டுவருகின்றது. சைவபாடசாலைகளிலும் பாடமாகக் கொண்டு படிப்பிக்கப்படுகின்றது இங்ஙனமாதலின் இதனை அச் சிட்டுதவுதல் எமக்கும் பிறர்க்கும் நலம் பயக்கும் என்று கருதிச் சுன்னாகம் அ. குமாரசுவாமிப்புலவரைககொண்டு மூலபாடத்தைச் சுத்திசெய்வித்து முன்னர் அச்சிட்டனம். பின்னர் அதனை நோக் கிய அத்தியாபகர் சிலர் "மூலபாடத்திற் பலபாகம் பழையநிலை மாறிப் புதியநிலையாயிற்று." என்று புறங்கூறினர். இவர்கூற் றென்னையோ! என ஐயுற்றுப பின்னர்ப் புலவரவர்களை வினவி னேம். வினவியபோது புலவர் நாம் கொண்ட பாடங்கள் நவீந பாடங்களல்ல என்றும், பழைய படிச்சந்தங்களிற்கண்ட பாடங்கள் என்றும், அவையுங் கண்டமாத்திரையிற் கொள்ளாது பொருந்து மாறு நோக்கித் தெரிந்தெடுத்துக்கொண்ட பாடங்கள் என்றும் விடைகூறிச் சிலபாடங்களின் விசேடங்களுங்கூறினர். சிலகூறுதும்.

க. மந்திரிச்சருக். கக. "தலநூல்" என்பதனைத் தவர்நூல் என்க. தவர்நூல்—ஸ்மிருதி. வாதவூரர் அதனையுங் கற்றார் என்று முதனூல் கூறும். தலநூல்—தலபுராணம். அதனைப் படிக்கும் வழக்கும் இல்லை! அதற்குக் கணக்கும் இல்லை. அது புராதந நூலுள் அடங்கும்!

உ. மந்திரி. உக. "மற்புய வெற்பினனங்கயல்வைத்த வலத் தன்" என்பதனை மற்புயன் வெற்பினி லங்கயல் வைத்தவனத்தம்

என்க. முன்னையபாடம், வைத்த இடம் புலப்படாமையான் மரபு வழூவாகும். "குறித்தோன் கூற்றந் தெரித்து மொழிகிளவி" என்பது தொல்காப்பியம்.

ஙு. திருப்பெருந்துறை. ஙடு. "பொய்ம்மையிலாச்சிவஞான போதமென்றார்" என்புழிப் "பொய்ம்மையிலா" என்பதனைப் பொய்ம்மையிலார் என்க. வினைக்கியைதலும், அடைகொளிக் கியைதலுமின்மையான் பொய்ம்மையிலா என்பது பொருந்தாது.

சு. திருப்பெருந்துறை. கூஉ. "பிறிதோரோலைப்படியெடுத் துரைமின்" என்பதனைப் பகாரம் நீக்கிப் பிறிதோரோலை படியெ டுத்துரைமின் என்க. இதனுரை நோக்குக. பகர மிகுத்தல் பய னின்மை பயக்கும்.

ரு. குதிரையிட்ட. உகூ "கரத்தில்வாங்கி" என்பதனைக் கரத் தில் வாங்க என்க. வாங்கி என்பது "நேசமெய்தினுனொருவன்" என்பதனோடு முரணும்.

சு. மண்சுமந்த. கங. "சாம்பியதவமேயான்செய்தண்டமே தகவிலாமை" என்புழிச் "சாம்பியதவமே" என்பதனைச் சாம்புத றவமே என்க. ஏகாரங்களும் தகவிலாமை என்பதும் அவமே என்பதனை மறுத்தல் அறிக.

எ. புத்தரைவாதில்வென்ற. எ. பார்மிதை என்பதனைப் பார மிதை என்க. பாரமிதை என்பது பௌத்தநூல்களாற் பெறப்படும் ஒரு தொடர்மொழி. பாரம்=கரை. இதை=அடைந்தது.

இங்ஙனம் வருவன பல. ஆங்காங்குக் காண்க. இவற்றுள்ளே முக்கிய பாடங்கள் இங்குங் கொள்ளப்பட்டன. இவ்வுரையும் அ. குமாரசுவாமிப்புலவராற் பெரும்பாலுந் திருத்தப்பட்டிருக் கின்றது. அவகாசமும், அறிஞர்துணையும் பெற்று இன்னுந் திருத் தற்பாலன பல என்பது அவர் கருத்து. அறிஞர்கள் புலப்படும் வழுக்களை வெளிப்படுத்துதல் கற்பவர்க்குத் துணையாகும். குதிரை யிட்டசருக்கத்திலுஞ் சில கவிகள் புலப்படவில்லை. அவைகளும் ஆராய்தற்பாலன. இறைவன் அருள புரிக.

கோக்குவில்: இராக்ஷதஞூ ஆவணிமீ. | இங்ஙனம், ச. இ. சிவராமலிங்கையர்.

# திருவாதவூரர் சரித்திரம்.



அரிமர்த்தனபாண்டியன்காலத்திலே பாண்டிமண்டலத்துள்ள திருவாதவூரிலே அமாத்தியப் பிராமண குலோத்தமராய் விளங்கிய சம்புபாதாசிரிதர் என்பவருக்கு அவர் பத்தினியாராகிய சிவஞானவதியாருடைய திருவயிற்றிலே ஒரு சற்புத்திரர் உற்பத்தியாயினர். அப்புத்திரர்க்குத் "திருவாதவூரரெனுந் திருநாமந் தரித்தார்கள்."

அவர் சிவபாதபத்த சிகாமணியாய்த் திருவருட்கவிகள் பாடியும், அற்புதங்கள் பற்பலசெய்தும், பௌத்தம் முதலிய பரசமயங்களைக் கண்டித்தும் சைவசமயமே சமயம் என்று தாபனஞ்செய்த காரணத்தாற் சமயகுரவர் என்றும் வழங்கப்பட்டார். அவர்க்கு மாணிக்கவாசகர் என்னும் பெயரும் உண்டு.

அவர் பதினாறு வயசினுள்ளே எக்கலையுங் கற்றுணர்ந்து மிக்க சாமர்த்தியமுடையாராய் விளங்கினார் விளங்கும் நாளிலே அவருடைய சாமர்த்தியாதிகளைத் தக்கோர் வாயாற் கேட்டுணர்ந்த அரிமர்த்தனபாண்டியன் அவரை அழைத்துத் தனக்கு முதன்மந்திரியாக்கித் "தென்னவன்பிரமராயன்" என்னும் சிறப்புப் பெயருங் கொடுத்துத் தன்னரசியலையும் நடாத்தி வரும்படி நியமனஞ் செய்தனன். அரசியலை நடாத்தும் அதிகாரமுடையராயினும் அதன்மேற் பற்றின்றிச் சிவபிரானுடைய திருவடிக்கே திடபத்தியுடையவராய் வந்தனர். அப்போது சோழமண்டலக் கடற்கரையிலே குதிரைகள் வந்திருக்கின்றன என்று தூதுவரால் அறிந்த பாண்டியன் அவரை அழைத்து வேண்டும்பொருள் கொடுத்து ஆண்டுச் சென்று குதிரை வாங்கி வரும்படி அனுப்பினான்.

குதிரைவாங்கச் சென்ற திருவாதவூரர் திருப்பெருந்துறையிலே குருந்தமரநீழலிலே வீற்றிருந்த சிவபிரானாகிய ஞானதேசிகரைக் கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு அன்போடும் வணங்கி "அடியேனை அடிமைக்கொண்டருள்க" என்று பிரார்த்தித்து அவரிடத்தே ஞானோபதேசமும் பெற்றுக் குதிரைக்குக் கொண்டுபோன திரவியத்தையுஞ் சிவனடியார் கையிற் சேர்ப்பித்துச் சிவானந்தப் பேறு பெற்றுப் பித்தர் பாலர் பிசாசர்தங் கொள்கையராயினர்.

அச்செய்தியைக் கேள்வியுற்ற பாண்டியன் பெரிதுங் கோபங்கொண்டு "இவரொடுங்கடிதுவருக" என்று ஒருதிருமுகம் அனுப்பினான். அதனைத் திருவாதவூரர் சிவபிரானுக்கு முறையீடு செய்து அவர்கொடுத்த இரத்தினதனையும் பெற்றுக்கொண்டு பாண்டியன் பாற்சென்று அதனைக்கொடுத்து அவனை மகிழ்வித்துக் குதிரைகள்

ஆவணித் திங்களின் மூலமாஞ் செழுந்தினத்தினில் இங்கேவரும் என்று சொல்லிச் சம்மானமும் பெற்றுக்கொண்டு தம்மனையிற் சென்றிருந்தார் அப்போது தூதுவர் சிலர் பாண்டியனிடம்போய் "மற்றவர் மொழிந்தவெல்லாம் பொய்யுரை மன்னவென்னப்" பாண்டியனும் பரிகள் ஆண்டுளவோ என்று பார்ப்பித்தபின் திருவாதவூரரை வருவித்துச் சிறைச்சாலையில் வைத்துத் தன்பொருளெல்லாம் தரும்படி சொல்லி வருத்தினன். திருவாதவூரரும் சிவபிரானை முன்னிலையாக்கி முறையிடு செய்தனர். சிவபிரான் நரிகளையெல்லாம் அழைத்துப் பரிகளாக்கிப் பாண்டியனுக்குக் காண்பித்துத் திருவாதவூரரைச் சிறைச்சாலையினின்று விடுவித்துப் பரிகளையெல்லாம நரிகளாக்கினார்.

பரிகளெல்லாம் நரிகளாய்ப்போன செய்தியைப் பாண்டியனும் அறிந்து திருவாதவூரரை வெய்யிலினிறுத்திப் பின்னும் வருத்தினான். வருத்தியபோது சிவபிரான் வைகையாற்றினை மதுரையில் அதிகரித்துப் பெருகவிட்டும், ஒருபிட்டுவாணிச்சிக்குக் கூலியாளாய் வந்து வைகைச்செய்கரையடைததற்கு மண்சுமந்து இட்டும், அடிபட்டும் திருவாதவூரர் பெருமையைப பாண்டியற்கு நன்கு புலப்படுத்தி அவரை விடுவித்தார.

பின்னர்த் திருவாதவூரரும் பாண்டியனை நீங்கித் திருப்பெருந்துறையிற்சென்று சிலநாள வைகிச் சிவாஞ்ஞையினால் உததரகோசமங்கை, திருக்கழுக்குன்று முதலிய பறபல சிவஸ்தலங்களுக்குப போய் அருட்கவிகளும் பாடிச் சிவபிரானைத் துதிததுக்கொண்டு சிதம்பரமடைந்தார். சிதம்பரத்திலே சமயவாதஞ் செய்யவந்த பௌத்தர்களோடு வாதஞ்செய்து வென்றபின் அவர்கள் யாவரையுஞ் சைவராக்கிச் சிவசமயத்தை நிறுத்திச "சிதமபரமே சிவலோகமெனக் கண்டு" வீற்றிருநதார்.

வீற்றிருக்கும்போது சிவபிரான் ஒரு வேதியராய் அங்கே சென்று திருவாதவூரரை அடைந்து திருவாசகத்தை எழுதிக்கொண்டு, தையல்பங்கினாதம்மைக் கோவைபாடுதல் வேண்டும் என்று அகப்பொருட்கோவையும் பாடுவித்து அதனையும் எழுதித் தமது கைச்சாத்துமிட்டுப் புத்தகத்தைச் சேமித்துக்கொண்டு மின்னென மறைந்துசென்று பொன்னம்பலத்திற் புகுந்து வாயிற்படியில் வைத்தருளினார். அதனைக் கண்ணுற்ற அடியார் திருவாதவூரரை அடைந்து தில்லையிலெம்பெருமானைச் செப்பிய இததமிழ்மாலைக்கு நல்ல அரும்பொருள் கூறவேண்டும் என்று பொருள் வினவினர். வினவினார்க்குத் திருவாதவூரர் பொன்னம்பலத்திலே போய்த் தம் நூற்குப் பொருள் இவரே என்று நடராஜமூர்த்தியைச் சுட்டிக் காட்டிவிட்டு உள்ளே புகுந்து அவரொடும் கலந்தருளினார்.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரர்புராணம்

## மூலமும் உரையும்.

### விநாயகவணக்கம்.

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற் றழகுபச் சடம்பிற்
றிவளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
றரித்துயர் கிரிப்புறத் தெழுதுங்
கவளமா முகத்தின் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம்.

(இதன்பொருள்.) பவளம் மால் வரையில் - பவளமயமாகிய பெரியமலையில்,—நிலவு எறிப்பது போல் பரந்த நீற்றழகு - நிலாக்கிரணம் பரப்பது போலத் தமது செம்மேனியிற் பூசப்பட்டுப் பரந்திருக்கின்ற விபூதியின் அழகானது,—பசுடம்பில் திவள - உமையம்மையின் பசுமையாகிய மேனியிலே விளங்க,—மாதுடன் நின்று ஆடிய பரமன் சிறுவனை - அவ்வம்மையுடனின்று நடனஞ்செய்கின்ற சிவபெருமானுடைய குமாரரும்,—தவளம் ஆம் மருப்பு ஒன்று ஒடித்து ஒரு கரத்தில் தரித்து - வெண்மையாகிய கொம்பு ஒன்றினை முரித்து ஒருகரத்திலே தரித்து,—பெரும் பாரதப்போர் உயர் கிரி புறத்து எழுதும் - பெரிய பாரதயுத்தசரித்திரத்தை உயர்ந்த மேருகிரியில் எழுதிய,—கவளமா முகத்தின் திருமுகம் படைத்த கடவுளை - யானையின் முகம் போன்ற முகத்தைப் பெற்றுக்கொண்ட கடவுளுமாகிய விநாயகரை,—நினைந்து - தியானித்து,—கை தொழுவாம் - அஞ்சலிசெய்வாம். எ-று.

எறித்தல் பரத்தல் என்னும் பொருட்டாதலைச் சிந்தாமணியிலே, "உணர்வுசென்றெறிததலானும்" என்புழி நச்சினார்க்கினியர் கூறிய உரையானும் உணர்க. கவளமா—யானை. யானைமுகம்போன்ற முகமாதல்பற்றிக் "களிற்றின்றிருமுகம்" என்றார்.

# கடவுள்வாழ்த்து.

## நடராசர்.

இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படுல கங்களில் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடு துந்துபி வளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம்.

இ-ள். இதம் தரு மடந்தையொடு உடம்பு உயிர்போல் இயைந்து - ஆன்மாக்கட்கு நன்மையைத்தருகின்ற சிவகாமியம்மையோடு உடம்போடு உயிர்போலப் பொருந்தி,—விதம் படு உலகஙகளில் விரிந்து ஒளி விளங்குவார் - பலவகைப்பட்ட உலகஙகளிலெல்லாம் விரிந்து ஒளிவடிவாய் விளங்குஞ் சபாநாயகருடைய,—மதஙகம் ஒடு துந்துபி வளம் கெழ முழஙக - மிருதங்கத்தோடு துந்துபிகள் தகுதிபொருந்த ஒலிக்க,—சிதம்பரம் நடம் பயில் செழுங கழல் இறைஞ்சுவாம் - சிதம்பரத்தின்கண்ணே நடனஞ்செய்கின்ற திருவடிகளை வணஙகுவாம். எ-று.

உயிருடம்பு மடந்தையோடு இயைதற்கு உதாரணம். வளம்-தகுதி. (க)

## சிவகாமியம்மை.

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலாள்
நாடக னனந்தசுக நன்குபுனை பங்கினாள்
ஏடக மணமபொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்குசிறு பங்கய மிறைஞ்சுவாம்.

இ-ள். ஏடு அகம் மணம் பொருவ எஙகணும் இயைந்துளாள் - மலரின்கண் மணம்போல எஙகும் வியாபித்து நிற்பவரும்,—அணஙகு இலாள் - வருத்தமில்லாதவரும்,—நாடகன் அனந்த சுகம் நன்குபுனை பஙகினாள் - நடராசமூர்த்தியுடைய அளவில்லாத சுகத்தை நன்குபொருந்திய வாமபாகத்தை யுடையவருமாகிய,—ஆடக சிதம்பர அணஙகு உமை - பொன்மயமாகிய சிதம்பரத்தின்கணுள்ள அழகிய சிவகாமியம்மையாருடைய,—பாடகம் இலஙகு சிறு பஙகயம் இறைஞ்சுவாம் - பாடகம் விளஙகுகின்ற சிறிய திருவடிகளை வணங்குவாம். எ-று.

அணஙகிலாநாடகன் என்பதற்கு அணங்கு இல்லாமைக்குக் காரணமாகிய நாடகன் எனவும் அமையும். (உ)

## சுப்பிரமணியக்கடவுள்.

துங்கமத கும்பவுயர் தும்பிமுக னெய்ப்பிசீர்
தங்குநெறி மூஞ்சிறு சதங்கைகள் புலம்பவே

மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவாம்.

இ-ள். தூங்க மத கும்ப உயர் தும்பிமுகன் எம்பி - உயர்ச்சியாகிய மதம்பொருந்திய மத்தகத்தையுடைய உயர்ந்த யானைமுகக்கடவுளுக்குத் தம்பியாகிய சுப்பிரமணியக்கடவுளுடைய,—சீர் தங்கு ஒருகிழும் சிறு சதங்கைகள் புலம்ப - அழகிய சிலம்புகளும் சிறுசதங்கைகளும் ஒலிக்க,—மங்கை உமை கண்குளிர வந்து உலவுகின்ற தாள் - உமையம்மையின் கண்கள் குளிரும்படி அவர்முன் வந்துலாவி விளையாடியருளுந் திருவடிகளை,—அங்கை மலர் கொண்டு மிகும் அன்பு உடன் இறைஞ்சுவாம் - உள்ளங்கையிற் பூக்களைக்கொண்டு மிக்க அன்போடும் வணங்குவாம். எ-று.

எம்பி - தம்பி. "எம்பியுமனுசனுமிளையோன்" என்பது பிங்கலம். எம்பி தாள் என இயையும். (௫)

---

வ ர லா று.

தென்பொதிய மாமுனி சிறக்கவரு ளெண்ணெண்
இன்பவிளை யாடலெ னுங்கடலு ணாயேன்
மின்பயிலு மாமதுரை மேவுதமிழ் மாறன்
துன்பமற நல்குகதை சொல்லலுறு கின்றேன்.

இ-ள். தென் பொதிய மா முனி சிறக்க அருள் - தெற்கின்கணுள்ள பொதியமலைவாசராகிய அகத்தியமகாமுனிவர் மேம்பாடுறும்படி திருவாய்மலர்ந்தருளிய,—எண் எண் இன்ப விளையாடல் எனும் கடலுள் - அறுபத்துநான்கெனும் இனிய விளையாடல்களாகிய சமுத்திரத்தினுள்ளே,—மின் பயிலும் மா - மின்னலை ஒத்த குதிரைகளை,—மதுரை மேவு தமிழ் மாறன் துன்பம் அற நல்கு கதை - மதுரையிலே அரசுவீற்றிருந்த அரிமர்த்தன பாண்டியனுக்குத் துயர்நீங்கக் கொடுத்தருளிய கதையை,—நாயேன் சொல்லலுறுகின்றேன் - கடையேனாகிய தமியேன் கூறத்தொடங்குகின்றேன். எ-று.

குதிரைகளாய்க் காணப்பட்டு அற்பநேரத்தினுள்ளே நரிகளாய் மாறி அழிதலினாலே "மின்பயிலுமா" என்றார். மின்பயிலும் என்பதற்கு ஒளி பொருந்திய என்பதும் இயையும். (௬)

அற்புத னிருந்தருள் பெருந்துறை யடைந்தே
சிற்பர முணர்ந்துதிரு வாசக முரைப்பார்
முற்பக லருந்தவ முபன்றுபெறு மன்பால்
உற்பவ மொழிந்தமை மொழிந்திட றொழிப்பாம்.

இ-ள். அற்புதன் இருந்தருள் பெருந்துறை அடைந்து - மகானாகிய சிவபிரான் இருக்கப்பெற்ற திருப்பெருந்துறையை அடைந்து ஞானோபதே

சம்பெற்று,—சித் பரம் உணர்ந்து திருவாசகம் உரைப்பார் - ஞானரூபி யாகிய சிவத்தைத் திருவருளானறிந்து திருவாசகஞ் சொல்பவராகிய திரு வாதவூரர்,—முன் பகல் அருந்தவம் முயன்று பெறும் அன்பால் - முற்பி றப்பிலே அரிய தவஞ்செய்துபெற்ற விசிட்ட சிவபததியினல்,—உற்பவம் ஒழிந்தமை மொழிந்து - பிறவியொழித்துய்ந்த சரித்திரத்தைப் பாடி,—இடர் ஒழிப்பாம் - துன்பத்தை நீக்கிக்கொள்வாம். எ-று. (ரு)

## அவையடக்கம்.

கொண்டலன கண்டனருள் கொண்டுதமிழ் பாடித்
தொண்டுபடு மனபர்செயல் சொன்னநெறி தன்னால்
வண்டமிழ் தெரிந்தவர்கள் மற்றெனுரை குற்றம்
உண்டெனினு நன்கிதென வுள்ளுவர்க ளெள்ளார்.

இ-ள். கொண்டல் அன கண்டன் அருள் கொண்டு தமிழ் பாடி - முகில்போன்ற கரிய கண்டத்தையுடைய சிவனுடைய திருவருளினலே திருவாசகத்தைப் பாடி,—தொண்டுபடும் அன்பர் செயல் சொனன நெறி தன்னால் - அடிமையான திருவாதவூரரது சரித்திரத்தைக் கூறிய முறைமை யினல்,—என் உரை குற்றம் உணடு எனினும் - எனது நூலின்கட் குற்ற முளதாயினும்,—வண் தமிழ் தெரிந்தவர்கள் நன்கிது என உள்ளுவர்கள் - சிறந்த தமிழ்நூல்களை நன்குணர்ந்த அறிஞர் குணமுடையதேயென்று நன்குமதிப்பர்,—எள்ளார் - அஃதொழிந்திகழார். எ-று. (சு)

## பயன்.

இந்தவள நற்கதை யியம்பினர் நயந்தே
சிந்தையி னினைப்பவர் செவிப்புல நிறைப்போர்
புந்திமகி ழப்புவி புரப்பருடல் விட்டால்
அந்தவுல கததினி லரன்சபையில் வாழ்வார்.

இ-ள். இந்த வளம் நல் கதை நயந்து இயம்பினர் - இந்தச் சிறந்த நல்ல கதையை விரும்பிச சொல்பவரும்,—செவிப்புலம் நிறைப்போர் - கேட்பவர்களும்,—சிந்தையில் நினைப்பவர் - மனத்திற் சிந்திப்பவர்களும்,— புந்தி மகிழப் புவி புரப்பர் - இம்மைக்கண் மனம்மகிழப் பூமியைப் பரி பாலிப்பர்,—உடல் விட்டால் அந்த உலகத்தினில் அரன் சபையில் வாழ் வார் - தேகம் நீஙகியபின் அந்தச சிவலோகத்திலே சிவசந்நிதியில் வாழ்வார் கள். எ-று. (எ)

# மந்திரிச்சருக்கம்.

முக்கணனோர் நான்குபுய னைந்துமுகன் முன்னோன்
சொக்கனரு ணன்மைபெறு தொன்மைநிகழ் நன்னா
டக்கடு விடத்தையர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைகலொழி வைகைவள நாடு.

இ-ள். முக்கணன் - மூன்றுகண்களுடையவரும்,—நான்குபுயன் - நான்கு புயங்களுடையவரும்,—ஐந்துமுகன் முன்னோன் சொக்கன் - ஐந்து முகஙகளுடையவரும் முதல்வருமாகிய சொக்கநாதசுவாமி,—அருள் நன்மை பெறு தொன்மை திகழ் நல் நாடு - அருளும் நன்மையைப்பெற்ற பழமைவிளங்காநின்ற சிறந்த நாடாவது,—அ கடுவிடத்தை அரனுக்கு அருள்வது என்று - அந்தக் கொடிய விஷத்தைச் சிவபெருமானுக்குக் கொடுத்ததென்று வெறுத்து,—மை கடலில் வைகல் ஒழி வைகை வளநாடு - கரிய சமுத்திரமாகிய நாயகனிடத்துச் சென்று தஙகுதலொழிந்த வைகைநீர் வளத்தையுடைய பாண்டிநாடேயாம். எ-று. (க)

நீண்ட கயிலைக்கிறை நிகழ்த்தவரு ளாலே
பூண்டமுனி மெய்த்தமிழ் புகன்றதிரு நாடு
மூண்டபகை செற்றுலக முற்றுமர சாளும்
பாண்டிய னலங்குலவு பாண்டிவள நாடு.

இ-ள். நீண்ட கயிலைக்கு இறை அருளாலே நிகழ்த்த - நெடிய கைலாசகிரிக்குத் தலைவராகிய ஸ்ரீகண்ட பரமசிவனுனவர் அருளோடு உபதேசிக்க,—பூண்ட முனி மெய் தமிழ் புகன்ற திருநாடு - அதனைப்பெற்றுக்கொண்ட அகத்தியமுனிவர் மெய்ம்மையாகிய தமிழை நன்மாணுக்கர்களுக்குக் கற்பித்த நாடு,—மூண்ட பகை செற்று உலகம் முற்றும் அரசாளும் - மூண்டுவந்த பகைவரைக்கொன்று உலகமுழுவதையும் அரசுசெய்கின்ற,—பாண்டியன் நலங குலவு பாண்டி வளநாடு - பாண்டியனது நன்மை விளங்காநின்ற பாண்டிவளநாடேயாம். எ-று. (உ)

வேறு.

மேவுமூர் வளம்பலவு மிகுந்துளநா டதனினலம்
பாவுமூர் பழமறைதே ரந்தணர்கள் பயின்றுளவூர்
தாவுமூர் விடையேறி தங்கியவூ ருங்குறையுந்
தேவரூர் தனின்மேன்மை சிறந்ததிரு வாதவூர்.

இ-ள். மேவும் ஊர் - எவராலும் விரும்பப்படுமூரும்,—வளம் பலவும் மிகுந்துள நாடு அதனில் நலம் பாவும் ஊர் - வளஙகள்பலவும் மிகப்பெற்றுள்ள அப்பாண்டிநாட்டின்கண்ணே நன்மைபரந்த ஊரும்,—பழமறை தேர் அந்தணர்கள் பயின்றுள ஊர் - பழைய வேதஙகளை அறிந்த பிராம

ணர்கள் வசிக்கப்பெற்றவூரும்,—தாவும் ஊர் - எவராலும் பற்றப்படுகின்ற வூரும்,—விடை ஏறி தங்கிய ஊர் - இடபாரூடராகிய சிவபெருமான் இருக்கப்பெற்ற ஊருமாயுள்ளது,—அங்கு உறையுந் தேவர் ஊர் தனின் மேன்மை சிறந்த திருவாதவூர் - மேலேவசிக்கும் தேவருலகத்தினுஞ்சிறப்புமிக்க திருவாதவூரேயாம். எ-று. (௩)

அந்நகரின் மறையோரி லருள்புனைமாத் தியர்குலத்திற்
றன்னிகரில் சைவநெறித் தலைவனவன் றனித்தேவி
மின்னனையா டிருவயிற்றின் மென்கொடிபங் கினனருளாற்
றென்னவன்செங் கோன்முதல்வர் திருவவதா ரஞ்செய்தார்.

இ-ள். அந்நகரில் - அத்திருவாதவூரிலே,—மறையோரில் - பிராமணருள்ளே,—அருள்புனை மாத்தியர் குலத்தில் - அருள்பொருந்திய ஆமாத்தியர்குடியிலே,—தன் நிகரில் சைவநெறி தலைவன் - தனக்கு நிகரில்லாத சைவசமயத்தலைவர் ஒருவருளர்,—அவன் தனி தேவி மின் அனையாள் திருவயிற்றின் - அவருடைய ஒப்பற்ற மனைவியாகிய மின்போல்பவளது திருவயிற்றினின்றும்,—மென்கொடி பங்கினன் அருளால் - மெல்லிய கொடிபோன்ற தேவிபாகராகிய சிவபெருமானுடைய திருவருளினாலே,—தென்னவன் செங்கோல் முதல்வர் திருவவதாரம் செய்தார் - பாண்டியனது செங்கோலை நடத்தும் முதல்வர் திருவவதாரஞ்செய்தார். எ-று.

சைவநெறித்தலைவன் என்றது சம்புபாதாசிரிதரை. தனித்தேவி என்றது சிவஞானவதியாரை. (௪)

வேறு.

பொய்ம்மையா முலகின் மாயப் பொங்கிரு ளகல வன்னோர்
தம்மையாழ் நரகிற் றள்ளுஞ் சமயதா ரகைம ழுங்க
வெம்மையா ளுடையா னன்ப ரிதயதா மரைக ளெல்லாஞ்
செம்மையாய் மலர ஞான தினகர ருதயஞ் செய்தார்.

இ-ள். பொய்ம்மை ஆம் உலகில் மாயம் பொங்கு இருள் அகல - பொய்ம்மையாகிய உலகின்கணுள்ள அஞ்ஞானமாகிய மிக்க இருளானது நீங்கவும்,—அன்னோர் தம்மை ஆழ் நரகில் தள்ளும் சமய தாரகை மழுங்க - அவ்வந்தகாரத்துள் அகப்பட்டவர்களை ஆழ்ந்த நரகத்திலே வீழ்த்திக் கெடுக்கும் பரசமயங்களாகிய நக்ஷத்திரங்கள் ஒளிமழுங்கவும்,—எம்மை ஆள் உடையான் அன்பர் இதய தாமரைகளெல்லாம் செம்மையாய் மலர - எம்மையாளுஞ் சிவபெருமானுடைய அடியார்களுடைய இருதயகமலங்களெல்லாஞ் செவ்வையாய் மலரவும்,—ஞான தினகரர் உதயம் செய்தார் - அப்புத்திரராகிய ஞானசூரியர் உதித்தார். எ-று. (௫)

நாமகரணம்.

மருவாத நெறிபூண்ட மத்தனெனும் புத்தனுடன்
பெருவாது வென்றசிவன் பெருநாம மிகவளர

ஒருவாத பிறவியிற்சென் றொருநாம முறுதவர்க்குத்
திருவாத வூரரெனுந் திருநாமம் புனைந்தார்கள்.

இ-ள். மருவாத நெறிபூண்ட மத்தன் எனும் புத்தனுடன் பெருவாது வென்று - பொருந்தாத நெறியை மேற்கொண்ட உன்மத்தனாகிய பௌத்த குருவுடனே பெருவாதஞ்செய்து வென்று,—சிவன் பெரு நாமம் மிக வளர - சிவனுடைய பெரிய திருநாமம் உலகெங்குந் தழைத்தோங்க —ஒருவாத பிறவியில் சென்று ஒருநாமம் உறுதவர்க்கு - துன்பம்விட்டு நீங்காத பிறவியின்கட் பிரவேசித்து இனி ஒருநாமதேயம் பொருந்தப்பெறாத அப்புதல்வருக்கு,—திருவாதவூரர் எனும் திருநாமம் புனைந்தார்கள் - திருவாதவூரர் என்னும் திருநாமத்தைத் தரித்தார்கள். எ-று. (சு)

வேறு.

தவமெனும் பெரிய வித்துட் டங்கியே யங்குரித்துப்
பவமெனும் பங்க நீங்கிப் பயிலருட் குருத்துண் டாகி
அவமெனுங் களைக ணீக்கி யாக்குவோ னருளா லுண்மைச்
சிவமெனும விளைவுண் டாக வளர்ந்தது தெய்வச் சாலி.

இ-ள். தவம் எனும் பெரிய வித்துள் தங்கியே அங்குரித்து-தவம் என்று சொல்லப்படும் பெரிய வித்தினுள்ளே தங்கியிருந்து முளைத்து,—பவம் எனும் பங்கம் நீங்கி - பாவமாகிய சேற்றினின்றும் நீங்கி,—பயில் அருள் குருத்து உண்டாகி - பொருந்திய அருளாகிய குருத்து வரப்பெற்று,—அவம் எனும் களைகள் நீக்கி - தீங்கு என்னும் களைகளைக் களைந்து,—ஆக்குவோன் அருளால் - உண்டாக்குபவராகிய சிவபெருமானுடைய திருவருளினாலே,—உண்மை சிவம் எனும் விளைவு உண்டாக - உண்மையான சிவமென்னும் விளைவுண்டாக,—தெய்வச் சாலி வளர்ந்தது - அப்புத்திரராகிய தெய்வத்தன்மையையுடைய நெற்பயிர் வளர்ந்தது. எ-று. (எ)

அன்னப்பிராசனம்.

தேனினொடு கரும்பினெழுஞ் செழும்பாகு முக்கனியும்
ஆனினறும் பாலுமுட னளவியுளங் களிகூர
ஈனமிகும் பலயோனிப் பிறவியெனும் பசிதீர
ஞானவமு துண்பார்க்கு நயந்தமுது நுகர்வித்தார்.

இ-ள். ஈனம் மிகும் பல யோனி பிறவி எனும் பசி தீர ஞான அமுது உண்பார்க்கு - இழிவுமிகுந்த பலயோனிப் பிறவி என்னும் பசிநீங்க ஞானமாகிய திருவமுதை உண்பவராகிய அப்புதல்வருக்கு,—தேனினொடு கரும்பின் எழும் செழும் பாகும் - தேனுங் கரும்பினின்றுமுளதாகுஞ் செழுமைபொருந்திய சருக்கரையும்,—முக்கனியும் - மாம்பழம் வாழைப்பழம் பலாப்பழம் என்னும் முப்பழங்களும்,—ஆனின் நறும் பாலும் உடன் அளவி - பசுவினது நறிய பாலுமாகிய இவற்றை ஒருங்குகலந்து,—உளம் களிகூர

மனமிகமகிழ—நயந்து - விரும்பி,—அமுது நுகர்வித்தார் - அன்னப்பிராசனஞ் செய்வித்தனர். எ-று. (அ)

சூடாகரணம்.

காயமுட னுயிர்முயலுங் கருமமெலாம் பரனருளாற்
றாயமனத் துணர்ந்துவினைத் தொகையெழுதி நாடோறும்
ஆயதுயர் சுகமளிக்கு நமன்கணக்கி லரும்பாவத்
தீயசிகை யில்லார்க்குச் சிறந்தசிகை வருவித்தார்.

இ-ள். காயமுடன் உயிர் முயலுங் கருமம் எலாம் - உடம்போடு கூடிநின்று உயிர் செய்யுங் கன்மபேதங்களையெல்லாம்,—பரன் அருளால் தூய மனத்து உணர்ந்து - சிவபெருமானது திருவருளினாலே சுத்தமாகிய மனத்திலே அறிந்து,—வினைத்தொகை நாடோறும் எழுதி - நல்வினை தீவினைகளின் தொகைகளை நாடோறும் எழுதி,—ஆய சுகம் துயர் அளிக்கும் நமன் கணக்கில் - அவற்றிற்கியைந்த இன்பதுன்பங்களை அநுபவிக்கும்படி கொடுக்கும் யமனது கணக்கேட்டிலே,—அரும் பாவத் தீய சிகை இல்லார்க்கு - நீக்குதற்கரிய பாவமாகிய தீய கணக்குத்திரள் எழுதப்பெறாத அப்புதல்வருக்கு,—சிறந்த சிகை வருவித்தார் - அழகிய சௌளகன்மஞ் செய்வித்தனர். எ-று.

சிகை என்பது கணக்கு எனப் பொருள்படுதலை ‡ "நின்றசித்திரகுத்தனை நின்சிகை" என்னும் வேதாரணியபுராணத்தாலறிக. (கூ)

வித்தியாரம்பம்.

குவலயமங் கையைநீடு கோலஞ்செய் தரும்பொன்னும்
நவமணியுங் குவைசெய்து நன்குடன்மங் கலநாளிற்
றவமணமுந் திருநீற்றின் றன்மணமுந் தவறுத
சிவமணமும் பெறக்கல்விச் செல்விமணம் புணர்வித்தார்.

இ-ள். குவலய மங்கையை நீடு கோலஞ் செய்து - பூமிதேவியை மிக அலங்கரித்து,—அரும் பொன்னும் நவமணியும் குவை செய்து - அரிய பொன்னையும் நவரத்தினங்களையும் குவித்து,—நன்குடன் மங்கலநாளில் - நன்மையோடும் ஒரு சுபதினத்திலே,—தவமணமும் - தவத்தொடர்ச்சியும்,—திருநீற்றின் தன்மணமும் - விபூதித்தொடர்ச்சியும்,—தவறுத சிவமணமும் பெற - தவறற்ற சிவத்தொடர்ச்சியும் பெற,—கல்வி செல்வி மணம் புணர்வித்தார் - அப்புதல்வருக்குக் கல்வியாகிய பெண்ணைச்சேர்த்தார். எ-று.(கo)

உபநயனம்.

இதுநூன்மற் றல்லதுநூ லில்லையெனு மறுசமய
விதநூலுந் தவர்நூலும் விரிந்தபுரா தனநூலும்

---

‡ வேதாரணியபுராணம் கோலாகல. சகூ.

பொதுநூலென் றுலகனைத்தும் புகழ்மறைநூ லுஞ்சைவ
முதனூலுந் தரிப்பார்க்கு முந்நூலுந் தரித்தார்கள்.

இ-ள். இது நூல் அல்லது மற்று நூல் இல்லை எனும் அறுசமய விதநூலும் - இதுவே மெய்ந்நூல் இதுவன்றி வேறுநூல் இல்லை என்று தனித்தனி வாதிக்கும் அறுசமய நூல்களையும்,—தவர் நூலும் - மிருதிகளையும்,—விரிந்த புராதன நூலும் - பரந்த புராணங்களையும்,—பொது நூல் என்று உலகு அனைத்தும் புகழ் மறை நூலும் - பொதுநூலென்று உயர்ந்தோரனைவருந் துதிக்கும் வேதநூலையும்,—சைவ முதனூலுந் தரிப்பார்க்கு - சிவாகமமாகிய முதனூலையுங் கற்ற அப்புகல்வருக்கு,—முந்நூலும் தரித்தார்கள் - உபநயனமுஞ் செய்தார்கள். எ-று.

தவர் நூல் - முனிவர்களாற் செய்யப்பட்டுள்ள ஸ்மிர்திநூல். முனிவர்செய்த காரணத்தினாலே ஸ்மிருதிநூற்கு ஆரிடம் என்னும் பெயருமுண்டு. ஆரிடம் - இருடிகளாற் செய்யப்பட்டது. தலநூல் என்னும் பாடாந்தரமுமுண்டு. வாதவூரர் பதினென்கு வித்தைகளுள் ஒன்றாகிய ஸ்மிர்திகளையும் கற்றுணர்ந்தார் என்று வடமொழி கூறலானும், தலநூல் எனப்படுந் தலபுராணங் கற்கும் வழக்கின்மையானும் அது பொருந்தாது. (கக)

மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலைக்குமவ
ரக்கலையுந் தோளர்புலி யதட்கலையர் நல்லருளால்
ஒக்கலையும் பிறக்கலையு மொழித்திடுமா கமக்கலையும்
எக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லைதனில்.

இ-ள். மிக்கு அலையும் செழு நீரும் மதிக்கலையும் மிலைக்குமவர் - மிகுந்து அலைகின்ற செழுமையாகிய கங்கையையும் பிறையையுந் தரித்தவரும்,—அக்கு அலையும் தோளர் - பிரமவிஷ்ணுக்களின் எலும்புமாலைகள் அசையும் புயங்களையுடையவரும்,—புலி அதள் கலையர் நல் அருளால் - புலித்தோலாகிய வஸ்திரத்தையுடையவருமாகிய சிவபெருமானது திருவருளினாலே,—ஒக்கலையும் பிறக்கலையும் ஒழித்திடும் ஆகமக் கலையும் - சுற்றத்தொடர்ச்சியையும் பிறவியையும் பக்குவான்மாக்கட்கு நீக்குஞ் சிவாகமக்கலைகளையும்,—எக்கலையும் - மற்றும் எவ்விதக்கலைகளையும்,—ஈர் எட்டு ஆண்டு எல்லை தனில் கற்று உணர்ந்தார் - பதினாறு வயசினுள்ளே கற்றுத்தெளிந்தார். எ-று. (கஉ)

உழைக்கரனுக் கன்பாகி யுண்மையறிந் துலகமெலாம்
பிழைக்கவருட் கவிபாடும் பெரியவர்தஞ் செயலெல்லாந்
தழைத்தகலைத் தமிழ்மாறன் றக்கோர்க ளுரைக்கவறிந்
தழைத்துரிமைத் திறனல்கி யகலாநண் பாயினான்.

இ-ள். உழைக் கரனுக்கு அன்பு ஆகி - மானை ஏந்திய கரத்தையுடைய சிவபெருமானிடத் தன்புகொண்டு,—உண்மை அறிந்து - மெய்ப்பொருளை

உணர்ந்து,—உலகம் எலாம் பிழைக்க - இவ்வுலகின்கணுள்ளவரெல்லாம் உய்ந்தேற,—அருள் கவி பாடும் பெரியவர் தம் செயல் எல்லாம் - திருவாசகமாகிய அருட்பாவைப் பாடியருளும் திருவாதவூரருடைய நற்செய்கைகளையெல்லாம்,—தழைத்த கலை தமிழ் மாறன் தக்கோர்கள் உரைக்க அறிந்து - தழைத்த கலைகளையுடைய தமிழைவளர்க்கும் அரிமர்த்தனபாண்டியன் பெரியோர்கள சொல்லக் கேட்டறிந்து,—அழைத்து - அவரை வருவித்து,—உரிமைத் திறம் நல்கி - உரிமைத்திறத்தையுங் கொடுத்து,—அகலா நண்பு ஆயினன் - தான் அவரோடு பிரியா நண்பனாயினன். எ-று. (௧௩)

சங்கோல மிடும்பழனத் தடம்புடைசூழ் வாதவூர்
எங்கோவின் செய்கையறிந் தியல்புடையா ரெனநாடிப்
பொங்கோத வேலைநிலம் புரந்துபெரும் பகைதுரந்து
செங்கோலை முறைநடத்துஞ் செழுந் தலைமைத் திறநல்கி.

இ-ள். சங்கு ஒலமிடும் பழனம் தடம் புடை சூழ் வாதவூர் எம் கோவின் செய்கை அறிந்து - சங்குகள் ஒலிக்கின்ற வயல்கள் பக்கத்திற் சூழப்பெற்ற திருவாதவூரிலே அவதாரஞ்செய்த நந் தலைவருடைய நற்செய்கைகளைப் பாண்டியராசன் ஆராய்ந்தறிந்து,—இயல்பு உடையார் என நாடி - தகுதியுடையவர் என்று கருதி,—பொங்கு ஓத வேலை நிலம் புரந்து - மேலெழுகின்ற அலைகளையுடைய கடலசூழ்ந்த பூமியைப் பாதுகாத்து,—பெரும் பகை துரந்து - பெரிய பகைவர்களை ஓட்டி,—செங்கோலை முறை நடத்தும் செழுந் தலைமைத் திறம் நல்கி - தனது செங்கோலை வழுவாமற் செலுத்தும் மாட்சிமைபொருந்திய தலைமை அதிகாரத்தையும் அவருக்குக் கொடுத்து. எ-று. (௧௪)

வேறு.

தென்னவன் பிரம ராய னென்றருள் சிறந்த நாமம்
மன்னவர் மதிக்க நல்கி வையக முய்வ தாக
மின்னவ மணிப்பூ ணாடை வெண்மதிக் கவிகை தண்டு
பொன்னவிர் கவரி வேழ மளித்தனன் பொருநை நாடன்.

இ-ள். பொருநை நாடன் - தாமிரபர்ணிநதி பெருகுகின்ற நாட்டினையுடைய பாண்டியராசன்,—வையகம் உய்வதாக - உலகம் உய்யும்பொருட்டு,—தென்னவன் பிரமராயன் என்றருள் சிறந்த நாமம் - தென்னவன்பிரமராயனென்று சொல்லப்பட்ட சிறந்தபெயரை,—மன்னவர் மதிக்க நல்கி - மற்றை அரசர்களும் நன்குமதிக்கும்வண்ணம் அவருக்குக்கொடுத்து,—மின் நவ மணிப் பூண் - ஒளிபொருந்திய நவரத்தினாபரணம், — ஆடை - பீதாம்பரம்,—வெள் மதிக் கவிகை - வெள்ளிய சந்திரன்போன்ற குடை,—தண்டு - முத்துச்சிவிகை,—பொன் அவிர் கவரி - அழகுவிளங்குஞ் சாமரம்,—வேழம் அளித்தனன் - யானை என்னும் இவைகளையுங் கொடுத்துச் சம்மானித்தனன். எ-று. (௧௫)

இந்திரச் செல்வம் போல வியைந்துள வின்ப மெய்தி
மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாத வூரர்
தந்திரத் தொகுதி சூழத் தாரகா கணங்க ளோடும்
அந்தரத் திழிந்து மண்மே லமர்ந்தவெண் மதிய மொத்தார்.

இ-ள். மந்திரத் தலைமை பூண்ட வண் புகழ் வாதவூரர் - மந்திரியாய அதிகாரத்தைப்பெற்ற நற்புகழையுடைய திருவாதவூரர்,- இந்திரச் செல்வம் போல இயைந்துள இன்பம் எய்தி - இந்திரசம்பத்தைப்போலத் தமக்குக் கிடைத்த இன்பகாரணமாகிய செல்வங்களைப்பெற்று,—தந்திரத் தொகுதி சூழ-சேனாசமூகங்கள் சூழ,—தாரகாகணங்களோடும் அந்தரத்து இழிந்து மண்மேல் அமர்ந்த வெண் மதியம் ஒத்தார் - நக்ஷத்திர சமூகங்களோடும் ஆகாயத்தினின்றும் இறங்கிப் பூமியின்கண்வந்திருக்கும் வெண்மையாகிய பூரணசந்திரனை ஒத்தனர். எ-று. (௧௬)

பெருங்கட னாக நீதி பெருக்கியே தருக்கு நல்கி
இருங்கடகத் தோண் மேல்வைத் தீண்டருள் பூண்ட கோவுங்
கருங்கட நாக மெட்டுங் காளமா நாக மெட்டும்
பரங்கெட வுலக பாரம பரித்தனர் திருத்த மிக்கார்.

இ-ள். பெருங் கடனாக நீதி பெருக்கி - தமக்கு முக்கியகடனாக நீதியை வளர்த்து,—தருக்கு நல்கி - குடிகளுக்கு மகிழ்ச்சியைக்கொடுத்து,—இரும் கடகத் தோள் மேல வைத்து ஈண்டு அருள் பூண்ட கோவும் - பெரிய கங்கணமணிந்த புயங்களின்மீதுவைத்துத் தாங்கி மிக்க அருளைப் பொருந்திய பாண்டியராசனும்,—கரும் கட நாகம் எட்டும் - கரிய மதத்தையுடைய அட்டயானைகளும்,—காளம் மாநாகம் எட்டும் பரம் கெட - நஞ்சையுடைய பெரிய அட்டநாகங்களும் பாரத்தினின்று நீங்கி இன்பமடைய.— திருத்தம் மிக்கார் - திருத்தம்மிகுந்த திருவாதவூரர்,—உலக பாரம் பரித்தனர் - உலகபாரத்தைத் தாமேதாங்கினர். எ-று. (௧௭)

காதலித் தறஞ்செய் வோர்க்குக் கவசமுங் கண்ணு மாகி
ஏதிலர்க் கிடும்பை யாகி யிறைஞ்சினார்க் கின்ப மாகி
ஆதுலர்க் கன்னை யாகி யரனடிக் கன்பு மிக்கார்
பூதலத் திறைவ னாணை பொதுவற நடத்து நாளில்.

இ-ள். காதலித்து - விருப்பங்கொண்டு,—அறம் செய்வோர்க்கு கவசமும் கண்ணும் ஆகி - தருமஞ்செய்பவர்களுக்குக் கவசமும் கண்களுமாகி,— ஏதிலர்க்கு இடும்பை ஆகி - பகையாயினோர்க்குத் துன்பமாகி,—இறைஞ்சினர்க்கு இன்பமாகி - வழிபடுகின்றவர்க்கின்பமாகி,—ஆதுலர்க்கு அன்னை ஆகி - வறியவர்க்கு மாதாவாகி,— அரன் அடிக்கு அன்பு மிக்கார் - சிவபெருமானுடைய திருவடிகளின்கண் அன்புமிகுந்த திருவாதவூரர், — இறைவன் ஆணை பூதலத்துப் பொது அற நடத்தும் நாளில் - அவ்வரசனது ஆஞ்ஞாசக்கரத்தைப் பூமியின்கண்ணே பொதுமைநீங்க நடத்திவருங்காலத்தில். எ-று.

பற்பல பொருளா யுள்ள பாசமு மதனை மேவி
உற்பவ பேத மான வுடம்புயி ரெடுக்கு மாறும்
அற்புத புத்தி முத்தி யளித்தரு ளாலே மேலாந்
தற்பர னடத்து மாறு முணர்ந்தனர் சைவ நூலில்.

இ-ள். பற் பல பொருளாய் உள்ள பாசமும் - பற்பலபொருள்களாய் விரிந்த பாசத்தையும்,—அதனை மேவி உற்பவ பேதம் ஆன உடம்பு உயிர் எடுக்கும் ஆறும் - அப்பாசத்தாற் பந்திக்கப்பட்டு உற்பவபேதமான உடம்புகளை உயிர்கள் எடுக்குந்தன்மையையும்,—அற்புத புத்தி முத்தி அளித்து - அற்புதமான போகங்களையும் மோக்கங்களையுங் கொடுத்து,—அருளால் - அருளோடு,—மேல் ஆம் தற்பரன் நடத்துமாறும் சைவநூலில் உணர்ந்தனர் - மேலாகிய சிவபிரான்நடத்தும் முறையையும் சைவாகமங்களிலே அறிந்துகொண்டனர். எ-று. (கக)

அவ்விய மனத்தி னாலே யனந்த வுருவங்கள் கூடி
இவ்வுயிர் பிறந்து மீள விறந்திடு மென்றி ரங்கி
வெவ்வெயில் வருத்த முற்றோர் மெய்ந்நிழல் விரும்பு மாபோல்
நவ்வியு மழுவு மேந்து நம்பருக் கன்ப ரானார்.

இ-ள். இ உயிர் - இந்த உயிரானது,—அவ்விய மனத்தினாலே அனந்த உருவங்கள் கூடிப் பிறந்து மீள இறந்திடும் என்று இரங்கி - அழுக்காறுபொருந்திய மனங்காரணமாக எல்லாவுடம்புகளோடுங் கூடிப்பிறந்து மீள இறந்துவிடுமென்று இரங்கி,—வெவ்வெயில் வருத்தம் உற்றோர் மெய் நிழல் விரும்புமா போல் - கொடிய வெயிலின்கட் சுடுண்டு வருந்தினவர் நிலையாய நிழலை விரும்புமாறுபோல,—நவ்வியும் மழுவும் ஏந்தும் நம்பருக்கு அன்பரானார் - மானையும் மழுவையுந்தாங்கிய சிவபெருமானிடத்துப் பேரன்புடையராயினார். எ-று. (உ௦)

தீத்திற வினையி னாலே சிறைப்படு முயிரை யெல்லாம்
பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
கூத்தினர் தன்மை வேறு கோலம்வே றாக்கு மாபோல்
நீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி.

இ-ள். தீத்திற வினையினாலே சிறைப்படும் உயிரையெல்லாம் பார்த்தனர் - கொடிய வினைகளினாலே பாசநீங்காது பிறவியாகிய சிறைப்பட்டுழலும் ஆன்மாக்களையெல்லாம் நோக்கி,—உலக வாழ்வில் பயன் இலை என்று தேர்ந்து - இந்தப் பிரபஞ்சவாழ்விலே ஒரு பிரயோசனமுமில்லை என்று தெளிந்து,—கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆக்குமா போல் - கூத்தாடிகள் உண்மைத்தன்மைவேறும் வேஷம் வேறுமாக்கி நடிக்குமாறுபோல,—மனத்தின் நீத்தனர் - மனத்தினின்றும் இப்பிரபஞ்சப்பற்றை முழுதும் நீக்கிவிட்டவராய்,—வழுதி நீதி முன்போல் நிகழ்த்தினர் - பாண்டியனது நீதியை முன்போல நடத்தினார். எ-று. (உக)

வரமுடன் புவியிற் றோன்று மறையவர்க் கிறைவ ருண்மை
தருமுணர் வென்னு நாலாஞ் சத்திநி பாத மெய்திப்
பரமவஞ் செழுத்து மொன்றாம் பராபர முணர்த்து ஞான
குருபரன் றிருத்தாள் சென்று கூடுதல் வேண்டு மென்று.

இ-ள். வரமுடன் புவியில் தோன்றும் மறையவர்க்கு இறைவர் - வரத்தோடு இப்பூமியின்கண் அவதாரஞ்செய்த பிராமணசிரேட்டராகிய திருவாதவூரர்,—உண்மை தரும் உணர்வு என்னும் நாலாம் சத்திநி பாதம் எய்தி- உண்மைப்பொருளைத்தரும் மெய்யுணர்வாகிய அதிதீவிர பக்குவத்தை அடைந்து,—பரம அஞ்சு எழுத்தும் ஒன்று ஆம் பரா பரம் உணர்த்தும் - மேலாகிய பஞ்சாக்ஷரமும் ஏகாக்ஷரமாய்விளங்கும் மேலான சிவத்தைப் போதிக்கும்,—ஞான குருபரன் திருத் தாள் சென்று கூடுதல் வேண்டும் என்று - ஞானசாரியருடைய திருவடிகளைச்சென்று கூடுதல்வேண்டுமென்று தம்முட் சிந்தித்து. எ-று. (உஉ)

மற்கட விலங்கு தன்னால் வளங்கெழு விளவின் மேவும்
நற்கனி கொள்ள வேண்டி நயந்துகல லெறிவார் போலச்
சற்குரு வுளரோ வென்று நாடுவார் தர்க்க மெல்லாஞ்
சொற்கலை ஞான சைவர் தம்முடன் சொல்லலுற்றார்.

இ-ள். மற்கட விலங்கு தன்னால் - குரங்காகிய மிருகத்தினாலே,—வளம் கெழு விளவின் மேவும் நல் கனி கொள்ள வேண்டி - வளம்பொருந்திய விளாமரத்தின்கண்ணுள்ள நற்பழங்களைப்பெற விரும்பி, — நயந்து - விரும்பி,—கல் எறிவார் போல - கல்லெறிபவர்போல,—சற்குரு உளரோ என்று நாடுவார் - சற்குரு உளரோ என்று ஆராய்பவராகி,—தர்க்கம் எல்லாம் சொல் கலை ஞான சைவர் தம்முடன் சொல்லலுற்றார் - தருக்கங்களையெல்லாம் சொல்லப்படும் கலைகளிற்சென்ற அறிவையுடைய சைவர்களோடும் பேசுவாராயினார். எ-று. (உங)

வளங்கெழு புவியி னுள்ள வாவியுங் காவு மோடி
விளங்கிசை வண்டு தண்டேன் மிகுமலர் தேரு மாபோல்
உளங்கொள நிமல னன்னூ லோதின ருண்மை யெல்லாம்
அளந்தறி வுணர்த்து நீரர் யாவரென் றாயு நாளில்.

இ-ள். விளங்கு இசை வண்டு - தெளிந்த இசையினைப்பாடும் வண்டுகள்,—வளம் கெழு புவியில் உள்ள வாவியும் காவும் ஓடி - வளம்பொருந்திய பூமியின்கணுள்ள தடாகங்களிலுஞ் சோலைகளிலும்போய்,—தண் தேன் மிகு மலர் தேருமா போல் - தண்ணிய தேன்மிக்க பூவை ஆராயுமாறு போல,—உளம் கொள நிமலன் நல் நூல் ஓதினர் - மனத்திற் பதியுமாறு நல்ல சிவாகமங்களை ஓதியுணர்ந்த திருவாதவூரர்,—உண்மை எல்லாம் அளந்து அறிவு உணர்த்து நீரர் யாவர் என்று ஆயும் நாளில் - மெய்ப்பொ

ருள்களையெல்லாம் அளவிட்டுணர்ந்து ஞானத்தை உபதேசிக்கும் தன்மையுடையவர் யாவர் என்று ஆராயுங்காலத்தில். எ-று. (உச)

வேறு.

மேதகு வனிதைய ரெங்கணும் வீசிய கவரி யசைந்திட
மாதவர் முதுவர்க ளந்தணர் மாசறு கவிஞர் செறிந்திட
ஏதமின் மதிகுல புங்கவ னேர்கெழு முடிமணி யின்றிரள்
ஆதப மிசையெழ வந்தரி யாசன மதனி லிருந்தனன்.

இ-ள். மேதகு வனிதையர் எங்கணும் வீசிய கவரி அசைந்திட - மேன்மைபொருந்திய பெண்கள் இருமருங்கினும் வீசுகின்ற சாமரங்கள் அசையவும்,—மாதவர் முதுவர்கள் அந்தணர் மாசு அறு கவிஞர் செறிந்திட - இருடிகளும் அமைச்சரும் பிராமணர்களும் நற்புலவர்களும் நெருங்கவும்,—ஏதம இல் மதி குல புங்கவன் - குற்றமற்ற சந்திரகுல சிரேட்டனாகிய அரிமர்த்தன பாண்டியன்,—ஏர் கெழு முடி மணியின் திரள் ஆதபம் மிசை எழ வந்து - அழகுபொருந்திய முடியினகணுள்ள மணித்திரளின்ஒளி மேலே தோன்றவும வந்து,—அரி ஆசனமதனில் இருந்தனன் - சிங்காசனத்தில் வீற்றிருந்தான். எ-று. (உரு)

தாதகி மார்ப னெடும்புவி சார்தரு மாழ்கட லின்கரை
தீதில மாதுர கங்கொடு சீர்கெழு மாரியர் வந்தனர்
ஏதமி லாயது கண்டன மியாமென வேதொழு தன்பொடு
மேதினி காவலன் முன்சில மேதகு தூதர் விளம்பினர்.

இ-ள். மேதகு சில தூதர் - அப்போது மேன்மைபொருந்திய சில தூதுவர்,—மேதினி காவலன் முன் அன்பொடு தொழுது - நிலவுலகவரசனாகிய பாண்டியனுக்கு முன்வந்து அன்போடு வணங்கி,—ஏதம் இலாய் - குற்றமில்லாத அரசனே,—சீர் கெழும் ஆரியர் - சிறப்புப்பொருந்திய ஆரியதேசத்தார்,—தாதகி மார்பன் நெடும் புவி சார் தரும் ஆழ் கடலின் கரை - ஆத்திமாலையை அணிந்த மார்பையுடைய சோழனது நெடிய நாட்டினைச் சார்ந்த ஆழமாகிய கடலின் கரையிலே,—தீது இல மா துரகம் கொடு வந்தனர் - குற்றமற்றனவாகிய நல்ல குதிரைகளைக் கொண்டுவந்தார்கள்.—அது யாம் கண்டனம் என விளம்பினர் - அதனை நாம் கண்டேமென்று சொல்லினர். எ-று. (உசு)

ஏவல்செய் வார்களி லிங்கிவ ரேபரி வானவ ரென்றிகல்
மேவிய தூதரை வன்றிறன் மீனவர் கோனு மகிழ்ந்துபின்
வாவுநன் மாதுர கங்கொடு வாருமெ னவுட லுந்தன
தாவியு மாயர னன்புடை யாமுக நாடி மொழிந்தனன்.

இ-ள். வல் திறல் மீனவர் கோனும் மகிழ்ந்து - மிக்க வலிமையையுடைய பாண்டியராசனும் மகிழ்ச்சியுற்று,—இயல் மேவிய தூதரை - தகுதி

பொருந்திய தூதுவர்களைப் பார்த்து.—இங்கிவரே ஏவல் செய்வார்களிற் பரிவானவர் என்று - இவர்களே நம்பணிசெய்பவர்களுள்ளே பற்றுள்ளவ ரென்று பாராட்டி,—பின் - அதன் பின்பு,—தனது உடலும் ஆவியுமாய் அரன் அன்புடையார் முகம் நாடி - தனதுடம்பு முயிருமாகி அரனுக்குமன்ப ரான திருவாதவூரர் முகத்தைப் பார்த்து.— வாவும் நல் மா துரகம் கொடு வாரும் எனு மொழிந்தனன் - பாய்கின்ற நல்ல பெரிய குதிரைகளைச் சென்று விலைக்கு வாங்கிக்கொண்டுவாரும் என்று கூறினன். எ-று. (உஎ)

மீனவர் கோன்மொழி யின்படி வேணிய னேச ரியைந்தபின்
ஆனன சோதி யுடன்புவி யாள்பவன் வாசி கொளும்படி
வானவி மான மெனுந்திரு வாழ்வுள கோயில் புகுந்துதன்
ஈனமி லாநெறி வந்தபொன் னேழெழு கோடி வழங்கினன்.

இ-ள். மீனவர் கோன் மொழியின்படி வேணியன் நேசர் இயைந்த பின் - பாண்டியராசனது சொற்படி சிவபெருமானது அன்பராகிய திருவாதவூரர் உடன்பட்டபின்னர்,—புவி ஆள்பவன் ஆனன சோதியுடன் - பூமியைக்காக்கின்ற அவ்வரசன் முகமலர்ச்சியோடும்,—வாசி கொளும்படி - குதிரைகொள்ளும்பொருட்டு,—வான விமானம் எனும் திரு வாழ்வு உள கோயில் புகுந்து - தேவவிமானமென்று சொல்லத்தகுந் திரவியசாலையுட் புகுந்து,—தன் ஈனம் இலா நெறி வந்த பொன் எழ் எழு கோடி வழங்கினன் - தனது தருமநெறியால் வந்த பொன் நாற்பத்தொன்பதுகோடி கொடுத்தனன். எ-று. (உஅ)

விற்படை வெற்றி மடந்தையு மிக்க மலர்த்திரு வும்பயின்
மற்புயன் வெற்பினி லங்கயல் வைத்த வனத்தம் வழங்கிய
பொற்பு மிகுத்த தனங்கொடு பொற்கவ னப்பரி கொண்டிட
நற்பய ணத்தை முயன்றனர் நக்கனை நெக்குணர் கின்றவர்.

இ-ள். நக்கனை நெக்கு உணர்கின்றவர் - சிவபெருமானை மனம் நெக்குருகித் தியானிக்குந் திருவாதவூரர்,—வில் படை வெற்றி மடந்தையும் மிக்க மலர் திருவும் பயில் மல் புயன் - வில்லாகிய படையோடு வீரலக்குமியும் செந்தாமரையாசனியாகிய மகாலக்குமியும் வசிக்கும் வலிய புயங்களையுடையவனும்,—வெற்பினில் அம் கயல் வைத்தவன் - இமயமலையிலே அழகிய மீனக்கொடியை நிறுத்தினவனுமாகிய பாண்டியன்,—அத்தம் வழங்கிய - கையிற் கொடுத்த,—பொற்பு மிகுத்த தனம் கொடு பொன் கவனம் பரி கொண்டிட - பொலிவுமிக்க திரவியத்தைக்கொண்டு அழகிய வேகத்தையுடைய குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு,— நல் பயணத்தை முயன்றனர் - நல்ல பிரயாணத்தைச்செய்தனர். எ-று. (உகூ)

மெய்த்தவ ருற்ற பெருந்துறை வித்தக ரைக்குறு கும்படி [ன்
இத்தகு நற்பொருள் கொண்டபி னிப்படி யிற்செலு மென்றலி

அந்தரு புத்தி யொழிந்துயி ரற்புத முத்தி பெறும்படி
உய்த்துள சத்தி யுடன்பொரு வொத்தன னுத்தம பஞ்சவன்.

இ-ள். மெய்த் தவர் உற்ற பெருந்துறை விதத்கரைக் குறுகும்படி - மெய்ம்மையாகிய தவத்தையுடைய பெரியோர்கள் வாழுந் திருப்பெருந்துறையிலே சாதுரியராகிய ஞானதேசிகரையடையும்படி,— இத்தகு நல் பொருள் கொண்டபின் - இந்தத் தகுதியாகிய நல்ல பொருளைக்கொண்ட பின்,—இப்படியில் செலும என்றலின் - இந்நெறியானே செல்லுமென்று செலுத்துதலினால் —அந்தரு புத்தி ஒழிந்து - அம்மந்திரியத்தியோகத்துக்கு வேண்டுஞ் சூழ்ச்சிகளைத் தவிர்ந்து —உயிர் அற்புத முத்தி பெறும்படி உய்த்துள சத்தியுடன் - பரமுத்திபெறும்படி செலுத்துஞ் சத்தியோடு,—உத்தம பஞ்சவன் பொருவொத்தனன் - உத்தம புருஷனாகிய பாண்டியன் ஒத்தனன். எ-று. (௩௦)

பற்றிலர் பெற்ற சிவன்கழல் பற்றின ரைக்கலை வண்டமிழ்
உற்ற மலைக்கிறை வன்றனை யொக்க மதித்தருள் கொண்டலை
விற்றுவ சத்த னெடும்படை மிக்க புலிக்கொடி யன்படை
மற்றுள கொற்றவர் தம்படை வர்க்கமு முற்கொ டெழுந்தன.

இ-ள். பற்று இலர் பெற்ற சிவன் கழல் பற்றினரை - இருவகைப் பற்றுகளையுமற்ற மெய்ஞ்ஞானிகளாற்பெறப்பட்ட சிவபெருமானுடைய திருவடிகளை இறுகப் பற்றினவரும் —கலை வண் தமிழ் உற்ற மலைக்கு இறைவன் தனை ஒக்க மதித்தருள் கொண்டலை - கலைகளையுடைய வளவிய தமிழ் மொழி இருந்து பரவப்பெற்ற பொதியமலைக்குத் தலைவனாகிய பாண்டியன் தன்னை நிகர்க்க நன்குமதிக்கின்ற கிருபாமேகமுமாகிய திருவாதவூரரை,— வில் துவசத்தன் நெடும் படைவர்க்கமும் - விற்கொடியையுடைய சேரனது மிக்க சேனாசமூகமும,—புலிக் கொடியன் மிக்க படை வர்க்கமும் - புலிக் கொடியையுடைய சோழனது மிக்க சேனாசமூகமும்,—மற்றுள கொற்றவர் தம் படை வர்க்கமும் முற் கொடு எழுந்தன - மற்றுமுள்ள அரசர்களது சேனாசமூகங்களும் முன்னாகக்கொண்டெழுந்தன. எ-று. (௩௧)

உக்கிர நச்சுர கங்களி னுச்சி பணிப்ப வசைத்தடி
வைக்கு முரத்தன வெங்கய மைக்கிரி யொக்க மலிந்தன
பக்கமும் முற்பிற குந்துடி பற்பல கொட்ட வியங்குவ
தக்க மனத்தின் விரைந்துள தத்து பரித்திரள் வந்தன.

இ-ள். உக்கிரம் நச்சு உரகங்களின் உச்சி பணிப்ப அசைத்து அடி வைக்கும் உரத்தன வெம் கயம் - கொடிய நஞ்சையுடைய சேஷன்முதலிய பாம்புகளின் முடிகள் சுமக்கலாற்றாது நடுங்க அசைத்து அடிபெயர்த்துவைக்கும் வலியையுடையனவாகிய வெவ்விய யானைகள்,—மைக்கிரி ஒக்க மலிந்தன - தோற்றத்தாற் கரிய மலைகளை ஒக்க நிறைந்தன,—பக்கமும் முன் பிறகும் துடி பற்பல கொட்ட இயங்குவ - இருபக்கங்களினும் முன்னரும் பின்

னரும் உடுக்கைகள் மிகப்பல இயம்ப அவற்றின்தாளகதிக்கேற்ப இயங்கி நடிப்பனவும்,—தக்க மனத்தின் விரைந்துள - தகுதியாகிய மனோகதியைப் போல விரைந்துசெல்வனவுமாகிய,—தத்து பரித்திரள் வந்தன - பாய்கின்ற குதிரைக்கூட்டங்கள் சென்றன. எ-று. (௩௨)

வேறு

கொங்கணர் கலிங்கரொடு கொங்கர்துளு நாடர்
சிங்களர்க ளொட்டியர் தெலுங்கரொடு சீனர்
தங்குதிறன் மாளவர் மலாடர்தமி லொன்றாய்
எங்கணு மிடைந்தனர்க ளெண்ணமுடி வில்லார்.

இ-ள். கொங்கணர்களும் கலிங்கர்களும் கொங்கர்களும் துளுவர்களும் சிங்களவர்களும் ஒட்டியர்களும் தெலுங்கர்களும் சீனர்களும் மாளவர்களும் மலாடர்களும் தம்முட்கலந்து எவ்விடத்தும் நெருங்கினர். அவர் இவ்வளவினரென்றெண்ண முடிவில்லாதவர் எ-று. (௩௩)

இத்திற மெழுந்தபடை யெங்கணு நெருங்கத்
தத்துபரி மீதுள தமிழ்க்கவிஞர் சூழச்
சித்திர மடந்தையர் திரண்டிரு மருங்கும்
மொய்த்துவர வீணைகுழன் முன்னரிசை கொள்ள.

இ-ள். இத்திறம் எழுந்த படை எங்கணும் நெருங்க - இந்தப்பிரகாரம் எழுந்த சேனைகள் எவ்விடத்தும் நெருங்கவும்,—தத்து பரி மீது உள தமிழ்க் கவிஞர் சூழ - தாவுகின்ற குதிரைமேலிவர்ந்துள தமிழ்ப்புலவர்கள் தம்மைச்சூழவும்,—சித்திரம் மடந்தையர் திரண்டு இரு மருங்கும் மொய்த்து வர - அழகையுடையபெண்கள் தம்முட்கூடி இருமருங்கினும் நெருங்கிவரவும்,—வீணை குழல் முன்னர் இசை கொள்ள - யாழ்களும் குழல்களும் எதிரே ஒலிக்கவும். எ-று. (௩௪)

கட்டுமள கத்தினர் கனத்துள தனத்தர்
பட்டுடை மருங்கினர் பனிக்கவரி வீச
வட்டமதி வெண்குடை வயங்கமுர செங்குங்
கொட்டவுயர் காளமொடு கோடுகள் கறங்க.

இ-ள். கட்டும் அளகத்தினர் - முடிக்கப்பட்ட கூந்தலையுடையவரும்,—கனத்துள தனத்தர் - கனத்த தனங்களையுடையவரும்,—பட்டு உடை மருங்கினர் - பட்டுவஸ்திரம் உடுத்த இடையையுடையவருமாகிய பெண்கள்,—பனிக் கவரி வீச - குளிர்ச்சிபொருந்திய சாமரங்களை வீசவும்,—வட்ட மதி வெண் குடை வயங்க - பூரணசந்திரன்போலும் வெண்கொற்றக்குடை பிரகாசிக்கவும்,—முரசு எங்கும் கொட்ட - பேரிகைகள் எவ்விடங்களினும் அடிக்கப்படவும்,—உயர் காளம் ஒடு கோடுகள் கறங்க - உயர்வாகிய சிறுசின்னங்களோடு சங்குகள் ஒலிக்கவும். எ-று. (௩௫)

மிண்டியுள பாடகர் வியந்துகர வாரங்
கொண்டுபுடை சூழவெழில் சேர்குழலார் பாடத்
தண்டரள மல்கிய தனிச்சிவிகை மேல்கொண்
டெண்டிசை மிகப்புகழ் கயற்கொடி யிலங்க.

இ-ள். மிண்டி உள பாடகர் கரவாரம் கொண்டு வியந்து புடை சூழ - தம்முணெருங்கியிருக்கும் மங்கலபாடகர் கைவாரங்கொண்டு துதித்துப் பக்கத்தே சூழவும்,—எழில் சேர் குழலார் பாட - அழகுபொருந்திய கூந்தலையுடைய பெண்கள்பாடவும்,—எண் திசை மிகப் புகழ் கயல் கொடி - அட்டதிக்கினரும் மிகவும்புகழும் பாண்டியனது மீனக்கொடி,—தண் தரளம் மல்கிய தனிச் சிவிகை மேல் கொண்டு இலங்க - குளிர்ச்சிபொருந்திய ஒப்பற்ற முத்துச்சிவிகையின்மேல் உயர்த்தப்பெற்று விளங்கவும். எ-று. (௧௬)

மங்கல தினத்தினெடு மாளிகை யகன்றே
துங்கமணி யக்கையணி சொக்கரை வணங்கி
ஆங்கவர்விடை பெற்றுமறை யந்தணரின் மிக்கார்
திங்கண்மர பிற்குரிசில் கோயிலுழை சென்றார்.

இ-ள். மறை அந்தணரில் மிக்கார் - வேதங்களை அத்தியயனஞ்செய்யும் பிராமணர்களுக்குள்ளே சிரேட்டராகிய திருவாதவூரர்,—மங்கல தினத்தில் நெடு மாளிகை அகன்று - ஒருசுபதினத்திலே நெடிய திருமாளிகையை விட்டகன்று திருவாலவாயின்கட்சென்று,—அங்கு துங்க மணி அக்கை அணி சொக்கரை வணங்கி விடை பெற்று - அங்கே உயர்வாகிய உருத்திராக்கமணியையும் எலும்பையுமணிந்த சொக்கநாதசுவாமியைவணங்கி அநுமதிபெற்றுக்கொண்டு,—திங்கள் மரபில் குரிசில் கோயில் உழை சென்றார் - சந்திரகுலத்தரசனாகிய அரிமர்த்தனபாண்டியனது மாளிகையின்கட் சென்றார். எ-று. (௧௭)

சென்றுதமிழ் மாறனருள் பெற்றெழில் சிறக்கும்
வென்றிவள வன்புவியின் மேன்மையொடு செல்வார்
குன்றனைய மாடமொடு கோபுர நெருங்கும்
நன்றிமது ரைப்பதியை நன்கொடு கடந்தார்.

இ-ள். சென்று தமிழ் மாறன் அருள் பெற்று - அங்ஙனஞ்சென்று தமிழைவளர்க்கும் பாண்டியனது அநுமதியையும் பெற்று,—எழில் சிறக்கும் - அழகு மிகுந்த,—வென்றி வளவன் புவியில் மேன்மையொடு செல்வார் - வெற்றியையுடைய சோழனது நாட்டின்கண்ணே வரிசைகளோடுஞ் செல்பவராகிய திருவாதவூரர்,—குன்று அனைய மாடம் ஒடு கோபுரம் நெருங்கும் நன்றி மதுரைப்பதியை - மலைகளையொத்த மாடங்களோடு கோபுரங்கள் நெருங்கப்பெற்ற நல்ல மதுரையாகிய இராசதானியை,—நன்கொடு கடந்தார் - நன்மையோடு நீங்கினார் எ-று. (௧௮)

நெடுங்குட திசைக்கட னிறைந்தொலி சிறந்தே
உடைந்துதய நற்றிசையி லுற்றுவரு மாபோல்
மிடைந்தபதி யுங்கடமும் வெற்புமிவை யெல்லாங்
கடந்துவதி சென்றுபல காவத மகன்றார்.

இ-ள். நெடுங் குடதிசைக் கடல் - நெடிய மேற்றிசைக்கடலானது,—நிறைந்து ஒலி சிறந்து உடைந்து - நிறைந்து ஒலிமிகுந்து அணையுடைந்து,—நல் உதய திசையில் உற்று வருமாபோல் - நல்ல கிழக்குத்திக்கிலே பாய்ந்து வருமாறுபோல,—மிடைந்த பதியும் கடமும் வெற்பும் இவையெல்லாம் கடந்து - நெருங்கிய ஊர்களும் காடுகளும் மலைகளுமாகிய இவைகளையெல்லாங்கடந்து,—வதி சென்று - வழியிற்சென்று,—பல காவதம் அகன்றார் - பல காவதூரம் போனார். எ-று. (௩௯)

என்றுமுள பொன்றுமுட லென்னுநகர் தோறுஞ்
சென்றுவழி மாறியொரு தெய்வவழி செல்வார்
நன்றியுள முத்திபெற நம்பர்தம தன்பால்
அன்றுயர் பெருந்துறை யடைந்தபடி சொல்வாம்.

இ-ள். என்றும உள பொன்றும் உடல் என்னும் நகர்தோறும் சென்று வழிமாறி - எஞ்ஞான்றும் பிறந்திறக்கும் சரீரங்கள் என்னும் நகரங்கடோறும் சென்று அவ்வழிதப்பி,—ஒரு தெய்வவழி செல்வார் நன்றியுள முத்தி பெற - இதுபொழுது தெய்வத்தன்மைபொருந்திய ஒரு வழியிற்செல்பவராகியதிருவாதவூரர் நன்மையுள்ள முத்திபெறும்பொருட்டு,—நம்பர் தமது அன்பால் அன்று உயர் பெருந்துறை அடைந்தபடி சொல்வாம் - கைலாசபதி தமது அன்புகாரணமாக அத்தினத்தின்கண் உயர்வாகிய திருப்பெருந்துறையை அடைந்த சரித்திரத்தை இனி யாங் கூறுவாம். எ-று. (௪0)

மந்திரிச்சருக்கம் முற்றிற்று.

---

## திருப்பெருந்துறைச்சருக்கம்.

பழமறை முழுதுண ரந்தணர் பலர்தொழ நடமுயல் கின்றவர்
மழுவுழை கரமிசை கொண்டிட மருவிய சடையு மிலங்கிட
விழைதரு மிரசத பொங்கொளி விடுமுயர் கயிலை விலங்கலின்
அழகுறு தபனிய மண்டப மதனிடை யருள்கொ டிருந்தனர்.

இ-ள். பழ மறை முழுது உணர் அந்தணர் பலர் தொழ நடம் முயல்கின்றவர் - பழைய வேதங்களை ஓதியுணர்ந்த தில்லைவாழந்தணர்கள் பலர் வணங்கக் கனகசபையிலே நிருத்தஞ்செய்தருளும் சிவபெருமானனவர்,—

மழு உழை கரம் மிசை கொண்டு - மழுவையும் மானையும் கரங்களிற்கொண்டு,—இடம் மருவிய கவுரி மகிழ்ந்திட - வாமபாகத்திற்பொருந்திய உமையம்மை மகிழாநிற்ப,—விழைதரும் இரசத பொருப்பு ஒளி விடும் உயர் கயிலைவிலங்கலில் - எவரும்விரும்பத்தக்க வெள்ளியினது மிக்க ஒளியைவீசும் உயர்ந்த கைலாசகிரியின்கண்ணுள்ள,—அழகு உறு தபனிய மண்டபமதனிடை - அழகுபொருந்திய பொன்னாலாகிய மண்டபத்திலே,—அருள் கொடு இருந்தனர் - திருவருளோடு வீற்றிருந்தனர். எ-று. (௧)

மதுமலர் கரமிசை கொண்டுநின் வழிவழி யடியவ ரென்றுதம்
முதுமறை தெரிய மொழிந்தெதிர் முறைமுறை முனிவர் வணங்
இதுபர னருளை வழங்கிட மெனவரி பிரம ரெழுந்துநம் [கினர்
பதநிலை பெறவரு ளென்றிரு பரிபுர கழல்கள் பணிந்தனர்.

இ-ள். முனிவர் மது மலர் கரம் மிசை கொண்டு நின் வழி வழி அடியவர் என்று - அப்பொழுது இருடிகள் தேன்பொருந்திய மலர்களைக் கையிற்கொண்டு அடியேங்கள் தேவரீருக்குப் பரம்பரையான தொண்டரென்று விண்ணப்பஞ்செய்து,—தம் முது மறை தெரிய மொழிந்து எதிர் முறை முறை வணங்கினர் - தமக்குரிய பழைய வேதங்களைத் தெரியும்படிசொல்லி சந்நிதியிலே முறைமுறையாக நமஸ்காரம் செய்தனர்,—அரி பிரமர் பரன் அருளை வழங்கிடம் இது என எழுந்து - அதுகண்ட விஷ்ணு பிரமா என்னும் இருவரும் சிவபெருமான் நமக்குத் திருவருள்செய்தற்கு இதுவே தக்க சமயம் என்று விரைந்தெழுந்து —நம் பதம் நிலைபெற அருள் என்று பரிபுர இரு கழல்கள் பணிந்தனர் - நமபதவிகள் நமக்கென்றும் நிலைபெறத் தேவரீர் திருவருள்செய்யும் என்று பிரார்த்தித்துச் சிலம்புகள்தரித்த திருவடிகளை வணங்கினர். எ-று. (௨)

பரவரு மணிகள் விளங்கிய பணவர வணியா னங்கமும்
மருவிய தரள வடந்திகழ் மதிநுதன் மலைமக ளங்கமும்
இரவியு மதியு மிருந்தென வெதிரெதி ரிலகுதல் கண்டனர்
அரகர சிவசிவ வென்றுள மயர்வுற வழுதன ரன்பினர்.

இ-ள். பரவரும் மணிகள் விளங்கிய பண அரவு அணி அரன் அங்கமும் - புகழப்படுகின்ற இரத்தினம்விளங்கும் படத்தையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்த சிவபெருமானது திருமேனியும்.—மருவிய தரள வடம் திகழ் மதி நுதல் மலைமகள் அங்கமும் - வாமபாகத்திற்பொருந்திய முத்துவடம்விளங்கும் பிறைபோலும் நெற்றியையுடைய பார்ப்பதியம்மையின் திருமேனியும்.—இரவியும் மதியும் இருந்து என எதிர் எதிர் இலகுதல் கண்டனர் - சூரியனுஞ் சந்திரனும் ஒருங்கியைந்திருந்தாற்போல ஒன்றற்கொன்று எதிரெதிரே விளங்குதலைக்கண்டு,—அரகர சிவ சிவ என்று உளம் அயர்வு உற அழுதனர் அன்பினர் - அரகர சிவசிவ என்று உச்சரித்து மனம் அயர்வுபொருந்த அழுதார்கள் அன்பர்கள். எ-று. (௩)

அடியொழி மரமென நொந்துபி னவனியில் விழுவ தொழிந்துநின்
னுடனுறை பெருமை வழங்குவ துளதுகொ லெனநினை நெஞ்சொடு
மடலவிழ் கடிகம ழைந்தரு மலர்பல முறைமுறை சிந்திமுன்
னிடமிஃ தெனமகி ழிந்திர னிமையவ ரெவரு மிறைஞ்சினர்.

இ-ள். இஃது இடம் என மகிழ் இந்திரன் இமையவர் எவரும் - நாம் பெறற்பாலனவற்றைப் பெறுதற்கு இதுவே நல்லசமயம்என்று மனமகிழும் இந்திரன்முதலிய தேவர்களனைவரும்,—அடி ஒழி மரம் என நொந்து பின் - அடியற்றமரம்போல நொந்து பின்னர்,—அவனியில் விழுவது ஒழிந்து - பூமியின்கண் வீழ்வதைத் தவிர்ந்து,—நின்னுடன் உறை பெருமை வழங்குவது உளதுகொல் என நினை நெஞ்சொடு - தேவரீரோடிருக்கும் சாமீப்பியமாகிய பதமுத்தியை எமக்குத் தந்தருளுவதும் ஒருகாலத்துண்டுகொல்லோ என்றிங்ஙனம் கருதும் மனத்தோடும்,—மடல் அவிழ் கடிகமழ் ஐந்தரு மலர் பல சிந்தி முன் வணங்கினர் - இதழ்விரிகின்ற நறுமணங்கமழும் பஞ்சதருக்களின் மலர்கள் பலவற்றைத் தூவிச சந்நிதியில் வணங்கினோர்கள். எ-று. (ச)

வேறு.

திண்டிறன் மிகுஞ்சுரிகை யுந்திகழ் பிரம்புங்
கொண்டருகு நின்றுகுரு நந்தியருள் கூறப்
புண்டரிக மாதுபுவி மங்கையெழில் சிங்கா
அண்டர்மட வாரகளுல கன்னைபுற மன்ன.

இ-ள். குரு நந்தி - குருவாகிய நந்திதேவர்,—திண் திறல் மிகும் சுரிகையும் திகழ் பிரம்பும் கொண்டு அருகு நின்று அருள் கூற - திண்ணிய வலிமிக்க உடைவாளையும் விளங்கிய பிரம்பையும் கரங்களிற்கொண்டு மருங்கினின்று திருவருள்கூறவும்,—புண்டரிக மாது புவி மங்கை எழில் சிங்கா அண்டர் மடவார்கள் - செந்தாமரையாசனியாகிய இலக்குமியும் பூமிதேவியும் அழகுகுன்றாத தேவமாதர்களிரும்,—உலகு அன்னை புறம் மன்ன - உலகமாதாவாகிய உமையம்மைக்கருகே கூடியிருக்கவும். எ-று. (ரு)

துன்னுபல பூதகண நாதர்புடை சூழக்
கின்னரர்கள் கந்தருவர் கீதவிசை பாட
மின்னுமுடி மன்னுநதி வீசுதிரை நன்னீர்
என்னவொளிர் சாமரை யெழுந்தழகு செய்ய.

இ-ள். துன்னு பல பூதகண நாதர் புடை சூழ - நெருங்கிய பல பூதகணாதிபர்கள் பக்கத்திற் சூழவும்,—கின்னரர்கள் கந்தருவர் கீத இசை பாட - கின்னரர்களும் கந்தருவர்களும் கீத இசைகளைப் பாடவும்,—மின்னு முடி மன்னும் நதி வீசு நல் நீர் திரை என்ன - மின்போலும் சடாமுடியிற் பொருந்திய கங்காநதி வீசும் நல்ல நீர்த்திரைகளைப்போல,—ஒளிர் சாமரை

எழுந்து அழகு செய்ய - விளங்குகின்ற சாமரங்கள் இரட்டப்பட்டுச் சபையை அலங்கரிக்கவும். எ-று. (சு)

இந்தவள மல்குசபை யின்னல்கெட மன்னுந்
தந்தைமணி மன்றிலுறை தாண்டவ பதத்தோன்
செந்தமிழின் வந்தசிவ ஞானவமு துண்டார்
அந்தமி லருட்கடலை யாண்டருள வேண்டி.

இ-ள். இந்த வளம் மல்கு சபை - இவ்வாறாய வளங்கள்நிறைந்த சபையின்கண்ணே,—இன்னல் கெட மன்னும் தந்தை - ஆன்மாக்களது பிறவித்துன்பம் நீங்கும்பொருட்டு உருவத்திருமேனிகொண்டு வீற்றிருந்தருளும் பரமபிதாவும்,—மணி மன்றில் உறை தாண்டவ பதத்தோன்,—அழகிய சபையின்கண்ணே தங்கும் அநவரததாண்டவபாதருமாகிய சிவபெருமான்,—செந்தமிழில் வந்த சிவஞான அமுது உண்டு ஆர் - செந்தமிழிலேவந்த சிவஞானமாகிய அமுதம் உண்டு நிறைந்த,—அந்தம் இல் அருள் கடலை - கரையற்ற கிருபாசமுத்திரமாகிய திருவாதவூரரை,—ஆண்டருள வேண்டி - அடிமைக்கொண்டருளத் திருவுளங்கொண்டு. எ-று. (எ)

மைத்தகடன் மண்ணவர்க டம்முருவில் வம்மென்
றத்தகைய பத்தர்கண நாதரை யழைத்தே
சித்திதரு தேசிகர சிறந்தவடி வங்கொண்
டுத்தமநெடுங்கயிலை யோங்கலது நீங்கி.

இ-ள். அத்தகைய பத்தர் கண நாதரை அழைத்து - அத்தகுதியையுடைய அன்பர்களாகிய கணநாதர்களை அழைத்து,—மைத்த கடல் மண்ணவர்கள் தம் உருவில் வம்மென்று - நீங்கள் கரிய கடல்சூழ்ந்த மண்ணுலவாசிகளாகிய மனிதர்வடிவமாக நம்முடன் வாருங்களென்று பணித்து,—சித்திதரு தேசிகர் சிறந்த வடிவம் கொண்டு - சித்தியைக்கொடுக்கும் ஞானதேசிகத் திருமேனிகொண்டு,—உத்தம நெடும் கயிலை ஓங்கலது நீங்கி - உயர்ச்சிபொருந்திய நெடிய கைலாசமலையை விட்டுநீங்கி. எ-று. (அ)

கொன்னெறுழி தன்னுருவு கொண்டொருவர் தேடும்
பொன்னடி யெனுஞ்சலச மண்மிசை பொருந்தப்
பன்னுமறை வல்லவர் பரிந்தழல் வளர்ப்பார்
மன்னுமொரு வைதிக வளம்பதியில் வந்தார்.

இ-ள். கொன் எறுழி தன் உருவு கொண்டு ஒருவர் தேடும் பொன் அடி எனும் சலசம் மண் மிசை பொருந்த - பெரிய பன்றியின் வடிவங்கொண்டு விஷ்ணுவாலே தேடப்பட்ட அழகிய திருவடித்தாமரைகள் பூமியிற் பொருந்த நடந்தருளி,—பன்னும் மறை வல்லவர் - ஓதப்படும் வேதங்களில் வல்லவரும்,—பரிந்து அழல் வளர்ப்பார் மன்னும - அன்புகூர்ந்து நித்தியாக்கினிவளர்ப்பவருமாகிய பிராமணர்கள் மிக்கிருக்கும்,—ஒரு வைதிக

தளம் பதியில் வந்தார் - தெய்வத்தன்மைபொருந்திய வளத்தையுடைய ஒரு பதியின்கண்வந்து சேர்ந்தருளினார். எ-று. (கூ)

வெம்பிறவி வேலைதனில் வீழ்பவர்க ளெல்லாம்
நம்புசிவ நாமமெனு நற்புணை பிடித்தால்
எம்பர னருட்கரையி லேறுதுறை யாமால்
அம்புவி மொழிந்துள பெருந்துறை யதன்பேர்.

இ-ள். (அப்பதி) வெம் பிறவி வேலைதனில் வீழ்பவர்கள் எல்லாம் - கொடிய பிறவியாகிய சமுத்திரத்தின்கண் வீழ்ந்தழுந்துகின்றவர்களெல்லாம்,— நம்பு சிவ நாமம் எனும் நல் புணை பிடித்தால் - நம்புகின்ற சிவமூலமந்திரமாகிய பஞ்சாக்ஷரம் என்னும் நல்ல தெப்பத்தைத் துணையாகப்பற்றிக்கொண்டால்,—எம் பரன் அருள் கரையில் ஏறு துறை ஆம் - எம்முடைய சிவபெருமானது திருவருளான்வரும் முத்திக்கரையில் அவர் ஏறுமிடமாம்,— அம் புவி மொழிந்துள பெருந்துறை அதன் பேர் - அழகிய பூமியிலுள்ளாரால் புகழ்ந்து கூறப்பட்ட பெருந்துறை என்பது அதன் பெயராகும். எ-று. (௧0)

ஈனமில் பெருந்துறை யெனும்பதியின் ஞாங்கர்
கானமிகு புன்னைவளர் கந்தமுள சந்தம்
வானமுயர் சண்பக மரந்திகழ் நரந்தந்
தேனின முரன்றெழு செருந்திகள் பொருந்தி.

இ-ள். ஈனம் இல் பெருந்துறை எனும் பதியின் ஞாங்கர் - குற்றமற்ற திருப்பெருந்துறை என்னும் அந்தத்தலத்தின் பக்கத்திலே,—கானம் மிகு புன்னை - வாசனைமிகுந்த புன்னைமரங்களும்,—வளர் கந்தம் உள சந்தம் - வளராநின்ற மணத்தையுடைய சந்தனமரங்களும்,—வானம் உயர் சண்பகமரம் - ஆகாயத்தின்கணுயர்ந்த சண்பகமரங்களும்,—திகழ் நரந்தம் - உயர்ந்து விளங்கும் நாரத்தைகளும்,—தேன் இனம் முரன்று எழு செருந்திகள் பொருந்தி - வண்டுக்கூட்டங்கள் ஒலித்தெழுகின்ற செருந்திமரங்களும் பொருந்தி. எ-று. (௧௧)

கோடுகவி னும்பெரிய கோங்குமிக வோங்கும்
பாடல நெடும்பலவு பைங்கமுகு தெங்கு
நீடளி யிரைத்தெழு நிரைக்குரவு சூதம்
ஏடவிழ் செழுங்கவி ரிலஞ்சிகண் மலிந்து.

இ-ள். கோடு கவினும் பெரிய கோங்கு - கொம்புகள்விளங்கும் பெரிய கோங்கமரங்களும்,—மிக ஓங்கும் பாடலம் - மிகவுயர்ந்த பாதிரிமரங்களும்,—நெடும் பலவு - நெடிய பலாமரங்களும்,—பைங் கமுகு - பசிய கமுகுகளும்,—தெங்கு - தென்னைகளும்,— நீடு அளி இரைத்து எழு நிரை குரவு - மிக்க வண்டுகளொலித்தெழும் வரிசையாகிய குராமரங்களும்,—ஏடு அவிழ்

செழும் கவிர் - இதழ்விரிகின்ற செழுமையாகிய முருக்குக்களும்,—இலஞ்சிகள் மலிந்து - மகிழமரங்களும் நிறைந்து. எ-று. (கஉ)

மாக்கவின் மிகுங்கலப மஞ்ஞைசிறை யன்னங்
கூக்குரல் செயுங்கரிய கோகில நெருங்க
மீக்குலவு மந்தியின முந்துதொறு மென்மேல்
ஆர்க்குஞிமி றெங்கணு மடர்ந்திசை தொடங்க.

இ-ள். மா கவின் மிகும் கலப மஞ்ஞை - பெருமைபொருந்திய அழகு மிக்க தோகையினையுடைய மயில்களும்,—சிறை அன்னம் - சிறகுகளையுடைய அன்னங்களும்,—கூக்குரல் செயும் கரிய கோகிலம் நெருங்க - கூவி ஒலிக்கும் கரியகுயில்களும் நெருங்கவும்,—மீக்குலவும் மந்தி இனம் உந்து தொறும் - மரங்களின்மீது சஞ்சரிக்கும் குரங்குக்கூட்டங்கள் பாயுந்தோறு மெழுந்து,—மெல் மேல் ஆர்க்கு ஞிமிறு எங்கணும் அடர்ந்து இசை தொடங்க - மேலும்மேலும் ஒலிக்கும் வண்டுகளும் எவ்விடத்தும்பரந்து இசைகளைப்பாடும்படி தொடங்கவும். எ-று. (கங)

வீழ்ந்தநற வத்துளி விழிப்புனல தாகச்
சூழ்ந்துமுரல் வண்டினிசை தோத்திரம தாகத்
தாழ்ந்துமல ரேந்தியிறை தன்றிருமு னின்றே
வாழ்ந்துருகு மன்பரென மன்னுமொரு பூங்கா.

இ-ள். வீழ்ந்த நறவத் துளி விழிப் புனல் ஆக - பூங்கொத்துக்களினின்றும்வீழ்ந்த தேன்றுளிகள் கண்ணீராகவும்,—சூழ்ந்து முரல் வண்டின் இசை தோத்திரம் ஆக - அவைகளைச்சூழ்ந்து ஒலிக்கும் வண்டுகளினது கீதம் தோத்திரமாகவும்,—மலர் ஏந்தித் தாழ்ந்து - மலர்களை ஏந்திப் பணிந்து,—இறை திருமுன் நின்று - சிவசந்நிதியினின்று,—வாழ்ந்து உருகும் அன்பர் என - பெருவாழ்வடைந்து மனம் நெக்குநெக்குருகுஞ் சிவபத்தர்களைப்போல,—ஒரு பூங்கா மன்னும் - ஒருபூஞ்சோலை இருக்கும். எ-று. (க௪)

வாய்த்தவள மிவ்வகை வயங்குமத னாப்பண்
ஏத்தருந் தவசினைக ளெங்கணு நெருங்க
மீத்திக ழறக்குழை தழைத்துமிக மெய்ம்மை
பூத்தறிஞர் போன்றெழில் பொருந்துமொர் குருந்தம்.

இ-ள். வாய்த்த வளம் இவ்வகை வயங்கும் அதன் நாப்பண் - சிறந்த வளங்கள் இவ்வகையாக விளங்கும் அதன்மத்தியிலே,—ஏத்தரு தவச் சினைகள் எங்கணும் நெருங்க - உயர்ந்த தவமாகிய கிளைகள் எவ்விடத்தும் நெருங்க,—மீத் திகழ் அறக் குழை தழைத்து - மேலாகவிளங்கும் தருமமாகிய இலைகள் பொதுளி,—மெய்ம்மை மிக பூத்து - இருவகைக் குற்றமுமற்று மெய்ஞ்ஞானமாகிய பூக்களை மிகப்பூத்து,—அறிஞர் போன்று - அறிஞர்களை ஒத்து,—எழில் பொருந்தும் ஒரு குருந்தம் - அழகுபொருந்திய ஒரு குருந்த மரம் உண்டு. எ-று. (க௫)

ஆர்வமுடன் வந்தின மகப்பட வழைக்கும்
பார்வையென மாந்தர்படி வங்கொடு நடந்தார்
ஏர்வரு குருந்தமொ டிலங்குமுயர் காவிற்
சேர்குது மெனத்திரு வுளத்தருள் சிறந்து.

இ-ள். ஆர்வமுடன் வந்து இனம் அகப்பட அழைக்கும் பார்வை என - விருப்புடன்வந்து தன்னினம் அகப்படும்படி அழைக்கும் பார்வை மிருகத்தைப்போல,—மாந்தர் படிவம் கொடு நடந்தார் - திருவாதவூரரை அடிமைக்கொள்ளும்பொருட்டு மானுடவடிவங்கொண் டெழுந்தருளிவந்த சிவபெருமானவர்,—ஏர் வரு குருந்தம் ஒடு இலங்கும் உயர் காவில் சேர்குதும் எனத் திரு உளத்து அருள் சிறந்து - அழகுபொருந்திய அக்குருந்த மரத்தோடு சேர்ந்து விளங்கும் உயர்வாகிய அப்பூஞ்சோலையின்கணே சேர்வோம் என்று திருவுள்ளத்தின்கட் கிருபைகூர்ந்து. எ-று. (கசு)

வந்துதிகழ் தொண்டர்புடை சூழமகிழ் வெய்திக்
கொந்தலர் மலர்ப்பொலி குருந்தடி பொருந்தி
அந்தமுத லில்லவ ரருட்டமி ழுரைப்பார்
பந்தமற வெல்லையது பார்த்தினி திருந்தார்.

இ-ள். அந்தம் முதல் இல்லவர் - அந்தமுமாதியுமில்லாத சிவபிரான்,—வந்து திகழ் தொண்டர் புடை சூழ - தம்மொடு வந்து விளங்குகின்ற தொண்டர் பக்கத்திற்சூழ,—மகிழ்வு எய்தி - மகிழ்ச்சியடைந்து,—கொந்து அலர் மலர்ப் பொலி குருந்து அடி பொருந்தி - கொத்துக்களின் மலர்ந்த பூக்களினாற் பொலியும் அக்குருந்தமரத்தினடியை அடைந்து—அருள் தமிழ் உரைப்பார் பந்தம் அறும் எல்லை இனிது பார்த்து இருந்தார் - அருட்பாவாகிய திருவாசகத்தைப் பாடியருளும் திருவாதவூரரது பாசக்கட்டறுங் காலத்தை எதிர்நோக்கி இருந்தருளினார். எ-று. (கஎ)

பொங்குபுனல் யாறுபல போய்விழு கடற்போல்
எங்குமுள நல்லுயிர்க ளெய்துமொளி யாருந்
திங்களணி வேணியர் இருப்பவடி சேருந்
துங்கமறை யாளர்பலர் துன்றநெறி சென்றார்.

இ-ள். பொங்கு புனல் யாறு பல போய் விழு கடல் போல் - மேலே கிளர்கின்ற நீரையுடைய ஆறுகள் பல போய் வீழ்கின்ற சமுத்திரத்தைப் போல,—எங்கும் உள நல் உயிர்கள் எய்தும் ஒளி ஆரும் திங்கள் அணி வேணியர் இருப்ப - எவ்விடத்துமுள்ள பக்குவான்மாக்கள் சென்று கலக்கும் நின்மலவொளிவடிவாகிய பாலசந்திரனை அணிந்த சடையையுடைய சிவபிரான் வீற்றிருப்ப,—அடி சேரும் துங்கமறையாளர் - அவருடைய திருவடிகளை அடையும் பிராமணோத்தமராகிய திருவாதவூரர்,—பலர் துன்ற நெறி சென்றார் - பலரும் நெருங்க அந்நெறிக்கட் போயினார். எ-று. (கஅ)

வேறு.

செம்மனத்து வாதவூர்ச் செல்வரைமேற் புல்லாத
பொய்ம்முயக்கந் தரும்பாசம் போலமலர்ந் தனபூவை
எம்மயக்கு மொழிவாருக் கினிப்பிறவி யில்லையென்று
கைம்மறிக்கு மவர்போல மலர்ந்தனவங் குளகாந்தள்.

இ-ள். செம்மனத்து வாதவூர்ச் செல்வரை மேல் புல்லாத பொய்ம் முயக்கம் தரும் பாசம்போல - தூய மனத்தையுடைய திருவாதவூரரை இனிப் பந்தியாத பொய்யாகிய முயக்கததை விளைவிக்கும் பாசங்களைப்போல,— பூவை மலர்ந்தன - காயாமரஙகள் கரிய பூக்களை மலர்ந்தன,—எம் மயக்கும் ஒழிவாருக்கு இனிப் பிறவி இல்லை என்று கை மறிக்குமவர்போல - எவ்வகை மயக்கஙகளையும் நீஙகியருளுமவருக்கு இனிப் பிறவியில்லை என்று கையமைத்துத் தடுத்துக் காட்டுபவரைப்போல,—அங்குள காந்தள் மலர்ந் தன - அஙகுள்ள காந்தட்செடிகள் மலர்ந்தன. எ-று. (கக)

விற்காட்டுங் கரத்துமத னம்பாகி வெம்பிறவி
யிற்காட்டி யாவரையு மாகுலஞ்செ யெம்பாவம்
இக்காட்டி லொழிப்பவர்யா ரீயருள்க வெமக்கென்று
பற்காட்டி நிற்பவர்போன் மலர்ந்தனமென் பனிமுல்லை.

இ-ள். வில் காட்டும் கரத்து மதன் அம்பாகி - வில்லைக் காட்டுங் கையையுடைய மன்மதனுக்கு அம்பாகி,—யாவரையும் வெம் பிறவியிற் காட்டி - ஆடவர் மகளிர் அனைவரையும் கொடிய பிறவியிற்காட்டி,—ஆகுலம் செய் எம் பாவம் - வியாகுலஞ்செய்யு மெமது பாவத்தை,— இக்காட்டில் ஒழிப்பவர் யார் - இக்காட்டிலே நீக்கவல்ல பரமாசாரியர் வேறுயாவருளர் ஒருவருமிலர் ஆதலான்,—நீ எமக்கு அருள்க என்று பல் காட்டி நிற்பவர் போல்-நீரே யெமக்கருள்செய்க என்று பல்லைக்காட்டி நிற்பவரைப்போல,— மெல் பனி முல்லை மலர்ந்தன - மென்மையாகிய பசிய முல்லைக்கொடிகண் மலர்ந்தன. எ-று. (உ0)

பொற்புடைய தமிழ்பாடும் புண்ணியரைப் பொருளினுமாஞ்
சிற்பரனுண் மையின்விழிக்குந் திருநயனஞ் சேர்தலினால்
நிற்பதுவாம் பிறவியிது வென்றிரங்கி நீண்மரங்கள்
கற்பனையை யுணர்ந்துமலர்க் கண்ணீர்கள் பொழிந்தனவால்.

இ-ள். நீள் மரஙகள் - அந்நெறியின்கணிற்கும் நெடியமரங்கள்,—பொற்பு உடைய தமிழ் பாடும் புண்ணியர் - அழகையுடைய தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப்பாடியருளும் புண்ணியராகிய திருவாதவூரர்,—எப்பொருளினும் ஆம் சித் பரன் உணமையில் விழிக்கும் திருநயனம் சேர்தலினால் சகல பிரபஞ்சப்பொருளினும் வியாபித்துநிற்கும் சிவபெருமான் உண்மையாக நோக்கியருளும் நயனதீக்ஷை பெறுதலினால்,—இது பிறவி நிற்பது

ஆம் என்று இரங்கி - எம்முடைய இப்பிறவி தாவரமாம் என்று இரங்கி,— கற்பனையை உணர்ந்து - தமக்கு நியமிக்கப்பட்ட கற்பனையை அறிந்து,— மலர்க்கண் நீர் பொழிந்தன - மலர்களாகிய கண்களினின்றும் தேனாகிய நீரைப்பொழிந்தன போலும். எ-று. (உக)

முன்னைவினைப் பெருங்காடு மூடுறவைம் புலவேடர்
துன்னியலைத் திடர்செய்யுந் துன்பவழி செல்லாமல்
உன்னருநற் சிவஞான வுபதேசந் தமிழ்செய்வார்
இன்னவகைத் துளகான மெய்தியவந் நெறிநீங்கி.

இ-ள். உன் அரும் நல் சிவஞான உபதேசம் தமிழ் செய்வார் - இத்தன்மைத்தென்று நம்மனோரால் நினைத்தற்குமரிய சிவஞானோபதேசத்தைத் திருவாசகமாகச் செய்பவராகிய திருவாதவூரர்,—முன்னை வினைப் பெருங்காடு மூடுற - பழைய இருவினையாகிய பெரிய காடு மூட,—ஐம்புல வேடர் துன்னி அலைத்து இடர் செய்யும் துன்ப வழி செல்லாமல் - ஐம்பொறிகளாகிய வேட்டுவர் மறைந்துநின்று ஆறலைத்து இடும்பைகளைச்செய்யும் பிறவிநெறிக்கட் பிரவேசியாமல்,—இன்ன வகைத்து உள கானம் எய்திய அந் நெறி நீங்கி - இத்தன்மைகளையுடைய வனத்தின்கட் சென்ற அந்நெறியை விட்டுநீங்கி. எ-று. (உஉ)

வேறு.

விரிந்தகட லுக்கிடை விழுந்திட ருழந்தே
திரிந்தவர் நயந்துகரை சென்றணுகு மாபோல்
வருந்தவுழல் வித்தவினை யொத்தருள் வசத்தால்
அருந்தவர் பெருந்துறை மருங்கினி லணைந்தார்.

இ-ள். விரிந்த கடலுக்கு இடை விழுந்து இடர் உழந்து திரிந்தவர் - பரந்த சமுத்திரமத்தியில் வீழ்ந்து துன்பத்தை அனுபவித்துத் திரிந்தவர்கள்,—கரை நயந்து சென்று அணையுமா போல் - கரையை விரும்பிச் சென்று அடையுமாறுபோல,—அரும் தவர் - அரிய தவத்தையுடைய திருவாதவூரர்,— வருந்த உழல்வித்த வினை ஒத்து அருள் வசத்தால் - வருந்தும்படி பிறவியில் உழல்வித்த இருவினையும் ஒத்து அருளின்வசத்தால்,— பெருந்துறை மருங்கினில் அணைந்தார் - திருப்பெருந்துறையின் பக்கத்திலே அடைந்தார். எ-று. (உ௩)

இந்தவுல கஞ்சிவ னிருக்குமுல காகச்
சிந்தையருள் கொண்டுதிரு வாசக முரைப்பார்
பந்தமற வந்தமில் பரங்குறுக வென்றே
வந்துள பெருந்துறையின் வண்மையுரை செய்வாம்.

இ-ள். இந்த உலகம் சிவனிருக்கும் உலகாகச் சிந்தை அருள் கொண்டு - இந்த உலகம் சிவலோகமாக மனதிலே கிருபைகொண்டு,—திருவாசகம்

உரைப்பார் - திருவாசகம் உரைப்பவராகிய திருவாதவூராரானவர்,—பந்தம் அற அந்தம் இல் பரம் குறுக என்று வந்துள - பாசம்நீங்க முடிவில்லாத பதத்தை அடைய என்று வந்து சேர்ந்த,—பெருந்துறையின் வண்மை உரை செய்வாம் - திருப்பெருந்துறையின் வளத்தை இனிச் சொல்லுவாம். எ-று.

மாததியர் குலத்தலைவா வன்பிறவி யெவ்வந்
தீர்த்துலக வையரருள் செய்யுமிட மெனவே
தோத்திர முரைத்துமிசை வந்துசுரா சிந்தும
பூத்திர ளுதிர்ந்தவகை போன்றதல ரொங்கர்.

இ-ள் அலர் பொங்கர் - அலர்ந்த சோலையானது,—மாத்தியர் குலத்தலைவா வன் பிறவி எவ்வம் தீர்த்து - ஆமாத்தியகுல முதல்வராகிய திருவாதவூரரது வலிய பிறவிநோயை ஒழித்து,—உலக ஐயர் அருள் செயயும் இடம் என்று - உலகநாயகராகிய சிவபெருமான் திருவருள்செய்யுமிடம் இஃதென்று கருதி,—சுரர் மிசை வந்து தோத்திரம் உரைத்துச் சிந்தும் பூத்திரள் உதிர்ந்த வகை போன்றது - தேவர்கள் மேலே வந்துநின்று தோத்திரஞ்செய்து சொரியும் பூவின் கூட்டம் உதிர்ந்துகிடந்தவகையை ஒத்தது. எ-று. (உரு)

வேறு

பேறறிந்து தவமுயல்வோ மெனறுபெருந் துறைநாடி
ஆறியங்கி யிலோகருமவர் களிக்கவெதிர் நிறபவாபோற
கூறுமினப நிழல்செயது குறையாத பததியுடன
நீறணிந்து சோறறைந்தி நின்றன நுன றியகைகளை.

இ-ள் பேறு அறிந்து தவம் முயலவோம் என்று - பெறறபாலதின்னதெனறறிந்து தவஞ்செய்வோம் என்று கருதி,—பெருந்துறை நாடி ஆறு இயங்கி இலோகரும் அவர்கள் அளிக்க எதிர் நிறபவாபோல் - திருப்பெருந்துறையை நோக்கி வழிநடந்து பசி தாகங்களான மெலியுந் திருவாதவூரருக்குக் கொடுத்து உபசரிக்கும்படி எதிர்வந்து நிற்கும் அவரைப்போல,— துன்றிய கைகள் - நெருங்கிய தாழைகள்,—கூறும் இன்ப நிழல் செயது - கூறத்தகும் இன்பம்பொருந்திய நிழலைச்செய்து,—குறையாத பத்தி உடன் - நிறைந்த பத்தியுடனே —நீறு அணிந்து சோறு ஏந்தி நின்றன - நீறணிந்து சோற்றை ஏந்தி நின்றன எ-று. (உசு)

நிலந்தனிலவந் தொருகுருந்த நிழலிலே யெவவுலகுங்
கலந்தபொருளிருந்தபடி கண்டுமனங் களிபெய்தித்
துலங்கியதங் கண்ணிருஞ் சொரிந்துகரங் குவித்துமுகம்
மலர்ந்தபெருந் தவர்போல மலர்ந்தனபுண் டரிகங்கள்.

இ-ள். எவவுலகும் கலந்த பொருள் - சர்வலோகங்களினும் வியாபித்திருக்கும் பரம்பொருளாகிய சிவபெருமான்,—நிலந்தனில் வந்து ஒரு

குருந்த நீழலில் இருந்தபடி கண்டு - நிலவுலகத்தின்கண் வந்து ஒரு குருந்தமரநிழலில் எழுந்தருளியிருந்தமையைக் கண்டு,—மனம் களிப்பு எய்தி - மனங் களிப்படைந்து,—துலங்கிய தம் கண்ணீரும் சொரிந்து - விளங்கிய தமது கண்ணீரையும்பொழிந்து,—கரம் குவித்து - கைகளைக்குவித்து,—முகம் மலர்ந்த பெருந்தவர் போல - முகமலர்ச்சியடைந்த பெரிய தபோதனரைப் போல,—புண்டரிகங்கள் மலர்ந்தன - செந்தாமரைகள் மலர்ந்தன. எ-று.

ஆன்றபயன் பிறர்நுகர வகத்தினிமை யுளதாகித்
தோன்றியநல் லறிவினர்போற் றுவன்றியெழுந் தனகன்னல்
ஏன்றகுல மாதர்தம திறைவர்முக நாடிலவர்
வான்றகைய நிலைபோல வளைந்துவிளைந் தனசெந்நெல்.

இ-ள். ஆன்ற பயன் பிறர் நுகர - சிறந்த பிரயோசனங்களைப் பிறரனுபவிக்க,—அகத்து இனிமை உளதாகித் தோன்றிய நல் அறிவினர் போல்,—உள்ளே இனிமையுளதாகித் தோன்றிய நல்ல அறிவையுடைய மேன்மக்களைப்போல,—கன்னல் துவன்றி எழுந்தன - கரும்புகள் நெருங்கி வளர்ந்தன,—ஏன்ற குல மாதர் தமது இறைவர் முகம் நாடில் - தகுதிபொருந்திய குலமகளிர் தங் காதலர்முகத்தை நோக்கியவழி,—அவர் வான் தகைய நிலை போல - நாணியொடுங்கும் அவரது பெருந்தகைமைநிலையைப் போல,—செந்நெல் வளைந்து விளைந்தன - செந்நெற்கள் வளைந்து விளைந்தன. எ-று. (௨௮)

முலைக்கிரியுங் கருங்கூந்தன் மொய்வனமு மரணாகக்
கொலைப்புருவ வெஞ்சாபங் குனித்துவிழிக் கணையேவி
நிலைப்படுநற் பொருடேட நினைந்துதவ நீணெறியிற்
றலைப்படுவார் தமைவருத்துந் தன்மையினர் வயன்மாதர்.

இ-ள். முலைக்கிரியும் கரும் கூந்தல் மொய் வனமும் அரண் ஆக - முலையாகிய மலையும் கரிய கூந்தலாகிய நெருங்கிய காடும் அரணாகக்கொண்டு,—கொலைப் புருவ வெம் சாபம் குனித்து - கொலைத்தொழிலைச் செய்யும் புருவமாகிய கொடிய வில்லை வளைத்து,—விழிக் கணை ஏவி - கண்ணாகிய அம்பைச் செலுத்தி,—நிலைப்படு நல் பொருள் தேட நினைந்து தவம் நீள் நெறியில் தலைப்படுவார்தமை - நிலைபெறுகின்ற நல்ல பொருளைத் தேடும்படி கருதித் தவமாகிய மேனெறிக்கணொழுகுவோரை,—வருத்தும் தன்மையினர் - வருத்துமியல்புடையர்,—வயன் மாதர் - வயலிலுள்ள பெண்கள். எ-று.

வேறு.

இன்னவகை மன்னிவளர் காவுமெழின் மேவுங்
கன்னல்வய லுந்திகழ்தல் கண்டுவகை கொண்டே
இன்னலுட லம்பெற வினிப்புவியில் வாரா
மன்னவர் பெருந்துறை வளம்பதியில் வந்தார்.

இ-ள். இன்ன வகை மன்னி வளர் காவும் - இத்தன்மையாக நிலைத்து வளர்கின்ற சோலையும்,—எழில் மேவும் கன்னல் வயலும் திகழ்தல் கண்டு உவகைகொண்டு - அழகுபொருந்திய கரும்புகளையுடைய வயலும் விளங்குதலைக் கண்டு மகிழ்ந்து,—இன்னல் உடலம் பெற இனிப் புவியில் வாரா மன்னவர் - துக்கமயமாகிய சரீரத்தை எடுத்தற்பொருட்டு இனிப் பூமியின் கணவாராத திருவாதவூரர்.—பெருந்துறை வளம்பதியில் வந்தார் - திருப்பெருந்துறையாகிய வளங்களையுடைய நகரில் வந்து சேர்ந்தார். எ-று. (௩0)

மாதவர் மிகும்பதி புகுந்துழி மருங்கே
நாதனுறை தண்டலையி னன்குபுனை தொண்டர்
ஓதுறு சிவாகமவொலிப்பொலிவு கேளா
யாதிஃ தறிந்துரைமி னேவலர்க ளென்றார்.

இ-ள். மாதவர் மிகும்பதி புகுந்துழி - திருவாதவூரர் பெரிய தபோதனர்கண் மிக்க அப்பதியின்கட் புகுந்தபொழுது,—மருங்கே நாதன் உறை தண்டலையில் - பக்கத்திலே பரமாசாரியா வீற்றிருக்கும் பூஞ்சோலையில்,—நன்கு புனை தொண்டர் ஓதுறு சிவாகம ஒலிப் பொலிவு கேளா - நன்மையைப்பூண்ட தொண்டர்கள் ஓதுகின்ற சிவாகமவொலியின் கிளர்ச்சியைக் கேட்டு,—ஏவலர்கள் இஃது யாது அறிந்து உரைமின் என்றார் - ஏவலாளர்களே இவ்வொலி யாது அறிந்து சொல்லுங்களென்று பணித்தருளினார். எ-று. (௩௧)

சென்றவர்கள் வந்துசிவ பத்தர்பலர் சூழக்
கொன்றைமுடி வைத்தகுண வெற்பைநிக ரொப்பார்
நின்றதொர் குருந்தமர நீழலி லிருந்தார்
என்றலு மகிழ்ந்தன ரினிப்பிறவி யில்லார்.

இ-ள். சென்றவர்கள் வந்து - யாதென்றறியும்படி சென்றவர்களாகிய ஏவலாளர்கள் அதனை அறிந்துகொண்டுவந்து,—சிவ பத்தர் பலர் சூழ - சிவனடியார் பலர் சூழ்ந்து சேவிக்க,—கொன்றை முடி வைத்த குண வெற்பை நிகரொப்பார் - கொன்றைமாலிகையைத திருமுடியிலே தரித்த குணமலையாகிய சிவபெருமானை ஒத்த ஒருவர்,—நின்றது ஓர் குருந்த மர நீழலில் இருந்தார் என்றலும் - அங்கேநிற்கின்ற ஒரு குருந்தமரநிழலில் வீற்றிருக்கின்றாரென்று சொல்லுதலும் - இனிப் பிறவி இல்லார் மகிழ்ந்தனர் - இனிமேற் பிறவியில்லாத திருவாதவூரர் மகிழ்ந்தார். எ-று. (௩௨)

ஏவல ருரைத்தமொழி கேட்டரனை யெய்தும்
ஆவலொடு காவினை யணைந்தக மலர்ந்து
மேவிய மணிச்சிவிகை விட்டிழி திழிந்தே
தேவர்பர வும்பரமர் தெய்வசபை கண்டார்.

இ-ள். ஏவலர் உரைத்த மொழி கேட்டு - ஏவலாளர்கள்கூறிய வார்த்தையைக்கேட்டு,—அரனை எய்தும் ஆவல் ஒடு காவினை அணைந்து - சிவபெ

ருமானை அடையவேண்டும் என்னும் அவாவோடு அச்சோலையையடை ந்து,—அகம் மலர்ந்து - மனமகிழ்ந்து,—மேவிய மணிச் சிவிகை விட்டு இனிது இழிந்து - தாமிவர்ந்துவந்த முத்துச்சிவிகையைவிட்டு இனிதாக இறங்கி,—தேவர் பரவும் பரமர் தெய்வ சபை கண்டார் - தேவர்களும் வழி படுகின்ற சிவபிரானுடைய தெய்வத்தன்மைபொருந்திய சபையைக் கண் டார். எ-று. (௩௩)

வேறு.

அண்டமெலாங் கடந்தபொருள் பகரு நூலி
னளவுரைப்பார் தெளிந்தயர்வா ராய்வா ராகித்
தொண்டுபடு மடியார்க ளொன்பா னூற்
றொண்ணூறொன் பானென்னுந் தொகுதி சூழ
வொண்டொடிபங் கினனிருப்ப விருப்பா லெய்தி
யுடனுரைத்துச் சிவஞான முணர்வா ரன்பு
மண்டியநெஞ் சினில்வணங்கி வணங்கார் போல
மந்திரியார் மேன்மையுடன் வந்து நின்றார்.

இ-ள். அண்டமெலாம் கடந்த பொருள் பகரும் நூலின் அளவு உரைப் பார் - அண்டங்களெல்லாவற்றையும் கடந்த வஸ்துவாகிய சிவபிரான் அரு ளிய ஆகமநூல்களினளவைகளைச சொல்வாரும்,—தெளிந்து அயர்வார் - அவற்றின்பொருளைத் தெளிந்து அயர்சசிகொள்வாரும்,—ஆய்வாராகி - ஆரா ய்பவருமாகி,—தொண்டு படும் அடியார்கள் ஒன்பான் நூற்று மேல் தொண் ணூற்று ஒன்பான் என்னும் தொகுதி சூழ - அடிமைபூண்ட அடியார்கள் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதென்னுந் தொகையினையுடையவர் தம்மைசசூழ்ந்து சேவிக்க,—ஒள் தொடி பங்கினன் இருப்ப - ஒளிபொருந் திய வளையலைத்தரித்த உமாதேவிபாகராகிய சிவபெருமான் வீற்றிருக்க,— விருப்பால் எய்தி - விருப்பத்தோடு போய்,—உடன் உரைத்துச் சிவஞானம் உணர்வார் - சம்பாஷித்துச சிவஞானத்தை உணருங் கருத்தினராகி,— அன்பு மண்டிய நெஞ்சினில் வணங்கி - அன்புநிறைந்த மனத்தில் வணங்கி,— வணங்கார் போல - காயத்தால் வணங்காதார்போன்று,—மந்திரியார் மேன் மையுடன் வந்து நின்றார் - திருவாதவூரர் மேன்மையுடன் வந்துநின்றார். எ-று. (௩௪)

உருத்திராக்கத் திருமணியை யிலங்குகாதி
லொண்சிரத்திற் கந்தரத்தி லொளிகொண் மார்பிற்
கரத்திலணிந் திலங்குதிரு முண்ட மங்கிக்
கண்கரந்த நன்னுதன்மேற் கவினச் சாத்தித்
திருத்திகழும் வேதியரு ரம்பொன் மேனி
திகழ்வதுகண் டகமகிழ்வார் செங்கை மீது

பொருந்தமுறும் புத்தகமே தையா வென்னப்
பொய்ம்மையிலார் சிவஞான போத மென்றார்.

இ-ள். நல் உருத்திர மணியை - சிறந்த உருத்திராக்கமணியை,—இலங்கு காதில் - விளங்குகின்ற செவிகளிலும்—ஒள் சிரத்தில் - அழகிய சிரசிலும்,—கந்தரத்தில் - கழுத்திலும்,—ஒளிகொள் மார்பில் - ஒளிபொருந்திய மார்பிலும்,—கரத்தில் அணிந்து - கரங்களிலுந் தரித்தும்,—இலங்கு திருமுண்டம் - வெள்ளொளிவிளங்குந் திரிபுண்டரத்தை—அங்கிக் கண் கரந்த நல் நுதல் மேல் கவினச் சாத்தி - அக்கினிக் கண்ணை மறைத்த நல்ல நெற்றியிலே விளங்கத் தரித்தும்,—திருத் திகழும் வேதியனார் அம் பொன் மேனி திகழ்வது கண்டு அகம் மகிழ்வார் - அழகுவிளங்குகின்ற சிவபெருமானது அழகிய பொன்போலும் திருமேனி பிரகாசிப்பதைக்கண்டு மனம் களிகூரும் திருவாதவூரர் அவரைநோக்கி,—ஐயா செங்கை மீது பொருந்தம் உறும் புத்தகம் ஏது என்ன - சுவாமீ உமது சிவந்த கரத்திலிருக்கும் புத்தகம் யாதென்று வினவ,—பொய்ம்மை இலார் சிவஞானபோதம் என்றார் - மெய்ம்மையாளராகிய அவர் சிவஞானபோதம் என்று கூறியருளினார். எ-று. (௩௫)

என்றலுமே சிவமேது ஞான மேதிங்
கிலங்கியிடும் போதமே தியம்பு வீரேல்
அன்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே
யடியேனு முமக்கடிமை யாவே னென்ன
நின்றசிவ மொன்றதனைத் தேர்தன் ஞானம்
நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளித லாமென்
றொன்றியநற் பொருள்வினவி நிற்பார் சிந்தை
யுருகும்வகை யுரைசெய்தா ருவமை யில்லார்.

இ-ள். என்றலும் - என்றவளவிலே,—சிவம் ஏது - சிவமாவது யாது,—ஞானம் ஏது - ஞானமாவது யாது,—இங்கு இலங்கியிடும் போதம் ஏது - இறுதிக்கண் விளங்கும் போதமாவது யாது,—இயம்புவீரேல் - இவ்வினாக்களுக்கு விடைகள் சொலவீராயின்,—அன்று வட நீழலில் வந்து இருந்தார் நீரே - அக்காலத்துக் கல்லாலவிருக்ஷநிழலி லெழுந்தருளிவந்திருந்த தக்ஷிணாமூர்த்தியுந் தேவரீரே,—அடியேனும் உமக்கு அடிமை ஆவேன் என்ன - தமியேனுந் தேவரீருக்கு அடிமையாவேன் என்று சொல்ல,—உவமை இல்லார் - உவமையில்லாதவராகிய பரமாசாரியர்,—நின்ற சிவம் ஒன்று - சிவமாவது ஏகவஸ்துவாகிய பரப்பிரமம்,—அதனைத் தேர்தல் ஞானம் - அவ்வஸ்துவை உள்ளவாறு அறிதலே ஞானமாம்,—நிகழ் போதம் தேர்ந்த தனைத் தெளிதல் ஆம் என்று - இனிப் போதமாவது அறிந்ததனைத் தெளிதலாமென்று,—ஒன்றிய நல் பொருள் வினவி நிற்பார் சிந்தை உருகும் வகை உரை செய்தார் - பொருந்திய உண்மைப்பொருளை வினவிநிற்குந் திருவாதவூரருடைய மனம் நெக்குருகும்வண்ணம் சொல்லியருளினார். எ-று.

வேறு.

உத்தம ரின்ன வாறிங் குரைத்தலு முவந்து நாலாஞ்
சத்திநி பாத மெய்துந் தன்மைய ராத லாலே
அத்திரு மன்றி லாடு மையரிங் கென்னை யாள
இத்திரு மேனி கொண்டா ரென்பது மனத்தி லெண்ணி.

இ-ள். உத்தமர் இன்ன ஆறு இங்கு உரைத்தலும் - உத்தமராகிய சிவ பெருமான் இந்தப்பிரகாரம் இங்கே திருவாய்மலர்ந்தருளுதலும்,—உவந்து - திருவாதவூரர் மனமகிழ்ந்து,—நாலாம் சத்திநிபாதம் எய்தும் தன்மையர் ஆதலால் - நான்காஞ் சத்திநிபாதமாகிய தீவிரதரம் பொருந்தப்பெற்ற தன்மையை யுடையராதலினால்,—அத் திரு மன்றில் ஆடும் ஐயர் - அக்கனக சபையின்கண்ணே திருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகரே,—இங்கு என்னை ஆள இத் திரு மேனி கொண்டார் என்பது மனத்தில் எண்ணி - இங்கே தமியேனை அடிமைக்கொண்டருளும்பொருட்டு இத்திருமேனிகொண்டருளினார் என்பதைத் தம்மனத்திற் சிந்தித்து. எ-று. (௩எ)

மின்னினு நிலைமை யில்லா விழுப்பொருள் யாவும் வேண்டேன்
உன்னடி யடைந்து நாயே னுறுபவ மொழித்தல் வேண்டும்
என்னையின் றடிமைக் கொள்வா யெம்முயிர்க் கிறைவா வென்று
முன்னுற வணங்கி நின்றார் முகமெலாங் கண்ணீர் வார.

இ-ள். எம்முயிர்க்கு இறைவா - எமதான்மநாயகரே,—மின்னினும் நிலைமை இல்லா விழுப்பொருள் யாவும் வேண்டேன் - மின்னலினும் விரைந்தழிகின்ற விழுமியபொருள்கள் ஒன்றையும் விரும்பமாட்டேன்,—உன் அடி அடைந்து நாயேன் உறு பவம் ஒழித்தல் வேண்டும் - தேவரீருடைய திருவடிகளையே புகலிடமாகவடைந்து நாயேனடைந்த பிறவியை நீக்குதல் வேண்டும்,—என்னை இன்று அடிமைக்கொள்வாய் என்று - தமியேனை இப்பொழுது அடிமைக்கொண்டருளும் என்று,—முகம் எலாம் கண்ணீர் வார முன்னுற வணங்கி நின்றார் - முகமெங்குங் கண்ணீரொழுக முன்னிலையில் வணங்கிநின்றனர். எ-று. (௩அ)

இவ்வகை புகன்று முன்னோன் முன்னுற விரங்கி நிற்பத்
திவ்விர தரமே யான செய்திய ரென்று நாடி
அவ்வடி யவரின் மிக்கா ரொருவரிவ் வடிமை தன்னை
வெவ்வினை யகற்றி யாள வேண்டுமென் றிறைஞ்சி நின்றார்.

இ-ள். இவ்வகை புகன்று முன்னோன் முன்னுற இரங்கி நிற்ப - திருவாதவூரர் இந்தப்பிரகாரம் விண்ணப்பஞ்செய்து பரமாசாரியரது சந்நிதியிலே இரங்கி நிற்ப,—அவ்வடியவரின் மிக்கார் ஒருவர் நாடி - அத்தொண்டர்களுக்குட் சிறந்தவரொருவர் அதுகண்டு,—திவ்விரதரம் ஆன செய்தியர்

என்று - இவர் தீவிரதரமுடையவரென்றனுமானித்து,—வெவ்வினை அகற்றி இவ்வடிமை தன்னை ஆள வேண்டும் என்று - கொடிய வினைகளைநீக்கி இவ்வடியவரைத் தேவரீர் அடிமைக்கொண்டருளவேண்டுமென்று பிரார்த்தித்து,—இறைஞ்சி நின்றார் - வணங்கி நின்றார். எ-று. (௩௯)

கருப்புக நினையார் தம்மேற் கண்ணருள் செய்து நெஞ்சிற்
பரப்பற மிதித்தல் வேண்டி யெடுத்தபொற் பாதங் கொண்டு
திருப்புனை மறையோர் போற்றுந் தில்லையம் பலத்தே நின்ற
அருட்பர னந்த வாரி யாதலி னதற்கி சைந்தார்.

இ-ள். கருப்புக நினையார் தம் மேல் கண் அருள் செய்து - கருவிற்பிரவேசிக்க நினையாத பக்குவான்மாக்கண்மீது கிருபாநோக்கஞ்செய்து,—எடுத்த பொன் பாதம் கொண்டு நெஞ்சில் பரப்பு அற மிதித்தல் வேண்டி - தூக்கிய திருவடியைக்கொண்டு அவரது சித்தவிருத்தி குன்றும்வண்ணம் சிரசில்வைத்துத் தீக்ஷைசெய்யத் திருவுளம்பொருந்தி,—திருப்புனை மறையோர் போற்றும் - அருட்செல்வத்தையுடைய தில்லைவாழந்தணர் துதிக்கும்,—தில்லை அம்பலத்து நின்ற அருள் பர ஆனந்த வாரி ஆதலின் - சிதம்பரத்திலே கனகசபையின்கணனே நின்றருளுகின்ற காருண்ணியத்தையுடைய சிவானந்தசமுத்திரமாகலின்,—அதற்கு இசைந்தார் - அவ்வேண்டுகோளுக்கு உடன்பட்டருளினார். எ-று. (௪௦)

அத்தகு பகலோன் முன்ன ரலர்செயு மம்பு சாதம்
ஒத்தவர் தம்மை நாடி யுன்னையின் றடிமைக் கொள்ள
இத்தலத் தணைந்தோ நீமுன் னியற்றிய தவத்தி னாலே
சித்தம திரங்கல் வேண்டா மெனத்திரு வாய்ம லர்ந்தார்.

இ-ள். அத்தகு பகலோன் முன்னர் அலர் செயும் அம்புசாதம் ஒத்தவர் தம்மை நாடி - அழகுதக்க சூரியனது சந்நிதியிலே அலருகின்ற தாமரைமலரையொத்த திருவாதவூரரைப் பரமாசாரியர் நோக்கி,—நீ முன் இயற்றிய தவத்தினாலே இன்று உன்னை அடிமைக்கொள்ள இத்தலத்து அணைந்தோம் - அன்பனே நீமுன்செய்த புண்ணியவசத்தினாலே இன்றைக்கு உன்னை அடிமைக்கொள்ளும்பொருட்டு இப்பெருந்துறையின்கண் வந்தேம்,—சித்தம் இரங்கல் வேண்டாம் எனத் திருவாய்மலர்ந்தார் - மனமிரங்குதலை ஒழிக என்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௪௧)

வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றென திலம்பா டென்று
சிந்தையா குலமுற் றேன்கைச் செழும்பொரு ளீதல் செய்வா
கிந்தநா ளளிக்க வேண்டு மெனவிதி யின்மை யாலே
அந்தணா ணன்று ளாக வடிமைக் கொண் டருள வெண்ணி.

இ-ள். வந்து - தம்மை நாடிவந்து,—நான் வறுமை உற்றேன் - நான் வறுமையடைந்தேன்,—எனது இலம்பாடு மாற்று என்று - எனது வறு

மையை நீக்குக என்று,—சிந்தை ஆகுலம் உற்றோன் கை செழும் பொருள் ஈதல் செய்வார்க்கு - மனோவியாகுலமடைந்த ஒரு தரித்திரன்கையிலே நல்ல திரவியத்தைக் கொடுப்பார்க்கு,—இந்த நாள் அளிக்க வேண்டும் என விதி இன்மையால் - இன்னநாளில் கொடுத்தல்வேண்டும் என்னும் விதியில்லாமையினாலே,—அந்த நாள் நல் நாள் ஆக அடிமைக்கொண்டருள எண்ணி - அந்நாளே நல்லநாளாகப் பரமாசாரியர் திருவாதவூரரை அடிமைக்கொண்டருளத் திருவுளங்கொண்டு. எ-று. (௪௨)

அத்தகு தொண்டர்க் கெல்லா மதிபரா மவரை நோக்கி
இத்தவ முடையோ னெய்து மிடரொழிக் தாள்வ திந்நாள்
வித்தக விதற்கு வேண்டுங் கருமநீ விரைவிற் செய்கென்
றுத்தம வடிவங் காட்டு முண்மையா ருரைத்தல் செய்தார்.

இ-ள். உத்தம வடிவம் காட்டும் உண்மையார் - ஞானதேசிகத் திருமேனியைத் தரிசிப்பித்தருளும் மெய்ப்பொருளாகிய சிவபெருமானவர்,—அத்தகு தொண்டர்க்கு எல்லாம் அதிபராம் அவரை நோக்கி - அழகுதக்க தொண்டர்களுக்கெல்லாம் முதல்வராகிய அவரைப் பார்த்து,—வித்தக - சாதுரியனே,—இத்தவம் உடையோன் எய்தும் இடர் ஒழித்து ஆள்வது இந்நாள் - தவத்தையுடைய இவ்வன்பன்பொருந்தும் துன்பத்தைநீக்கி நாம் அடிமைக்கொள்வது இந்தினமே,—இதற்கு வேண்டும் கருமம் நீ விரைவில் செய்க என்று உரைத்தல் செய்தார் - இதற்குவேண்டிய காரியங்களை நீ காலதாமதமின்றிச் செய்யக்கடவை என்று சொன்னார். (௪௩)

முன்னவர் புகன்ற வாறு முயல்குவ மென்றே யந்த
மன்னிருந் தவத்தின் மிக்கார் வகைமலர்த் தெரிய லாலும்
பொன்னிடை யழுத்தி முத்தம புனைந்தபல் பட்டி னாலும்
அந்நெடுங் காவி னூடங் கானபூங் கோயில் செய்து.

இ-ள். அந்த மன் இரும் தவத்தின் மிக்கார் - அந்த நிலைபெற்ற பெரிய தவத்தான்மேம்பட்ட தொண்டர்,—முன்னவர் புகன்ற ஆறு முயல்குவம் என்று - முதல்வராகிய ஞானதேசிகர் பணித்தருளியபிரகாரஞ் செய்வோமென்று,—வகை மலர்த் தெரியலாலும் - பலவிதமாகிய பூமாலைகளினாலும்,—பொன் இடை முத்தம் அழுத்தி புனைந்த பல் பட்டினாலும் - பொன்னிழைகளுக்கு இடையிடையே முத்துக்களை அழுத்தி அலங்கரித்த நாநாவிதமாகிய பட்டுவஸ்திரங்களினாலும்,—அங்கு அந்நெடும் காவின் ஊடு ஆன பூங் கோயில் செய்து - உயர்வாகிய அசசோலையின்கண்ணே தக்க அழகிய ஒரு கோயிலைச்செய்து. எ-று. (௪௪)

செய்தநற் கோயி லூடு சிறந்தவா சனமுஞ் சேர்த்து
மெய்திகழ் தொண்டர்க் கெல்லா மிக்கவ ரிறைவற் சார்ந்து
கைதவ முடையார் நெஞ்சிற் கனவினுங் காணநில்லா
மைதரு களத்தாய் கோட்டஞ் சமைந்தது வாய்ப்ப வென்றார்.

இ-ள். மெய திகழ தொணடாககு எல்லாம மிக்கவா - மெய்ம்மை விளஙகுகின்ற தொணடாகளுககெலலாம அதிபா,—செயத நல் கோயில் ஊடு சிறநத ஆசனமும சோதது - செயயபபட்ட நலல கோயிலினுள்ளே சிறநத ஓா ஆசனததையுமமைதது,—இறைவற சாாநது - பரமாசாரியரை அடைந்து,—கைதவம உடையாா நெஞசில கனவிலும காண கில்லா மை தரு களததாய - வஞசகாமனததிலே சொபபனததினும காணுதறகு வெளிபபட்டுகில்லாத காளகணடததை யுடையவரே, — கோட்டம வாயப்பச சமைநதது என்றூா - கோயில மாட்சிமைபபடச செயயபபட்டு முடிநதது என்றூா எ-று. (௪௫)

ஆயிடைச் குடபால வெறபி லாதவன சரநது ஞாலம்
பாயிருள பராநத பின்னாக சடிகைபன னொநது சென்று
மேயநல லுயிாக ளெலலாம விழி துயில பயிலுங காலைத
தூயதொண டாசகு மாயை தொலையுநல லமயந தோன்ற.

இ-ள் ஆயிடைக குடபால வெறபில ஆதவன கரநது - அஙகே மேற் குததிககிலுள்ள அஸதமயகிரியிலே சூரியன மறைய,—ஞாலம பாய இருள பரநத பினனா - பூமியிலே இருள பரநதபினபு,—கடிகை பனனொநது செ னறு - அாததயாமமாகபபெறறு,—மேய நல உயிாகள எலலாம விழி துயில பயிலும காலை - பொருநதிய நலல ஆனமவாககஙகளெலலாம நிததிரைசெய் யுமபோது,—தூய தொணடாககு மாயை தொலையும நல அமயம தோனற - சுததியையுடைய திருவாதவூாருககு மாயாமலந தொலைததறகேறற சமயந் தோனற எ று. (௪௬)

இஙகிவா தமமை யாளுங காலமீ தென்று தெயவச
சஙகம தகனறு முனனோன மஞசன சாலை சோந்து
குஙகுமம புழுகு சநதங குழைததுமெயம முழுதும பூசிக்
கஙகையி னனனீா வாசங கலநதமென பனிநீ ராடி.

இ-ள். முனனோன இஙகு இவாதமமை ஆளும காலம ஈது என்று - பரமாசாரியர் இவவனபரை நாம அடிமைகொளளுஙகாலம இதுவே என்று எணணி, — தெயவ சஙகம அகனறு மஞசன சாலை சோநது - அததேவ சபையைவிட்டுநீஙகி ஸநானசாலையை அடைநது,—குஙகுமம புழுகு சந் தம் குழைதது மெய முழுதும பூசி - குஙகுமததையும புழுகையுஞ சந்த னததையுங குழைதது மேனியெஙகும பூசி,—கஙகையின நல நீா வாசம் கலநத மென பனிநீா ஆடி - கஙகையினது நலல நீரினோடு பரிமளஙகலந்த மெல்லிய பனிநீரினுலே ஸநானஞசெயது. எ-று. (௪௭)

மெய்ப்புன றுகிலான மாறறி விலைமதிப பிலாத நல்ல
ஒப்பருஞ் செமபட் டாடை யுடுததுபா கோட்ட மெய்திச்
செபபிள முலையாள பாகன றெனறிசை யதனை நோக்கி
அபபெருந தவிசின மேலங சமுகுற விருநத பின்னா.

இ-ள். செப்பு இள முலையாள் பாகன் - செப்பையொத்த இளமையான ஸ்தனங்களையுடைய உமாதேவிபாகராகிய சிவபெருமான்,—மெய்ப் புனல் துகிலான் மாற்றி - மேனியிற்பொருந்திய நீரை ஒற்றாடையினாலே ஒற்றிநீக்கி,—விலை மதிப்பு இலாத நல்ல ஒப்பு அரும் செம்பட்டு ஆடை உடுத்து - விலைமதித்தற்கரிய நல்ல ஒப்பற்ற செம்மையாகிய பட்டுவஸ்திரத்தை அரையிலே சாத்தி,—உயர் கோட்டம் எய்தி - உயர்ச்சிபொருந்திய கோயிலை அடைந்து,—அப் பெரும் தவிசின்மேல் தென் திசை அதனை நோக்கி அங்கு அழகுஉற இருந்த பின்னர் - பெருமைபொருந்திய அவ்வாசனத்தின்மீதே தெற்குத்திக்கைநோக்கி வீற்றிருந்தருளியபின்னர். எ-று.

அண்டரு மலர்தூ யேத்து மன்பருந் தூநீ ராடி
வெண்டுகில் புனைந்து நீறு விளங்கிய மெய்ய ராகி
முண்டக மலர்த்தாள் வைத்து முத்திதந் தருள மேனி
கொண்டவர் திருமுன் சென்று குறுகியங் குவகை கூர்ந்து.

இ-ள். அண்டரும் மலர் தூய் ஏத்தும் அன்பரும் - தேவர்களும் பூக்களைத்தூவித் துதிக்கத்தக்க திருவாதவூரரும்,—தூ நீர் ஆடி - சுத்தமாகிய நீரிலே ஸ்நானஞ்செய்து,—வெண் துகில் புனைந்து - வெண்மையாகிய பட்டுவஸ்திரத்தைத் தரித்து,—நீறு விளங்கிய மெய்யர் ஆகி - விபூதிபிரகாசிக்கின்ற மேனியையுடையவராகி,—முண்டக மலர்த்தாள் வைத்து முத்தி தந்தருள மேனி கொண்டவர் திருமுன் சென்று குறுகி - செந்தாமரைமலர் போலுந் திருவடிகளைச் சிரசின்மீதுசூட்டித் திருவடிதீக்ஷைசெய்து தமக்கு முத்திதந்தருளும்வண்ணங் குருமூர்த்தங்கொண்டெழுந்தருளிய சிவபெருமானது சந்நிதியிலே சென்றடைந்து,—அங்கு உவகை கூர்ந்து - அங்கே மகிழ்ச்சிமிகுந்து. எ-று. (௪௧)

விண்ணவ ரதிபன் பொற்றாள் விளக்கியர்ச் சனைகள் செய்து
தண்ணமர் பனிநீர் தோய்ந்த சந்தமெய் முழுதுஞ் சாத்தி
வண்ணமென் கழுநீர் மாலை வளம்பெற வணிந்து பின்னர்க்
கண்ணுறு பரிவு தீரக் கண்டுள மகிழ்ச்சி கொண்டு.

இ-ள். விண்ணவர் அதிபன் பொன் தாள் விளக்கி அர்ச்சனைகள் செய்து - தேவநாயகராகிய சிவபெருமானுடைய அழகிய திருவடிகளை அபிஷேகஞ்செய்தருச்சித்து,—தண் அமர் பனிநீர் தோய்ந்த சாந்தம் மெய் முழுதுஞ் சாத்தி - குளிர்ச்சிபொருந்திய பனிநீர்கலந்த சந்தனக்குழம்பை மேனிமுழுவதுஞ் சாத்தி,—வண்ணம் மெல் கழுநீர் மாலை வளம் பெற அணிந்து - அழகிய மிருதுவாகிய செங்கழுநீர்மாலையை அழகுபெறத் தரித்து,—பின்னர் - அதன்பின்னர்,—கண் உறு பரிவு தீரக் கண்டு - கண்கொண்ட துன்பந்தீரத் தரிசித்து,—உளம் மகிழ்ச்சி கொண்டு - மனத்திலே பேரானந்தங் கொண்டு. எ-று. (௫௦)

பருப்பொடு நாளி கேரப் பழச்செழுந் துருவல் சேர்த்துச்
சருக்கரை கலந்து பாலிற் சமைத்தநல் லமுது தன்னை
இருத்திய கனகக் கான்மே லிலங்குபொற் கலத்தின் மீது
விருப்பொடு படைத்து நெய்யு மிக்கமுக் கனியும் பெய்து.

இ-ள். பருப்பு ஒடு செழும் நாளிகேரப் பழத் துருவல் சேர்த்து - பருப்போடு செழுமையாகிய தேங்காய்த்துருவலைச் சேர்த்து,—சருக்கரை கலந்து பாலில் சமைத்த நல் அமுது தன்னை - சருக்கரையைக் கலந்து பாலாற்சமைத்த திருவமுதை,—இருத்திய கனகக் கால் மேல் இலங்கு பொன் கலத்தின் மீது விருப்பொடு படைத்து - வைக்கப்பட்ட பொற் காலின்மேல் விளங்குகின்ற பொற்பாத்திரத்தின்கண் விருப்புடன் படைத்து,—நெய்யும் மிக்க முக்கனியும் பெய்து - அதன்மீது நெய்யையும் மிக்க முப்பழங்களையும் இட்டு. எ-று. (ருக)

மாலயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னாள்
ஆலமுண் டவனே நல்ல வமுதமுண் டருள்வா யென்று
சீலமா மகிழ்ச்சி பொங்குஞ் சிந்தையி னுரைத்துக் கால
காலனற் கரங்க ணீராற் கவின்பெறக் கழீஇய பின்னர்.

இ-ள். மால் அயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன் நாள் ஆலம் உண்டவனே - விஷ்ணுவும், பிரமாவும், இந்திரனும், மற்றைத் தேவர்களும் உய்யும்பொருட்டு முற்காலத்தில் விஷத்தையுண்டவரே,—நல்ல அமுதம் உண்டருள்வாய் என்று - இந்த நல்ல திருவமுதையும் உண்டருளுமென்று,—சீலமா மகிழ்ச்சி பொங்கும் சிந்தையின் உரைத்து - சீலம்பொருந்திய மகிழ்ச்சிபொலிகின்ற மனவிருப்பத்தோடு பிரார்த்தித்து,—காலகாலன் நல் கரங்கள் கவின் பெற நீரால் கழீஇய பின்னர் - சிவபெருமானுடைய நல்ல திருக்கரங்களை அழகுபெற நீரினாற் கழுவியபின்னர். எ-று. (ருஉ)

வெள்ளிலை பழுக்காய் நல்கி விரைதரு தூபந் தேசு
கொள்ளுநற் றீபங் காட்டிக் கோலநன் னீறு சாத்தித்
தெள்ளொளி விளங்கு மாடி திருந்தமுன் றெரிவித் தெங்கும்
உள்ளவர் முடிமே லோங்க வொண்குடை கவித்தல் செய்து.

இ-ள். வெள்ளிலை பழுக்காய் நல்கி - வெற்றிலை பாக்குகளை நிவேதித்து,—விரை தரு தூபம் தேசு கொள்ளும் நல் தீபம் காட்டி - சுகந்தப் பொடிதூவிய தூபத்தையும் ஒளிபொருந்திய நல்ல தீபத்தையும் சுற்றி ஆராதித்து,—கோல நல் நீறு சாத்தி - அழகிய நல்லவிபூதியையுஞ்சாத்தி,—தெள் ஒளி விளங்கும் ஆடி திருந்த முன் தெரிவித்து - தெளிவாகிய ஒளி விளங்கும் கண்ணாடியைத் திருத்தமுற முன்காட்டி,—எங்கும் உள்ளவர் முடி மேல் ஓங்க ஒண் குடை கவித்தல் செய்து - எங்கும் வியாபகராகிய

சிவபெருமானது திருமுடிமேல் ஓங்க ஒளிபொருந்திய குடையையுங் கவித்து. எ-று. (௩௩)

கற்றைவெண் கவரி செம்பொற் காம்புநீ ளால வட்டம்
பற்றியன் புடனே வீசிப் பரிவுட னடியார் சூழப்
பொற்றவி சிடையே மேவும் புண்ணியன் றிருமுன் பைம்போ
துற்றகை யுடனே வாத வூரரங் கிருந்த பின்னர்.

இ-ள். கற்றை வெண் கவரி - கற்றையாகிய வெள்ளிய சாமரத்தை யும்,—செம் பொன் காம்பு நீள் ஆலவட்டம் அன்பு உடனே பற்றி வீசி - சிவந்த பொன்மயமாகிய காம்புநீண்ட ஆலவட்டத்தையும் அன்போடு பற்றி வீசி,—அடியார் பரிவு உடன் சூழப் பொன் தவிசு இடை மேவும் புண ணியன் திருமுன் - தொண்டர்கள் அன்போடுசூழப் பொன்னாசனத்தின் மீது வீற்றிருக்கும் புண்ணியவடிவினராகிய பரமாசாரியரது திவ்விய சந் நிதியிலே,—வாதவூரர் பைம்போது உற்ற கை உடன் அங்கு இருந்த பின் னர் - திருவாதவூரர் பசிய மலர்பொருந்திய கரத்துடனே அங்கே இருந்த பின்னர். எ-று. (௩௪)

மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்க டத்து வங்கள்
ஐந்துநற் கலைக ளென்னு மறுவகை யகற்றி யந்தச்
சிந்தனைக் கரிய மேலை சிவத்துட னறிவு சேரப்
பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட் பார்வை செய்து.

இ-ள். மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்கள் தத்துவங்கள் ஐந்து நல் கலைகள் என்னும் அறுவகை அகற்றி - மந்திரம் பதம் வர்ணம் புவனம் தத்துவம் நல்ல பஞ்சகலை என்னும் ஆறத்துவாக்களிலுங் கட்டுண்டிருந்த போகங்களனைத்தையும் புசிப்பித்துத் தொலைத்தலாகிய அத்துவசுத்தியைச் செய்து,—சிந்தனைக்கு அரிய மேலை சிவத்துடன் அந்த அறிவு சேர - மனோ தீதமாகிய மேன்மைபொருந்திய சிவத்தோடு அந்த ஆன்மவறிவுபொருந்த,— பந்தனை ஒழிவார் தம்மேல் பரிந்து அருள் பார்வை செய்து - பாசம் நீங்கும் பக்குவராகிய அசரீடர்மீது அன்புகூர்ந்து கிருபாநோக்கஞ்செய்து. எ-று.

எவர்க்குமெய்ஞ் ஞான மாமஞ் செழுத்தையு முணர்த்த வேண்
அவத்தொழி லகற்றி யாளுஞ் சிவத்தைமுன் னுக மாறித [டி.
தவப்பெரு வடிவங் கொண்டார் தண்டமிழ் பாடு மன்பர்
செவிப்புலன் வழியே சிந்தை யுறத்திரு வாய்ம லர்ந்தார்.

இ-ள். தவப் பெரு வடிவங் கொண்டார் - தவத்துக்குரிய பெரிய வடிவங்கொண்டவர்,—எவர்க்கும் மெய்ஞ்ஞானம் ஆம் அஞ்செழுத்தையும் உணர்த்த வேண்டி - எவர்கட்கும் மெய்யுணர்வுண்டாதற்குக் காரணமாகிய பஞ்சாக்கரோபதேசஞ் செய்ய விரும்பி,—அவத்தொழில் அகற்றி ஆளும்



சிவத்தை மூன்றாக மாறி - அவத்தொழிலை நீக்கி அடிமைக்கொள்ளுகின்ற சிவ என்பதனை முன்னிற்கும்படி மாறி,—தண் தமிழ் பாடும் அன்பர் செவிப் புலன் வழியே சிந்தை உற - தண்ணிய தமிழ்வேதமாகிய திருவாசகத் தைப் பாடியருளும் திருவாதவூரரது செவியாகிய பொறியின்வழியே மன த்திற்சென்றுபொருந்த,—திருவாய்மலர்ந்தார் - உபதேசித்தருளினர். எ-று.

வேறு.

விரவு மன்பொரு வடிவுகொண் டணைவார்
விழித்த பார்வையின் விளக்கின்முன் னிருள்போற்
சுருதி செந்தமி ழாக்கியே மொழிவார்
தொலைவி லாதவெந் துயர்ப்பவ மொழிந்து
பரவி மென்பதம் பணிபவர் படிமேற்
படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் பரிவான்
மருவு மிங்கிவர் சென்னியி லிருதாண்
மகிழ்ந்து வைத்தனர் மதிநதி முடிப்பார்

இ-ள். விரவும் அன்பு ஒரு வடிவு கொண்டு அணைவார் விழித்த பார் வையின் - கலந்த அன்பே தமக்கொரு வடிவமாகக் கொண் டெழுந்தருளிய பரமாசாரியர்செய்த பார்வையினாலே,—சுருதி செந்தமிழ் ஆக்கியே மொழி வார் தொலைவு இலாத வெம் துயர்ப் பவம் விளக்கின் முன் இருள் போல் ஒழிந்து - வேதத்தைத் திருவாசகமாகப் பாடும் மாணிக்கவாசகசுவாமிகள் நீங்காத கொடிய துன்பத்தைத்தரும் பிறவி விளக்கின்முன்னிருள்போல விட்டு நீங்கப்பெற்று,—பரவி மென்பதம் பணிபவர் படிமேல் படிய வீழ்ந் தனர் பரிவால் வாழ்ந்தனர் - துதித்து மென்மையாகிய திருவடிகளை வண ங்குபவராய்ப் பூமியிலே பொருந்த விழுந்து பேரன்போடு கிடந்தார்,— மருவும் இங்கிவர் சென்னியில - இவ்வாறு கிடக்கும் இவருடைய சிரசி லே,—மதி நதி முடிப்பார் மகிழ்ந்து இருதாள் வைத்தனர் - சந்திரனையுங் கங்கையையுந் தரிப்பவராகிய சிவபிரான் மகிழ்ச்சிகொண்டு இரண்டு திருவடி களையும் வைத்தார். எ-று. (௩௭)

மன்னு முன்னுள வுயிர்க்கர ணங்கண்
மாய்ந்து போய்முத லறிவிழந் தருளாற்
றுன்னு மின்னருட் சிவகர ணங்க
டோன்றலா லருளறி வதிற் றோன்றச்
சென்னி யின்மிசை மேவிய பாதந்
திருந்து கண்ணிணை சேர்த்திரு கரத்தால்
உன்னல செய்திடு மிதயமே லணைவித்
துவகை கூர்ந்துமெய் யுணர்ச்சியி னெழுந்தார்.

இ-ள். மன்னும் முன் உள - இந்தக் குருவையடையுமுன்னுள்ள,— உயிர் கரணங்கள் மாய்ந்து போய் - பசுகரணங்கள் மறைந்துபோக,— முதல் அறிவு இழந்து - முன்னுள்ள அறிவு கெடப்பெற்று,— அருளால் துன்னும் இன் அருள் சிவகரணங்கள் தோன்றலால் - திருவருளாலே அடைகின்ற இனிய அருளையுடைய சிவகரணங்கள் தோன்றலால்,— அதில் அருளறிவு தோன்ற - அதிலே சிவஞானந் தோன்ற,— சென்னியின் மிசை மேவிய பாதம் இரு கரத்தால் திருந்து இணை கண் சேர்த்து - சிரசிற்பொருந்திய திருவடிகளை இரண்டுகைகளினாலுந் திருந்திய இருகண்களினும் ஒற்றி,— உன்னல் செய்திடும் இதயமேல் அணைவித்து - தியானித்தற்கருவியாகிய இருதயஸ்தானமாயுள்ள மார்பிலணைத்து,— உவகை கூர்ந்து மெய் உணர்ச்சியின் எழுந்தார் - திருவாதவூரர் களிகூர்ந்து மெய்ஞ்ஞானத்தோடெழுந்தார். எ-று. (௫௮)

மேலை யத்தலத் திந்திர னிமையோர்
மீதெ லாம்பொழி விரைமலர் மழைமய
போல வித்தலம் புதையவந் துதிரப்
பூத ருங்கண நாதரு மகிழச்
சால நற்குணம் புனையுமெய் யடியார்
தங்கள் செங்கையி லொலியலுந் தயங்கும்
ஆல வட்டமுங் கவரியு மிருபா
லசைய மாமுனி கணமடி வணங்க

இ-ள். மேலை அத்தலத்து இந்திரன் இமையோர் மீது பொழி விரை மலர் எலாம் - அந்த மேலுலகினையிருக்கும் இந்திரனும் தேவர்களும் மேலே சொரியும் வாசனைபொருந்திய பூக்களெல்லாம்,— மழையே போல இத்தலம் புதைய வந்து உதிர - மழையேபோல இந்தப் பூமிமறையும்படி வந்து உதிரவும்,— பூதருங் கணநாதரும் மகிழ - பூதர்களுங் கணநாதர்களும் மகிழவும்,— சால நல் குணம் புனையும் மெய் அடியார் தங்கள் செம் கையில் ஒலியலும் தயங்கும் ஆலவட்டமும் கவரியும் இருபால் அசைய - மிகவும் நற்குணங்களைத் தமக்கணிகலமாகக் கொள்ளுந் தொண்டர்களுடைய சிவந்த கைகளிலுள்ள பீலிக்குச்சங்களும் பிரகாசிக்கின்ற ஆலவட்டங்களும் சாமரங்களும் இருபக்கங்களினும் அசையவும்,— மா முனி கணம் அடி வணங்க - பெரிய முனிக்கூட்டங்கள் திருவடிகளை வணங்கவும். எ-று. (௫௧)

இருந்த வப்பெருங் கருணைய னெதிரே
யெய்தி யன்புடை யியல்பின ரிறைஞ்சிச்
சிரந்த னிற்றம திருகரங் குவியச்
சிறந்த போரு ணிறைந்தசிந் தையராய்

வருந்தி யித்தல மகழ்ந்துமேற் பறந்து
மால யன்றெழ வரியநீ யடியேன்
அருந்து யர்ப்பவ மகற்றவிங் குருவ
மாவ தேயென வழுதுநெஞ் சழிந்தார்.

இ-ள். இருந்த அப்பெரும் கருணையன் எதிரே அன்பு உடை இயல்பினர் எய்தி இறைஞ்சி - வீற்றிருக்கின்ற அந்தப் பெரிய கருணாநிதியாகிய பரமாசாரியரது முன்னிலையிலே அன்புடைய திருவாதவூரர் அடைந்து வணங்கி,—தமது சிரந்தனில் இருகரங் குவியா - தம்முடைய சிரசிலே இரண்டு கைகளையுங் குவித்து,—சிறந்த பேர அருள் நிறைந்த சிந்தையர் ஆய் - சீரிய திருவருணிறைந்த மனத்தையுடையராகி,—மால் அயன் வருந்தி இத்தலம் அகழ்ந்தும் மேல் பறந்தும் தொழ அரிய நீ - விஷ்ணுவும் பிரமாவும் முறையே பன்றியும் அன்னமுமாகி வருத்தமுற்று இப்பூமியை அகழ்ந்தும் ஆகாயத்திற் பறந்தும் அடிமுடிகளைத் தரிசித்து வழிபடுதற்கரிய தேவரீர்,—அடியேன் அரும் துயர்ப்பவம் அகற்ற இங்கு உருவம் ஆவதே என அழுது நெஞ்சு அழிந்தார் - கடையேனாகிய தமியேனது நீக்குதற்கரிய துயர்பொருந்திய பிறவியை நீக்கும்பொருட்டு மானுடசசட்டைசாத்தி இங்கெழுந்தருள்வதென்னேயென்று அழுது மனமழிந்தார. எ-று. (சு0)

ஐய னேயெனை யாண்டருள் புரியு
மாதி யேயுழை யணிமழு விருக்குங்
கைய னேகொடுங் காலனை முனியுங்
கால னேயிரு கண்ணினுண் மணியே
செய்ய னேயடி போற்றியென் பெரிய
செல்வ மேயடி போற்றிபொய் யினர்தம்
பொய்ய னேயடி போற்றியெவ் வுயிர்க்கும்
போத னேயடி போற்றியென் றழுதார.

இ-ள். ஐயனே - பரமபிதாவே,—எனை ஆண்டு அருள் புரியும் ஆதியே - தமியேனை அடிமைக்கொண்டருளும் முதல்வரே,—உழை அணி மழு இருக்கும் கையனே - மானும் அழகிய மழுவுந் தங்கிய கரங்களையுடையவரே,—கொடும் காலனை முனியும் காலனே - கொடிய இயமனை வெகுண்டுதைத்த திருவடியையுடையவரே,—இரு கணணின் உள் மணியே - எனதிருகண்மணியாயுள்ளவரே,—செய்யனே அடி போற்றி - சிவந்த திருமேனியையுடையவரே திருவடிகள் அடியேனாற் றுதிக்கப்படுவன,—என் பெரிய செல்வமே அடி போற்றி - எனது பெருஞ்செல்வமாயுள்ளவரே திருவடிகள் அடியேனாற் றுதிக்கப்படுவன,—பொய்யினர்தம் பொய்யனே அடி போற்றி - பொய்யருக்குப் பொய்யாயுள்ளவரே திருவடிகள் அடியேனாற் றுதிக்கப்படுவன,—எவ்வுயிர்க்கும் போதனே அடி போற்றி என்று அழுதார் - சர்வான்

மாக்கட்கும் அறிவுக்கறிவாயுள்ளவரே திருவடிகள் அடியேனுற் றுதிக்கப் படுவன என்று புலம்பினர். எ-று. (௬௧)

அற்றை ஞான்றிருள் வைகறை யெனும்போ
தணைத லும்பர னருட்குரு வடிவஞ்
சுற்ற சாந்துடன் முயங்குசெங் கழுநீர்த்
தொடைய லின்சுமை பொறாதெனத் துளங்கிக்
கற்று மான்கரத் தேந்திய விறைவன்
கவின்கொண் மார்பணி மலர்த்தொடை கழித்தங்
குற்ற வான்றுய ரகன்றமெய் யடியா
ருடன் விளங்கினா களங்கமொன் றில்லார்.

இ-ள். அற்றை ஞான்று இருள் வைகறை எனும்போது அணைதலும் - அததினத் திருள்கழிகின்ற புலரிக்காலஞ் சமீபித்தலும்,—களங்கம் ஒன்று இல்லார் - ஒருகுற்றமுமில்லாத திருவாதவூரர்,—பரன் அருள் குரு வடிவம் சுற்ற சாந்து உடன் முயங்கு செங்கழுநீர்த் தொடையலின் சுமை பொறாது எனத் துளங்கி - சிவபெருமானது அருண்மயமாகிய குருமேனியானது சந்தனக்குழம்போடு புரளுகின்ற செங்கழுநீர்மாலையின் பாரத்தைத் தாங்க மாட்டாதென்று மனம் நடுங்கி,—கற்று மான்கரத்து ஏந்திய இறைவன் கவின் கொள் மார்பு அணி மலர்த் தொடை கழித்து - மான்கன்றைக் கரத்திலே தாங்கிய அச்சிவபெருமானது அழகுபொருந்திய மார்பிலணிந்த பூமாலையைக் கழித்து,—அங்கு உற்ற வான் துயர் அகன்று - அங்கே பொருந்திய பெரிய மனவருத்தத்தை ஒழிந்து,—அடியார் உடன் விளங்கினர் - தொண்டர்களோடு விளங்கினர். எ-று. (௬௨)

வாத வூருறை யிறைவர்தம் பெரிய
மாயை போலிருண் மாய்ந்தபின் னவர்பாற்
போத மாகிவந் தெழுசுடர் விளக்கம்
போல வெய்யவன் புணரியிற் றோன்ற
வேத நாதர்த மிருபத மிறைஞ்சு
மெய்ம்மை யாளரை வேறுகொண் டிருந்தங்
கோது மாகமத் தறிவரும் பொருளை
யுரைக்க வேண்ணொ தாரற முரைத்தார்

இ-ள். வாதவூர் உறை இறைவர்தம் பெரிய மாயைபோல் இருள் மாய்ந்து - திருவாதவூரருடைய பெரிய மாயாமலம்போல இருண்மறைய,—பின் - அதன்பின்னர்,—அவர் பால் போதம் ஆகி வந்து எழு சுடர் விளக்கம் போல வெய்யவன் புணரியில் தோன்ற - அவரிடத்து ஞானமாகிவந்து தோன்றுகின்ற தீபத்தின் பிரகாசம்போலச் சூரியன் கிழக்குச் சமுத்திரத்திலே உதிக்க,—வேத நாதர் அறம் உரைத்தார் - வேதமுதல்வரும் முன்ன

ரும் தருமோபதேசஞ்செய்தவருமாகிய சிவன்,—தம் இரு பதம் இறைஞ்சும் மெய்ம்மையாளரை வேறுகொண்டு இருந்து - தம்முடைய இரு திருவடிகளையும் வழிபடும் அம்மெய்யன்பரைத் தனியிடத்தழைத்துக்கொண்டு சென்றிருந்து,—ஓதும் ஆகமத்து அறிவு அரும் பொருளை அங்கு உரைக்க நினைந்தார் - தாமருளிச்செய்த ஆகமங்களிலேயுள்ள அறிந்துகோடற்கரிய பொருளை அறிவிக்கத் திருவுளங்கொண்டருளினார். எ-று. (௪௩)

களிம்பு சேர்ந்தசெம் பெனவுனை மருவுங்
கருமை கூர்மலங் கண்டது கலக்கும்
பளிங்கு போன்றநின் றன்மையம் மலத்தின்
பற்றி னாலுடல் பலவெடுத் துழன்றாய்
வளங்கு லாம்புவ னந்தொறுஞ் செயுமுன்
வல்வி னைப்பயன் வருமுறை நெறியே
அளந்து நாந்தர நுகர்ந்துமே னுகர்வு
மாக்கி யேதிரிந் தனைமன வழுக்கால்.

இ-ள். செம்பு சேர்ந்த களிம்பு என கருமை கூர் மலம் உனை மருவும் - செம்போடுசேர்ந்த களிம்பைப்போல இருண்மயமாகிய ஆணவமலமானது ஆன்மாவாகிய உன்னை அநாதியே சேர்ந்திருக்கும்,—உன் தன்மை கண்டது கலக்கும் பளிங்கு போன்றது - உன்னியல்பானது சார்ந்ததன்வண்ணமாய் நிற்கும் படிகம்போல நின்றது,—அம் மலத்தின் பற்றினால் உடல் பல எடுத்து வளங் குலாம் புவனந் தொறும் உழன்றாய் - அம்மலசம்பந்தத்தினாலே உடம்புகள் பலவற்றையெடுத்துப் பிறந்திறந்திது காறும் வளம்பொருந்திய உலகங்கடோறும் சுழன்று திரிந்தாய்,—செயும் உன் வல் வினைப்பயன் - அப்புவனங்கடோறும் நீ செய்துகொண்ட உன் இருவினைப்பயன்களாகிய சுகதுக்கங்களை,—வரு முறை நெறியே நாம் அளந்து தர நுகர்ந்தும் - நுகரவரும் கிரமந்தவறாமலே நாம் நியதி செய்து தர நீ அநுபவித்தும்,—மன அழுக்கால் மேல நுகர்வும் ஆக்கியே திரிந்தனை - அங்ஙனம் அநுபவிக்குமிடத்து மனக்குற்றங்களினாலே மேல் உடம்பெடுத்தநுபவித்தற்கேதுவாகிய வினைகளையும் செய்துதிரிந்தனை. எ-று. (௪௪)

செய்து ளோர்பெறும் வினைப்பய னொருவர்
சேர்க்க வேண்டுவ தில்லெனி னிதுமேல்
எய்து மேலிரு நுகர்வதென் றறிவ
தில்லை நீவினை யெனிற்சட மறியா
உய்த லாகிய நன்னெறி யுணரா
வுனையு முன்வினைப் பயனையு முணர்ந்து
மையல் தாமல மொழித்தரு ளகலா
வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய்.

இ-ள். செய்துளோர் பெறும் வினைப்பயன் ஒருவர் சேர்க்கவேண்டு வது இல் எனில் - செய்தவர் தாமே அநுபவிக்கத்தகும் வினைப்பயன்களை மற்றொருவர் கூட்டவேண்டுவதில்லையெனின்,—நீ இது மேல் எய்தும் இது மேல் நுகர்வது என்று அறிவது இல்லை - நீ அவ்வினைப்பயன்களுள் இவ்வினை மேல்வரற்பாலது இன்னபயன் மேல் அநுபவிக்கற்பாலது என்று அறியமாட்டாய்,—வினை எனில் சடம் அறியா - அவ்வினைப்பயன்களாமறிந்து கூடாவோ எனின் அவை அசேதனப்பொருளாகலின் அறியமாட்டா,— நாம் உய்தல் ஆகிய நல் நெறி உணரா உனையும் உன் வினைப் பயனையும் உணர்ந்து - முற்றறிவையுடைய நாமே உய்தியாகிய நன்னெறியை அறியாத உன்னையும் உன்வினைப்பயன்களையும் அறிந்து —மையதாம் மலம் ஒழித்து - உன்னை விட்டுநீங்காத கரிய மலவலியைக் குன்றுவித்து,—அகலா அருள் வாழ்வு நல்குவம் என மதிப்பாய் - நித்தியமாகிய அருள்வாழ்வை உனக்குத் தருவோமென்று அறிந்துகொள்வாயாக. எ-று. (ருரு)

எவர்க்கு மிம்மலஞ் சேரவிங் கொழியா
திருப்ப தென்னெனி லின்னல்கொள் பிறவித்
துவக்கெ னுந்தம திருவினைப் பயனுந்
துலைபு கும்பொரு ளெனநிறை நிகர்த்தால்
அவர்க்கு நம்பதங் கொடுத்திட ரொழிப்போ
மதுவி லாதவ ரழுங்கியவ் வளவும்
பவப்பெ ருங்கடல் வீழ்வர்தம் பருவம்
பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார்.

இ-ள். எவர்க்கும் இம் மலம் சேர இங்கு ஒழியாது இருப்பது என் எனில் - யாவருக்கும் இம்மலத்தை ஒருசேர இங்ஙனம் நாம் நீக்காதிருப்பதென்னையெனில்,—இன்னல் கொள் பிறவித் துவக்கு எனும் தமது இருவினைப்பயனும் துலை புகும் பொருள் நிறை என நிகர்த்தால் - துன்பத்தையுடைய பிறவிக்கேதுவாகிய தமது இருவினைப்பயன்களுந் தராசுத் தட்டுகளில் இட்ட பொருள்போலத் தம்முள்ளே நிறையில் ஒக்குமாயின்,—அவர்க்கு நம் பதம் கொடுத்து இடர் ஒழிப்போம் - அவ்வொப்புமையுடைய பக்குவர்களுக்கு நமது திருவடிகளைக் கொடுத்து மலத்தை நீக்குவோம்,—அது இலாதவர் அவ்வளவும் அழுங்கி பெரும் பவக் கடல் வீழ்வர் - அவ்விருவினையொப்பில்லாதவரெல்லாம் அஃதடையுங்காறும் வருந்திப் பெரிய ஜனனசாகரத்தில் வீழ்வர்,—தம் பருவம் பார்க்கும் எம்மையும் தம்மையும் பாரார் - மலபரிபாகங்களை எதிர்நோக்கி இருக்கும் பதியாகிய நம்மையும், பசுக்களாகிய தம்மையும் அறியார் அறிவாயாக. எ-று. (ருசு)

என்று கூடுமிப் பருவமென் றியம்பின்
யாமி ருந்துள விடந்தொறு மிறைஞ்சி
நன்று சேர்சிவ புண்ணியம் புரியு
நன்மை யாலிது நணுகுமென் றறிநீ

மன்றி லானவெம் மியல்புனக் குரைக்கின்
மாசி லாவுரு மூன்றவற் றருவம்
ஒன்று பேரொளி யொன்றரு வுருவ
மொன்று தானருளுருவமென் றுணர்வாய்.

இ-ள். இப்பருவம் என்று கூடும் என்று இயம்பின் - இம்மலபரிபாகம் எஞ்ஞான்று வந்து பொருந்துமென்று நீ வினவின்,—யாம் இருந்துள இடம் தொறும் இறைஞ்சி - நாம் வீற்றிருக்கும் தலங்கடோறும் சென்று நம்மைத் தரிசித்து வணங்கி,—நன்று சேர சிவபுண்ணியம் புரியும் நன்மையால் இது நணுகும் என்று நீ அறி - பெருமைபொருந்திய சிவபுண்ணியங்களைச் செய்யும் நன்மையினால் இதுவந்து பொருந்தும் என்று நீ அறிவாயாக; அதுநிற்க,—மன்றில ஆன எம் இயல்பு உனக்கு உரைக்கின் - கனகசபையின்கட்பொருந்திய நமது இயல்பை உனக்குச் சொல்லப்புகின்,—மாசு இலா உரு மூன்று - குற்றமற்ற வடிவங்கள் மூன்றுள்ளன,—அவற்று ஒன்று அருவம் - அம்மூன்றனுள் ஒருவடிவம் அருவமாகும்,—ஒன்று பேர் ஒளி அருவுருவம் - மற்றொருவடிவம ஒளிமயமாகிய அருவடிவமாம்,—ஒன்று தான் அருள் உருவம் என்று உணர்வாய் - ஒழிந்த மற்றொன்றுதான் அருண்மயமாகிய உருவம் என்று நீயறிவாயாக. எ-று. (௬எ)

இந்த மூன்றினி லுருவுனக் கறிய
விசைந்த பேரரு ளிபமபுமிவ் வுருவம
வந்தி யாவரும் பணிவதற கெளிதாய்
வரமெ லாந்தர வருமரு வுருவம்
பந்த மாகிய மலவிரு ளகற்றும்
பரிதி யாயுள பல்லுயிர்க் குயிராய்
அந்த மாதிகண் டளப்பரு மொளியா
யமல மாகுமவ் வருவெனு முருவம்.

இ-ள். இந்த மூன்றினில் உரு உனக்கு அறிய இசைந்த பேர் அருள் இயம்பும் இவ்வுருவம் - இம்மூவகைவடிவங்களுள்ளே உருவடிவமாவது உனக்கு அறியுமாறு பொருந்திய பேரருளைச சொல்லுகின்ற இக்குருவடிவமேயாம்,—அருவுருவம் யாவரும் வந்து வணங்குதற்கு எளிது ஆய் வரம் எலாம் தரவரும் - அருவுருவடிவமாவது சகலரும் வந்து தரிசித்து வணங்குதற் கெளிதாய்ச சகலவரங்களையுங் கொடுக்கும்படி வந்திருக்குஞ் சிவலிங்க வடிவமேயாம்,—அவ் அரு எனும் உருவம் - அவ்வருவடிவமாவது,—பந்தம் ஆகிய மல இருள் அகற்றும் பரிதி ஆய் - பந்தமாகிய ஆணவமலவிருளை நீக்கும் பானுவாய்,—உள பல் உயிர்க்கு உயிர் ஆய் - பலதிறத்தான்மாக்களுக்கும் அந்தரான்மாவாய்,—ஆதி அந்தம் கண்டு அளப்பு அரும் ஒளி ஆய் - முடிவும் முதலுங் கண்டு அளத்தற்கரிய பேரொளியாய்,—அமலம் ஆகும் - நிருமலமாயிருக்கும். எ-று. (௬அ)

ஆவ லாலெமக் காமலர் மரங்க
ளாக்க லம்மலர் பறித்தலம் மலரா
றூவி லாவகை தார்பல சமைத்த
றணப்பி லெம்புகழ் சாற்றலன் புடனும்
மேவு மாலய மலகிடன் மெழுகல்
விளங்க நல்விளக் கிடுதலெம் மடியார்க்
கேவ லானவை செய்தலிச் சரியை
யியற்று வார்தமக் கெம்முல களிப்போம்.

இ-ள். ஆவலால் எமக்கு ஆம் மலர் மரங்கள் ஆக்கல் - விருப்போடும் எமக்காகிய புஷ்பங்களைத்தரும் விருக்ஷங்களை வைத்து வளர்த்தலும்,— அம்மலர் பறித்தல் - அப்புஷ்பங்களைக்கொய்தலும்,—அம்மலரால் தூ இலா வகை பல தார் சமைத்தல் - அம்மலர்களினாலே விதிப்படி பலவகை மாலை களைக் கட்டுதலும்,—நணப்பு இல் எம் புகழ் சாற்றல் - நீங்குதலில்லாத எமது புகழைசசொல்லுதலும்,—நாம் மேவும் ஆலயம் அன்பு உடன் அல கிடல் மெழுகல் - நாம் இருக்கும் ஆலயங்களை அன்போடு திருவலகிடுத லுந் திருமெழுக்குசசாததுதலும்,—விளங்க நல் விளக்கு இடுதல் - பிரகாசி க்கும்படி நல்ல தீபமேற்றுதலும்,—எம் அடியார்க்கு ஏவலானவை செய் தல் - நம்மடியவர்க்குத் தொண்டுகளைச செய்தலுமாகிய,—இச்சரியை இயற் றுவார் தமக்கு - இச்சரியை அநுட்டிப்பவர்களுக்கு,—எம் உலகு அளிப் போம் - எம்முடைய சாலோகபததுதைக கொடுப்போம். எ-று. (௬௧)

கந்த வர்க்கமுங் கிளர்மணப் புகையுங்
கவின்கொ டீபமும் புனிதமஞ் சனமுங்
கொந்த விழ்ந்தநன் மலருமற் றுளவுங்
கொண்டு மாயையின் குணங்களொன் றிலராய்
ஐந்து சுத்திசெய் தகம்புற மிறைஞ்சி
யங்கி யின்கடன் முடித்தருள் வழிநின்
றிந்த நற்பெருங் கிரியையன் புடனே
யியற்ற வல்லவ ரெம்மரு கிருப்பார்.

இ-ள். கந்த வர்க்கமும் - வாசனைத்திரவியவகைகளும்,—மணம் கிளர் புகையும் - நறுமணங்கமழுந் தூபமும்,—கவின் கொள் தீபமும் - அழகு பொருந்திய தீபமும்,—புனித மஞ்சனமும் - பரிசுத்தமாகிய திருமஞ்சன மும்,—கொந்து அவிழ்ந்த நல் மலரும் - கொததுக்களின் மலர்ந்த சுகந்த புஷ்பமும்,—மற்று உளவும் கொண்டு - மற்றுமுள்ள பூசோபகரணங்களை யுங் கொண்டு,—மாயையின் குணங்கள் ஒன்று இலர் ஆய் - மாயாகாரியமா கிய காமம் முதலிய துர்க்குணங்களுள் ஒன்றுமில்லாதவராய்,—ஐந்து சுத்தி செய்து - பூதசுததி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி

என்னும் ஐந்துசுத்திகளையுஞ் செய்து,—அகம் புறம் இறைஞ்சி - அகப் பூசை புறப்பூசைகளைச் செய்து,—அங்கியின் கடன் முடித்து - அக்கினிகாரி யமுஞ் செய்து,—அருள் வழி நின்று - திருவருளை முன்னிட்டுநின்று,— பெரும் நல் இந்தக் கிரியை அன்புடன் இயற்ற வல்லவர் எம் அருகு இருப்பார் - பெரிய நன்மையையுடைய இந்தக் கிரியை அன்போடும் அநுட் டிக்கவல்லவர் எமது சாமீபபதத்தையடைவார். எ-று. (எ0)

முக்கு ணம்புல னைந்துட னடக்கி
மூல வாயுவை யெழுப்பிரு வழியைச்
சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத்
திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த்
தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாந்
தன்மை கண்டரு டரும்பெரு வெளிக்கே
புக்க ழுந்தின ரெமதுருப் பெறுவர்
புவியில் வேட்டுவ னெடுத்தமென் புழுப்போல்

இ-ள். முக்குணம் புலன் ஐந்து உடன் அடக்கி - முக்குணங்களையும் பஞ்சேந்திரியங்களோடு சேர அடக்கி,—மூல வாயுவை எழுப்பு இருவழி யைச் சிக்கெனும்படி அடைத்து - பிராணவாயுவை மேலெழுப்புகின்ற இடை பிங்கலை என்னும் இருநாடிகளையுஞ் செவ்வே அடைத்து,—ஒருவழி யைத் திறந்து - சுழுமுனையாகிய நடுநாடியைத் திறந்து,—தாண்டவச் சில ம்பு ஒலி உடன் போய் - நடனச் சிலம்பொலியோடு போய்,—தக்க அஞ் செழுத்து ஓர் எழுத்து உருவாம் தன்மை கண்டு - தகுதியாகிய பஞ்சாக்ஷர ங்களும் ஏகாக்ஷரமாகிய தன்மையை ஞானக்கண்ணினாலே தரிசித்து,— அருள் தரும் பெரு வெளிக்கே புக்கு அழுந்தினர் - திருவருள்சுரக்கும் பர வெளியின்கட்புகுந்திலயித்த சிவயோகிகள்,—புவியில் வேட்டுவன் எடுத்த மென் புழுப்போல் எமது உருப் பெறுவர் - இப்பூமியின்கண் வேட்டுவன் என்னுஞ் செந்துவினாலெடுக்கப்பட்ட மெல்லிய புழு வேட்டுவனுருவைப் பெறுதல்போல எமதுருவைப்பெறுதலாகிய சாரூப்பியத்தையடைவர். எ-று.

பரந்த வான்கலை முழுதுமா கமநூற்
பகுதி யும்பல சமயசாத் திரமுந்
தெரிந்து தேர்ந்ததில் வாய்ந்தமுப் பொருளின்
செய்தி யேபொரு ளெனமனந் தெளிந்து
புரிந்து போந்துள சிற்றறி வனைத்தும்
போக்கி யவ்வறி வெனச்சிவ போதம்
விரிந்து தோன்றநெஞ் சுடையவித் தகரே
மேன்மை யானநம மெய்ப்பதம் பெறுவார்.

இ-ள். பரந்த வான் கலை முழுதும் - விரிந்த பெரிய கலைகளனைத்தை யும்,—ஆகம நூல் பகுதியும் - ஆகமநூற் பாகுபாட்டையும்,—பல சமய சாத் திரமும் - பலதிறத்தனவாகிய சமயநூல்களையும்,—தெரிந்து தேர்ந்து - ஓதி உணர்ந்து,—அதில் வாய்ந்த முப்பொருளின் செய்தியே பொருள் என மனம் தெளிந்து - அந்நூல்களிற சொல்லப்பட்ட பதி பசு பாசம் என்னும் முப்பொருளின் செய்தியே மெய்ப்பொருளென்று மனத்தினிச்சயித்து,— புரிந்து போந்துள சிற்றறிவு அனைத்தும் போக்கி - முன் செய்துபோந்த சிற்றறிவு சிறுதொழில்களனைத்தும் பயனில என்று கழித்து,—அ அறிவு என சிவபோதம் விரிந்து தோன்றும் நெஞ்சு உடைய வித்தகரே - அச் சிற்றறிவின் விரிவைப்போலச சிவஞானம் பின்னர் விரிந்து தோன்றப் பெறும் மனத்தையுடைய சாதுரியர்களாகிய சிவஞானிகளே,—மேன்மை யான நம் மெய்ப்பதம் பெறுவார் - மேலாகிய எமது சாயுசசிய முத்தியைத் தலைப்படுவார். எ-று. (எ௨)

உருப்பொ லாதவ ரிழிகுலத் தவர்நல்
　　லொழுக்க மில்லவ ரென்றுநம் மளவில்
விருப்பி லாதவ ரெனினுமெய்ந் நீறு
　　மிக்க சாதன வேடமுங் கண்டாற்
றரிப்பி லாதுசென் றெதிருற வணங்கித்
　　தக்க போனக மளித்தவர்க் கெளிதாய்
இருப்பர் தாமவ ரடியவர்க் கடியா
　　ரென்பர் யானென தெனுஞ்செருக் கறுப்பார்

இ-ள். உரு பொலாதவர் - உடற்குற்றமுடையவர்,—இழி குலத்த வர் - தாழ்ந்தவருணததவர்,—நல் ஒழுக்கம் இல்லவர் - துராசாரமுடைய வர்,—என்றும் நம் அளவில் விருப்பு இலாதவர் எனினும் - எப்போதும் நம்மிடத்து அன்பில்லாதவர்களேயாயினும்,—மெய்ந்நீறும் மிக்க சாதன வே டமும் கண்டால் - மெய்ம்மையான விபூதியையும் உருத்திராக்க வேடத்தை யுந் தரிசிக்கப்பெறின்,—தரிப்பு இலாது சென்று எதிர் உற வணங்கி - சிறிதுந் தரியாது சென்று எதிராக வணங்கி,—அவர்க்குத் தக்க போனகம் அளித்து - அவர்களுக்குத் தம்மாலியன்ற அமுது கொடுத்து,—எளிது ஆய் இருப்பர் தாம் அவர் அடியவர்க்கு அடியார் என்பர் - இங்ஙனம் அவருக் கடிமையாக வழிபட்டொழுகுவாராகிய அவரே நம்மடியவர்க்கடியவர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவர்,—யான் எனது எனும் செருக்கு அறுப்பார் - அவர் அகங்காரம் மமகாரம் என்னும் மயக்கத்தையும் ஒழிப்பார். எ-று. (எ௩)

விரிந்த சஞ்சித வினைகளன் புடனும்
　　விழிக்க வெந்தன விரும்பி முற்செனனம்
புரிந்த வல்வினை யுடலுட னகலும்
　　புந்தி சேரருள் வருவினை போக்கும

அருந்து யர்ப்பொரு ளுயிருடம் புனவே
யல்ல நம்மன வாகுமிங் குனைப்போல்
இருந்த நங்குரு வடிவைநின் கருத்தி
லிருத்து வாய்பொரு ளிதுவென மொழிந்தார்.

இ-ள். விரிந்த சஞ்சித வினைகள் அன்பு உடன் நாம் விழிக்க வெந்தன - விரிந்த நின் சஞ்சிதகன்மங்களெல்லாம் நாம் முன்னரே நின்னிடத் தன்புகொண்டு நோக்கவே தகிக்கப்பட்டொழிந்தன,—விரும்பி முன் செனனம் புரிந்த வல்வினை உடல் உடன் அகலும் - விரும்பி முற்பிறப்பின்கண்ணே செய்த பிராரத்தகன்மங்கள் இச்சரீரத்தோடு அநுபவிக்கப்பட்டுத் தொலையும்,—புந்தி சேர் அருள் வருவினை போக்கும் - உன் மனத்திற்பதிந்த நம்மருளானது ஆகாமியகன்மங்கள் ஏறவொட்டாது தடுக்கும்,—உடல் பொருள் உயிர் உனவே அல்ல நம்மன ஆகும் - உடல் பொருள் ஆவி என்னும் இம்மூன்றும் இனி உன்னுடையவைகளல்ல நம்முடையனவாகும்,—இங்கு உனைப்போல் இருந்த நம் குரு வடிவை நின் கருத்தில் இருத்துவாய் - இங்கே உன்னைப்போல வந்திருக்கின்ற நமது குருவடிவத்தை உன் மனத்திற் பதிப்பாய்,—இது பொருள் என மொழிந்தார் - இதுவே மெய்ப் பொருளாம் என்று பரமாசாரியர் சொல்லியருளினர். எ-று. (எச)

அத்த னார்திரு வாய்மலர்ந் தருளு
மமல வாசகங் கேட்டக மகிழும்
பத்த னார்தம தெழுபிறப் பறுக்கும்
பாத மீதுறப் பணிந்தெதி ரெழுந்து
பித்த னானவென் பிழைதனக் கிரங்கும
பிஞ்ஞ காமிகப் பேதைமை யுடையேன்
முத்த னாகமெய் காட்டினை யெனவே
மொழிந்த ழிந்துகை முடிமிசைக் குவித்தார்.

இ-ள். அத்தனார் திருவாய்மலர்ந்தருளும் அமல வாசகம் கேட்டு அகம் மகிழும் பத்தனார் - பரமபிதாவாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய சுத்தமாகிய உபதேசவாக்கைக் கேட்டு மனமகிழும் திருவாதவூரர்,—தமது எழு பிறப்பு அறுக்கும் பாதம் மீது உற எதிர் பணிந்து எழுந்து - தமதெழுபிறப்பையும் பற்றறச்செய்யும் திருவடிகளிற் சிரசுதோய வீழ்ந்து வணங்கி எழுந்துநின்று,—பித்தன் ஆன என் பிழை தனக்கு இரங்கும் பிஞ்ஞகா - மயக்கமுடையேனாகிய தமியேனது குற்றத்திற்குத் திருவுளமிரங்கியருளுங் கருணாநிதியே,—மிகப் பேதைமை உடையேன் முத்தன் ஆக மெய் காட்டினை என மொழிந்து - மிகவும் அறியாமையுடைய தமியேன் முத்தனாகும்படி மெய்ப்பொருளைக் காட்டியருளினீர் என்று சொல்லி,—அழிந்து - தம்வசமழிந்து,—கை முடிமிசைக் குவித்தார் - கைகளைச் சிரசிலே குவித்துக் கும்பிட்டார். எ-று. (எரு)

என்ன வாகமுன் னினைந்துள பொருளு
மில்ல தாகிய வுடலமும் யானும்
நின்ன வாகநின் னருள்கொடு நினைந்தே
னின்ம லாவென நின்றுநின் றுருகா
மன்னு தானைதம் மேலணி கலன்கண்
மதுரை மீனவன் வான்பொரு ளிறையோன்
முன்ன தாகவைத் திறைஞ்சின ரறஞ்சேர்
முதல்வ னார்முக மலர்வுகொண் டிருந்தார்.

இ-ள். முன் என்னவாக நினைந்து உள பொருளும் - முன்னே தமி யேன் என்னுடையவாகக் கருதியிருந்த பொருளும்,—இல்லது ஆகிய உட லமும் - பொய்யாகிய இந்தசரீரமும்,—யானும் - ஆன்மாவாகிய யானும்,— நின்மலா - மலரகிதரே.—நின்ன ஆக நின் அருள்கொடு நினைந்தேன் என - இதுபொழுது தேவரீருடையனவாகத் திருவருளானறிந்து சமர்ப்பித்தேன் என்று விண்ணப்பஞ்செய்து,—நின்று நின்று உருகா - ஆன்மபோதமொழி ந்துநின்று நின்று மனம் நெக்குருகி.—தம்மேல் மன்னு தானை அணிகல ன்கள் மதுரை மீனவன் வான் பொருள் - தம்முடம்பின்மீது பொருந்திய வஸ்திரங்களையும் அணிகளையும் மதுரையை இராசதானியாகவுடைய அரி மர்த்தனபாண்டியனது பெருந் திரவியத்தையும்,—இறையோன் முன் ஆக வைத்து இறைஞ்சினர் - குருசந்நிதியில் வைத்து வணங்கினார்,—அறம சேர் முதல்வனார் முகமலர்வு கொண்டு இருந்தார் - தருமமுதல்வராகிய தேசிகர் முகமலர்ச்சிகொண்டு வீற்றிருந்தருளினார். எ-று. (எசு)

வேறு.

பெருந்துறை யுறைவா ரன்பு பெறுந்திரு வடியரா கி
இருந்தவர் தம்மின் மேன்மை யெய்தினர் முகத்தை நாடித்
திருந்திய பொருளீ தெல்லாந் திருப்பணிக் களியு மேலாம்
அருந்தவர்க் குதவு மில்லா தலந்தவர்க் கருளு மென்றார்.

இ-ள். பெருந்துறை உறைவார் - திருப்பெருந்துறையின்கண் வீற் றிருக்கின்ற கடவுள்,—அன்பு பெறும் திரு அடியர் ஆகி இருந்தவர் தம்மின் மேன்மை எய்தினர் முகத்தை நாடி - அன்பைப்பெறுகின்ற தொண்டர்க ளாகி அங்கேயிருக்கின்றவர்களுள் மேன்மைபெற்ற ஒருவர் முகத்தைப் பார்த்து,—திருந்திய பொருள் ஈதெல்லாம் திருப்பணிக்கு அளியும் - திரு த்தமாகிய இப்பொருள்களையெல்லாந் திருப்பணிக்குக்கொடும்,—மேலாம் அருந்தவர்க்கு உதவும் - மேலாகிய அரிய தவத்தையுடையவர்கட்குக் கொ டும்,—இல்லாது அலந்தவர்க்கு அருளும் என்றார் - பொருளில்லாது துன்ப முற்றவருக்குக் கொடும் என்று பணித்தருளினார். எ-று. (எஎ)

தம்பெரு முதல்வர் சொல்லுந் தருமொழிப் படியே யுள்ள
செம்பொருள் யாவு மன்பின் றிறத்துளார் தொலைத்த பின்னர்

அம்பர னளித்த ஞான மருந்தினை யருந்திப் பாச
வெம்பிணி யகற்று மந்த வித்தகர் முத்த ரானார்.

இ-ள். அன்பின் திறத்துளார் - பத்திவலியையுடைய அத்தொண்டர்,—தம் பெரு முதல்வர் சொல்லும் தகு மொழிப்படியே - தம்முடைய பெரிய முதல்வராகிய பரமாசாரியர் பணித்தருளிய தக்க வாக்கின்வண்ணமே,—உள்ள செம் பொருள் யாவும் தொலைத்த பின்னர் - அங்குள்ள நற்பொருள்களையெல்லாங் கொடுத்துமுடித்த பின்னர்,—அம்பரன் அளித்த ஞானம் மருந்தினை அருந்தி - சிதாகாசவடிவராகிய சிவபிரான் கொடுத்த ஞானமாகிய மருந்தை உண்டு,—பாச வெம் பிணி அகற்றும் அந்த வித்தகர் முத்தர் ஆனார் - பாசமாகிய கொடிய ரோகத்தை நீக்கிய சாதுரியராகிய அத்திருவாதவூரர் சீவன்முத்தராயினார். எ-று. (எஅ)

திருத்திகழ் கவிகைக் கீழுஞ் சிறந்தபொற் சிவிகை மேலும்
வரத்திரு மேவு தானை மன்னவ ரென்ன வந்தார்
உருத்தெரி யாத நீறுங் கோவண வுடையுங் குஞ்சி
விரித்துள சிரமு நன்னீர் மிகப்பொழி விழியு மானார்.

இ-ள். திரு மேவு தானை வர - அழகுபொருந்திய சேனைகள் பக்கத்தே சூழ்ந்து வர,—திருத் திகழ் கவிகைக் கீழும் சிறந்த பொன் சிவிகை மேலும் மன்னவர் என்ன வந்தார் - அழகுவிளங்குகின்ற வெண்குடையின்கீழும் சிறந்த அழகிய சிவிகையின்மேலும் அரசன் என்று சொல்லும்படி வந்தவராகிய திருவாதவூரர்,—உருத் தெரியாத நீறும் - திருமேனி மறையப்பூசிய விபூதியும்,—கோவண உடையும் - கௌபீனவுடையும்,—குஞ்சி விரித்துள சிரமும் - குடுமிவிரிக்கப்பெற்ற சிரசும்,—நல் நீர் மிகப் பொழி விழியும் ஆனார் - ஆனந்தக்கண்ணீர மிகவும் பொழிகின்ற கண்களுமுடையராயினார். எ-று.

அன்புட னோக்கி நிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வர்
இன்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர்
நன்பகல் கங்குல காணார் ஞானநல் வடிவே கண்டு
கொன்புனை பித்தர் பாலப் பிசாசர்தங் கொள்கை யானார்.

இ-ள். அன்பு உடன் நோக்கி நிற்பர் - ஞானதேசிகரை அன்போடு நோக்கி நிற்பார்,—அழுவர் - அழுவார்,—கை தொழுவர் - கைகளைக் குவித்துக் கும்பிடுவார்,—வீழ்வா - வீழ்ந்து வணங்குவார்,—இன்பு உற எழுவர் - இன்பம் மிக மீண்டு எழுவார்,—பின்பால் ஏகுவர் - பின்பக்கத்திற் போவர்—இரங்கி மீள்வர் - பரிதபித்து மீண்டுவருவார்,—நன்பகல் கங்குல் காணார் - நல்ல பகலையும் இராவையும் அறியாதவராகி,—நல் ஞான வடிவே கண்டு - நல்ல ஞானவடிவத்தையே கண்டு,—கொன் புனை பித்தர் பாலர் பிசாசர் தம் கொள்கை ஆனார் - பயனின்மைபொருந்திய உன்மத்தர் பாலர் பிசாசர் என்னும் இவரது கொள்கையையுடையராயினார். எ-று. (அ௦)

மன்னுமிந் நிலைமை யுற்றார் வன்படைச் சுற்ற மாகித்
துன்னின ரெல்லாம் வந்து தோன்றலைத் தொழுது நின்று
தென்னவன் முனியா வண்ணஞ் செழும்பரித் திரள்கொண் டேக
என்னும தொன்றுந் தேரா திதுபழு தென்றி ரங்கி.

இ-ள். மன்னும் இந் நிலைமை உற்றார் - பெரிதும் இந்நிலைமையைப் பெற்ற திருவாதவூரருடைய,—வன் படைச் சுற்றம் ஆகித் துன்னினர் எல்லாம் வந்து - வலிய படைச் சுற்றமாயுடன்சென்றவரெல்லாம் சமீபத்திற்சென்று,—தோன்றலைத் தொழுது நின்று - அவரை வணங்கி நின்று,—தென்னவன் முனியா வண்ணம் செழும் பரித் திரள் கொண்டு ஏக என்னும் அது ஒன்றும் தேரா இது பழுது என்று இரங்கி - பாண்டியராசன் வெகுளாமல் செழுமையாகிய குதிரைக்கூட்டங்களைக் கொண்டுபோகவேண்டும் என்பதனை ஒருசிறிதுஞ் சிந்தியாத இது குற்றமாம் என்று வருந்தி. எ-று. (௮௧)

ஐயநீ வருதல் வேண்டு மென்றவ ரழைத்த போதிற்
றெய்வநீ றணிவார் தானைத் திறத்தினர் தம்மை நோக்கி
மையலா முணர்வின் மிக்கீர் யாவர்நீர் மாயா பேதப்
பொய்யெலா முரைத்தல் வேண்டாம் போமினி யகல வென்றார்.

இ-ள். ஐய நீ வருதல் வேண்டும் என்று அவர் அழைத்த போதில் - சுவாமீ! நீர் எம்மோடு வருதல்வேண்டும் என்று அவரழைத்த சமயத்தில்,—தெய்வ நீறு அணிவார் தானைத் திறத்தினர் தம்மை நோக்கி - தெய்வத் தன்மைபொருந்திய விபூதியைத் தரித்த திருவாதவூரர் சேனாவீரரைப் பார்த்து,—மையல் ஆம் உணர்வின் மிக்கீர் நீர் யாவா - மயக்கமாகிய அறிவின் மிக்கீர் நீவிர் யாவர்,—மாயா பேதப் பொய்யெலாம் உரைத்தல் வேண்டாம் - மாயாபேதமாகிய பொய்களையெல்லாம் நீரிங்கே பிதற்றுதல்வேண்டாம்,—இனி அகலப் போம் என்றார் - இனித் தூரப்போய்விடும் என்று கூறினார். எ-று. (௮௨)

என்னிவர் புகல்வ தென்றே யாவரு நின்றி ரங்கித்
துன்னுநற் றானை வீரர் தமமுளே துயர மெய்திப்
பன்னுநம் மொழியுங் கொள்ளார் பரிவில ரென்று நீங்கித்
தென்னவற் கின்ன வாறு செப்புது மென்று சென்றார்.

இ-ள். துன்னும் நல் தானை வீரர் யாவரும் - நெருங்கிய நல்ல சேனாவீரர்களனைவரும்,—இவர் புகல்வது என் என்று நின்று இரங்கித் தம்முள் துயரம் எய்தி - இவர் கூறியது எத்தன்மையதென்று திகைத்துத் தம்முள்ளே துயருற்று,—பன்னு நம் மொழியும் கொள்ளார் பரிவு இலர் என்று நீங்கி - சொல்லுகின்ற நமது சொல்லையுங் கைக்கொள்கின்றிலர், நம்மிடத்துப் பற்றுமிலராயினார் என்று அவ்விடத்தைவிட்டு நீங்கி,—தென்னவற்கு

இன்ன ஆறு செப்புதும் என்று சென்றார் - நமது பாண்டியராசனுக்கு இந்தநெறியைச் சொல்வோம் என்று போனார். எ-று. (௮௩)

சென்றவர் வைகை நாடன் றிருந்தவை முன்ன ரெய்தி
வன்றிறன் மன்ன போற்றி மாமது ரேச போற்றி
என்றுபின் வாத வூரர்க் கெய்திய செய்தி யெல்லாம்
ஒன்றிய கவற்சி கூரு முளத்தொடு மோத லுற்றார்.

இ-ள். சென்றவர் வைகை நாடன் திருந்து அவை முன்னர் எய்தி - சென்ற சேனைவீரர்கள் வைகைநதிபொருந்திய நாட்டையுடைய பாண்டியனது திருந்திய சபைக்கெதிரே போய்,—வன் திறல் மன்ன போற்றி மாமதுரேச போற்றி என்று - மிக்க பராக்கிரமத்தையுடைய மகாராசாவே போற்றி மதுரைக்கரசனே போற்றி என்று துதித்து,—பின் - அதன்பின்னர்,—வாதவூரர்க்கு எய்திய செய்தி எல்லாம் - திருவாதவூரரிடத்து நிகழ்ந்த செயல்களையெல்லாம்,—ஒன்றிய கவற்சி கூரும் உளத்தொடும் ஓதல் உற்றார் - பொருந்திய கவலை அதிகரிக்கின்ற மனத்தோடும் விண்ணப்பஞ் செய்வாராயினார். எ-று. (௮௪)

நின்பெயர் புனைந்தோ ராகி நின்பெருங் கருமஞ் செய்வார்
என்பவர் செய்கை தன்னை யெங்ஙனம் யாங்கள் சொல்வோம்
பொன்பொலி மௌலி யாய்நின் புடைவிடை கொண்டு போந்து
மன்பெருந் துறையா மந்த வளநகர் புகுந்த பின்னர்.

இ-ள். பொன் பொலி மௌலியாய் - பொன்னாற் பொலிந்த முடியையுடைய அரசனே,—நின் பெயர் புனைந்தோர் ஆகி நின் பெரும் கருமம் செய்வார் என்பவர் செய்கை தன்னை யாஙகள் எங்ஙனம் சொல்வோம் - தென்னவன்பிரமராயர் என்னும் சிறப்புப்பெயர் பெற்றவராகி நின் மந்திரியாய உத்தியோகத்தை நடத்துபவரென்று நின்னால் விசுவசிக்கப்பட்ட திருவாதவூரரது செயல்களை யாம் எவ்வாறு சொல்வோம்,—நின்புடை விடை கொண்டு போந்து மன் பெருந்துறை ஆம் அந்த வளநகர் புகுந்த பின்னர் - நின்மாட்டநுமதிபெற்றுக்கொண்டு சென்று திருப்பெருந்துறையாகிய சிறந்த அந்நகரத்தையடைந்தபின்னர். எ-று. (௮௫)

அந்நகர் மருங்கோர் காவி லணைந்துள குருந்தி லீசன்
றன்னடி யார்க ளாகுந் தாபதர் பலருஞ் சூழ
மன்னியங் கொருவர் மேலா மாதவ வேடம் பூண்டு
முன்னுற விருத்தல் கண்டு முடிவிலா மருட்சி கொண்டு.

இ-ள். அந்நகர் மருங்கு காவில் அணைந்துள ஓர் குருந்தில் - அந்நகரத்தின் பக்கத்துள்ள சோலையின்கணுள்ளதாகிய ஒரு குருந்தமரநீழலில்,—ஈசன் தன் அடியார்கள் ஆகும் தாபதர் பலரும சூழ - சிவபத்தர்களாகிய முனிவர்களெல்லாம் பக்கத்தே சூழ்ந்து சேவிக்க,—ஒருவர் அங்கு மன்னி - ஒருவர்

அங்கே வந்து,—மேலாம் மாதவ வேடம் பூண்டு முன் உற இருத்தல்கண்டு - மேலாகிய தவவேடங்கொண்டு முதன்மைபெற வீற்றிருத்தலைத் தாங் கண்டு,—முடிவு இலா மருட்சிகொண்டு - முடிவற்ற மருட்சிகொண்டு. எ-று.

அங்கவர் தாமுந் தாமு மன்பொடு சிலசொற் கூறிச்
சங்கர சிவனே போற்றி யென்றவர் தாளில் வீழ்ந்து
செங்கரங் குவித்துச் சென்னி சேர்த்துவந் தனைகள் செய்து
பொங்கொளி மணிப்பூ ணாடை பொருளெலா முவந்து நல்கி.

இ-ள். அங்கவர் தாமும் தாமும் அன்பொடு சில சொல் கூறி - அப் பெரியவருந் தாமும் அன்போடு சில சொற்களைப் பேசி,—செம் கரம் குவித்துச் சென்னி சேர்த்து அவர் தாளில் வீழ்ந்து வந்தனைகள் செய்து சங்கர சிவனே போற்றி என்று - பின்பு தாம் சிவந்த கைகளைக்கூப்பிச் சிரசின் மேல்வைத்துக் கும்பிட்டு அவருடைய பாதங்களில் வீழ்ந்து பலமுறை வணங்கிச் சங்கரா சிவனே போற்றி என்று துதித்து,—பொங்கு ஒளி மணிப் பூண் ஆடை பொருள் எலாம் உவந்து நல்கி - மிக்கவொளியையுடைய இரத்தினாபரணமும் வஸ்திரமும் திரவியமுமாகிய எல்லாவற்றையும் விரும்பி அவருக்குக் கொடுத்து. எ-று. (௮௭)

குறைவிலா வாடை நீத்துக் கோவண முடுத்துச் சென்னி
நறைமயிர் விரித்து நீறு மெய்யெலா நயந்து பூசி
முறைமையன் றிவைதா மென்று மொழிந்தவெம் முகமும் பாரார்
நிறையழி பித்த ரானார் நிருபவென் றிறைஞ்சி நின்றார்.

இ-ள். குறைவு இலா ஆடை நீத்துக் கோவணம் உடுத்து - குற்றமில்லாத வஸ்திரத்தை நீக்கிக் கௌபீனந்தரித்து,—சென்னி நறை மயிர் விரித்து - சிரசின்கணுள்ள நறுமணமுடைய மயிர்முடித்த குடுமியை விரித்து,—நீறு மெய்யெலாம் நயந்து பூசி - விபூதியை உடம்பெங்கும் விரும்பிப் பூசி,—இவை தாம் முறைமை அன்று என்று மொழிந்த எம் முகமும் பாரார் - இச்செயல்கள் உமக்கு நீதியன்றென்று கூறிய எம்முகத்தையும் நோக்காதவராய்,—நிறை அழி பித்தர் ஆனார் நிருப என்று இறைஞ்சி நின்றார் - நிறை என்னுங் குணமழிந்த பித்தராயினார் மகாராசாவே என்று விண்ணப்பஞ்செய்து நின்றார். எ-று. (௮௮)

கேட்டலு மதுரை மாறன் கிளர்ந்த மெய்ம் முழுதும் வேர்வு
காட்டிட வெகுளி பொங்கிக் கண்கனல் வடிவ மாகி
வாட்டிறன் மன்னர்க் கின்ன வண்மைய ருளரேல் வையம்
ஈட்டுறு செல்வந் தானே யாதில வென்று நக்கான்.

இ-ள். கேட்டலும் - இவ்வார்த்தையைக் கேட்டவளவிலே,—மதுரை மாறன் - மதுரையில் வசிக்கும் பாண்டியன்,—கிளர்ந்த மெய் முழுதும் வேர்வு காட்டிட வெகுளி பொங்கிக் கண் கனல் வடிவம் ஆகி - விளங்கு

இன்ற சரீரமெங்கும் வெயர்வைகாட்டக் கோபம்விஞ்சிக் கண்கள் அக்கினி மயமாய்ச சிவந்து,—வாள் திறன் மன்னர்க்கு இன்ன வண்மையர் உளரேல் - வாள்வலியையுடைய அரசருக்கு இவ்வாருன குணமுடைய மந்திரிகள் உளராயின்,—வையம் ஈட்டுறு செல்வம் தானை யாதில என்று நக்கான் - பூமியும் ஈட்டப்படுஞ் செல்வமும் சேனையும் முதலிய உறுப்புக்களுள் யாதுதானில்லை என்று சிரித்தான். எ-று. (அகூ)

அடுபரி கொள்வா னீநத வருமபொருள் கவர்வ தாகக்
கெடுமதி யுரைப்பார் தஞசொற கேட்டுமா லெய்தி ஞனைக்
கொடுமைகொ ளிந்த வோலை கொடுதததொரு தினததது ணம்பாற்
கடுநடைத் தூத ரேகிக கைக்கொடு வமமி னென்ருன்.

இ-ள். அடு பரி கொள்வான் ஈநத அரும பொருள் கவர்வது ஆக கெடு மதி உரைப்பாா தம் சொல் கேட்டு மால் எயதினுனை - பகைவரைக் கொல்லுகின்ற குதிரைகள் கொள்ளும்பொருட்டு நாஙகொடுதத அரிய திரவியஙகளைக் கவரும்படி கேட்டிற்குக காரணமாகிய புததியை உரைப்பாருடைய வார்ததைகளைக் கேட்டு மதிமயஙகிய மந்திரியை,—கடு நடைத் தூதர் ஏகிக் கொடுமை கொள் இந்த ஓலை கொடுதது ஒரு தினததுள் நம்பால் கைக்கொடு வம்மின் என்ருன் - வேகம்பொருந்திய நடையையுடைய தூதுவர்கள் சென்று கடிய வசனஙகளையுடைய இநத ஓலையைக் கொடுதது இவ்வொருதினததினுள்ளே நமமாட்டு உடனழைதது வருக என்றரசன் ஆஞ்ஞாபிததான். எ-று. (கூ௦)

ஏவலிற் சென்ற தூத ரெழிறபெருந் துறையி லெய்தி
ஆவலிற சிவன்ருளேதது மண்ணலைக் கண்டிறைஞசி
மேவலாக் குருமே றனன வெந்தொழில் வேநதன் வாய்ந்த
காவலாக் கதிபன் மாறன றிருமுகங காண்க வென்ருர்.

இ-ள். ஏவலில் சென்ற தூதா எழில் பெருந்துறையில் எய்தி - அரசனது ஏவலினலே சென்ற தூதுவாகள் திருப்பெருந்துறையையடைந்து,—ஆவலில் சிவன் தாள் ஏததும் அணணலை கணடு இறைஞ்சி - பேரவாவினேடு சிவபெருமானுடைய திருவடிகளை வணஙகித் துதிதது வழிபடும் திருவாதவூரரைக் கணடு வணஙகி,—மேவலர்க்கு உருமேறு அன்ன வெம் தொழில் வேந்தன் - பகைவர்களாகிய சாப்பஙகட்கு இடியேறுபோன்ற கொடுந்தொழிலையுடைய அரசனும்,—வாயந்த காவலாககு அதிபன் மாறன் திருமுகம் காணக என்ருர் - சிறந்த அரசாக்கரசனுமாகிய பாணடியனது திருமுகம் இதனை வாசிததறிக என்றனர். எ-று. (கூக)

அற்றமில் கொள்கை மிக்கா ரரன்றிரு முகம தன்றி
மற்ரெரு முகமுங் காண மனமில ரிதன்மே லன்பு
பற்றிலா பிறிதோ ரோலை படியெடுத் துரைமி னென்ன
உற்றதனியல்பு வல்லா னெமுகிய தவநது சொல்வான்

இ-ள். அற்றம் இல் கொள்கை மிக்கார் அரன் திரு முகம் அன்றி மற்று ஒரு முகமும் காண மனம் இலர் - சோர்வில்லாத சிவஞானக் கொள்கையையுடைய திருவாதவூரர் சிவபெருமானது திருமுகத்தையல்லது மற்றொரு முகத்தையுங் காண மனமில்லாதவராகலின்,—இதன்மேல் அன்பு பற்றிலர் - இத்திருமுகத்திலே அன்புபற்றுதவராய,—பிறிதோர் ஓலை - இஃது எனக்கு அந்நியமான ஓரோலையாகும்,—படியெடுத்து உரையின் என்ன - ஆயினும் படியெடுத்துச் சொல்லுங்கள் என்று கூற,—உற்று - அதனையெடுத்து,—அதன் இயல்பு வல்லான் எழுதியது உவந்து சொல்வான் - வாசித்தற்றொழிலில் வல்லவன் அதனகண்ணெழுதியதை மகிழ்ந்து வாசிப்பானாயினன். எ-று.

படியெடுத்தல் - பிரதியிலிருந்தவாறெடுத்தல் பிறிதோரோலைப்படி என்பது பொருந்தாது. (கஉ)

தென்னவ னெழுது மோலை தென்னவன் பிரம ராயன்
என்னுநம் மமைச்சர் காண்க வெல்லையி றனங்கொண் டேகிக்
கொன்னுறு பரிகொ ளாமற் கோவணங் கொண்ட தீது
மன்னாதங் கருமஞ் செய்வார் வண்மையென் றுவகை யுற்றேம்.

இ-ள். தென்னவன் எழுதும் ஓலை தென்னவன் பிரமராயன் என்னும் நம் அமைச்சர் காண்க - பாண்டியனெழுதுமோலை தென்னவன்பிரமராயன் என்னும் நம் மந்திரியார் காண்க,—எல்லை இல் தனம் கொண்டு ஏகி கொன் உறு பரி கொளாமல் கோவணம் கொண்டது - ஈ - அளவற்ற திரவியங்களைக் கொண்டுசென்று பெருமைபொருந்திய குதிரைகளைக் கொள்ளாமற் கௌபீனத்தையே கொண்டது,—ஈது மன்னர்தம் கருமம் செய்வார் வண்மை என்று உவகை உற்றேம் - இஃது இராசகருமத்தை நடத்தும் மந்திரிகள் நற்செயல் என்றறிந்து மகிழ்ச்சியடைந்தேம். எ-று. (கங)

வையக மன்ன ராகி வாழ்தலின் மனைக டோறும்
எய்திய வுதரத் தீயா லிரப்பது பெருமை யென்றும்
மெய்த்தகத் தம்மை யாண்ட வேந்தரைப் பிழைத்து வேறு
செய்வது பலிக்கு மென்றுந் தேர்ந்தநூற் றுணிவுங் கண்டேம்.

இ-ள். வையக மன்னர் ஆகி வாழ்தலின் - இந்நிலவுலக அரசராகி வாழ்தலினும்,—எய்திய உதரத் தீயால் மனைகள் தோறும் இரப்பது பெருமை என்றும் - வந்த உதராக்கினி தணிக்கும்பொருட்டு வீடுகடோறும் யாசிப்பது பெருமை என்றும்,—மெய் தகத் தம்மை ஆண்ட வேந்தரைப் பிழைத்து வேறு செய்வது பலிக்கும் என்றும் - மெய்யாகத் தம்மைப் பாதுகாத்துவந்த அரசர்க்குத் துரோகஞ்செய்து விட்டுப் பிறிதொன்றைச்செய்வது அநுகூலமாகும் என்றும்,—தேர்ந்த நூல் துணிவும் கண்டேம் - நீரோதிய நீதிநூற்றுணிவையும் நாங் கண்டேம். எ-று. (கச)

மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சநஞ் சுமிழு நாகந
தன்னுடன் மருவி வாழுந் தன்மையென் றுணர்தி ராயிற்
றுன்னுமிவ் வோலை காணும் பொழுதுநந் தூதர் தம்மோ
டிந்நகர் வருக மாற னெழுத்தென வியம்பி நின்றான்.

இ-ள். மன்னரை அடைந்து வாழ்தல் வஞ்ச நஞ்சு உமிழும் நாகம் தன்னுடன் மருவி வாழும் தன்மை என்று உணர்திர் ஆயின் - மன்னரைச் சேர்ந்தொழுகி அவர்கீழ் அதிகாரஞ்செய்தல் வஞ்சகம்பொருந்திய நஞ்சை யுடைய பாம்போடு கூடிவாழுந் தன்மையை ஒக்கும் என்று அறிவீராயின்,—துன்னும் இவ்வோலை காணும்பொழுது நம் தூதர் தம்மோடு இந்நகர் வருக - நம்மால் விடுக்கப்பட்டுவரும் இவ்வோலையைக் காணும்பொழுதே நந்தூதுவர்களோடு இந்நகரத்தின்கண் வருக,—மாறன் எழுத்து என இயம்பி நின்றான் - பாண்டியன் எழுத்து என்று வாசித்துநின்றான். எ-று. (கூ௫)

மீனவ னெழுது மோலை கேட்டபின் மின்பா லன்பர்
ஆனவ ரடியா ரெம்மை யடிமையா வுடைய ரல்லாற்
றானெனக் கண்ண லென்றுந் தன்னையான் பிழைத்தே னென்றும்
மாநில மன்னன் சொன்ன தென்னென மனத்தி லெண்ணி.

இ-ள். மீனவன் எழுதும் ஓலை கேட்டபின் - பாண்டியன் எழுதிய ஓலையின் வாசகத்தைக் கேட்டபின்னர்,—மின்பால் அன்பர் ஆனவர் அடியார் எம்மை அடிமை ஆ உடையர் அல்லால் - உமாதேவிமாட்டன்புடைய சிவபெருமானுக்கடியவர் தமக்கு எம்மை அடிமையாகவுடையரல்லது,—தான் எனக்கு அண்ணல் என்றும் தன்னை யான் பிழைத்தேன் என்றும் - தான் எனக்கு அதிபதியென்றும் தனக்கு யான் குற்றஞ்செய்தேன் என்றும்,—மா நில மன்னன் சொன்னது என் என மனத்தில் எண்ணி - இந்நிலவரசன்கூறியது என்கொலோ என்று மனத்தின்கட் சிந்தித்து.எ-று. ()

அந்தக னெழுது மோலை கொண்டவன் றூதர் தாமும்
வந்தெமை யணுகா ரெம்மை யுடையவர் மதுகை யாலே
வெந்தொரு கணத்தில் வீழ மேவலர் புரங்கள் செற்றார்
தந்தம ரொருவர்க் கஞ்சத் தகுவரோ வென்று சாற்றி.

இ-ள். எம்மை உடையவர் மதுகையாலே - எம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது வலிமையினாலே,—அந்தகன் எழுதும் ஓலைகொண்டு அவன் தூதர் தாமும் வந்து எமை அணுகார் - இயமன் எழுதிய ஓலையைக்கொண்டு அவனுடைய தூதர்தாமும் வந்து எம்மை அணுகமாட்டார்;—மேவலர் புரங்கள் ஒரு கணத்தில் வெந்து வீழ செற்றார் தம் தமர் - பகைவருடைய முப்புரங்களும் ஒரு கணப்பொழுதில் எரிந்து துகள்பட்டு வீழும் வண்ணம் அழித்த சிவபெருமானுடைய அடியவர்,—ஒருவர்க்கு அஞ்சத் தகுவரோ என்று சாற்றி - ஒருவர்க்கு அஞ்சற்பாலரோ என்று தம்முட் கூறி. எ-று. (கூஎ)

போயரன் றிருத்தா ளேத்திப் புண்ணிய வடிவே போற்றி
ஆயிரஞ் சுடிகைப் பாம்பை யலரென முடித்தாய் போற்றி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னெழுது மோலைப்
பாயிர மிதுகே ளென்று மொழிந்தனர் பழுதி லாதார்.

இ-ள். பழுது இலாதார் போய் அரன் திருத்தாள் ஏத்தி - சுத்தரா கிய திருவாதவூரர் சமீபத்திற்போய்ச் சிவபிரானுடைய திருவடிகளைத் துதி த்து,—புண்ணிய வடிவே போற்றி - தரும வடிவரே காத்தருளுக.—ஆயிரம் சுடிகைப் பாம்பை அலர் என முடித்தாய் போற்றி - ஆயிரந்தலைகளையுடைய பாம்பை மலர்மாலைபோலச் சூடினவரே காத்தருளுக,—மா இரு ஞாலம் காக்கும் மன்னவன் எழுதும் ஓலைப் பாயிரம் இது கேள் என்று மொழிந்த னர் - மிகவும் பெரிய பூமியைப் பாதுகாக்கும் பாண்டியனெழுதிய ஓலையின் வாசகம் இது கேட்டருள்க என்று அதனை வாசித்தனர். எ-று. (௩௮)

கேடிலா வியல்பி னானுங் கேட்டிள முறுவல் பூத்துப்
பாடலா லேத்துந் தெய்வப் பான்மையர்க் குவந்து சொல்வார்
பீடிலா தவர்போ லுள்ளம் பேதுற லொழிதி யிந்த
நாடெலா மதிக்க நாமே நற்பரித் திரள்கொண் டேகி.

இ-ள். கேடு இலா இயல்பினானும் கேட்டு இள முறுவல் பூத்து - அழியாவியல்பினையுடைய சிவபிரானும் அதனைக் கேட்டுப் புன்னகைசெய் து,—பாடலால் ஏத்தும் தெய்வப் பான்மையர்க்கு உவந்து சொல்வார் - தமிழ்ப்பாடல்களினாலே தம்மைத் துதிக்குந் தெய்வத்தன்மையையுடைய திருவாதவூரருக்குத் திருவுளமகிழ்ந்து சொல்வார்,—பீடு இலாதவர்போல் உள்ளம் பேதுறல் ஒழிதி - வலியில்லாதவர்போல மனமயங்குதலை ஒழிக,—இந்த நாடு எலாம் மதிக்க நாமே நல் பரித் திரள் கொண்டு ஏகி - இத் தேசவாசிகளெல்லாம மதிக்கும்படி நாமே நல்ல குதிரைக்கூட்டத்தைக் கொண்டுசென்று. எ-று. (௩௯)

தென்னவற் களித்து மீள்வோஞ் செழுந்திறற் றூத ரோடு
மன்னனைக் குறுகி யென்பால் வரவிடு மோலை தன்னான்
முன்னுறக் கடிது வந்தே னாவணித் திங்கண் மூலம்
என்னுமத் தினத்தி லிங்கே யெய்துநற் பரிக ளென்பாய்.

இ-ள். தென்னவற்கு அளித்து மீள்வோம் - பாண்டியனுக்குக் கொடு த்துத் திரும்புவோம்,—செழும் திறல் தூதரோடு மன்னனைக் குறுகி - நீ இப்பொழுதே மிக்க வலியையுடைய இத்தூதுவர்களோடும் அவ்வரசனை அடைந்து,—என்பால் வர விடும் ஓலை தன்னால் முன்னுறக் கடிது வந் தேன் - அரசனே! நீ என்மாட்டு வரவிடுத்த ஓலையினால் முன்னாக விரைந்து வந்தேன்,—ஆவணித் திங்கள் மூலம் என்னும் அத்தினத்தில் இங்கே நல் பரிகள் எய்தும் என்பாய் - ஆவணிமாசத்து மூலநக்ஷத்திரம் என்னும் அத்

தினத்தில் இங்கே தக்கனவாகிய குதிரைகள் வரும் என்று சொல்லக் கடவை. எ-று. (௬00)

தொன்மதிக் குலத்து மன்னன் றுயர்செய்வா னென்று சற்றும்
நின்மனங் கவற்சி கொள்ளா தொழிகென நீறு சாத்திப்
பொன்மணிக் கலன்கண் மிக்க பூந்துகில் பிறவு நல்கி
மன்மனத் துவகை கூர மந்திரிப் பான்மை செய்து.

இ-ள். தொல் மதிக் குலத்து மன்னன் துயர் செய்வான் என்று சற்றும் நின் மனக் கவற்சி கொள்ளாது ஒழிக என நீறு சாத்தி - பழைய சந்திரவமிசத்தரசனாகிய பாண்டியன் நின்னை வருத்துவான் என்று சிறிதும் மனங் கவலைகொள்ளாதொழிக என்று நெற்றியில் விபூதிசாத்தி,—பொன் மணிக் கலன்கள் மிக்க பூந்துகில் பிறவும் நல்கி - பொன்னிலே இரத்தினம் அழுத்திச்செய்த ஆபரணங்களையும், உயர்ந்த பொலிவுபொருந்திய பட்டுகளையும். பிறபொருள்களையும் கொடுத்து,—மன் மனத்து உவகை கூர மந்திரிப் பான்மை செய்து - அரசனது மனத்தின்கண் மகிழ்ச்சிமிகும்படி மந்திரிக்கோலங் கொள்வித்து. எ-று. (௬0௧)

தென்றிசைக் கதிபன் றன்பாற் சென்றிது கொடுத்துக் காண்டி
யென்றுமா மணியு நல்கி யேகென விடுத்த பின்னர்க
கன்றகல் புனிற்றா வென்னக் கசிந்திரு கண்ணீர் வார
நின்றுநின் றிறைஞ்சி யையா நீத்தியோ வென்று நொந்து.

இ-ள். தென் திசைக்கு அதிபன் தன்பால் சென்று இது கொடுத்து காண்டி என்று மா மணியும் நல்கி - தெற்கின்கணுள்ள நாட்டுக்கரசனாகிய பாண்டியனிடத்துச் சென்று இதனைக் கையுறையாகக் கொடுத்துக் காண்பாயாக என்று ஒரு மாணிக்க மணியையுங் கொடுத்து,—ஏகு என விடுத்த பின்னர் - செல்வாயாக என்று விடைகொடுத்தருளியபின்னர்,—கன்று அகல் புனிறு ஆ என்னக் கசிந்து இரு கண் நீர் வார நின்று நின்று இறைஞ்சி - கன்றைவிட்டு நீங்கும் ஈனறணிமையையுடைய பசுவைப்போல மனம் நெக்குருகி இருகண்களினின்று நீரொழுக நின்று நின்று அடிக்கடி வணங்கி,—ஐயா நீத்தியோ என்று நொந்து - சுவாமீ! தமியேனைக் கைவிடுகின்றீரோ என்று மனம்வருந்தி. எ-று. (௬0௨)

விழிப்புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடைபெற் றேகிச்
சுழிப்புனல் வாவி சோலை சூழ்பெருந் துறையை நீங்கி
வழிக்குறு துணையா யுள்ள வள்ளலைந் தெழுத்து மோதிப்
பழிப்பறு தூத ரோடு மதுரையம் பதியிற் போனார்.

இ-ள். விழிப்புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடைபெற்று ஏகி - திருவாதவூரர் கண்ணீர் சிந்தச்சிந்தச் சிவபிரானிடம் விடைபெற்றுச் சென்று,—சுழிப்புனல் வாவி சோலை சூழ் பெருந்துறையை நீங்கி - சுழிக்கும்

இயல்புபொருந்திய நீர்த்தடாகங்களுஞ் சோலையுஞ் சூழுந் திருப்பெருந்துறையைவிட்டு நீங்கி,—வழிக்கு உறு துணையாய் உள்ள வள்ளல் ஐந்து எழுத்தும் ஓதி - வழிக்கு உயிர்த்துணையாயுள்ள சிவமந்திரமாகிய பஞ்சாக்ஷரங்களையுஞ் செபித்துக்கொண்டு,—பழிப்பறு தூதரோடு மதுரை அம் பதியில் போனார் - குற்றமற்ற தூதுவரோடும் மதுரைமாநகரத்திற் சென்றார். எ-று. (௧0௩)

மதுரைமன் னவன்முன் னேகி மனமிலா வணக்கஞ் செய்து
கதிர்மதிச் சடையோ னீந்த கவின்கொண்மா மணிகை நல்கி
எதிருற நின்ற போதி லின்புற வழுதி நோக்கி
விதிமுறை யிருமிங் கென்ன விருந்தனர் விரிந்த நூலார்.

இ-ள். விரிந்த நூலார் - விரிந்த நூல்களிலே வல்லவராகிய திருவாதவூரர்,—மதுரை மன்னவன் முன் ஏகி மனம் இலா வணக்கம் செய்து - மதுரையரசனாகிய பாண்டியனுக்கெதிரேபோய் மனத்தோடு பொருந்தாத வணக்கத்தினைச் செய்து,—கதிர் மதி சடையோன் ஈந்த கவின்கொள் மா மணி கை நல்கி எதிர உற நின்ற போதில் - ஒளிபொருந்திய சந்திரனை அணிந்த சடையையுடைய சிவபெருமான் கொடுத்தருளிய அழகிய மாணிக்கமணியைக் கையிற்கொடுத்து எதிரே நிற்கும்போது,—வழுதி இன்பு உற நோக்கி விதிமுறை இங்கு இரும் என்ன இருந்தனர் - பாண்டியன் இனிதாகப் பார்த்து இங்கேயிரும் என்று உபசாரமுறைப்படியே சொல்ல இருந்தார். எ-று. (௧0௪)

விலைமதிப் பில்லா வந்த மேதகு மணியைப் பல்கால்
நிலையுற வியந்து நோக்கி நெஞ்சினு ளுவகை யெய்தித்
தலைவனைச் சிந்தை யுள்ளே தரிப்பவர் தம்மை நாடிச்
சிலைமுகக் கரத்து மன்னன் செய்ததே தரைமி னென்றான்.

இ-ள். சிலை முகக் கரத்து மன்னன் - விற்பொருந்திய கையையுடைய பாண்டியராசன்,—விலை மதிப்பு இல்லா அந்த மேதகு மணியைப் பல்கால் நிலை உற நோக்கி - விலைமதித்தற்கரிய மகிமைபொருந்திய அம்மாணிக்கமணியைப் பலகால் உற்று நோக்கி,—நெஞ்சினுள் வியந்து உவகை எய்தி - மனத்தினுள்ளே அதிசயித்து மகிழ்ச்சிகூர்ந்து,—தலைவனைச் சிந்தை உள் தரிப்பவர் தம்மை நாடி - ஆன்மநாயகராகிய சிவபெருமானை இருதயத்துத் தியானிக்குந் திருவாதவூரரை நோக்கி,—செய்தது எது உரைமின் என்றான் - குதிரைகொள்ளச் சென்றபின் நீர்செய்தது என்னை கூறும் என்றான். எ-று.

மலக்கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி
நிலத்தொளிர் புகழின் மிக்காய் நீதரு நிதிகொண் டேகி
இலக்கணக் குறைபா டின்றி யீரிரு கதியு முண்டாங்
குலப்பரி யினங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர்.

இ-ள். மலக் கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி - மலமாகிய கொடிய பகையை வெல்பவராகிய திருவாதவூரர் அவ்வரசனது முகத்தை நோக்கி,—நிலத்து ஒளிர் புகழின் மிக்காய் நீ தரு நிதி கொண்டு ஏகி - நிலத்தின்கண் விளங்கும் புகழால் மேம்பட்ட அரசனே நீதந்த திரவியத்தை நாங் கொண்டுசென்று,—இலக்கணக்குறைபாடு இன்றி ஈரிரு கதியும் உண்டாம் குலப் பரி இனங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர் - இலக்கணங்களு ளொன்றுனுங் குறைவற்று நான்குகதிகளை யுமுடையனவாகிய உயர்ந்தசாதிக் குதிரையினங்களையெல்லாம் நாம் விலைபொருட்குத்தகக் கொண்டபின்னர். எ-று. (௧௦௬)

வரும்பரித் தொகுதி யெல்லா மணிதிகழ் மதுரைக் கேகப்
பொருந்திய தினமே தென்னப் பூசுரர் விதியிற் றேர்ந்து
திருந்துமா வணியாந் திங்கண் மூலநற் றினமா மென்ன
இருந்தன னதனை நாடிப் பெருந்துறை யென்னு மூரில்.

இ-ள். வரும் பரித் தொகுதி எல்லாம் அணி திகழ் மதுரைக்கு ஏக பொருந்திய தினம் ஏது என்ன - வருகின்ற குதிரைக்கூட்டங்களெல்லாம் அழகுவிளங்குகின்ற மதுரைநகரத்திற் செல்லுதற்கேற்ற சுபதினம் யாதென்று வினவ,—பூசுரர் விதியில் தேர்ந்து திருந்தும் ஆவணி ஆம் திங்கள் மூலம் நல் தினம் ஆம் என்ன - வேதியர்கள் விதிப்படி ஆராய்ந்து குற்றமற்ற ஆவணிமாசத்து மூலநக்ஷத்திரம் தக்கதினம் என்றுகூற,—அதனை நாடி பெருந்துறை என்னும் ஊரில் இருந்தனன் - அம்மூலநக்ஷத்திர தினத்தை நோக்கித் திருப்பெருந்துறையென்னும் ஊரில் இதுகாறும் இருந்தேன். எ-று. (௧௦௭)

நின்படைச் சுற்ற மெல்லா நீடுமிந் நகருக் கெய்தும்
அன்பினிற் கடிது மீண்டா ரவர்பெரும் படிறு கூற
மன்பெரு முனிவா லோலை வரைந்தனை யதனால் வந்தேன்
கொன்பரித் திரளிங் கெய்துங் கூறுமந் நாளி லென்றார்.

இ-ள். நின்படைச் சுற்றம் எல்லாம் நீடும் இந்நகருக்கு எய்தும் அன்பினில் கடிது மீண்டார் - நின் சேனாவீரராகிய சுற்றத்தவரெல்லாரும் உயர்வாகிய இவ்விராசதானிக்குத் தாம் வருதல்வேண்டும் என்னும் அவாவினாலே விரைவாக மீண்டு வந்தனர்,—அவர் பெரும் படிறு கூற - அவர் என்னைக் குறித்துப் பெரும் பொய்களை வகுத்துக் கூற,—மன் பெரு முனிவால் ஓலை வரைந்தனை அதனால் வந்தேன் - நீ பெருங்கோபங்கொண்டு ஓலை எழுதி விடுத்தனை அதுபற்றி முன்வந்தேன்,—கொன் பரித் திரள் கூறும் அந்நாளில் இங்கு எய்தும் என்றார் - பெருமைபொருந்திய குதிரைக்கூட்டம் மேற்கூறிய மூலநக்ஷத்திரதினத்தில் இங்கே வரும் என்று கூறினார். எ-று.

என்பது கேட்டு மாற னும்மிடை யெமக்குண் டான
மன்பெரு நண்பு நீங்க நினைத்துள மனத்தர் சொல்லால்

அன்பிலர் போல வோலை யெழுதின மதுகொண் டின்னே
துன்புற லொழிவீ ரென்று நன்மையாத் தொன்மை கூறி.

இ-ள். என்பது கேட்டு - என்று திருவாதவூரர் சொன்னதைக் கேட்டு,—மாறன் - பாண்டியன்,—உம்மிடை எமக்கு உண்டான மன் பெரு நண்பு நீங்க நினைத்துள மனத்தர் சொல்லால் - உம்மிடத்து எமக்குளதாகிய நிலைபெற்ற நட்பு நீங்கும்வண்ணம் உபாயஞ்சூழும் மனத்தையுடைய சிலர் வார்த்தையினால்,—அன்பு இலர் போல ஓலை எழுதினம் - உம்மிடத்தன் பில்லாதவர்போல உமக்கோரோலை எழுதியனுப்பினோம்,—அதுகொண்டு இன்னே துன்பு உறல் ஒழிவீர் என்று நன்மை ஆ தொன்மை கூறி - அதுபற்றி இங்ஙனந் துன்புறுதலை ஒழிதிரென்று நன்மையாகப் பழைய நட்புரிமைகளை எடுத்துச சொல்லி. எ-று. (௧0௯)

கொன்னெடுங் கோயி லூடு கொடுபுகுந் துரிமை கூறத்
தன்னரு கிருத்தி மேன்மை தக்கநற் கலைக ணல்கிப்
பொன்னணி கலன்கள் யாவும் புனையுமென் றளித்து முன்போன்
மன்னுள கருமங் கூறி மனையிடை யேகு மென்றான்.

இ-ள். கொன் நெடும் கோயில் ஊடு கொடு புகுந்து உரிமை கூற தன் அருகு இருத்தி - பெருமைபொருந்திய நெடிய மாளிகையின்கண் அழைத்துக் கொடுசென்று உரிமை முன்னையினுமிகுமாறு தன்பக்கத்திருத்தி,—மேன்மை தக்க நல் கலைகள் நல்கி - மாட்சிமைபொருந்திய நல்ல வஸ்திரங்களையுங் கொடுத்து,—பொன் மணி கலன்கள் யாவும் புனையும் என்று அளித்து - பொன்னாபரணம் இரத்தினாபரணங்களையெல்லாம் அணிந்துகொள்ளும் என்று கொடுத்து,—முன்போல் மன் உள கருமம் கூறி மனை இடை ஏகும் என்றான் - முன்னரேபோல அரசியற்குரிய கருமங்களைக் குறித்துப் பேசி இனி நீர் நும்மில்லின்கட் செலலும் எனறு பாணடியன் கூறினான். எ-று. (௧௧0)

தம்பெரு மனையிற் சென்று தாபதர் வைகப் பின்னர்
நன்பரிச் சமுக மெய்து நாளிரண் டென்னு முன்னர்
வெம்படைச் சுற்ற நீங்கி யிருந்துழி விரிந்த நேமி
அம்புவிக் கரசன் றன்மு னமைச்சரி லொருவன் சென்று.

இ-ள். தாபதர் தம் பெரு மனையில் சென்று வைக - முனிவராகிய திருவாதவூரர் தம் மாளிகையின்கட்சென்று தங்க,—பின்னர் - அதன்பின்னர்,—நன் பரிச் சமுகம் எய்தும் நாள் இரண்டு என்னும் முன்னர் - நல்ல குதிரைக்கூட்டம் வருமென்று அரசனுக்குக் கூறிய தினத்துக்கு இன்னுமிரண்டு தினங்களுள என்று சொல்லப்படுவதன்முன்னர்,—விரிந்த நேமி அம் புவிக்கு அரசன் வெம் படைச் சுற்றம் நீஙகி இருந்துழி - பரந்த சமுத்திரஞ் சூழ்ந்த அழகிய பூமிக்கரசனாகிய பாண்டியன் வெவ்விய படைஞராகிய பரி

வாரத்தைத் தவிர்ந்து தனியே இருக்கும்பொழுது,—அமைச்சரில் ஒருவன் முன் சென்று - மந்திரிமார்களில் ஒருவன் அவனுக்கெதிரே சென்று. எ-று.

போற்றியெம் பொருனை நாட போற்றியென் றிறைஞ்சிக் கூறும்
மாற்றமுண் டொன்று நின்பேர் புனைந்துள வரிசை பெற்றோர்
சாற்றருந் துரகங் கொள்ள நேரியன் றலத்திற் சார்ந்து
நீற்றின னடியார் கையி னின்பொருள் யாவு மீந்தார்.

இ-ள். எம் பொருனை நாட போற்றி போற்றி என்று இறைஞ்சி - பொருநைநாட்டையுடைய எமதரசனே போற்றி போற்றி என்று வணங்கி,—கூறும் மாற்றம் ஒன்று உண்டு - தமியேன் சொல்லத்தகும் வார்த்தையொன்றுள்ளது,—நின் பேர் புனைந்துள வரிசை பெற்றோர் - தென்னவன்பிரமராயனென்னும் நின் சிறப்புப்பெயர் புனையப்பெற்ற பட்டத்தையுடைய மந்திரியார்—சாற்ற அருந் துரகம் கொள்ள நேரியன் தலத்தில் சார்ந்து - சொல்லுதற்கரிய குதிரைகளைக் கொள்ளும்பொருட்டுச் சோழதேசத்தையடைந்து,—நீற்றினன் அடியார் கையில் நின் பொருள் யாவும் ஈந்தார் - விபூதியை அணிந்த சிவபெருமானுடைய அடியார்கள் கையிலே உன் திரவியங்களையெல்லாம் கொடுத்தார். எ-று. (௧௧௨)

நின்பெருந் தூத ரேகி யெழுதுநின் னோலை காட்டப்
பின்புவந் துனது சீற்ற மொழித்துயிர் பிழைக்க வெண்ணி
அன்பினர் போல நின்முன் குறுகியா வணிமூ லத்தில்
நன்பரித் திரளிங் கெய்து நானுனக் களிப்ப னென்றார்.

இ-ள். நின் பெரும் தூதர் ஏகி எழுதும் நின் ஓலை காட்ட - உன்னுடைய பெரிய தூதுவர் சென்று நீ எழுதிய திருமுகத்தைக் காட்ட,—பின்பு வந்து உனது சீற்றம் ஒழித்து உயிர் பிழைக்க எண்ணி - பின் இங்கே வந்து உன் வெகுளியைத் தணித்துத் தாமுயிருய்யக் கருதி,—அன்பினர் போல நின் முன் குறுகி - நின்மாட்டன்புடையவர்போல நினக்கெதிர் வந்து,—ஆவணி மூலத்தில் நன் பரித் திரள் இங்கு எய்தும் - ஆவணிமாசத்து மூலநட்சத்திரதினத்திலே நல்ல குதிரையினங்கள் இங்கே வரும்,—நான் உனக்கு அளிப்பன் என்றார் - நான் உனக்கு அவற்றைத் தருவேன் என்று உறுதிகூறினார். எ-று. (௧௧௩)

மற்றவர் மொழிந்த வெல்லாம் பொய்யுரை மன்ன வென்னச்
சொற்றமிழ் வைகை நாடன் றூதரை வெருவ நோக்கி
அற்றமில் சுருதி வல்லா ரருட்பெருந் துறையி லெய்தி
உற்றவெம் பரிக ளுண்டே லொல்லைவந் துரைமி னென்றான்.

இ-ள். மன்ன அவர் மொழிந்த எல்லாம் பொய் உரை என்ன - அரசனே! அவ்வமைச்சர் கூறியவைகளெல்லாம் பொய்வார்த்தை என்று அம்மந்திரி சொல்ல,—சொல் தமிழ் வைகை நாடன் தூதரை வெருவ நோக்கி -

செந்தமிழ்மொழியோடு வைகைநதிபொருந்திய தென்னாட்டையுடைய பாண்டியன் அதுகேட்டுச் சமீபத்தில்நிற்குந் தூதுவரை அஞ்சுமாறு நோக்கி,—அற்றம் இல் சுருதி வல்லார் அருள் பெருந்துறையில் எய்தி - சோர்வற்ற வேதங்களிலே பாண்டித்தியத்தையுடைய பெரியோர்கள் வசிக்குந் திருப்பெருந்துறையில் நீவிர் போய்,—உற்ற வெம் பரிகள் உண்டேல் ஒல்லை வந்து உரைமின் என்றான் - வந்தடைந்த வேகத்தையுடைய குதிரைகளுள வாயின் விரைவாகவந்து இங்கெமக்கறிவியுங்கள் என்று பணித்தான். எ-று.

அருந்திறற் றூதரேகி யத்தினங் கடிது மீண்டு
வருந்திமுன் புகுந்து மன்னர் மன்னனை வணங்கி நின்று
பெருந்துறை யென்னு மூரும் பிறவுள பதியுந் தேடிக்
கருந்தடங் களிற்று வேந்த கண்டிலம் பரிக ளென்றார்.

இ-ள். அரும் திறல் தூதர் ஏகி அந்தினம் கடிது வருந்தி மீண்டு - அரிய வீரத்தையுடைய தூதுவர் உடனே திருப்பெருந்துறைக்குப் போய் அத்தினமே விரைவாக வருத்தத்தோடு திரும்பிவந்து,—மன்னர் மன்னனை முன் புகுந்து வணங்கி நின்று - மகாராசாவாகிய பாண்டியனை முன் புகுந்து வணங்கி நின்று,—கரும தடம் களிற்று வேந்த - கரிய மலைபோலும் யானைப்படையையுடைய அரசனே,—பெருந்துறை என்னும் ஊரும் பிற உள பதியும் தேடி பரிகள் கண்டிலம் என்றார் - திருப்பெருந்துறை என்னுமூரிலும் பிறவூர்களிலுந் தேடியும் குதிரைகளைக் கண்டிலம் என்று விண்ணப்பஞ்செய்தார். எ-று. (௧௧௫)

பாங்குநின் றின்ன வாறு பகர்தலும் வெகுட்சி யெய்தி
ஈங்குநங் கருமஞ் செய்வ னென்றிடர் செய்வான் றன்னைத்
தாங்கருந் துயரஞ் செய்து தகைந்நந் தனந்தை யெல்லாம்
வாங்குமின் றண்ட லாள ரென்றிகல் மன்னன் சொன்னான்.

இ-ள். பாங்கு நின்று இன்னவாறு பகர்தலும் - தூதுவர்கள் பக்கத்திலேநின்று இந்தப்பிரகாரம் விண்ணப்பஞ்செய்தலும்,—இகல் மன்னன் வெகுட்சி எய்தி - வலியையுடைய அரசன் கோபங்கொண்டு,—தண்டலாளர் - தண்டத்தலைவர்களே,—ஈங்கு நம் கருமம் செய்வன் என்று இடர் செய்வான் தன்னை - இங்கே நங்காரியங்களைச் செய்வேன் என்றுடம்பட்டு நமக்குத் துன்பம்விளைக்குந் திருவாதவூரனை,—தாங்கு அரும் துயரம் செய்து தகைந்து நம் தனத்தை எல்லாம் வாங்குமின் என்று சொன்னான் - சகித்தற்கரிய கொடுந் தண்டனைகளைச்செய்துந் தடுத்தும் நந்திரவியங்களையெல்லாம் வாங்குங்கள் என்று ஆஞ்ஞாபித்தான். எ-று. (௧௧௬)

மண்பெருந் தண்ட லாளர் மறையவர் குலத்தின் மிக்கார்
முன்புநின் றினைய சொல்வார் முனிவுடை முகத்த ராகி
நன்பரித் தொகுதி கொள்ள நயந்நமக் களித்த வீந்த
தன்பொரு ளெல்லாம் வாங்கச் சாற்றினன் சீற்ற மன்னன்

இ-ள். மன் பெரும் தண்டலாளர் மறையவர் குலத்தின் மிக்கார் முன்பு முனிவு உடை முகத்தர் ஆகி நின்று இனைய சொல்வார் - அரசனது பெரிய தண்டத்தலைவர் பிராமணகுலசிரேட்டராகிய திருவாதவூரருக்கெதிரேபோய்க் கோபக்குறிப்புப்பொருந்திய முகத்தையுடையவராய்நின்று இவைகளைச்சொல்வார்,—சீற்ற மன்னன் நன் பரித் தொகுதி கொள்ள நயந்து உமக்கு அந் நாள் ஈந்த தன் பொருள் எல்லாம் வாஙகச் சாற்றினன் - கோபத்தையுடைய பாண்டியராசன் நல்ல குதிரைகளைக்கொள்ளும் பொருட்டு விரும்பி உம்மிடத்து அன்றுதந்த தன் திரவியஙகளையெல்லாம் வாங்கும்படி இன்றெமக்கு ஆஞ்ஞாபித்தனன். எ-று. (கக௭)

மற்றிதன் பயன்யா தென்னின் மன்னவன் விடுப்ப வென்றி
உற்றவன் றூதர் வல்லை யொண்பெருந் துறையி லெய்திக்
கொற்றவெம் பரிகள் காணார் மீண்டனர் கோவு நும்பாற்
பற்றிய நேசம் விட்டான் பாரினி யாள வொட்டான்.

இ-ள். இதன் பயன் யாது என்னின் - அரசன் இங்ஙனங் கூறியகாரணம் என்னையெனின்,—மன்னவன் விடுப்ப - அவ்வரசன் ஐயுற்றனுப்ப,—வென்றி உற்ற வன் தூதர் வல்லை ஒண் பெருந்துறையில் எய்திக் கொற்ற வெம் பரிகள் காணார் மீண்டனர் - வெற்றியையுடைய வலிய தூதுவர்கள் விரைவாகத் திருப்பெருந்துறையிற்போய் வலிமைபொருந்திய வெவ்விய குதிரைகளைக் காணாதவர்களாய்த் திரும்பிவந்தார்கள்,—கோவும் நும்பால் பற்றிய நேசம் விட்டான் - அரசனும் உம்மிடம்பற்றிய நண்பையும் நீக்கிவிட்டான்,—இனி பார் ஆள ஒட்டான் - இனி நீர் பூமியை அரசாளவும் உடன்படமாட்டான். எ-று. (கக௮)

தனமினித் தருதல் வேண்டு மென்றுவன் றண்ட லாளர்
சினமுடன் புகல வாளா விருத்தலுந் தீமை கூறும்
நினைவுட னரசர் வாழ்வி னீக்கிமெய் வாக்கின் மன்னர்
தனியுற வலிதிற் காவற் சாலையி லாக்கி னார்கள்.

இ-ள். வன் தண்டலாளர் தனம் இனித் தருதல் வேண்டும் என்று சினம் உடன் புகல - வலிய தண்டத்தலைவர்கள் அரசனுடைய திரவியத்தை நீர் இப்பொழுதே தரல்வேண்டும் என்று சினக்குறிப்புடன் கேட்ப,—மெய் வாக்கின் மன்னர் வாளா இருத்தலும் - உண்மையான வாக்குத்தலைவராகிய திருவாதவூரரானவர் அதற்கு ஒன்றும்பேசாது வாளா இருத்தலும்,—தீமை கூறும் நினைவு உடன் அரசர் வாழ்வின் நீக்கி வலிதில் தனி உற காவல் சாலையில் ஆக்கினார்கள் - அவர்கள் தண்டனைசெய்யும் எண்ணத்துடன் அவரை அரசவாழ்வினின்றுநீக்கி வலிந்துகொண்டுபோய்த் தனித்திருக்கும்படி சிறைச்சாலையில் அடைத்தார்கள். எ-று. (கககூ)

சறறுமுட் டளர்வி லாத தன்மையின் வாத வூரர்
மற்றவர் செலுத்தச் சென்று வன்சிறைச் சாலை யெய்த

நற்றவர் வருத்தங் காண நாணமுற் றொளிப்பான் போன்று
பொற்றடந் தேரின் வெய்யோன் போய்க்குட பான்மறைந்தான்.

இ-ள். வாதவூரர் அவர் செலுத்த சற்றும் உள் தளர்வு இலாத தன்மையின் சென்று - திருவாதவூரர் அத்தண்டத்தலைவர் இங்ஙனஞ் செலுத்தா நிற்ப, அதற்குத் தாமொருசிறிதும் மனந்தளராத தன்மையோடுசென்று,— வன் சிறைசசாலை எய்த - வலிய சிறைச்சாலையை அடைய,—தடம் பொன் தேரின் வெய்யோன் - விசாலமாகிய அழகிய தேரையுடைய சூரியன்,— நல் தவர் வருத்தம் காண நாணம் உற்று ஒளிப்பான் போன்று போய்க் குடபால் மறைந்தான் - நல்ல தவத்தையுடைய வாதவூரருக்கெய்திய துன்பத்தைத் தான் காணுதற்கு வெட்கமுற்றொளிப்பவன்போலப்போய் மேற்குத்திக்கின்கணுள்ள அஸ்தமயனகிரியிலே மறைந்தான். எ-று. (௧௨௰)

கள்ளுலா மிதழி மாலை கவின்பெற முடித்த வேணி
வள்ளலா ரேவச் சென்று வழுதிமேல் வெகுட்சி கொண்டு
வெள்ளைவான் பிறைபபற் றோன்ற விழுங்கவங் காந்த பேயின்
கொள்ளிவா யனைய வண்ணங் கொண்டது செக்கர் வானம்.

இ-ள். செக்கர் வானம் - செவ்வானம்,—கள் உலாம் இதழி மாலை கவின் பெற முடிதத வேணி வள்ளலார ஏவ - தேனொழுகுங் கொன்றை மாலை அழகுபெற முடித்த சடையையுடைய சோமசுநதரக்கடவுள் ஏவிவிட,—சென்று வழுதி மேல் வெகுட்சி எய்தி - சென்று பாணடியன்மேற் கோபங்கொணடு,—வெள்ளை வான பிறைப் பல் தோன்ற விழுஙக அங் காந்த பேயின் கொள்ளிவாய் அனைய வணணம் கொணடது - வெண்மையாகிய பெரிய பிறை என்னும் பல்லு வெளியேதோன்ற அவ்வரசனை விழுங்கும்படி திறந்த பேயினது கொள்ளிவாய்போலும் செந்நிறத்தைக்கொண்டது. எ-று. (௧௨௧)

தெண்டிரை யுலகி னன்மைத் திறத்தினர்க் குற்ற தீங்கு
கண்டுணர் சிறியோர் போல நகைத்தன கவின்கொண் முல்லை
ஒண்டமிழ் வாத வூரர்க் குற்றதை யுணர்நது துன்பங்
கொண்டவ ரிதயம் போலக் குவிநதன கமல மெல்லாம்.

இ-ள். கவின் கொள் முல்லை - அழகைக்கொண்ட முல்லைக்கொடிகளானவை,—தெள் திரை உலகில் நன்மை திறத்தினர்க்கு உற்ற தீஙகு கண்டு உணர் சிறியோர் போல நகைத்தன - சமுததிரஞ்சூழ்ந்த உலகத்துள்ள நன்மக்கட்கெய்திய தீவினையைக்கணடு மகிழுங கீழ்மக்களைப்போல அரும்புகள் விரிந்து விளஙகின,—கமலம் எல்லாம - தாமரை மலர்களெல்லாம்,— ஒள் தமிழ் வாதவூரர்க்கு உற்றதை உணர்ந்து துன்பங கொண்டவர் இதயம் போல குவிந்தன - செந்தமிழில்வல்ல திருவாதவூரர்க்கு எய்திய சிறைத் துன்பத்தை அறிந்து வருந்துகின்ற பெரியோர்களது இதயஙகளைப்போலக் கூம்பின. எ-று. (௧௨௨)

தென்னவன் வைத்த காவற் சிறையினி லுறையுந் தெய்வம்
அன்னவ ரொருவர் காணி னாணமுற் றயர் வரென்றே
இன்னல்கொண் மனத்தாள் போல விருட்கரங் கொண்டு கூடற்
பொன்னக ருள்ளார் கண்கள் புதைத்தனள் கங்குன் மங்கை.

இ-ள். கங்குல் மங்கை - இராக்காலமாகிய பெண்ணானவள்,—தென்னவன் வைத்த காவல் சிறையினில் உறையும் தெய்வம் அன்னவர் - பாண்டியனால் வைக்கப்பட்ட காவலையுடைய சிறையிலிருக்கின்ற தெய்வம்போன்ற திருவாதவூரர்,—ஒருவர் காணில் நாணம் உற்று அயர்வர் என்றே இன்னல் கொள் மனத்தாள் போல - ஒருவர் தம்மைக் காணப்பெறின் நாணமுற்று அயர்வரென்று, தன்மனத்திலே துன்பங்கொண்டவள்போல,—இருள் கரம் கொண்டு கூடல் பொன் நகர் உள்ளார் கண்கள் புதைத்தனள் - இருளாகிய கைகளைக்கொண்டு மதுரையாகிய அழகிய நகரத்தின்கணுள்ளவர்களது கண்களை மூடினள். எ-று. (கஉங)

மன்பதை புரப்ப திந்த மந்திரித் தலைவர்க் குண்டாம்
என்பது முளதோ வந்தோ வென்செய்து மென் றிரங்கி
அன்பரை யகன்று நெஞ்சா லழலெழ வுயிர்த்து மாழ்குந்
துன்புடை மடவார் போலத் துயின்றிலா மதுரை யுள்ளார்.

இ-ள். மதுரை உள்ளார் - மதுரைநகரவாசிகளெல்லாம்,—மன்பதை புரப்பது - மக்கட்பரப்புகளைப் பாதுகாப்பது,—இந்த மந்திரித் தலைவர்க்கு உண்டாம் என்பதும் உளதோ - இந்த மந்திரித்தலைவராகிய திருவாதவூரருக்கு உளதாகும் என்பதும் நிகழுமா,—அந்தோ என் செய்தும் என்று இரங்கி - ஐயோ இதற்கு யாதுசெய்வோம் என்று மனமிரங்கி,—அன்பரை அகன்று அழல் எழ உயிர்த்து நெஞ்சு மாழ்கும் துன்புடை மடவார் போல - தங்காதலரைப்பிரிந்து அக்கினிசிதறத் தம்முள் நெட்டுயிர்ப்பெறிந்து மனமறுகுந் துன்பத்தையுடைய மகளிரைப்போல,—துயின்றிலா - நித்திரை செய்திலா. எ-று. (கஉச)

செம்மனப் புனிதர்க் குண்டாந் தீங்குதங் கிழமை யாலே
ஐம்முகக் கடவு ளன்ற வறுமுகற் குரைக்கு மாபோல்
விம்முசெஞ் சூட்டு முட்டாள் வியன்சிறைச் சேவ லெல்லாந்
தம்மனை யிடங்க டோறுந் தழங்கின புலரி காலை.

இ-ள். புலரி காலை - விடியற்காலையில்,—விம்மு செம் சூட்டு முள் தாள் வியன் சிறைச் சேவல் எல்லாம் - விம்முகின்ற சிவந்த சூட்டினையும் முட்பொருந்திய கால்களையும் பெரிய சிறகுகளையுமுடைய சேவற்கோழிகளெல்லாம்,—செம் மனப் புனிதர்க்கு உண்டாம் தீங்கு - செம்மையாகிய மனத்தையுடைய திருவாதவூரருக்குளதாகிய சிறைத்துன்பத்தை,—ஐம் முகக் கடவுள் ஈன்ற அறுமுகற்கு தம கிழமையால் உரைக்குமா போல் - ஐந்து முகங்களையுடைய சிவபெருமான் தந்தருளிய ஆறு முகங்களை

யுடைய சுப்பிரமணியக்கடவுளுக்குத் தம்முரிமையினாலே விண்ணப்பஞ்செய்யுமாறுபோல,—தம் மனை இடங்கள் தோறும் தழங்கின - தமது வாசஸ்தானமாகிய இல்லங்கடோறும் ஒலித்தன. எ-று. (கஉ௫)

சிற்பர முணர்ந்து ஞானச் செந்தமி ழோது நீதிப்
பொற்பினை யுடையோ ரின்னல் பொருதுசென் றுரைப்ப போல
விற்பொலி சடிலன் சூல வேலவ னால வாயில்
அற்புதன் கோயின் முன்றி லார்த்தன சங்க மெங்கும்.

இ-ள். சிற்பரம் உணர்ந்து - சித்தாகிய பரசிவத்தை அநுபவத்திற்கண்ணுணர்ந்து,—ஞானச் செந்தமிழ் ஓதும் நீதி பொற்பினை உடையோர் இன்னல் பொருது சென்று உரைப்ப போல - ஞானத்தைத்தருகின்ற திருவாசகத்தைப் பாடியருளும் நீதிச்சிறப்பினையுடைய திருவாதவூரரது துன்பத்தைக்கண்டு சகிக்கலாற்றாது சமீபத்திற்சென்று விண்ணப்பஞ்செய்வன போல,—வில் பொலி சடிலன் சூலவேலவன் ஆலவாயில் அற்புதன் கோயில் முன்றில் எங்கும் - செவ்வொளியாற் பொலிந்த சடையையுடையவரும் சூலப்படையையுடையவரும் திருவாலவாயில் வீற்றிருக்கின்ற மகானுமாகிய சோமசுந்தரக்கடவுளது கோயின் முன்றிலெங்கணும்,—சங்கம் ஆர்த்தன - சங்குகள் ஒலித்தன. எ-று. (கஉ௬)

எம்மிறை பரியி லேறு நாளிதோ வென்று பார்க்குஞ்
செம்மலர் மடவா ளிட்ட திலகசிந் தூரம போல
அம்மலை மிசையே வைகி யாடகக் கிரிசூழ் போந்து
மைமிகு கடன் மேல வந்து முளைத்தது வால பானு.

இ-ள். வால பானு - இளஞ்சூரியன்,—அம் மலை மிசையே வைகி - அவ்வஸ்தமயனகிரியிலே தங்கி,—ஆடக கிரி சூழ் போந்து - மேருகிரியைச் சுற்றிச்சென்று,—மை மிகு கடல மேல வந்து - கருமைமிகுந்த கிழக்குச சமுத்திரத்தின்மீது வந்து,—எம இறை பரியில ஏறு நாள இதோ என்று பார்க்கும செம மலர் மடவாள் - எம் தலைவராகிய சிவபெருமான் குதிரையிலேறியருளும் தினம் இதுவோ என எட்டி நோக்கும செந்தாமரைமலராசனியாகிய இலக்குமி,—இட்ட சிந்தூர திலகம போல முளைத்தது - தன்னுதலின்கணிட்ட சிந்தூரதிலகத்தைப்போல உதித்தது. எ-று. (கஉ௭)

மண்கெழு செங்கோல் வேந்தன் வைகறை யெழுந்து பின்னர்க்
கண்கழீஇ நீர தாடிக் கண்ணுதல பூசை செய்து
தண்கதிர் முத்த மாலை தரித்துநற கலன்க டாங்கி
விண்கிளர் செமபொற் கோயின் முகப்பினில வீற்றி ருந்தான்.

இ-ள். மண் கெழு செம் கோல் வேந்தன் - மண்ணுலகெங்குஞ் செல்லுஞ் செங்கோலையுடைய பாண்டியராசன்,—வைகறை எழுந்து - விடியற்கண் நித்திரைவிட்டெழுந்து,—கண கழீஇ நீரது ஆடி - கண்களைக் கழுவி

நீரிலே முழுகி,—கண்ணுதல் பூசை செய்து - சிவபூசை முதலிய நித்தியகருமங்களை முடித்து,—தண் கதிர் முத்த மாலை தரித்து நல் கலன்கள் தாங்கி - தண்ணிய ஒளியையுடைய முத்துமாலைகளைத் தரித்து நல்ல ஆபரணங்களையுந் தாங்கி,—விண் கிளர் செம் பொன் கோயில் முகப்பினில் வீற்றிருந்தான் - விண்ணின்கணுயர்ந்த செம்பொன்மயமாகிய அத்தாணியின் முகப்பிலே வீற்றிருந்தான். எ-று. (கஉஅ)

வன்றிற லாள ரெல்லாம் வாம்பரித் திரள்கள் கொள்வான்
சென்றர னடியார்க் கீந்த செழும்பொரு டாரீ ராகில்
இன்றுமை வருத்தஞ் செய்து மென்றெறி வெயிலி னூடு
நின்றிடு மென்ன நின்றார் நீள்பெரும் புகழி னிற்பார்.

இ-ள் வல் திறலாளர் எல்லாம் வாம் பரித் திரள்கள் கொள்வான் சென்று - வலிய தண்டத்தலைவர்களெல்லாம் பாய்கின்ற குதிரைக்கூட்டங்களைக் கொள்ளும்பொருட்டுச் சென்று,—அரன் அடியார்க்கு ஈந்த செழும் பொருள் தாரீராகில் - சிவனடியார்களுக்குக் கொடுத்த திரவியங்களைத் தாராதொழிவீராயின்,—இன்று உமை வருத்தம் செய்தும் என்று - இன்றைக்கு உம்மை வருத்துவோம் என்று அசகுறுத்தி,—எறி வெயிலின் ஊடு நின்றிடும் என்ன - எறிக்கின்ற இவ்வெய்யிலின்கண் நில்லும் என்று கூற,—நீள் பெரும் புகழின் நிற்பார் நின்றார் - நெடிதாகிய பெரிய புகழுடம்பான் நிலைபெறுந் திருவாதவூரர் அவ்வாறே நின்றார். எ-று. (கஉகூ)

அங்குநின் றிளைப்பார் தம்மை யாண்டவாண் டகையை யுன்னி
இங்குணர்ந் திலையோ நாயே னிடும்பையென் றிரக்க மெய்திச்
சங்கவெண் குழையாய் மாறன் றனக்குவாம் பரிக ளீதல்
நங்கட னாகு மென்று நவின்றசொற் பொய்ம்மை யாமோ.

இ-ள். அங்கு நின்று இளைப்பார் தம்மை ஆண்ட ஆண்டகையை உன்னி - அங்கே வெய்யிற்கணின்று இளைக்குந் திருவாதவூரர் தம்மை ஆட்கொண்டருளிய சர்வவல்லமையினையுடைய சிவனைத் தியானித்து,—இங்கு நாயேன் இடும்பை உணர்ந்திலையோ என்று இரக்கம் எய்தி - இங்கே கடையேனுகிய தமியேன்படுந் துன்பத்தைத் தேவரீர் அறிந்திலீரோ என்று தம்முளிரக்கங்கொண்டு,—வெண் சங்கக் குழையாய் - வெண்மையாகிய சங்கக்குண்டலத்தையுடையவரே,—மாறன் தனக்கு வாம் பரிகள் ஈதல் நம் கடன் ஆகும் என்று நவின்ற சொல் பொய்ம்மை ஆமோ - பாண்டியராசனுக்குத் தாவுகின்ற குதிரைகளைக் கொடுத்தல் நமது கடனாகுமென்று தேவரீர் தமியேனுக்குக் கூறியருளிய வாக்குப் பொய்படுமோ. எ-று (கஙO)

ஊனுடம் புடைய வாழ்க்கை யொழித்தனைக் கடிமை யென்று
மாநிலம் புகலா நிற்ப வந்துனை யடைந்தேன் றன்னை
மீனவன் றன்பான் மீள விடுத்தனை வேலை நீருள்
ஆனபின் னங்கீ சாற்று நீரென வாவ துண்டோ.

இ-ள். ஊன் உடம்பு உடைய வாழ்க்கை ஒழித்து - இந்தவுடம்போடு கூடிவாழும் வாழ்க்கையைப் பொய்யென்று ஒழித்து,—மா நிலம் உனக்கு அடிமை என்று புகலாநிற்ப வந்து உனை அடைந்தேன் தன்னை - பெரியவுலகத்தவர் தேவரீருக்குத திருவாதவூரன் அடிமையென்று பேசாநிற்ப வந்து தேவரீரையே சரணடைந்த தமியேனை,—மீள மீனவன் தன்பால் விடுத்தனை - மீளவும் பாண்டியனிடத்து அனுப்பினீர்,—ஆற்று நீர் வேலை நீருள் ஆனபின் அந் நீர் என ஆவது உண்டோ - ஆற்றுநீரானது சமுத்திரநீருட் சென்று கலந்தபின்னா சமுத்திரநீராவதல்லது ஆற்றுநீர என வேறுபிரிந்து மீளுவதுமுண்டோ. எ-று. (கருக)

அறத்தனிச் செல்வி பாக வன்பிலே னின்பா லென்று
வெறுத்திடி னடி யேற் கிங்கு வேறொரு துணையு மில்லை
செறுத்தவர் புரங்க ளெல்லாஞ் செற்றவ ரடியான் றன்னை
நிறுத்தினர் வெயிலி லென்றா னின்புகழ்க் கேற்ற மாமோ.

இ-ள். அறத் தனிச் செல்வி பாக - உமையம்மையை வாமபாகமாகவுடையவரே —நின்பால் அன்பு இலேன் என்று வெறுத்திடின் - தேவரீர் மாட்டுப் பத்தியில்லேன் என்று அடியேனை வெறுத்தொழியின்,—அடியேற்கு இங்கு வேறு ஒரு துணையும் இல்லை - தமியேனுக்கு இங்கே வேறொரு துணையுமில்லை —செறுத்தவர் புரங்கள் எல்லாம் செற்றவர் அடியான் தன்னை வெயிலில் நிறுத்தினர் என்றால் - பகைவரது முப்புரங்களையும் அழித்த சிவபெருமானுக்கு அடியாளொருவனை வெயிலின்கணிறுத்தினர்கள் என்று சொன்னால்,—நின் புகழ்க்கு ஏற்றம் ஆமோ - அது தேவரீரது கீர்த்திக்குப் பெருமையாகுமோ. எ-று. (கருஉ)

வானநா டவர்க்கு மேலோய் வந்துனக் கடிமை யிப்போ
தானநா னிடும்பை யுற்றா லாருனக் கடிமை யாவார்
நானெனு மனத்தார் சொல்லு நல்லுரை யன்றி நின்ற
ஈனனா மொருவன் சொல்வ தேறுமோ வுளத்தி லென்றார்.

இ-ள். வான நாடவர்க்கு மேலோய் - விண்ணுலகவாசிகளாகிய தேவர்கட்கும் மேலானவரே,—இப்போது வந்து உனக்கு அடிமை ஆன நான் இடும்பை உற்றால் - இதுபொழுது வந்து தேவரீருக்கு அடிமையாகிய தமியேன் துன்பத்தை அநுபவித்தால்,—உனக்கு ஆர் அடிமை ஆவார் - இனித் தேவரீருக்கு ஆர்தாம் அடிமையாவார்,—நான் எனு மனத்தார் சொல்லும் நல் உரை அன்றி - யான் எனதென்னுஞ் செருக்கற்ற மனத்தையுடைய மெய்ஞ்ஞானிகள் சொல்லும் நல்லவார்த்தையன்றி,—நின்ற ஈனன் ஆம் ஒருவன் சொல்வது உளத்தில் ஏறுமோ என்றார் - செருக்கொடு நின்ற இழிஞனாகிய தமியேன் கூறும் விண்ணப்பமுந் தேவரீரது திருவுள்ளத்தில் ஏறுமோ என்று திருவாதவூரர் கூறி. எ-று. (கருங)

அவத்தொழில் புரியா மெய்ம்மை யன்பருக் கன்பு செய்து
பவக்கட லிடைவீ ழாமற் பரிந்தருட் பார்வை நல்கித்

தவப்பெரு வடிவங் கொண்டு தாளளித் தாளு மையர்
செவிப்புலன் புகுந்த வன்பர் செப்பிய மாற்ற மெல்லாம்.

இ-ள். அன்பர் செப்பிய மாற்றம் எல்லாம் - மெய்யன்பராகிய திருவாதவூரர் சொல்லிய வாசகங்களெல்லாம்,—அவத்தொழில் புரியா மெய்ம்மை அன்பருக்கு அன்பு செய்து - அவத்தொழில்செய்யாத மெய்ம்மையையுடைய தொண்டருக்கு அன்புசெய்து,—தவப் பெரு வடிவம் கொண்டு பவக் கடலிடை வீழாமல் பரிந்து அருட்பார்வை நல்கி - தவத்தையுடைய குருவடிவங்கொண்டு வந்து பிறவியாகிய கடலின்கண் வீழ்ந்தழுந்தாவண்ணம் அன்புடனே கிருபாநோக்கஞ்செய்து,—தாள் அளித்து ஆளும் ஐயர் செவிப்புலன் புகுந்த - திருவடிகளைத் தந்து ஆளுகின்ற சிவபிரானது செவியின்கட்புக்கு நுழைந்தன. எ-று. (கங-ச)

காம்படு தோளி பாகன் கண்ணுத லண்ண லன்பர்
தாம்படு துயர மெண்ணி யத்துயர் தணிக்க வேண்டித்
தேம்படு மலங்கன் மாலிற் றென்னவன் றனக்கு வென்றி
வாம்பரி யளித்தல் சொலவாம வலவினைப் பகையை வெல்வாம்.

இ-ள். காம்பு அடு தோளி பாகன் கணணுதல் அண்ணல் - மூங்கிலை வென்ற தோள்களையுடைய மீனாக்ஷியம்மை பாகரும் நெற்றிக் கண்ணையுடைய இறைவருமாகிய சோமசுந்தரக்கடவுளானவர்,—அன்பர் தாம் படு துயரம் எண்ணி அத்துயர் தணிக்க வேண்டி - தம்மன்பராகிய திருவாதவூரர்படுந் துன்பத்தையறிந்து அத்துயரை நீக்கியருளத் திருவுளங்கொண்டு,—தேம் படும் அலங்கல் மாபில தென்னவன் தனக்கு வென்றி வாம் பரி அளித்தல் சொலவாம் - தேன்பொருந்திய மாலையையணிந்த மார்பையுடைய பாண்டியனுக்கு வெற்றிபொருந்திய பாய்கின்ற குதிரைகளைக் கொடுத்த திருவிளையாடலை இனிக் கூறுவாம்,—வல் வினைப் பகையை வெல்வாம் - அதனுனே வலிய இருவினையாகிய பகையையும் வெல்வாம். எ-று. ()

திருப்பெருந்துறைச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஅ௩.

# குதிரையிட்டசருக்கம்.

தந்தை யென்பவர் மைந்தர் வாதை தவிர்ப்ப தேகட னாதலால்
அந்த மின்றிய காத லன்ப ரழுங்கல் சண்டபி னரியெலாம்
வந்து வெம்பரி யாக வும்பரி வீரர் வானவ ராகவுஞ்
சிந்தை கொண்டன ரந்த மால்விதி தேடு வார்மதி சூடுவார்.

இ-ள். தந்தை என்பவர் மைந்தர் வாதை தவிர்ப்பதே கடன் ஆதலால் - பிதாவாயுள்ளவர் புதல்வரது துன்பத்தைநீக்கிக் காப்பதே முறை

மையாதலான்,—அந்த மால் விதி தேவொர் மதி சூவொர் - அவ்விஷ்ணுவா லும் பிரமாவாலும் தேடப்படுபவருஞ் சந்திரனைச சூடினவருமாகிய சிவ பெருமான்,—அந்தம் இன்றிய காதல் அன்பர் அழுங்கல் கண்டபின் - அள வில்லாத விருப்பினையுடைய திருவாதவூரர் வருந்துதலைக்கணடபின்,—நரி எலாம் வந்து வெம் பரி ஆகவும வானவா பரி வீரா ஆகவும் சிந்தை கொண டனர் - நரிகளெல்லாம்வந்து வெவ்விய குதிரைகளாகவும் தேவர்கள் குதிரை வீரர்களாகவும் வரும்படி நினைததாா. எ-று. (க)

தேசி லாநரி வநது வநது திரண்டு வெமபரி யானபின்
ஆசி லாவிமை யோர்க டாமு மமைந்த சேவக ராயினா
மாசி லாமணி மன்ற ராரிய வாசி வாணிகர் போலவே
ஏசி லாவுரு மாறினா மறை யிவுளி யினபுற மேறினா

இ-ள். தேசு இலா நரி வநது வநது திரணடு வெம பரி ஆனபின் - அழகறற நரிகளெலலாம வநதுவநது ஒருஙகுதிரணடு வேகநடையுடைய குதிரைகளான பின்னா,—ஆசு இலா இமையோாகள தாமும் அமைந்த சேவகர் ஆயினா - குற்றமறற தேவருமஅவைகளுககேறற வீரராயினா,— மாசு இலா மணி மன்றா - குறறமிலலாத அழகிய வெளளியமபலமுடைய வரும்,—மறை இவுளியின் புறம ஏறினா - வேதமாகிய குதிரையின் மீது ஏறினவருமாகிய சிவபிரான் —ஆரிய வாசி வாணிகா போலவே உரு மாறி னர் - ஆரியதேசக குதிரைவாணிகாபோல வடிவங்கொணடாா. எ-று. (உ)

சேடு கொண்டு திரண்ட வீர ரிரண்டு ஞாங்கா சிறககவே
ஊடெ ழுநதுக ளிமப ரெஙகணு முமப ருங்கிளா வெய்தவே
கோடு டன்றுடி விமம நீடிய கூடல் சூழ்மதில் வாயிலவாய்
ஆடல் வெமபரி கொண்டு சென்றன ராதியா ருமை பாதியார்.

இ-ள். ஆதியாா உமை பாதியாா - முதல்வரும் அாததநாரீசுவரருமா கிய சிவபெருமானவர்,—சேடு கொணடு திரணட வீரா இரணடு ஞாங கர் சிறக்க - கையிற் சவுககைககொணடு கூட்டமாகிய வீரர்கள் இருமருங கினும் மிக்குவரவும்,—ஊடு எழும் துகள் இமபா எஙகணும் உம்பரும் கிள ர்வு எய்த - இடையே எழுந்த தூளிகள் இவவுலகம எவ்விடத்தும் மேலுல கத்தும் கிளராநிற்பவும்,—கோடு உடன் துடி விமம - கொமபுகளோடு உடு க்கைகளொலிப்பவும்,—நீடிய கூடல் சூழ் மதில் வாயில வாய ஆடல் வெம் பரி கொண்டு சென்றனர் - நெடிய மதுரையிற சூழ்நத மதிலின்கணுள்ள கோபுரவாயிலிலே அடுதலையுடைய வெவ்விய குதிரைகளைக் கொணடு சென் றருளினார். எ-று. (௩)

அங்கு நின்றவர் சென்று நிமப வலஙக லானை வணஙகியே
எங்க ணுந்துகள் பொங்கி விமம வெழுநது சாகள மார்ப்பவே
திங்கள் வெண்குடை மன்ன பாரிய தேச வெமபரி யின்றுநந்
துங்க விஞ்சி யிடங்கொள்வாயி றுவனறி வநத வெனச் சொனார்.

இ-ள். அங்கு நின்றவர் சென்று நிம்ப அலங்கலானை வணங்கி - அங்கேநின்றவர்கள் சென்று வேப்பமாலையையணிந்த பாண்டியனை வணங்கி,—திங்கள் வெண் குடை மன்ன - சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையையுடைய அரசனே,—எங்கணும் தூகள் பொங்கி விம்ம காகளம் எழுந்து ஆர்ப்ப - எவ்விடங்களினுந் தூளிகள் எழுந்து நெருங்கவும் சிறுசின்னங்கள் ஆரவாரிக்கவும்,—ஆரிய தேச வெம் பரி இன்று நம் துங்க இஞ்சி இடங்கொள் வாயில் துவன்றி வந்த எனச் சொன்னார் - ஆரியதேசத்து வெவ்விய குதிரைகள் இன்று நமது உயர்ச்சியாகிய மதிலிற்பொருந்திய வாயிலில் நெருங்கிவந்தன என்று சொன்னார்கள். எ-று. (சு)

வாசி யின்றிரள் வந்த தென்றலும் வாத வூருறை யையர்மேன்
நேசம் வைத்தவர் தம்மை முன்ன ரழைந்து நீள்கலை யாதிதந்
தாசில் வெம்பரி காண வம்மி னெனவெ ழுந்தெதி ரடையலார்
கூசு தன்படை சூழ வேயிறை கோயி லின்புற மெய்தினன்.

இ-ள். வாசியின் திரள் வந்த என்றலும் - குதிரைக்கூட்டம் வந்தது என்று கூறுதலும்,—வாதவூர் உறை ஐயர் மேல் நேசம் வைத்து - திருவாதவூரிலிருக்கும் பெரியார்மீது பற்றுவைத்து,—அவர் தம்மை முன்னர் அழைத்து நீள் கலை ஆதி தந்து - அவரைத் தனக்குமுன் வருவித்து உயர்வாகிய வஸ்திரம் முதலியவைகளைக் கொடுத்து உபசரித்து,—ஆசு இல் வெம் பரி காண வம்மின் என எழுந்து - குற்றமற்ற வெவ்விய குதிரைகளைக் காணும்பொருட்டு நீர் வருக என்று கூறி எழுந்து,—எதிர் அடையலார் கூசு தன் படை சூழ இறை கோயிலின் புறம் எய்தினன் - எதிர்க்கின்ற பகைவர்களும் அஞ்சத்தக்க தன் சேனைகள்சூழப் பாண்டியராசன் கோயிலின்புறத்தே சென்றான். எ-று. (எ)

வேறு.

வண்டுபடி யலங்கனெடுந் தடந்தோண் மாறன்
மணிச்சிவிகை மீதேறி மதுரை மூதூர்
கண்டிருகண் களிக்கும்வகை யால வாயிற்
கடவுளிடம் பரிவரவு காண்பா னெண்ணிச்
செண்டுவெளி தனிற்போந்து பனிநீர் தோய்ந்த
செங்கழுநீர் மருமாலை சிறந்து தூங்குந்
தண்டரள மணிப்பந்தர் நிழற்கீ ழம்பொற்
றவிசின்மிசை யினிதிருந்தான் றானை சூழ.

இ-ள். வண்டு படி அலங்கல் நெடும் தடந்தோள் மாறன் - வண்டுகள் மொய்க்கின்ற மாலையை அணிந்த நெடிய அகன்ற புயங்களையுடைய பாண்டியராசன்,—மதுரை மூதூர் கண்டு இருகண் களிக்கும்வகை - மதுரையாகிய பழைய நகரிலுள்ளார் பார்த்து இருகண்களுங் களிக்கும்படி,—ஆலவா

யில் கடவுள் இடும் பரி வரவு காண்பான் எண்ணி - திருவாலவாயில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரக்கடவுள் கொண்டுவந்துகொடுக்குங் குதிரைகளின் வரவைக் காணும்படி கருதி,—மணிச சிவிகை மீது ஏறி செண்டு வெளி தனில் போந்து - முத்துச்சிவிகையின்மீதேறி வையாளிவீதியின்கட் சென்று,—பனிநீர் தோய்ந்த மது செங்கழுநீர மாலை சிறந்து தூங்கும் தண் தரள மணிப் பந்தர் நிழல் கீழ் - பனிநீரிலே தோயப்பெற்ற தேனையுடைய செங்கழுநீர்மாலை சிறப்புற்றுத்தூங்குந் தண்ணிய முத்துப்பந்தரின் நிழலிலே,—அம் பொன் தவிசின் மிசை தானை சூழ இனிது இருந்தான் - அழகிய பொன்னாசனத்தின்மீது சேனைகள்சூழ இனிதாக இருந்தான். எ-று. ()

முத்தமிழின் றிறநவிலும் புலவர் சூழ
முதுமறையோர் மங்கலச்சொன் முறையிற் கூறக்
கைத்திகழும் வளைபுலம்பக் கலன்கண் மின்னக்
கன்னியர்க ளிருமருங்குங் கவரி வீசக்
கொத்துலவும் பலமலரின் வாசந் தோய்ந்து
குலவுமிளந் தென்றல்வரக் குழலர் பாட
மெத்துமணி முத்தமெனும் பணியே பூண்டு
வெண்மதியின் றோற்றம்போல் வீற்றிருந்தான்.

இ-ள். முத்தமிழின் திறம் நவிலும் புலவர் சூழ - இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழின் வகையைக் கூறும் புலவர்கள் சூழவும்,—(முது) மறையோர் மங்கலச சொல் முறையின் கூற - பழைய பிராமணர்கள் மங்கலவாழ்த்துக்களை முறையானே கூறவும்,—கை திகழும் வளை புலம்ப கலன்கள் மின்ன கன்னியர்கள் இரு மருங்கும் கவரி வீச - கையின்கண் விளங்கும் வளையல்கள் ஒலிக்க ஆபரணங்கள் பிரகாசியாநிற்ப மகளிர்கள் இருமருங்கினும் நின்று சாமரங்களை வீசவும்,—கொத்து உலவும் பல மலரின் வாசம் தோய்ந்து குலவும இளந்தென்றல் வர - கொத்தின்கண் பொருந்திய பல்வகைப் புஷ்பங்களின் வாசனையோடளாவிவரும் மெல்லிய தென்றல் வீசவும,—குழலர பாட - இசைக்கருவியாளர் பாடவும்,—மெத்து முத்தம் எனும மணிப் பணியே பூண்டு வெண் மதியின் தோற்றம்போல் வீற்றிருந்தான் - மிக்க முத்தென்னும் இரத்தினாபரணங்களையே தரித்து வெள்ளிய சந்திரோதயம்போலப் பாண்டியராசன் வீற்றிருந்தான். எ-று. (எ)

மங்குல்படி தடப்புரிசை வாத வூரர்
மனங்களிப்ப விழிகளிப்ப மறுவி லாத
திங்களெனுந் தன்மரபு விளங்க வென்றுந்
திருநீறு மஞ்செழுத்துஞ் சிறந்து மல்கச்
சங்கினுடன் காகளங்கண் முழவ மார்ப்பத்
தயங்கியெழுந் துகளுயர்வான் றன்மேற் செல்லத்

துங்கநெடுங் கடல்பரந்து வருதல் போலத்
துவன்றிவரும் பரித்திரளின் றோற்றங் கண்டான்.

இ-ள். மஙகுல் படி நடம் புரிசை வாதவூரர் மனம் களிப்ப விழி களிப்ப - முகில்கள்படிகின்ற விசாலமாகிய மதில்சூழ்ந்த திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகசுவாமிகளது மனமும் கணணும் களிகூரவும்,—மறு இலாத தன் திஙகள் எனும் மரபு விளஙக - மறுவற்ற தனது சந்திரவமிசம் என்னும் வமிசம் பிரகாசிக்கவும்,—என்றும் திருநீறும் அஞ்சு எழுத்தும் சிறந்து மல்க - எஞ்ஞான்றும விபூதியும் பஞ்சாக்கரமும் சிறந்து வளரவும்,—சஙகின் உடன் காகளஙகள முழவம் ஆரப்ப - சஙகுகளும் சின்னங்களும் மிருதஙகஙகளும் ஒலிப்பவும,—தயஙகி எழும் துகள் உயர் வான் மேல் செல்ல - பிரகாசிததெழும தூளிகள உயாநத ஆகாயத்தின்மீது செல்லவும்,—துஙக நெடும கடல் பரநது வருதல் போல துவன்றி வரும் பரித்திரளின் தோறறம கணடான் - உயாசசிபொருநதிய நெடிய கடல் பரந்து வருவதுபோல நெருஙகிவருகினற குதிரைககூட்டஙகளின் தோற்றத்தை அரசன கணடான. எ-று                                                  (அ)

வேறு.

அஙஙகெழின மதுரையம பதியி லாவணித
திஙகளின மூலமாஞ செழுந தினததினில்
எஙகணு நீறுமஞ செழுதது மோஙகிடச
சஙகர னிடுமபரிச சமுகம வநதவால.

இ-ள். அஙகு எழில மதுரை பதியில ஆவணித திஙகளில் மூலமாம் செழும தினததினில - அஙகே அழகிய மதுராபுரியில் ஆவணிமாசத்து மூலநக்ஷததிரததில,—எஙகணும நீறும் அஞசு எழுததும் ஓஙகிட - எவ்விடஙகளிலும் விபூதியும் பஞ்சாட்சரமும தழைததோஙகும்படி,—சஙகரன் இடும் பரிச சமுகம வநத - சிவபிரானாலே கொடுககப்பட்ட குதிரைக்கூட்டஙகள் வநதன. எ-று                                                  (கூ)

தூததிரண் மணிகெழு சோதி மாமுடிப்
பாாததிவன விழிநலம பருக வீதியிற
கூததினா செயலெனக குலாய வாமபரிச்
சாததவா வருமபெருந தன்மை கூறுவாம்.

இ-ள். தூ திரள் மணி கெழு சோதி மா முடிப் பார்த்திவன் விழி நலம் பருக - சுததமாகிய திரணட மணிகள்பதிதத ஒளியைவீசும் பெரிய மகுடத்தையுடைய பாணடியராசனது கணகள் அழகைக்கவர,—வீதியில் கூத்தினர் செயல் எனக குலாய வாம் பரிச சாததவர் வரும் பெருந் தன்மை கூறுவாம் - வீதியிலே நாடகாது செயல்போலக் குலாவிய குதிரை வியாபாரிகள் வரும் பெருந்தன்மையைக் கூறுவாம். எ-று.                                    (க0)

கட்டிய சுரிகையர் கவின்கொள் வாளினர்
பொட்டணி நுதலினர் பொலன்செய் மேனியர்
பட்டுடை மருங்கினர் பவள நீள்வடம்
விட்டொளி விளங்கிய வியன்கொண் மார்பினர்.

இ-ள். கட்டிய சுரிகையர் - அரையிலே கட்டப்பட்ட உடைவாளை யுடையவர்,—கவின் கொள் வாளினர் - கையிலே அழகிய வாட்படையையுடையவர்,—பொட்டு அணி நுதலினர் - பொட்டணிந்த நெற்றியையுடையவர்,—பொலன் செய் மேனியர் - பொன்னொளிவீசுகின்ற சரீரத்தையுடையவர்,—பட்டு உடை மருங்கினர் - பட்டுவஸ்திரமுடுத்த அரையையுடையவர்,—நீள் பவள வடம் ஒளி விட்டு விளங்கிய வியன் கொள் மார்பினர் - நெடிய பவளமாலைகள் ஒளிவிட்டு விளங்கிய பரந்த மார்பையுடையவர், எ-று. (கக)

புன்மயிற் பீலியர் புலியின் றோலினர்
பின்மலர்ப் பாசிலை பிணைத்த குஞ்சியர்
வன்மொழிக் குரலினர் வயங்கு தூணியர்
வின்மலி கரத்தினர் வெறித்த பார்வையர்.

இ-ள். புன் மயிற் பீலியர் - மெல்லிய மயிற்பீலியையுடையவர்,—புலியின் தோலினர் - புலித்தோலையுடையவர்,—மலர்ப் பாசு இலை பிணைத்த பின் குஞ்சியர் - பூக்களோடு பசிலைகளை வைத்துப் பின்னிய பின்றூங்குங் குடுமியையுடையவர்,—வல் மொழிக் குரலினர் - வன்மொழியமைந்த குரலையுடையவர்,—வயங்கு தூணியர் - முதுகில்விளங்கும் அம்புக்கூட்டையுடையவர்,—வில் மலி கரத்தினர் - விற்பொருந்திய கைகளையுடையவர்,—வெறித்த பார்வையர் - வெறிப்பான பார்வையையுடையவர். எ-று. (கஉ)

பொன்னியல் குழையினர் பொலன்கொண் மாலையர்
பன்னிறச் சாத்தினர் பணைத்த தோளினர்
சென்னியிற் கதிர்மணி யிலங்கு சேடனைப்
பின்னிவிட் டுளதெனப் பிணித்த குஞ்சியர்.

இ-ள். பொன் இயல் குழையினர் - பொன்னாலாகிய குண்டலங்களை யுடையவர்,—பொலன் கொள் மாலையர் - அழகைக்கொண்ட மாலைகளை யுடையவர்,—பல் நிறச் சாத்தினர் - பல நிறம்பொருந்திய தலைச்சாத்துக்களையுடையவர்,—பணைத்த தோளினர் - பருத்த புயங்களையுடையவர்,—சென்னியில் கதிர் மணி இலங்கு சேடனைப் பின்னிவிட்டுளது என - தலையில் ஒளிபொருந்திய மணிவிளங்குகின்ற சேடனைப் பின்னிவிட்டுளது போல,—பிணித்த குஞ்சியர் - பிணித்த குடுமியையுடையவர். எ-று. (கஙு)

தாங்கிய சுரிகையுந் தயங்கு வேல்களும்
வாங்கிய சிலைகளுங் கணையும் வாளுமாய்
ஞாங்கரி லிவர்வர நாப்பட் டோன்றினார்
தேங்கிய நதிமதிச் சென்னி யண்ணலார்.

இ-ள். இவர் தாங்கிய சுரிகையும் - இவர் அரையிலே தாங்குகின்ற உடைவாள்களும்,—தயங்கு வேல்களும் - ஒளிசெய்கின்ற வேற்படைகளும்,—வாங்கிய சிலைகளும் - வளைக்கப்பட்ட விற்களும்,—கணையும் - அம்புகளும்,—வாளும் ஆய - வாட்படைகளுங் கொண்டவராய்,—ஞாங்கரில் வர - பக்கங்களிலே வர,—தேங்கிய நதி மதிச் சென்னி அண்ணலார் நாப்பண் தோன்றினார் - ததும்புகின்ற கங்காநதியையும் சந்திரனையும் அணிந்த திருமுடியையுடைய சிவபெருமானானவர் இவர்களுக்கு மத்தியிலே தோன்றியருளினார். எ-று. (கச)

வேறு

நச்சுரக வுச்சிமணி நண்ணுமொரு வண்ணங்
கச்சிடை விசித்துள கவின்கொளுடை வாளும்
பசசைமுழு நீலமொடு பலநிற வடஞ்சேர்
செசசைநிற மன்னிய திரண்டவிரு தோளும்.

இ-ள். நச்சு உரக உச்சி மணி நண்ணும் ஒரு வண்ணம் கச்சு இடை விசித்துள - நஞ்சினையுடைய பாம்பின் சிரசிலுள்ள இரத்தினம் பதிக்கப்பெற்றதனாலாய ஓரழகினையுடைய கச்சினிடத்தே இடப்பட்ட,—கவின் கொள் உடைவாளும் - சிறப்பினைக்கொண்ட உடைவாளும்,—பசசை முழு நீலம் ஒடு பல் நிற வடம் சேர - பச்சையும் முழுநீலமுமாகிய இவற்றோடு ஒழிந்த பலநிறங்களையுமுடைய இரத்தினமாலைகள் பொருந்திய,—செசசை நிறம் மன்னிய திரண்ட இரு தோளும் - செந்நிறம்பொருந்திய திரண்ட இரண்டு திருப்புயங்களும். எ-று. (கரு)

ஒப்பரிய சட்டையு முடுத்திலகு பட்டுந்
தொப்பியு முகத்துள துலக்குமுள ராகிச்
செப்பரு நலங்குலவு செண்டொருகை கொண்டே
இப்படியி லிப்படிவம யாவருள ரென்ன.

இ-ள். ஒப்பு அரிய சட்டையும் - உவமைகூறுதற்கரிய சட்டையும்,—உடுத்து இலகு பட்டும் - அரையின்கணுடுத்து விளங்கும் பட்டுவஸ்திரமும்,—தொப்பியும் - தொப்பியும்,—முகத்துள துலக்கும் உளர் ஆகி - முகத்துப்பொருந்தப்பெற்ற பிரகாசமுமுடையவராகி,—செப்பு அரு நலம் குலவு செண்டு ஒரு கை கொண்டு - இத்தன்மைத்தென்று கூறுதற்கரிய அழகு பொருந்திய சவுக்கை ஒரு கரத்திற்கொண்டு,—இப்படியில் இப்படிவம் யாவர் உளர் என்ன - இந்தப்பூமியில இவ்வடிவத்தை வேறுயாவருளரென்று கண்டோர் தம்முள் வியந்து கூற. எ-று. (கசு)

கட்டுப்படி மீதின்மணி கச்சைமணி முன்பின்
இட்டபல பக்கமணி யின்னொலி புலம்பப்
பட்டிலகு பக்கரை பனிக்கவரி யெட்டும்
விட்டொளி விளங்குமொரு வெண்பரியி லேறி.

இ-ள். படி மீது கட்டு மணி - அங்கவடியின்மீது கட்டிய மணியும்,—கச்சை மணி - கச்சையின்மீது கட்டிய மணியும்,—முன் பின் இட்ட - முன்னும் பின்னுமிட்ட,—பல பக்க மணி - பலவாகிய பக்கமணிகளுமாகிய இவை,—இன் ஒலி புலம்ப - செவிக் கின்னிசையாக ஒலிப்ப,—பட்டு இலகு பக்கரை பனிக் கவரி எட்டும் விட்டு ஒளி விளங்கும் ஒரு வெண் பரியில் ஏறி - பட்டினாற்செய்து விளங்குகின்ற கலணையிற்கட்டிய குளிர்ச்சி பொருந்திய சாமரங்கள் எட்டும் ஒளிவிட்டு விளங்கப்பெறும் வெண்மையாகிய ஒரு குதிரையின்மீதேறி. எ-று. (கஎ)

வீசுகவ ரித்திரண் மிடைந்தொளிர மீதே
தேசொடு கவித்துள செழுங்குடை வயங்கப்
பூசல்புரி வெம்பரி பொருந்துபடை யூடே
மாசில்குல வாரியரின் மன்னனென வந்தார்.

இ-ள். வீசு கவரித் திரள் மிடைந்து ஒளிர - வீசுகின்ற சாமரக்கூட்டங்கள் நெருங்கி விளங்க,—மீது தேசு ஒடு கவித்துள செழும் குடை வயங்க - முடியின்மீது அழகோடு கவிக்கப்பட்ட செழுமையாகிய குடை பிரகாசிக்க,—பூசல் புரி வெம் பரி பொருந்து படை ஊடே - யுத்தஞ்செய்கின்ற வெவ்விய குதிரைகள்பொருந்திய சேனைகளின் மத்தியிலே,—மாசு இல் குல ஆரியரின் மன்னன் என வந்தார் - குற்றமற்றுயர்ந்த ஆரியதேசவாசிகளது தலைவனைப்போல வந்தருளினார். எ-று. (கஅ)

மன்னவனு மிங்கிவர் வருந்தகைமை கண்டே
தன்னுள மகிழ்ந்திரு தடங்கணிமை யானாய்
அன்னமெனு மூர்திநெடு மாலரனை யல்லால்
இன்னவெழில் யாவருள ரென்றதிச யித்தான்.

இ-ள். மன்னவனும் இங்கு இவர் வரும் தகைமை கண்டு தன் தடம் இரு கண் இமையானாய் உளம் மகிழ்ந்து - பாண்டியராசனும் இவர்வருந் தன்மையைநோக்கித் தனது பெரிய இருகண்களுமிமையாமல் மனமகிழ்ந்து,—அன்னம் எனும் ஊர்தி நெடு மால் அரனை அல்லால் இன்ன எழில் யாவர் உளர் என்று அதிசயித்தான் - அன்னவாகனத்தையுடைய பிரமாவும் நெடிய விஷ்ணுவும் சிவபெருமானுமல்லாமல் இப்பேரழகை வேறு யாவருளரென்று அற்புதமடைந்தான். எ-று. (கக)

பண்ணிய தவத்துள பயன்பரியின் மீதே
நண்ணிய தெனத்தமி னயந்தனர் வியந்தார்

எண்ணிய முடித்தன ரெனக்கருதி நின்றார்
புண்ணிய மறைத்தமிழ் புகன்றதிரு வாயார்.

இ-ள். புண்ணிய மறைத் தமிழ் புகன்ற திரு வாயார் - புண்ணியத்தினையுடைய தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் பாடிய திருவாயினையுடையவராகிய வாதவூரர்,—பண்ணிய தவத்து உள பயன் பரியின் மீது நண்ணியது என - நாம் செய்துகொண்ட தவப்பயன் இதுபொழுது குதிரையின் மீதே வந்ததென்று,—தமில் நயந்தனர் வியந்தார் - தம்முள்ளே மகிழ்ந்து வியந்தாராய்,—எண்ணிய முடித்தனர் எனக் கருதி நின்றார் - நாமெண்ணியவைகளைச செய்து முடித்தருளினரெனக் கருதி நின்றனர். எ-று. (உ0)

தூயசுடர் வேல்பல சுழற்றியெதிர் செல்வார்
வாயொலி விளைப்பரிகல் வாளினை விதிர்ப்பார்
நேயமொடு தமமிலணி நின்றுசமர் செய்வார்
ஆயின ரரன்புடையி லானபரி வீரர்.

இ-ள். அரன் புடையில் ஆன பரி வீரர் - சிவபெருமானது மருங்கில் வந்த குதிரைவீரர்கள்,—தூய சுடா வேல் பல சுழற்றி எதிர் செல்வார் - சுத்தமான ஒளியையுடைய வேற்படைகள் பலவற்றைச சுழற்றி ஒருவர்க்கொருவர் எதிரே செல்வாரும்,—வாய் ஒலி விளைப்பர் - வாயாற்சததமிடுவாரும்,—இகல் வாளினை விதிர்ப்பாா-வலிய வாட்படைகளை வீசுவாரும்,—நேயம் ஒடு தம்மில் அணி நின்று சமா செய்வாா ஆயினர் - அன்போடு தம்முள் அணிவகுததுநின்று யுத்தஞ்செய்வாருமாயினா. எ-று. (உக)

நீறுசிவ நீதிநிலை நிற்கவுல காளும்
மாறனு மகிழ்ந்துதவ மன்னரை யழைத்தே
கூறரிய வாரிய குலேசரொரு வீதி
ஏறும்வகை சென்றுரையு மென்றினிது சொன்னான்.

இ-ள். நீறு சிவ நீதி நிலை நிற்க உலகு ஆளும் மாறனும் மகிழ்ந்து - விபூதியும் சைவசமயநீதியும் நிலைபெற உலகததை அரசாளும் பாண்டியராசனும் மகிழ்ச்சியடைந்து,—தவ மன்னரை அழைத்து - தவமுதல்வராகிய திருவாதவூரரைத தன்சமீபத்தில் வருவிதது,—கூறு அரிய ஆரிய குல ஈசர் ஒரு வீதி ஏறும் வகை - கூறுதற்கரிய இவ்வாரியகுலாதிபரை ஒருவீதியிலே குதிரையேற்றஞ் செய்யுமாறு,—சென்று உரையும் என்று இனிது சொன்னான் - சென்று சொல்லக்கடவீர் என்று இனிதாகக் கூறினான். எ-று. (உஉ)

என்னிவன் மொழிந்தன னெனத்தமி லிரங்கா
மன்னிய வருந்தவரும் வாண்முக மலர்ந்தே
கன்னலை நலங்கொள்கனி யைக்குறுகி நெஞ்சான்
முன்னுற வணங்கிவிழி நீர்த்துதிர நின்று.

இ-ள். மன்னிய அரும் தவரும் - நிலைபெற்ற அரிய தவத்தையுடைய திருவாதவூரரும்,—இவன் என் மொழிந்தனன் எனத் தமில் இரங்கா வாள் முகம் மலர்ந்து - இவ்வரசன் எதனைப் பணித்தானென்று தம்முணர்ந்து புறத்தே முகமலர்ச்சிகாட்டி,—கன்னலை நலம் கொள் கனியைக் குறுகி நெஞ்சால் முன் உற வணங்கி - கரும்பினதுசாறும் நல்ல கனியும் போன்ற சிவபிரானை அடைந்து மனத்தான் முன்னர்வணங்கி,—விழி முத்து உதிர நின்று - கண்ணீர் சொரிதரநின்று. எ-று. (உங)

மன்றன்மல ரோனுநெடு மாலுமுரு வேருய்
அன்றுமுத லின்றுமறி யாதவகை நின்ருய்
வென்றிவிடை யன்றியுயர் வெம்பரியின் மீதே
இன்றுனை வணங்கமுன மெத்தவ முயன்றேன்.

இ-ள். மன்றல் மலரோனும் நெடு மாலும் உரு வேருய் - மணங்கமழும் தாமரைமலரை ஆசனமாகவுடைய பிரமாவும் நெடிய விஷ்ணுவும் வடிவுவேறுகொண்டு,—அன்று முதல் இன்றும் அறியாத வகை நின்ருய் - அன்றுமுதலின்றுவரையுந் தேடி அறியாதபிரகாரம் நின்றருளும் கடவுளே,— வென்றி விடை அன்றி உயர் வெம் பரியின் மீது இன்று உனை வணங்க - வெற்றியையுடைய இடபவாகனத்தின் மீதன்றி உயர்ந்த வெவ்விய குதிரையின் மீது இத்தினம் உம்மை வணங்குதற்கு,—முனம் எத்தவம் முயன்றேன் - பூர்வசன்மங்களில் என்ன தவஞ்செய்தேனோ. எ-று. (உச)

வந்தவடி விவ்வுயிர் வணங்குமிது வல்லால்
அந்தவடி வாகிலுனை யாரறிய வல்லார்
இந்தவகை கண்டடியர் வாக்கெளியை யென்றே
சிந்தைதனி லன்பொடு தெளிந்ததுல கெல்லாம்.

இ-ள். வந்த வடிவு இவ்வுயிர் வணங்கும் - தேவரீர் கொண்டுவந்த வடிவாகிய இதனை இவ்வுயிர் தரிசித்து வணங்கும்,—இது அல்லால் - இஃதன்றி,—அந்த வடிவு ஆகில் உனை ஆர் அறிய வல்லார் - அவ்வுருவத் திருமேனியை மேற்கொள்ளின் தேவரீரை யாவர் அறிந்து வணங்கவல்லுநர்,— உலகு எல்லாம் இந்த வகை கண்டு - இவ்வுலகத்தினரெல்லாம் இப்பெருங் கருணைத்திறத்தை நேரே கண்டறிந்து,—அடியவர்க்கு எளியை என்று சிந்தைதனில் அன்பொடு தெளிந்தது - தேவரீரை அடியவர்க்கெளியீர் என்று தம்மனத்தின் மிக அன்புகொண்டு நிச்சயித்தறிந்தனர். எ-று. (உரு)

என்றுமுக மன்பல வியம்பியரு ளாலே
வென்றிபுனை மீனவன் விளம்புமொழி சொன்னர்
கொன்றைமுடி யாருமதி சைந்துகொடை மாறன்
நன்றியொடு காணும்வகை நற்பரி புகைத்தார்.

இ-ள். என்று முகமன் பல இயம்பி - என்றிவ்வாறு சம்மான வசனங்கள் பலவற்றைக் கூறி,—அருளால் - திருவருளினாலே,—வென்றி புனை மீனவன் விளம்பு மொழி சொன்னார் - வெற்றியையணிந்த பாண்டியன் கூறிய வார்த்தையைக் கூறினார்,—கொன்றை முடியாரும் அது இசைந்து - கொன்றைமாலிகையைத் தரித்த முடியையுடைய சிவபெருமானும் அதற்குடன்பட்டு,—கொடை மாறன் நன்றியொடு காணும் வகை நல் பரி உகைத்தார் - கொடையையுடைய பாண்டியராசன் நன்மையோடுங் காணும்படி நல்ல குதிரையைச் செலுத்திக்காட்டினார். எ-று. (உ௪)

மன்னரவ பந்தமுடன் வட்டநெடு வீதி
என்னுமிவு ளித்தொழில்கள் யாவுமினி தேறி
உன்னுமன வேகமென வோடுமுயர் பாய்மா
நன்னட மிடும்படி நடாத்தியெதிர் வந்தார்.

இ-ள். மன் - நிலைபெற்ற,—அரவ பந்தம் உடன் வட்டம் நெடு வீதி என்னும் இவுளித் தொழில்கள் யாவும் இனிது ஏறி - நாகபந்தம் வட்டம் நெடிய வீதி என்னும் பாகுபாட்டையுடைய குதிரையேற்றத்தொழில்களையெல்லாம் இனிதாக ஏறிக்காட்டி,—உன்னும் மன வேகம் என ஓடும் உயர் பாய்மா நல் நடம் இடும்படி நடாத்தி எதிர் வந்தார் - நினைத்தற்கருவியாகிய மனவேகம்போல விரைந்தோடும் உயர்ந்த குதிரை நல்ல நடனமிடும்படி செலுத்திக்கொண்டு அரசனுக்கெதிரே வந்தருளினார். எ-று. ()

வெம்பரியி னண்ணலை வியந்துதமிழ் மாறன்
கம்பமுடி யெய்தவொரு கைவிரல் சுழற்று
அம்பொன்விலை யில்லதொ ரருங்கலை யளித்தான்
எம்பரமர் சென்டின்மிசை யேற்றுநகை செய்தார்.

இ-ள். தமிழ் மாறன் வெம் பரியின் அண்ணலை வியந்து - தமிழையுடைய பாண்டியராசன் குதிரைத்தலைவனைப் புகழ்ந்து,—முடி கம்பம் எய்த ஒரு கை விரல் சுழற்று - தலையுமசையுமாறு ஒரு கைவிரலைச் சுழற்றி,—விலை இல்லது ஓர் அரும் அம் பொன் கலை அளித்தான் - விலைமதித்தற்கரிய அருமையாகிய அழகையுடைய பீதாம்பரம் ஒன்றைப் பரிசாகக் கொடுத்தான்,—எம் பரமர் சென்டின் மிசை ஏற்று நகை செய்தார் - எம்முடைய சிவபெருமான் அதனைத் தமது சென்டின்மீதேற்றுப் புன்னகை செய்தருளினார். எ-று. (உ௮)

வேறு.

ஏற்றவொண் கலையை நேச மெய்தினு ளொருவன் சென்று
காற்றெனு விரைவி னெய்திக் கடிதுதன் கரத்தில் வாங்கப்
போற்றிலன் முடியின் மீது புனைந்தில னென்று மாறன்
நீற்றினன் மறைப்பினாலே நெஞ்சிடை வெகுட்சிகொண்டான்.

இ-ள். ஏற்ற ஒண் கலையை - சென்னியின்மேலே ஏற்ற சிறந்த வஸ்திரத்தினை,—நேசம் எய்தினன் ஒருவன் - விரும்பினவனொருவன்,—காற்று என சென்று விரைவின் எய்தி - காற்றுப்போலச் சென்று விரைவிலடைந்து,—கடிது தன் கரத்தில் வாங்க - விரைந்துதன் கையில் வாங்க,—போற்றிலன் முடியின் மீது புனைந்திலன் என்று மாறன் - யான் கொடுத்த பீதாம்பரத்தினைப் பேணிவைத்தானுமல்லன்; முடியின்மேலே தரித்தானுமல்லன் என்று பாண்டியராசன்,—நீற்றினன் மறைப்பினாலே நெஞ்சிடை வெகுட்சி கொண்டான் - சிவபிரானுடைய மறைப்பினாலே உண்மையுணராது மனத்தில் வெகுட்சிகொண்டான். எ-று.

வாங்கி என்று பாடமோதுவாருமுளர். அது பொருந்தாமையை "நேசமெய்தினனொருவன்" என்பது இனிது விளக்கும். (உகூ)

வெளிப்பட வரிய மேனி விண்ணவன் கண்ணு நெஞ்சுங்
களிப்புற வருதல் கண்டுங் கண்டிலன் கன்னி நாடன்
ஒளித்துல கெங்கு நிற்போ னுறுபவ மொழித்து ஞானம்
அளித்திடி னன்றி யாவ ரவன்றிற மறிய வல்லார்.

இ-ள். வெளிப்பட அரிய மேனி விண்ணவன் - காணுதற்கரிய வடிவையுடைய சிவபிரானனவர்,—கணணும் நெஞ்சும் களிப்புற வருதல் கண்டும் - கண்ணும் மனமுமாக களிகூர ஈண்டு வருதலை நேரே கண்டும்,—கன்னி நாடன் கண்டிலன் - கன்னிநாட்டையுடைய பாண்டியராசன் காணப்பெற்றிலன்,—உலகு எங்கும் ஒளிந்து நிற்போன் உறு பவம் ஒழித்து ஞானம் அளித்திடின் அன்றி - உலகெஙகும் மறைந்துநின்றருளும் அம்முதல்வன் மிக்க பாவத்தைப் பற்றறக் கழித்துத் தமது ஞானத்தைக் கொடுத்தாலன்றி,—அவன் திறம் அறிய வல்லார் யாவர் - அக்கடவுளது உண்மைத் தன்மையைக் கண்டுணரவல்லவர் யாவர்? எ-று. (௩௦)

எண்டிசை மன்ன ரன்பா லீந்தமென் கலைகள் யாவுஞ்
செண்டிடைக் கோட லன்னோர் தேயநல் லியற்கை யென்றே
வண்டமிழ் வாத வூரர் மாமது ரேச னெஞ்சிற்
கொண்டுள முனிவு தீரக் குறைந்துமுன் னின்று சொன்னார்.

இ-ள். வண் தமிழ் வாதவூரர் முன் நின்று - செந்தமிழில்வல்ல திருவாதவூரர் அவ்வரசனுக்கெதிர்சென்று நின்று,—எண் திசை மன்னர் அன்பால் ஈந்த மென் கலைகள் யாவும் செண்டு இடைக் கோடல் அன்னோர் தேய நல் இயற்கை என்று - அட்டதிக்குகளையும் புரக்கும் அரசர்களெல்லாந் தம்மிட்டம்பற்றிக் கொடுக்கும் மென்மையாகிய வஸ்திரங்களையெல்லாஞ் சவுக்கின்மீது ஏற்றுக்கோடல் அவரது தேசத்துள்ள இயற்கை என்று,—மா மதுரேசன் நெஞ்சில் கொண்டுள முனிவு தீர குறைந்து சொன்னார் - பெருமைபொருந்திய மதுராபுரிக்கரசனாகிய பாண்டியன் மனத்தின்கட்கொண்ட கோபந் தணியுமாறு தாழ்ந்து சொன்னார். எ-று. (௩௧)

நலத்தரு மிந்த நீர்மை கேட்டபி னயந்து மன்னன்
கலக்கமி லிவுளி நன்னூல் கற்றவர் தம்மை நோக்கி
இலக்கண விதியா லுள்ள விரும்பரி யிழிவு மேன்மை
துலக்குற நும்மி னாடி யெம்முடன் சொல்லு மென்றான்.

இ-ள். நலத்தரும் இந்த நீர்மை கேட்டபின் மன்னன் நயந்து - விரும்பத்தகும் இந்தத தன்மையைக் கேட்டபின்பு பாணடியராசன் கோபந் தணிந்து,—கலக்கம் இல் இவுளி நல் நூல் கற்றவர் தம்மை நோக்கி - மயக்கமில்லாத அசுவசாததிரங கற்றவர்களை நோக்கி,—உள்ள இரும் பரி மேன்மை இழிவு இலக்கண விதியால் துலக்குற நும்மில் நாடி - இங்குள்ள பெரிய குதிரைகளின் உயர்விழிவுகளை அசுவலக்கணநூல்விதிப்படி விளங்க உஙகளுள் ஆராய்ந்து,—எம்முடன் சொல்லும் என்றான் - எமக்குக் கூறுமினென்று பணிததான. எ-று. (௩௨)

சொற்றிகழ் துரக நூலின் றுணிபொரு ளுணர்ந்து ளோருங்
கொற்றவெம பரிகட் குள்ள குற்றமுங் குணமு நாடிப்
பொற்றடங் கிரியின் மீது பொருகயல் பொறித்து மீண்ட
வெற்றிகொண் மன்னர் கோன்மு னிவ்வகை விளமப லுற்றார்.

இ-ள். சொல்திகழ் துரக நூலின் துணி பொருள் உணர்ந்துளோரும் - கீர்த்திவிளஙகுகின்ற அசுவலககணநூல்களின் துணிபொருளை அறிந்தவர்களும்,—கொற்ற வெம் பரிகட்கு உள்ள குணமும் குற்றமும் நாடி - வெற்றியையுடைய வேகமபொருந்திய குதிரைகளிடததுள்ள குணஙகளையும் குற்றஙகளையும் ஆராய்ந்து,—பொன் தடம் கிரியின் மீது பொரு கயல் பொறித்து மீண்ட வெற்றி கொள் மன்னர் கோன் முன் இவ்வகை விளம்பல் உற்றார் - பொன்மயமாகிய பெரிய மேருகிரியின்மீது சென்று பொருகின்ற கயலை எழுதித் திரும்பிய வெறறியையுடைய அரசர்க்கரசனாகிய பாண்டியன்முன்னின்று இவ்வாறு கூறுவாராயினர். எ-று. (௩௩)

வேறு.

தாவிடுசந் திரசுழியா மண்டா வர்த்தந்
தண்டையடி யிற்சுழியா முடலின் பக்க
மேவுசுழி கௌவகமாங் காகா வர்த்த
மேன்மைதிகழ் முன்வலையச் சுழிதா னாகும்
பாவுசெழுங் கேதாரி யடியிற் சேர்ந்த
பயனில்கொடுஞ் சுழிகேசா வர்த்த மாகும்
பூவமருங் கச்சையிற்பட் டடையே யாகப்
புகன்றசுழி யிச்சுழிகள் புணரா வாகி.

இ-ள். தா இடு சந்திர சுழி ஆம் அண்டாவர்த்தம் தண்டையடியில் சுழி ஆம் - கேட்டினைக்கொடுக்கின்ற சந்திரசுழியாகிய அண்டாவர்த்தம் என்பது வாலடியிலுள்ள சுழியாகும்,—கௌவகம் உடலின் பக்கம் மேவு சுழி ஆம் - கௌவகம் என்பது உடலினபக்கத்துப்பொருந்திய சுழியாகும்,—காகாவர்த்தம் மேன்மை திகழ் முன்வளையசசுழி தான் ஆகும் - காகாவர்த்தம் என்பது மேன்மை விளஙகுகின்ற முன்வளையசசுழியாகும்,—பாவு செழும் கேதாரி அடியில் சேர்ந்த பயனில் கொடுஞ்சுழி (ஆகும்) - பரந்த செழுமையான கேதாரி என்பது அடியிற பொருநதிய பயனில்லாத கொடுஞ்சுழியாகும்,—கேசாவாததம பூ அமரும கசசையில பட்டடையே ஆக புகன்ற சுழி (ஆகும்) - கேசாவாததம என்பது அழகுபொருந்திய கசசையிலே பட்டடையாகச சொலலப்பட்ட சுழியாகும,—இசசுழிகள் புணரா ஆகி - இந்தசசுழிகளைப் பொருந்ாதனவாகி. எ-று. (நுச)

கொம்புகன்னந் திரிகன்ன நஞ்ச பாதங்
கொள்ளிககால வெள்ளிககண் கனற்கண் குன்ரு
வெம்புதழற் சுடலைமுகம பானேர் கண்ட
மண்டபபாழ் விலங்குபல வண்ட மாதல்
செமபொறியா மககினிசித திரங்கண் மூன்று
சிறநதினிய மடடிறபாழ் பொலலா தென்றே
அம்புவியோர் மொழிநதபழு திவையு மின்றி
யடிநாவிற் குரமிரட்டை யாகா வாகி.

இ-ள். கொம்பு கன்னம் - கொமபுபோன்று உயர்ந்த காதும்,—திரி கன்னம் - வேறுபட்ட காதும்,—நஞ்சபாதம் கொள்ளிக்கால் வெள்ளிக்கண் கனற்கண் - நஞ்சபாதமும கொளளிககாலும் வெள்ளிபோன்ற கணணும் அக்கினிமயமான கணணும்.—குன்ரு வெம்பு தழல் சுடலை முகம் - குறையாதனவாய்ச சுவாலிக்கின்ற சுடலைபோன்ற முகமும,—பரன் நேர் கண்டம் - சிவபிரானுடைய கணடமபோனற கணடமும,—அணடப்பாழ் விலங்கு பல அணடமாதல் - அணடம பாழாதலும விலஙகிய பல அணடமாதலும்,—செம் பொறியாம் அககினி சிததிரஙகள மூன்று சிறந்து இனிய மட்டிற்பாழ் பொலலாது என்றே - * * * * ,—அம்புவியோர் மொழிந்த பழுது இவையும் இன்றி - பூமியிலுள்ளவர்கள் சொல்லிய பழுதுகளாகிய இவையுமில்லாமல்,—அடிநா வில் குரம் இரட்டை ஆகா ஆகி - அடிநாவும் ஒளிபாாநத குழமபும் இரட்டையாகாது. எ-று.

நஞ்சபாதம் - மூன்றுகால் விளாதது ஒருகால் கறுததிருப்பது என்றும், கொள்ளிக்கால் - மூன்றுகாலுங கறுதது ஒருகால் விளாததிருப்பது என்றும் கூறுவர். (நரு)

சிரமதனி லிரண்டுசெழுந் துளைப்பி னன்கு
சிறநதவுரந் தனிலிரண்டு நுதன்மே லொன்று

குரவமிசை நின்றசுழி யொன்றி ளுேடு
குலவியவீ ரைந்துசுழி குறையா வாகி
நரிவெருகு கருங்காக மலகை கோழி
ஞாளிசெழுங் கேழலெனுங் குரலின் றாகி
விரவுபெருந் திரைவேலை மங்குல் சங்கம்
விடைமுழவம் போன்முழக்க மிகவுண் டாகி.

இ-ள். சிரமதனில் இரண்டு - தலையில் இரண்டுசுழிகளும்,—செழுந் துளைப்பின் நான்கு - செழுமையாகிய குளம்பில் நான்குசுழிகளும்,—சிறந்த உரந்தனில் இரண்டு - அழகிய மார்பில் இரண்டுசுழிகளும்,—நுதல் மேல் ஒன்று - நெற்றியில் ஒருசுழியும்,—குரவமிசை நின்றசுழி ஒன்றிளுேடு - சகனத்தின்கணுள்ள சுழியொன்றுடனே,—குலவிய ஈர் ஐந்து சுழி குறையா ஆகி - விளங்காநின்ற இப்பத்துசு சுழிகளும் குறையப்பெறுதனவாகி,— நரி வெருகு கரும் காகம் அலகை கோழி ஞாளி செழும் கேழல் எனும் குரல் இன்று ஆகி - நரியும் பூனையும் கரியகாகமும் பேயுங் கோழியும் நாயும் கொழுத்தபன்றியும் என்னுமிவற்றின் குரல்போன்ற குரலில்லாதனவாகி,— விரவு பெரும் திரை வேலை மங்குல் சங்கம் விடை முழவம் போல் முழக்கம் மிக உண்டு ஆகி - ஒன்றன்பின்னென்றாக வரும் பெரிய திரைகளையுடைய சமுத்திரமும் முகிலும் சங்கும் இடபமும் மிருதங்கமும்போல மிகவுஞ் சத்தமுடையனவாகி. எ-று. (௩௬)

உருத்திகல்செய் புலியுளியங் கழுதை செந்நா
யொண்பூஞை நரியினுடன் கரிய காகந்
தரித்தவழற் புகைநிறமும் புனையா வாகித்
தருக்கிமருத் தெனுங்கவனத் தன்மை யெய்தி
விரித்தகதிர் வெண்டரளந் திங்க ணீல
மென்கமலத் தாதுசெழுங் கனகங் காயா
அரத்தமலர் நல்லபசுங் கிளிஞ போல
வமைந்தவொளி தயங்கியவங் கத்த வாகி.

இ-ள். உருத்து இகல் செய் புலி உளியம் கழுதை செந்நாய் ஒண் பூஞை நரியினுடன் கரிய காகம் அழல் தரித்த புகை நிறமும் புனையா ஆகி - வெகுண்டு யுத்தஞ்செய்யும் புலி கரடி கழுதை செந்நாய் அழகிய பூனை நரி கரியகாகம் அக்கினியின்கணுள்ள புகை என்னும் இவற்றினிறம் பொருந்தாதனவாகி,—தருக்கி - களிப்புக்கொண்டு,—மருத்து எனும் கவனத் தன்மை எய்தி - வாயு எனத்தகும் வேகம்பொருந்தி,—விரித்த வெண் கதிர் தரளம் திங்கள் நீலம் மென் கமலத் தாது செழும் கனகம் காயா அரத்த மலர் நல்ல பசும் கிள்ளை போல - பரப்பிய வெள்ளொளியையுடைய முத்து சந்திரன் நீலரத்தினம் மெல்லிய தாமரைப்பூவின் மகரந்தம் செழுமையாகிய

பொன் காயாம்பூ செவ்வரத்தமலர் நல்ல பசிய கிளி என்னும் இவற்றைப் போல,—அமைந்த ஒளி தயங்கிய அங்கத்த ஆகி - பொருந்திய ஒளிவிளங் காநின்ற உடம்பையுடையனவாகி. எ-று. (ரு௭)

நெற்றியகன் றுயர்குரவம் படைத்து வெண்மை
நிறைந்துதமி லொத்திலகு மெயிற்ற வாகித்
துற்றநறுங் கந்தமிகச் சிறந்து நாவுஞ்
சூதவிளந் தளிர்போலு மருணந் தோய்ந்தே
உற்றவிரண் டிமைமயிருந் தொகையுண் டாகி
யுக்கிரமாம் விழிப்பார்வை யுடைய வாகி
முற்றுமெயிற் றசையின்றி யுள்வ ளைந்து
முக்கோண மெனத்திகழு முகத்த வாகி.

இ-ள். நெற்றி அகன்று - நெற்றி விசாலித்து,—உயர் குரவம் படைத்து - உயர்ந்த சகனத்தைப்பொருந்தி,—வெண்மை நிறைந்து தமில் ஒத்து இலகும் எயிற்ற ஆகி - வெண்ணிறமிகுந்து தம்முள் ஒத்து விளங்கும் பற்களையுடையனவாகி,—துற்ற நறும் கந்தம் மிக சிறந்து - நெருங்கிய நறுமணத்தான் மிகவும் மேம்பட்டு.—நாவும் சூத இளம் தளிர் போலும் அருணம் தோய்ந்து - நாக்கும் மாவின் இளந்தளிர்போன்ற செந்நிறம்வாய்ந்து,—உற்ற இரண்டு இமை மயிரும் தொகை உண்டாகி - பொருந்திய இரண்டிமைமயிரும் தம்முளடரப்பெற்று,—உக்கிரம் ஆம் விழிப் பார்வை உடைய ஆகி - கொடிய கட்பார்வையை யுடையனவாகி,—மெயில் முற்றும் தசை இன்றி - உடம்பின்கண் முழுதுந் தசைப்பற்றின்றி,—உள் வளைந்து முக்கோணம் எனத் திகழும் முகத்த ஆகி - உள்வளையப்பெற்று முக்கோணமாகி விளங்கும் முகத்தையுடையனவாகி. எ-று. (ரு௮)

உளையினுடன் றலைமயிரு நிறமொன் றாகி
யுரத்தினுடன் கழுத்துரக படமே போன்று
வளைசிறந்த தொனிபரந்து குவிந்துள் வாங்கி
மண்டலமுண் டாயுரங்கொள் குரங்கள் சேர்ந்து
கிளைகொணரம் புகள்கரந்து தசைதா னொன்றிக்
கிளர்முழந்தா ணெளித்தபதங் கெழும லின்றி
நெளிமுதுகு புனைந்துதொடை திரண்டு தண்டை
நீண்டுடல நெய்த்தநிற நீர்மை யாகி.

இ-ள். உளையினுடன் தலைமயிரும் நிறம் ஒன்று ஆகி - பிடர்மயிருந் தலைமயிரும் ஒரே நிறமாகி,—உரத்தினுடன் கழுத்து உரக படம் போன்று - மார்புங் கழுத்தும் சர்ப்பபடம்போன்று,—வளை சிறந்த தொனி பரந்து - சங்குபோலச் சிறந்த தொனி விரவப்பெற்று,—குவிந்து உள்வாங்கி மண்

டலம் உண்டாய் உரங்கொள் குரங்கள் சேர்ந்து - குவிந்து உட்குளித்து வட்டவடிவமாய் வலிமைபொருந்திய குளம்புகளையுடையனவாகி,—இளை கொள் நரம்புகள் கரந்து - இளைத்த நரம்புகளெங்கும் மறையப்பெற்று,—தசைதான் ஒன்றிக் கிளர் முழந்தாள் நெளித்த பதம் நெழுமல் இன்றி - தசைப்பற்றுத்தான் செறிந் தொன்றிப் பருத்துக் கிளராநின்ற முழந்தாள்கள் உள்வளையப்பெற்ற கால்கள் பொருந்துதலின்றி,—நெளி முதுகு புனைந்து - நெளித்த முதுகுபொருந்தி,—தொடை திரண்டு - தொடைகள் திரண்டு,—தண்டை நீண்டு - வால் நீண்டு,—உடலம் நெய்த்த நிற நீர்மை ஆகி - உடம்பு நெய்ப்புப்பொருந்திய நிறம்வாய்ந்த நீர்மையுடையனவாகி. எ-று. ()

மிக்கசெழு மறைநாவிற் கமல நாதன்
விழிப்புனலில் விண்ணோர்க ளெண்மர் தம்பால்
மைக்கடன்மே லமிர்தத்தி லங்கி மீதின்
மல்குகருப் பையிலுலூக வண்டந் தன்னிற்
றொக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந்
தொன்மையவா யீரிரண்டு துணைத்தா ணெற்றி
ஒக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி
லொண்புனலிற் செல்லுநெறி யுளவு மாகி.

இ-ள். மிக்க செழு மறை நாவில் - சிறந்த செழுமையாகிய வேதத்தின் நாவிலும்,—கமலநாதன் விழிப் புனலில் - பிரமதேவருடைய கண்ணீரிலும்,—அங்கி மீதில் - அக்கினியிலும,—விண்ணோர்கள் எண்மர் தம்பால் - இந்திரன் முதலிய திக்குப்பாலகரெண்மரிடத்திலும்,—மைக் கடல் மேல் அமிர்தத்தில் - கரிய சமுத்திரத்திற்றோன்றிய அமிர்தத்திலும்,—மல்கு கருப்பையில் - நிரம்பிய கருப்பையிலும்,—உலூக அண்டம் தன்னில் தொக்க எழு பேதமெனும் இவற்றில் தோன்றும் தொன்மைய ஆய் - கோட்டான் முட்டையிலுந்தோன்றிய எழுவகையாகிய இக்குதிரைகளின் மரபிற்பிறந்த பழைய உற்பத்திக்கிரமத்தை யுடையனவாய்,—ஈர் இரண்டு துணைத் தாள் நெற்றி ஒக்க வெளுக்கும் பரிகள் உள ஆய் - நான்குகால்களும் முகமும் ஒருங்கு வெண்ணிறம வாய்ந்திருக்கும் பஞ்சகல்யாணி என்னுங் குதிரைகளுடையனவாய்,—வானில் ஒண் புனலில் செல்லும் நெறி உளவும் ஆகி - ஆகாயத்திலும் அழகிய நீரிலுஞ் செல்லும் கதிகளை உடையனவுமாகி. எ-று.

மங்காளன் சாரங்கன் கங்கா நீலன்
மௌவழகன் கொங்காளன் சன்ன சம்பான்
குங்குமச்சோ ரான்கரியா னீலன் சாரன்
குலவுமள்ளா னுரஞ்சிவந்தா னல்லான் பொல்லான்
தங்குகருங் காற்சம்பா னென்று கூறுந்
தன்மையுள பன்னிறமும் புனைந்த சாதித்

துங்கமிகும் பரியிவையென் றவற்றின் றன்மைத்
  தொன்மையுரைத் தரசனைமுன் றொழுது நின்றார்

இ-ள். மங்காளன் * * * உள - மங்காளனும் சாரங்கனும் கங்காநீல னும் மௌவழகனும் கொங்காளனும் சன்னசம்பானும் குங்குமச்சோரனும் கரியானும் நீலனும் சாரனும் விளங்குகின்ற மள்ளானும் உரஞ்சிவந்தானும் கல்லானும் பொல்லானும் பொருந்திய கருங்காற்சம்பானும் என்று கூறப் படும் தன்மையுள்ள,—பல் நிறமும் புனைந்த சாதித் துங்க மிகும் பரி இவை என்று - பலநிறமும்பொருந்திய சாதிகளையுடைய உயர்ச்சிமிக்க குதிரைகள் இவை என்று,—அவற்றின் தொன்மைத் தன்மை உரைத்து அரசனை முன் தொழுது நின்றார் - அவைகளின் பழைய முறைமைகளைச் சொல்லிப் பாண் டியராசனை எதிரே வணங்கிநின்றனர். எ-று. (சக)

நற்பரியி னியல்புணர்ந்தோ ரின்ன வாறு
  நவின்றமொழி கேட்டுமிக நயந்து வெள்ளி
வெற்பனைய விடையேறி யளிக்குந் தெய்வ
  வெம்பரிகள் யாவும்விலை மதித்த பின்னர்ப்
பொற்புடைய தன்பொருண்மே லெண்மடங்கு
  பொலிதலாற் பொங்குமகிழ் வெய்தி மாறன்
தற்பரனை முகநாடிக் கயிறு மாறித்
  தருகதுர கத்தொகுதி தன்னை யென்றான்.

இ-ள். நல் பரியின் இயல்பு உணர்ந்தோர் இன்ன ஆறு நவின்ற மொழி மாறன் கேட்டு - நல்ல குதிரையினிலக்கணங்களை அறிந்தவர்கள் இந்தப்பிரகாரங் கூறிய வார்த்தைகளைப் பாண்டியன் கேட்டு,—மிக நயந்து - முன்னையினும் மிக விரும்பி,—வெள்ளி வெற்பு அனைய விடையேறி அளி க்கும் தெய்வ வெம் பரிகள் யாவும் விலை மதித்த பின்னர் - கைலாசமலையை ஒத்த இடபவாகனராகிய சோமசுந்தரக்கடவுள் கொடுத்த தெய்வத்தன்மை பொருந்திய வெவ்விய குதிரைகளையெல்லாம் விலைமதித்த பின்னர்,— பொற்பு உடைய தன் பொருள் மேல் எண்மடங்கு பொலிதலால் - அழகிய தன் திரவியத்தின்மேல் எண்மடங்கு பெறுமாறு பொலிந்திருத்தலால்,— பொங்கு மகிழ்வு எய்தி - மிக்க மகிழ்ச்சியடைந்து,—தற்பரனை முக நாடி - சோமசுந்தரக்கடவுளைப் பார்த்து,—துரகத் தொகுதிதன்னைக் கயிறுமாறித் தருக என்றான் - குதிரைக்கூட்டங்களைக் கயிறுமாறித்தருக என்று கூறி னான். எ-று. (சஉ)

வேறு

காத்தில கனைத்து முப்பக் கண்ணருள் செய்யு நீதிப்
பார்த்திவன் கருமஞ் செய்வார் பற்றியங் கரத்தில் வாங்கச்

சாத்தவர் தம்மி லாங்கோர் சார்பினர் கயிறு மாறி
ஈர்த்தனர் பந்தி யூடு சேர்த்தன ரிவுளி யெல்லாம்.

இ-ள். உலகு அனைத்தும் காத்து உய்ய கண் அருள் செய்யும் நீதிப் பார்த்திவன் கருமம் செய்வார அம் கரததில் பற்றி வாஙக - உலகங்களெல்லாம் பாதுகாத்து உய்யும்வண்ணம் அருள்செய்யும் நீதியையுடைய பாண்டியராசனது காரியஙகளைசசெய்பவர் அழகிய கையிற்பறறி வாஙக,—சாத்தவர் தம்மில் ஆஙகோர் சார்பினர் கயிறு மாறி ஈர்த்தனர் - குதிரைவீரர்களுக்குள்ளே சிலர் கயிறுமாறி இழுத்து —இவுளி எல்லாம் பந்தி ஊடு சேர்த்தனர் - குதிரைகளையெல்லாம் பந்தியின்கட் சேர்த்தனர். எ-று. (சங)

திண்டிறல் கெழுவு நேமித் தென்றிசைக் கிறையுஞ் செய்ய
வண்டமிழ்க் கிறையுங் காணா வந்திடு திசையி லேகிப்
பண்டைநற் படிவ மாகிப பணிந்துவிண் ணவர்கள் சூழக்
கொண்டலைப பொருவு கண்டர் குலவுதங் கோயில் புக்கார்.

இ-ள். கொணடலைப் பொருவு கணடர் - முகிலைநிகர்க்குங் கரிய கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளானவர்,—திண திறல் கெழுவும் நேமி தென் திசைக்கு இறைபும வண செயய தமிழ்ககு இறையும் காணா வந்திடு திசையில் ஏகி - மிக்க வலிமைபொருநதிய ஆஞ்ஞாசக்கரததையுடைய தென்னாட்டுக்கதிபனாகிய பாணடியராசனும் வளவிய செந்தமிழ்க்கதிபராகிய திருவாதவூரருஙம காணாத தாம் முன்னெழுந்தருளிவந்த திக்கைநோக்கிப் போய்,—பணடை நல் படிவம் ஆகி விணணவாகள் பணிந்து சூழ குலவு தம் கோயில் புக்கார் - பழைய திருமேனிகொணடு தேவர்கள் வணஙகிச சூழ விளங்குகின்ற தமது கோயிலின்கட் சென்றருளினார். எ-று. (சச)

வாய்ந்தன பரிக ணும்மா லென்றெழில் வாத வூரின்
வேந்தனார் மனையி லேக விடுத்துள மகிழ்ச்சி கூர்ந்து
சார்ந்தமெய்த் தகைமை யோருந் தானையுஞ் சூழ வேகி
ஆய்ந்தநற் றமிழ்நூல் வல்ல வரசனுங் கோயில் புக்கான்.

இ-ள். ஆய்ந்த நல் தமிழ் நூல் வல்ல அரசனும் - முச்சஙகஙகளாலும் ஆராயப்பட்ட தமிழ்நூலில் வல்ல பாணடியராசனும்,—உளம் மகிழ்ச்சி கூர்ந்து - மனம் மிகமகிழ்ந்து அதன்பின்பு,—நும்மால் பரிகள் வாய்ந்தன என்று எழில் வாதவூரின் வேந்தனார் மனையில் ஏக விடுத்து - நும்மால் எமக்குக் குதிரைகள் வாய்த்தன என்று பிரியவசனஙகளைக் கூறி அழகிய வாதவூரர் தந்திருமாளிகையிற் செல்லும்படி அனுப்பி,—சார்ந்த மெய் தகைமையோரும் தானையும் சூழ ஏகி கோயில் புககான் - தன்னைச்சார்ந்த பெரியோர்களுஞ் சேனையுஞ்சூழச சென்று தன்மாளிகையிற் பிரவேசித்தான். எ-று. (சரு)

அத்தின மகல மாலை யணைதலும் பரிக ளெல்லாம்
நித்தன தருளி னாலே நெடுங்குர னரிக ளாகி
மெய்த்தமிழ் மதுரை மூதூர் விழித்துயி லொழிந் திரங்கத்
தத்தமி லுடன்று கூடித் தனித்தனி களித்து நின்று.

இ-ள். அத்தினம் அகல மாலை அணைதலும் - அப்பகற்காலம் நீங்க இராக்காலம் வருதலும்,—பரிகள் எல்லாம் நித்தனது அருளினாலே நெடும் குரல் நரிகள் ஆகி - குதிரைகளெல்லாம் நித்தியராகிய சிவபெருமானுடைய ஆணையாற் பெருங்குரலையுடைய நரிகளாகி,—மெய் தமிழ் மதுரை மூதூர் விழித் துயில் ஒழிந்து இரங்க - மெய்ம்மையாகிய தமிழையுடைய பழைய மதுரைமாநகரவாசிகளெல்லாம் நித்திரையொழிந்திரங்காநிற்க,—தத்தமில் உடன்று கூடித் தனித்தனி களித்து நின்று - தம்மிற்றாமே பகைகொண்டு கூடியும் தனித்தனியும் செருக்குற்றுநின்று. எ-று. (௪௬)

வேறு.

நின்ற நின்ற நெடும்பரி யாளர்மேற்
சென்று வெம்பகை செய்து வெருட்டியே
துன்று கின்ற துரங்க மொருங்கொடு
கொன்று நின்றுயர் கூவிளிக் கொண்டவால்.

இ-ள். நின்ற நின்ற நெடும் பரியாளர் மேல் சென்று வெம் பகை செய்து வெருட்டி - ஆங்காங்குநின்ற நெடிய குதிரைக் காவலாளர்மீது எதிர்த்துச்சென்று வெவ்விய பகைவிளைத்து அவரை வெருட்டி,—துன்று கின்ற துரங்கம் ஒருங்கு கொன்று நின்று உயர் கூவிளிக்கொண்ட - நெருங்கிய குதிரைகளையெல்லாம் ஒருசேரக் கொன்று நின்று பெருங்குர லிட்டன. எ-று. (௪௭)

வரைசெய் கோபுர மாட நெருங்கிய
அரச வீதியு மாவண வீதியும்
முரச வோசை முழக்கொழிந் தேமிகக்
குரைகொள் வாய்நரிக் கூக்குர லானதால்.

இ-ள். வரைசெய் கோபுரம் மாடம் நெருங்கிய அரச வீதியும் ஆவண வீதியும் - மலைபோன்ற கோபுரங்களும் மண்டபங்களும் நெருங்கிய அரச வீதிகளிலும் கடைவீதிகளிலும்,—முரச ஓசை முழக்கு ஒழிந்து மிக குரை கொள் வாய் நரிக் கூக்குரல் ஆனது - முரசுகளின் பேரொலி நீங்கி மிகக் குரைக்கின்ற வாயையுடைய நரிகளின் கூக்குரலாயிற்று. எ-று. (௪௮)

பாடி யாரணம் போற்றமன் றிற்பயின்
றாடி யார்விளை யாட்டின் புதுமையால்

ஓடி யாரு மொளித்திட வொன்றொரு
கோடி யானது கூடு நரிக்குழாம்.

இ-ள். ஆரணம் பாடிப் போற்ற - வேதங்கள் பாடி நின்று துதிக்க,—மன்றில் பயின்று ஆடியார் விளையாட்டின் புதுமையால் - வெள்ளியம்பலத்தின்கணின்று ஆடியருளிய சோமசுந்தரக்கடவுளது திருவிளையாட்டின் புதுமையினால்,—கூடும நரிக் குழாம் - கூடுகின்ற நரிக்கூட்டம்,—ஓடி யாரும் ஒளித்திட ஒன்று ஒரு கோடி ஆனது - ஓடி எவரும் ஒளிக்கும்படி ஒன்றொருகோடியாகிப் பெருகிற்று. எ-று. (௯௧)

துங்க மாறன் றொகுபடை வெங்கொலை
தங்கு மாயுதந் தாங்கி யெதிர்க்கவே
யெங்கு மான நரிகளெல் லாங்கொடுஞ்
சிங்க மாயமர் செய்யத் தொடங்குமால்.

இ-ள். துங்க மாறன் தொகு படை வெம் கொலை தங்கும் ஆயுதம் தாங்கி எதிர்க்க - உயர்ச்சிபொருந்திய பாண்டியனது தொகுதியாகிய சேனைகள் வெவ்விய கொலைத்தொழில்தங்கிய படைக்கலங்களைத்தாங்கி எதிர்க்க,—எங்கும் ஆன நரிகள் எல்லாம் கொடும் சிங்கம் ஆய அமர் செய்யத் தொடங்கும் - அங்கங்கெங்கும் பரந்த நரிகளெல்லாம் கொடிய சிங்கம் போன்று அச்சேனைகளோடு யுத்தஞ்செய்யத் தலைப்படும். எ-று. (௯௨)

நீடு வாயி லிடந்தொறு நின்றணி
கூடு வார்மிகக் கூவி வெருட்டுவார்
ஓடு வாரொளித் தோடிப் புகுமிடந்
தேடு வாரெதிர் சென்றமர் செய்குவார்.

இ-ள். நீடு வாயில் இடம தொறும நின்று அணி கூடுவார் - நெடிய வாயில்கடோறும் நின்று அணியணியாகக் கூடுவார்கள்,—மிகக் கூவி வெருட்டுவார் - மிகக் கூக்குரலிட்டு அச்சுறுத்துவார்கள்.—ஒளித்து ஓடுவார் - ஒளித்தோடுவார்கள்,—ஓடிப் புகும் இடம் தேடுவார் - ஒளித்தோடிப் புகுமிடந்தேடுவார்கள்,—எதிர் சென்று அமர் செய்குவார் - எதிர்சென்று யுத்தமுஞ்செய்வார்கள். எ-று (௯௩)

எங்க ளாருயிர் காத்தரு ளின்றணி
திங்க ளாயெனத் தெய்வம் பராவுவார்
அங்க பாட படைத்தரண் செய்குவார்
மங்கு லாடு மதிற்றலை யேறுவார்.

இ-ள். அணி திங்களாய - முடியின்கண் அணிந்த பிறையையுடையவரே,—இன்று எங்கள் ஆருயிர் காத்தருள் எனத் தெய்வம் பராவுவார் -

இத்தினம் எங்களது அரிய உயிரைப் பாதுகாத்தருளும் என்று குலதெய்வ மாகிய சோமசுந்தரக்கடவுளைத் துதிப்பார்கள்,—அம் கபாடம் அடைத்து அரண் செய்குவார் - அழகிய கதவினையடைத்துக் காவல்செய்வார்கள்,— மங்குல் ஆடும் மதில் தலை ஏறுவார் - மேகந்தங்கியசைகின்ற மதிலுச்சியி லும் ஏறுவார்கள். எ-று. (௫௨)

நற்ற வச்செய னன்கில தானதோ
கொற்ற வன்செய்ய கோல்கொடி தானதோ
இற்றி தன்பய னென்னென வின்னணம்
உற்றி ரங்கினர் கூட லுளோரெலாம்.

இ-ள். நல் தவச செயல் நன்கிலது ஆனதோ - நல்ல தவத்தொழி லானது தீயதாயிற்றோ,—கொற்றவன செய்ய கோல கொடிது ஆனதோ - நம்மரசனது செஙகோல் கொடுங்கோலாயிற்றோ,—இற்றிதன் பயன் என் என இன்னணம் உற்று இரங்கினர் - இதன் காரணம என்னையோ! என்று இவ்வாறு துயருற்று இரங்கினா,—கூடலுள்ளோர் எலாம் - மதுரையிலுள் ளவர் யாவரும். எ-று. (௫௩)

தூய வன்றுர கத்தொழி லாளர்கள்
கோயி லின்கடை கூக்குரல் செய்துபோய்
மாய வெம்பரி வந்தவெ லாநரி
ஆய வென்றர சற்கெதிர் கூறினா.

இ-ள். தூய வன் துரகத தொழிலாளர்கள் கோயிலின் கடை கூக் குரல் செய்துபோய் - சுத்தமாகிய வலிய குதிரைகளைக் காக்கும் காவலாளா மாளிகையின் வாயிலில் ஆரவாரஞ்செய்துகொணடு போய்,—வந்த எலாம் மாய வெம்பரி - இஙகே வந்தனவெல்லாம் மாயத்தையுடைய வெவ்விய குதி ரைகள்,—நரி ஆய என்று அரசற்கு எதிர் கூறினா் - அவை இப்பொழுது நரிகளாயின என்று அரசனுக்குமுன்னே விணணப்பஞ்செய்தார். எ-று. ()

மாக்க ளோசையும வாம்பரி யோசையும்
கூக்குரற் செய் குறுநரி யோசையும்
மீக்கொண் மாமுடி மீனவன் றன்செவித்
தீக்கொள் வேலைச் செருகின தொத்தவே.

இ-ள். மாக்கள் ஓசையும் - மனிதர்களின் ஆரவாரமும்,—வாம் பரி ஓசையும் - பாய்கின்ற குதிரைகளின் ஆரவாரமும்,—கூக்குரற்செய் குறு நரி ஓசையும் - ஊளையிடுகின்ற குறுநரிகளின் ஆரவாரமும்,—மீககொள் மா முடி மீனவன் தன் செவி தீக கொள் வேலைச செருகினது ஒதத - சிரசின்மீது கவிக்கின்ற பெரிய முடியையுடைய பாணடியனது செவித்துவாரங்களிலே அக்கினியிற் காய்ச்சிய வேலைச் செருகினதுபோல வருத்தின. எ-று. (௫௫)

இந்த வாறொலி கேட்டிரு கண்டழல்
சிந்த வாகஞ் சிறுவியர்ப் பெய்திட
அந்த மாறன் வெருட்சிகண் டண்ணலார்
வந்த மாய நரிப்படை மாற்றினார்.

இ-ள். இந்த ஆறு ஒலி கேட்டு - இந்தப்பிரகாரம் அவ்வொலிகளைக் கேட்டு,—இரு கண் தழல் சிந்த ஆகம் சிறு வியர்ப்பு எய்திட அந்த மாறன் வெருட்சி கண்டு - இருகண்களும் அக்கினிப்பொறிசிதற சரீரம் குறு வியர்வைகொள்ள அவ்வரிமர்த்தனபாண்டியன் பெருங்கோபமுறுதலைக் கண்டு,—அண்ணலார் வந்த மாயம் நரிப்படை மாற்றினார் - சோமசுந்தரக் கடவுள் அங்கே வந்த மாயத்தையுடைய நரிப்படைகளை மாற்றினார். எ-று.

பொன்கொ ணாடன் புனைந்த நலந்திகழ்
மின்கொ ளாரம் விளங்கிய மார்பினான்
தன்க ணாகி நடப்பவர் தண்டல்செய்
வன்க ணாளரை வம்மெனக் கூவினான்.

இ-ள். பொன் கொள் நாடன் புனைந்த நலம் திகழ் மின் கொள் ஆரம் விளங்கிய மார்பினான் - சுவர்க்கலோகாதிபனாகிய இந்திரன் கொடுவந்து தரித்த அழகுவிளங்கும் ஒளிசெறிந்த பதக்கம் பிரகாசியாநின்ற மார்பையுடைய பாண்டியனானவன்.—தன் கண் ஆகி நடப்பவர் தண்டல் செய் வன்கணாளரை வம்மெனக் கூவினான் - தன் கண்போன்று நடப்பவராகிய வன்கண்மையையுடைய தண்டலாளரை வம்மின்கள் என்று அழைத்தான். எ-று. (௩௭)

வேறு

நரியினிற் றொகுதி யெல்லா நற்பரித் திரள்க ளாக்குஞ்
சரிதியைக் கொணர்தி ரென்னத் தாடொழு தவர்க ளோடி
இருபிறப் புடைய ராகி யினிப்பிறப் பில்லார் தம்மை
விரைவினிற் குறுகி நம்மை யழைத்தனன் வேந்த னென்றார்.

இ-ள். நரியினின் தொகுதி எல்லாம் நல் பரித் திரள்கள் ஆக்கும் சரிதியைக் கொணர்திர் என்ன - அத்தண்டலாளரைநோக்கி நரிக்கூட்டங்களையெல்லாம் தக்க குதிரைக்கூட்டங்களாகத் திரித்துக்கொண்டு வந்த கபடசெயலுடையோனை அழைத்துக்கொண்டுவருக என்று பணிப்ப,—தாள் தொழுது அவர்கள் ஓடி இருபிறப்பு உடையர் ஆகி இனிப் பிறப்பு இல்லார் தம்மை விரைவினில் குறுகி - அவ்வரசனது பாதங்களை வணங்கி அவர்கள் விரைந்துசென்று, இருபிறப்புடையராகி இனி ஒருபிறப்புமில்லாத திருவாதவூரரை விரைவினடைந்து.—வேந்தன் நம்மை அழைத்தனன் என்றார் - அரசன் நம்மை அழைக்கின்றான் என்று விண்ணப்பஞ் செய்தனர். எ-று. (௩௮)

சித்தருக் கன்பு பூண்ட சித்தரு முறுவல் செய்து
நித்திலத் தொளிபோன் மின்னு நீறெனுஞ் சாந்து பூசிப்
பத்தருக் கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி
முத்தமிழ்ப் பொருநை நாடன் முன்புசென் றருகு நின்றார்.

இ-ள். சித்தருக்கு அன்பு பூண்ட சித்தரும் முறுவல் செய்து - எல்லாம்வல்ல சித்தராகிய சோமசுந்தரக்கடவுளிடத்தன்புபொருந்திய சித்ததையுடைய திருவாதவூரரும் புன்முறுவல்செய்து,—நித்திலத்து ஒளி போல் மின்னும் நீறு எனும் சாந்து பூசி - முத்தின் ஒளியைப்போலப் பிரகாசிக்கும் விபூதியாகிய சாந்தைப் பூசி,—பத்தருக்கு ஏவல் செய்வார் பத மலர் முடியில் சூடி - தம்மெய்யன்பருக்கெளியராகி அவர்பணிசெய்வாராகிய சோமசுந்தரக்கடவுளினுடைய பாதத்தாமரைகளை வணங்கி.—முத்தமிழ்ப் பொருநை நாடன் முன்பு சென்று அருகு நின்றார் - முத்தமிழ்வல்ல பாண்டியராசனுக்குமுன்சென்று பக்கத்துநின்றார். எ-று. (ஙிக)

மூட்டெழு மழல்போன் மன்னன் முனிவுடை முகத்த னாகி
ஈட்டுநம் பொருள்க ளெல்லா மிரப்பவர் தமக்கு நல்கி
நாட்டுள நரிக ளெல்லா நற்பரி யாக்கி நம்முன்
காட்டின ரிவர்செய் மாயங் கண்டிரோ வமைச்ச ரென்றான்.

இ-ள். மூட்ட எழும் அழல் போல் மன்னன் முனிவு உடை முகத்தன் ஆகி - மூட்ட எழுகின்ற அக்கினிபோலப் பாண்டியராசன் கோபம் பொருந்திய முகத்தையுடையவனாகி,—ஈட்டு நம் பொருள்கள் எல்லாம் இரப்பவர் தமக்கு நல்கி - சம்பாதித்த நந்திரவியங்களையெல்லாம் யாசகர்களுக்குக் கொடுத்தொழிந்து.—நாட்டு உள நரிகள் எல்லாம் நல் பரி ஆக்கி நம் முன் காட்டினர் - இந்நாட்டின்கணுள்ள நரிகளையெல்லாம் நல்ல குதிரைகளாக்கி நம்முன் கொடுவந்து விஞ்சித்துக் காட்டினர்,—அமைச்சிர் இவர் செய் மாயம் கண்டிரோ என்றான் - நம்மந்திரிகளே! இவர்செய்த மாய வித்தையை நீங்கள் கண்டீர்களோ என்று கூறினான். எ-று. (கூ0)

தன்றொழில் வழுவி னோர்க டமக்குறு துயரஞ் செய்தல்
வன்றிற லரசர் நீதி யாயினு மறைவ லாளர்
சென்றுயர் தவத்தி னிற்பார் தெரிவையர் விருத்தர் பாலர்
என்றிவர்க் குறுகண் செய்வ தெம்மனோ ரியல்பன் றென்று.

இ-ள். தன் தொழில் வழுவினோர்கள் தமக்கு - தமது தொழிலினின்றுந் தவறினவர்கட்கு,—உறு துயரம் செய்தல் வன் திறல் அரசர் நீதி ஆயினும் - தக்க தண்டஞ்செய்தல் மிக்க வலிமையையுடைய அரசருக்கு நீதி நூற்றுணிபாயினும்,—மறைவலாளர் சென்று உயர் தவத்தில் நிற்பார் தெரிவையர் விருத்தர் பாலர் என்ற இவர்க்கு - வேதத்தில்வல்ல பிராமணரும் சென்றுயர்வாகிய தவவொழுக்கத்தினிற்கும் முனிவரும் பெண்களும்

வயோதிகரும் சிறுவரும் என்று சொல்லப்படும் இவர்கட்கு,—உறுகண் செய்வது எம்மனோர் இயல்பு அன்று என்று - தண்டஞ்செய்வது நம்மனோர்க்குத் தகுதியன்றென்று கூறி. எ-று. (சுக)

தண்டல்செய் வன்க ணாளர் தங்களை நோக்கி நங்கண்
கண்டிட முன்னில் லாமற் கடிதினி லிவர்கொண் டேகி,
மண்டழல் வெயிலி னூடு வளைப்பினி னிறுத்தி நம்பாற்
கொண்டுள தனங்க ளெலல ங் குறைவற வாங்கு மென்றான்.

இ-ள். தண்டல் செய் வன்கணாளர் தஙகளை நோக்கி - வன்கண்மையையுடைய தணடத்தலைவர்களை அரசன் பார்த்து,—நம கண் கண்டிட முன் நிலலாமல் கடிதினில இவர் கொணடு ஏகி - நஙகண்காணுமாறு நம் முன்னில்லாமல் விரைவாக இவரை அப்பாற் கொணடுசென்று,—மண்டு அழல் வெயிலின் ஊடு வளைப்பினில் நிறுத்தி - சுவாலிக்கின்ற அக்கினி போலும் வெய்யிலிலே கோட்டினுள்ளே நிறுத்தி,—நம்பால் கொணடுள தனஙகள் எல்லாம் குறைவு அற வாஙகும் எனறான் - நம்மிடம்பெற்ற திரவியஙகளையெல்லாம முழுவதும வாஙகுஙகள் என்று ஆஞ்ஞாபித்தான். எ-று.

வன்றிற லேவ லாளர் மற்றவர் தமைக்கொண் டேகி
ஒன்றிய வளைப்பி னூடு நிறுத்தலு முலகோர் போற்றும்
நன்றிகொள் வாத வூரர் நரியெலாம் பரிக ளாக்கித்
தென்றிசை நிருபற் கீந்த சித்தரை நினைந்து சொல்வார்.

இ-ள். வன் திறல் ஏவலாளர் அவர்தமைக் கொண்டு ஏகி ஒன்றிய வளைப்பின் ஊடு நிறுத்தலும் - மிக்க வலியையுடைய ஏவலாளர்கள் அத் திருவாதவூரரைக் கொணடுசென்று பொருந்திய கோட்டினுள் நிற்பச்செய்தலும்,—உலகோர் போற்றும் நன்றிகொள் வாதவூரர் - இந்நிலவுலகத்தவர் துதிக்கும் நன்மையையுடைய திருவாதவூரர்,—நரி எலாம் பரிகள் ஆக்கித் தென் திசை நிருபற்கு ஈந்த சித்தரை நினைந்து சொல்வார் - நரிகளையெல்லாங் குதிரைகளாக்கித் தென்னாட்டுக்கரசனாகிய பாண்டியனுக்குக்கொடுத்த சோமசுந்தரக்கடவுளைத தியானித்து இஙஙனம் சொல்வாராயினர். எ-று.

தொல்லையோ ரிருவர் தேடுஞ் சோதியே யாது செய்வேன்
தில்லையோர் பரவ நின்ற தெய்வமே யாது செய்வேன்
இல்லையோ கருணை நின்பா லின்றெனை யடிமைக் கொண்டாய்
அல்லையோ தமியே னின்ன லறிதியோ வறிந்தி லாயோ.

இ-ள். தொல்லையோர் இருவர் தேடும் சோதியே யாது செய்வேன் - முன்னுளில் பிரம விஷ்ணுக்களாகிய இருவராலுந் தேடப்படும் சோதிவடிவரே தமியேன் யாதுசெய்வேன்,—தில்லையோர் பரவ நின்ற தெய்வமே யாது செய்வேன் - தில்லைவாழந்தணர் வழிபடுமாறு நின்ற தெய்வமே தமி

யேன் யாது செய்வேன்,—கருணை இன்று நின்பால் இல்லையோ - திருவருள் இன்று தேவரீர்மாட்டில்லாதொழிந்ததோ,—எனை அடிமைக்கொண்டாய் அல்லையோ - தமியேனை அடிமைக்கொண்டீரல்லீரோ,—தமியேன் இன்னல் அறிதியோ அறிந்திலாயோ - தமியேனது துன்பத்தை அறிந்தீரோ அறியாதொழிந்தீரோ. எ-று. (கூச)

பரித்திர ணரியே யான பான்மைகண் டடியேன் றன்னை
வருத்தின ரிதனை மாற்ற வல்லநீ மாற்று யாயிற் [ள்
றரித்தனை விடத்தை யென்னுந் தகைமையும் புரங்கண் மூன்று
எரித்ததும் இலதா மென்றென் றிரங்கின ரெவர்க்கு மிக்கார்.

இ-ள். பரித் திரள் நரியே ஆன பான்மை கண்டு அடியேன் தன்னை வருத்தினர் - குதிரைக்கூட்டங்கள் நரிகளேயாகிய தன்மை கண்டு அடியேனை வருத்தினர்,—இதனை மாற்ற வல்ல நீ மாற்றுயாயின் - இவ்வருத்தத்தை நீக்க வல்ல தேவரீர் நீக்காதொழிதிராயின்,—விடத்தை முன்னாள் தரித்தனை என்னும் தகைமையும் புரங்கள் எரித்ததும் இலதாம் என்று - விஷத்தைக் கண்டத்திலே முன் தரித்தருளினீரென்னும் பெருமையும் புரங்களைத் தகனஞ்செய்ததும் பொய்யாகும் என்று பலகால் சொல்லி,—எவர்க்கும் மிக்கார் இரங்கினர் - எவரினுமிக்க திருவாதவூரர் புலம்பினர். எ-று.

நன்றிகொள் கடவுட் கங்கை நதியினை வைகை யூடு
சென்றெழில் வாத வூரர் பேரிடர் தீரென் றேவி
அன்றொரு மடந்தைக் காளா யடியவர்க் கெளியார் கொன்றை
துன்றிய முடியின் மேன்மண் சுமந்தது முரைத்தல் செய்வாம்.

இ-ள். அடியவர்க்கு எளியார் - அடியவர்க்கெளியவராகிய சோமசுந்தரக்கடவுளானவர்,—நன்றி கொள் கடவுள் கங்கை நதியினை வைகை ஊடு சென்று எழில் வாதவூரர் பேர் இடர் தீர் என்று ஏவி - நன்மையைக்கொண்ட கடவுட்டன்மையையுடைய கங்காநதியை வைகைநதியின்கட்சென்று திருவாதவூரரது பெருந்துன்பத்தை நீக்கக்கடவை என்று முன்னர் அனுப்பிவிட்டு,—அன்று ஒரு மடந்தைக்கு ஆளாய் கொன்றை துன்றிய முடியின்மேல் மண் சுமந்ததும் உரைத்தல் செய்வாம் - அததினத்து ஒரு பெண்ணுக்குக் கூலியாளாகிக் கொன்றைமாலைபொருந்திய முடியின்மீது மண்சுமந்த சரித்திரத்தையும் கூறுவாம். எ-று. (கூகூ)

குதிரையிட்டசருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உசுகூ.

## மண்சுமந்தசருக்கம்.



தங்கிய வருளின் மிக்கார் தாம்படு மிடும்பை யுன்னி
அங்கண ரவர்பா லுற்ற வருந்துய ரகற்று கென்று
கங்கையை விடுப்ப வேகிக் கடும் பெருக் கெடுத்து வைகைப்
பொங்கலைப் புனலா யெங்கும் புரண்டது புணரி போல.

இ-ள். அஙகணர் தங்கிய அருளின் மிக்கார் படும் இடும்பை உன்னி - அருட்கண்ணையுடைய சிவபெருமானவர் பொருந்திய கிருபையின்மேம் பட்ட திருவாதவூரர் அனுபவிக்குந் துன்பத்தைத் திருவுளத்தடைத்து,— அவர்பால் உற்ற அரும் துயர் அகற்றுக என்று கஙகையை விடுப்ப - அத் திருவாதவூரரிடத்துப் பொருந்திய சகிக்தற்கரிய பெருந்துன்பத்தை நீக்கக் கடவை என்று கங்காநதியை அனுப்ப,—ஏகிக் கடும் பெருக்கெடுத்து வைகைப் பொஙகு அலைப் புனலாய் - அதுசென்று மிக்க பெருக்கெடுத்து வைகையாற்றின் மிக்க அலைபொருந்திய நீராகி,—புணரிபோல எஙகும் புரண்டது - கடலைப்போல எஙகும் பெருகிற்று. எ-று. (க)

சேர்ந்தொளிர் முத்த மூரல் செய்தலர்க் கலைமே லார்த்துக்
காந்தளஞ் செங்கை வீசிக் கனதனக் குரும்பை காட்டி
மாந்தளிர்ப் பதங்கண் மீது வருதிரை ஞெகிழி யார்ப்பப்
போந்துள கணிகை மாதர்ப் போன்றது வைகை யாறு.

இ-ள். வைகை ஆறு - வைகைநதியானது,—சேர்ந்தொளிர் முத்த மூரல் செய்து - சேர்ந்து விளஙகும் வெள்ளிய முத்துக்களாகிய பற்கடோ ன்றச் சிரித்து,—அலர்க் கலை மேல் ஆர்த்து - அலராகிய வஸ்திரத்தை மேலே கட்டி,—காந்தள் அம் செஙகை வீசி - செஙகாந்தண்மலராகிய அழ கிய சிவந்த கைகளை வீசி,—குரும்பைக் கன தனம் காட்டி - தெங்கின் குரும்பைகளாகிய கனத்த தனஙகளைக் காட்டி,—மாந்தளிர்ப் பதங்கள் மீது வரு திரை ஞெகிழி ஆர்ப்ப - மாந்தளிராகிய கால்களின்மீது ஒன்றன்பி ஞென்ருய் ஒழியாது வருந் திரைகளாகிய சிலம்புகள் சத்திக்க,—போந்துள கணிகை மாதர் போன்றது - வந்துள்ள பொதுமகளிரை ஒத்தது. எ-று. ()

திரைப்பெரு மருப்பி னாலே செழுங்கரை யிருபாற் குத்தி
மரத்திரண் முறித்துச் சாலி வயலெலா மழித்து வாயால்
நுரைத்திரள் சிந்தி மீதே நுண்மணலிறைத்து வண்டு
நிரைத்தலின் மத்த வேழ நிகர்த்தது வைகை யாறு.

இ-ள். திரைப் பெரு மருப்பினாலே செழும் கரை இரு பால் குத்தி - திரையாகிய பெரிய கொம்புகளினாலே செழுமையாகிய கரைகளை இருபக்

கத்துங் குத்தி,—மரத் திரள் முறித்து - மரக்கூட்டங்களை முறித்து,—வயல் சாலி எலாம் அழித்து - வயற்கணுள்ள நெற்களையெல்லாம் அழித்து,—வாயால் நுரைத் திரள் சிந்தி - வாயினாலே நுரைக்கூட்டங்களைச் சிதறி,—மீதே நுண் மணல் இறைத்து - மேலே நுண்ணிய மணலை வீசி,—வண்டு நிரைத்தலின் -வண்டுகள் வரிசையாக மொய்க்க வருதலின்,—வைகை ஆறு மத்த வேழம் நிகர்த்தது - வைகைநதி மத்தயானையை நிகர்த்தது. எ-று. ()

மைத்திகழ் குழலா ளந்த மலைமகள் முலையிற் றோய
அத்தனை வருத்து மேன்மை யனங்கவா யுதமென் றெண்ணி
ஒத்தெழுந் தொளிருங் கன்ன லோங்குசெங் கழுநீர் கஞ்சம்
புய்த்தவை யழிக்க வேண்டிப் புரண்டது பழன மெல்லாம்.

இ-ள். மை திகழ் குழலாள் அந்த மலைமகள் முலையில் தோய அத்தனை வருத்தும் மேன்மை அநங்க ஆயுதம் என்று எண்ணி - கருமைவிளங்குங் கூந்தலையுடைய அப்பார்ப்பதியினது தனங்களிற் புணரும்படி சிவபெருமானை வருத்தும் மகிமையையுடைய மன்மதனது படைகள் என்று கருதி,—ஒத்து எழுந்து ஒளிரும் கன்னல் ஓங்கு செங்கழுநீர் கஞ்சம் புய்த்து அவை அழிக்கவேண்டி - தம்முளொன்றையொன்றொத்து வளர்ந்தொளிரு கரும்பு ஓங்கிய நீலோற்பலம் தாமரைமலர் என்பவற்றைப் பிடுங்கி அழிக்க விரும்பி,—பழனம் எல்லாம் புரண்டது - வைகைநதி வயல்களிலெல்லாம் பெருகிற்று. எ-று. (௪)

வடம்படைத் துடைய பார வனமுலை முகத்து மாதர்
இடுந்துகில் கடுகி வீழ்வ தென்னநின் றழகு செய்யத்
தடம்படக் கிடந்த தெங்கின் றயங்குசெங் குரும்பை மீது
நெடும்புனற் றிரைபோய் மீள நிவந்தது சோலை யெல்லாம்.

இ-ள். வடம் படைத்துடைய பாரம் வனம் முலை முகத்து மாதர் இடும் துகில் கடுகி வீழ்வது என்ன - முத்துவடம்பொருந்தப்பெற்ற பாரமாகிய அழகிய முலையின்கண் மகளிரிடும் வஸ்திரம் விரைந்து வழுவிவிழுவது போல,—நின்று அழகு செய்ய - நிலைத்து அழகினைச்செய்யும்படி,—தடம் பட கிடந்த தெங்கின் தயங்கு செம் குரும்பை மீது நெடும் புனல் திரை போய் மீள - கரையிற்பொருந்தநிற்குந் தெங்குகளின் விளங்குகின்ற செவ்விய குரும்பைகளின்மீது நெடிய நீர்த்திரைகள் போய் மூடி மீள,—சோலையெல்லாம் நிவந்தது - வைகைநதி சோலையெங்கும் பெருகி உயர்ந்தது. எ-று.

மீதெழும் பரிதி கையால் விடுங்கனல் வெம்மை தீரப்
பூதல மடவாள் போர்க்கும் புதியவெண் டுகிலே போல
யாதலர்ப் பழனஞ் சோலை யாதெனப் பரந்து கஞ்ச
மாதுறை மதுரை மூதூர் மதிற்புறஞ் சென்று சேர்ந்து.

இ-ள். மீது எழும் பரிதி கையால் விடும் கனல் வெம்மை தீர பூதல மடவாள் போர்க்கும் புதிய வெண் துகிலே போல - மேலெழுகின்ற சூரியன், கிரணமாகிய கைகளால் வீசும் கனலாகிய வெம்மைநீங்கப் பூமிதேவி போர்க்கும் புதிய வெண்பட்டுப்போல, — அலர் பழனம் யாது சோலை யாது என பரந்து - மலரையுடைய வயல்யாது சோலையாது என்றங்குள்ளார் வினவித் தடுமாற வுலைகளை மூடிப் பரந்து — கஞ்ச மாது உறை மதுரை மூதூர் சென்று மதிற புறஞ் சேர்ந்து - இலக்குமிவசிக்கும் மதுரையாகிய பழைய நகரியிற்சென்று மதிலின்பக்கத்தை அடைந்து. எ-று.

தாங்கிய துவச நாஞ்சிற் றடமதி லிடித்துத் தள்ளி
ஆங்கெழின் மதுரை மூதூ ரழிப்பது போன்று செல்லப்
பாங்குள விடங்க ளெல்லாம் பரந்தது வைகை நன்னீர் [ர்.
ஈங்கிதற் கெதுசெய் வோமென் றியாவருங் கவற்சி கொண்டா

இ-ள். தாங்கிய துவசம் நாஞ்சில் தட மதில் இடித்துத் தள்ளி ஆங்கு எழில் மதுரை மூதூர் அழிப்பது போன்று செல்ல - தாங்கிய கொடிகளையும் உறுப்புகளையுமுடைய பெரிய மதிலை இடித்துச் சாய்த்து அங்குள்ள அழகிய பழைய மதுரைமாநகரை அழிப்பதுபோன்று வைகைநதி குதி கொண்டு பெருக, — பாங்கு உள இடங்கள் எல்லாம் வைகை நல் நீர் பரந்தது ஈங்கு இதற்கு எது செய்வோம் என்று யாவரும் கவற்சி கொண்டார் - பக்கத்துள்ள இடங்களிலெல்லாம் வைகையினது நல்லநீர் பரவிற்று, நாம் ஈண்டு இதற்கு யாதுசெய்வோம் என்று யாவரும் கவலைகொண்டார். எ-று.

மைக்கடுங் களிற்றுத் தானை வழுதியுங் கடிது வந்து
தொக்கநன் மலரு முத்துந் துகின்மணிப் பணியு நல்கித்
தக்கவண் புவியி லுள்ளோர் தமக்குயி ரென்னு மன்னே
மிக்கநின் கோப மாறல் வேண்டுமென் றிறைஞ்சி நின்றான்.

இ-ள். மை கடும் களிற்றுத் தானை வழுதியும் கடிது வந்து தொக்க நன் மலரும் முத்தும் துகில் மணிப் பணியும் நல்கி - அப்பொழுது கடுமையாகிய கரிய யானைப்படையையுடைய பாண்டியராசனும் விரைந்துவந்து தொகுதியாகிய நல்ல மலர்களையும் முத்துக்களையும் துகிலிற்பொதிந்த இரத்தினாபரணங்களையுமிட்டு, — தக்க வண் புவியில் உள்ளோர் தமக்கு உயிர் என்னும் அன்னே மிக்க நின் கோபம் ஆறல் வேண்டும் என்று இறைஞ்சி நின்றான் - தகுதியாகிய வளவிய பூமியிலுள்ளோருக்கு உயிர் என்று சொல்லப்படும் அன்னே! மிகுதியாகிய நின் கோபந்தணிதல்வேண்டும் என்று வணங்கினின்றான். எ-று. (அ)

கலைமதிக் குலத்து மன்னன் கன்னிநன் னுடன் கூறுந்
தலைமைமிக் குடைய சொல்லாற் றன்முனி வொழித லின்றி

மலையெனத் திரைகண் மென்மேல் வருதல்கண் டிதுவென் னென்
னிலையுறச் சிந்தை யுள்ளே நேடினு னேடிப் பின்னர்.

இ-ள். கலைமதிக் குலத்து மன்னன் கன்னிநன்னுடன் கூறும் தலைமை மிக்குடைய சொல்லால் - கலைகளையுடைய சந்திரகுலத்தரசனுகிய பாண்டியன் கூறும் தலைமைப்பாடமிக்க சொற்களினுற்ருனும்,—தன் சினம் தணிதல் இன்றி மலை எனத் திரைகள் மெல் மேல் வருதல் கண்டு - தன் கோபந்தணியாது மலைபோலத் திரைகள் மேலுமேலும் அடர்ந்து வருதலைக் கண்டு,—இது என் என்னு சிந்தை உள் நிலை உற நேடினுன் - அவ்வரசன் இது அடர்தற்குக் காரணம் என்னையோ என்று நெடிது சிந்தித்தாராய்ந் தான்,—நேடிப் பின்னர் - அஙஙனமாராய்ந்து பின்னர். எ-று. (௯)

ஆதியாங் கடவு ளெந்தை யாலவா யமலன் மங்கை
பாதியான் சிறந்த பூசை பண்டையிற் குறைந்த துண்டோ
நீதியார் தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண்மேற்
றீதியாஞ் செய்த துண்டோ செப்புமி னமைச்சி ரென்ருன்.

இ-ள். ஆதி ஆம் கடவுள் - முதற்கடவுளும்.—எந்தை - எம்பிதாவும்,—ஆலவாய் அமலன் - மதுரையில் வீற்றிருக்கும மலரகிதரும் —மஙகை பாதியான் சிறந்த பூசை பணடையின் குறைந்தது உணடோ - அர்த்தநாரீசுவரரு மாகிய சொக்கநாதசுவாமியுடைய சிறந்த பூசை முன்னையிலுஞ் சுருங்கிய துண்டோ,—நீதி ஆர் தவததின் மிக்கார் நெஞ்சகம் புழுஙக மண் மேல் தீது யாம் செய்தது உணடோ - நீதியார்ந்த தவத்தான்மேம்பட்ட பெரியோர் மனம்புழுஙகப் பூமியிலே நாம் கொடுமை செய்தது உண்டோ,—அமைச்சிர் செப்புமின் என்ருன் - மந்திரிகளே சொல்லுஙகள் என்று வினவினுன். எ-று. (௧0)

விளங்கிள மதிசேர் சென்னி வித்தகர் பத்த ரான
வளந்திகழ் வாத வூரர் வருந்திய வலைப்பு நீக்கி
உளங்கொள மகிழ்ச்சி செய்யி னுறுபுன லூர்கொள் ளாதென்
றளந்தறி யறிவு கூறி யாங்கவர் தொழுது நின்ருர்.

இ-ள். விளஙகு இள மதிசேர் சென்னி வித்தகர் பத்தர் ஆன வளம் திகழ் வாதவூரர் வருந்திய வலைப்பு நீக்கி - பிரகாசிக்கின்ற இளம்பிறை பொருந்திய முடியையுடைய சிவபெருமானுக்கன்பராயுள்ள அருட்செல்வம் விளங்குந் திருவாதவூரர் துன்பமுறுகின்ற கோட்டினை நீக்கி,—உளம் கொள மகிழ்ச்சி செய்யின் உறு புனல் ஊர் கொள்ளாது என்று - மனஙகொள்ளுமாறு அவரை மகிழ்விக்கின் மிக்குவரந்த நீர் நம்மதுரையை அழியாதென்று,—அளந்து அறி அறிவு கூறி ஆஙகு அவர் தொழுது நின்ருர் - அளவைசெய்தறிந்த அறிவைக்கூறி அம்மந்திரிகள் அஞ்சலிசெய்து நின்றனர். எ-று. ()

மன்னனு மவர்க டம்மேன் மகிழ்ந்தருட் பார்வை நல்கி
என்னுள மதித்த வாறிங் கினிதுநீ ருரைத்தீ ரென்று
கொன்னுறு வளைப்பி னூடு நிற்குநற் குணத்தி னூரை
முன்னுற வழைத்து நட்பான் முகமலர்ந் திதுமொ ழிந்தான்.

இ-ள். மன்னனும் மகிழ்ந்து அவர்கள்மேல் அருள் பார்வை நல்கி - பாண்டியராசனும் அதுகேட்டு மனமகிழ்ந்து அவர்கண்மீது கிருபாநோக்கஞ்செய்து,—என் உளம் மதித்த ஆறு நீர் இங்கு இனிது உரைத்தீர் என்று - என்மனம் உத்தேசித்தபிரகாரமே நீங்களும் ஈண்டு இனிதாகக் கூறினீர்கள் என்று,—கொன் உறு வளைப்பின் ஊடு நிற்கு நல் குணத்தினூரை முன் உற அழைத்து நட்பால் முகமலர்ந்து இது மொழிந்தான் - அச்சந்தருகின்ற கோட்டினுள்ளேநிற்குநற் குணக்குன்றாகிய திருவாதவூரரைத் தன்முன்வருவித்து நட்புரிமைகளோடு முகமலர்ச்சிகொண்டு இதனைக் கூறினான். எ-று. (க௨)

பாம்பணி செய்ய வேணிப் பரம்பர னடியார் கையில்
ஆம்பொரு ணமதே யானா லறம்பிறர்க் காவ துண்டோ
தேம்படு மலங்கன் மார்ப செயலிதற் குமது மேனி
சாம்புத றவமே யான்செய் தண்டமே தகவி லாமை.

இ-ள். பாம்பு அணி செய்ய வேணி பரம் பரன் அடியார் கையில் ஆம் பொருள் நமதே ஆனால் - பாம்பையணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமானது அடியார்கைபிறசேர்ந்த திரவியம் நமமுடையதேயானால்,—அறம் பிறர்க்கு ஆவது உண்டோ - அக்கொடையால்வரும் புண்ணியம் பிறர்க்காகுமோ ஆகாது,—தேம் படு அலங்கல் மார்ப செயல் இதற்கு உமது மேனி சாம்புதல் தவமே - வாசனைபொருந்திய மாலையை அணிந்த மார்பையுடையவரே இச்செயற்கு உமது திருமேனி வருந்துவது தவச்செயலாயிற்று,—யான் செய தண்டமே தகவு இலாமை - வருந்தும்படி யானுமக்குச்செய்த இத்தண்டமே தகுதியற்றதாயிற்று. எ-று. (கங)

உற்றவித் தகைமை முன்னே யுணருமிவ் வுணர்வி லாமை
குற்றமித் துணையு நாமேற் கொண்டனங் குறைவில் லாமன்
மற்றினிப் புகலு மாறென் வைகைநம் மூர்கொ ளாது
நற்றவத் தலைவ நீபோ யடைபடியு மெனநவின்றான்.

இ-ள். உற்ற இத்தகைமை முன்னே உணரும் இ உணர்வு இலாமை - நிகழ்ந்த இத்தகைமை முன்னரே பகுத்தறியும் அறிவின்மையாலாயிற்று,—குறைவு இல்லாமல் குற்றம் இத்துணையும் நம்மேல் கொண்டனம் - குறைவில்லாதபடி குற்றங்கள் இவ்வளவையும் நம்மேற் கொண்டேம்,—மற்று இனிப் புகலும் ஆறு என் - நாம் இனிச்சொல்வது என்னை,—வைகை நம்

ஊர் கொளாது நல் தலைத் தலைவர் நீர் போய் அடைப்பியும் எனா நவின்றான் - வைகைநதி நம்மதுரையை அழியாதபடி நல்ல தலைமுதல்வராகிய நீரே போய் அடைப்பியும் என்று கூறினான். எ-று. (கச)

அருட்பெரு வழுதி யிவ்வா றன்புரை பகர்ந்த போதுந்
தரிப்பரி தென்ன முன்னந் தழலென வெகுண்ட போதும்
விருப்பொடு வெறுப்பு மில்லா மெய்ம்மையார் தம்மை யாண்ட
திருப்பத நினைந்தார் வைகைச் செழும்புன லூர்கொ ளாமல்.

இ-ள். அருள் பெரு வழுதி இ ஆறு அன்பு உரை பகர்ந்த போதும் - அருளையுடைய பெரிய பாண்டியன் இந்தப்பிரகாரந் தன்னன்பை வெளிப்படுத்தும் உரைகளைக் கூறியபோதும்,—தரிப்பு அரிது என்ன முன்னம் தழல் என வெகுண்ட போதும் - சகித்தற்கரியதென்று கூறுமாறு முன்னர் அக்கினிபோலக் கோபித்தபோதும்,—விருப்பு ஒடு வெறுப்பும் இல்லா மெய்ம்மையார் வைகைச செழும் புனல் ஊர் கொளாமல் தம்மை ஆண்ட திருப்பதம் நினைந்தார் - விருப்பும் வெறுப்புமிலாத திருவாதவூரர் வைகைநதியினது செழுமையாகிய நீர் அம்மதுரையைக் கவராதிருக்கும்பொருட்டுத் தம்மை அடிமைக்கொண்டருளிய திருவடிகளைத் தியானித்தார். எ-று. (கரு)

சுந்தரப் பரிமேல் வந்த தோற்றமே மனத்தி லுன்னி
அந்தரத் திறைஞ்ச நன்னீ ரடங்கியுள் வாங்கிச் செல்ல
வெந்துயர்ப் பிறவி யான விடாய்கிளர் வேலை நீந்தி
வந்தருட் கரையிற் செல்வார் வைகையங் கரையிற் சென்றார்.

இ-ள். சுந்தரம் பரிமேல் வந்த தோற்றமே மனத்தில் உன்னி அந்தரத்து இறைஞ்ச - அழகிய குதிரையின்மேல் எழுந்தருளிவந்த திருவுருவத்தையே மனத்திலே தியானித்து ஆகாயத்தைநோக்கி வணங்க,—நல் நீர் அடங்கி உள் வாஙகிச் செல்ல - அப்பொழுது நல்ல வைகைநதி நீர் பிரவாகங்குறைந்துள்வாங்கிசசெல்ல,—வெம் துயர்ப் பிறவி ஆன விடாய் கிளர் வேலை நீந்தி வந்து அருள் கரையில் செல்வார் - கொடிய துன்பத்தைத்தரும் பிறவியாகிய தாகம் உண்டாகுங்கடலை நீந்திவந்து அருட்கரையிற்செல்பவராகிய திருவாதவூரர்,—வைகை அம் கரையில் சென்றார் - அழகிய வைகைநதிக்கரையின்கட் சென்றார். எ-று. (கசு)

முறைமுறை வணங்கி நின்ற வாரியர் முகத்தை நோக்கி
அறை திரை நெடுநீர் வைகை யடைப்பது கடிது வேண்டும்
முறையுமிம் மாந்த ரெல்லா மொல்லையில் வம்மி னென்று
பறையறை வித்து நம்மூர்க் கிவ்வுரை பரப்பு மென்றார்.

இ-ள். முறை முறை வணங்கி நின்ற ஆரியர் முகத்தை நோக்கி - திருவாதவூரர் தம்மை முறை முறை வணங்கிநிற்கின்ற காரியகாரருடைய

முகத்தைப்பார்த்து,—அறை திரை நெடுநீர் வைகை அடைப்பது கடிது வேண்டும் - ஒலிக்கின்ற திரைகள்மறியும் மிக்க நீரையுடைய வைகைநதியை விரைந்து அடைத்தல்வேண்டும்,—உறையும் இம மாந்தர் எல்லாம் ஒல்லையில் வம்மின் என்று பறை அறைவித்து நம் ஊர்க்கு இவ்வுரை பரப்பும் என்றார் - ஈண்டு வசிக்கும் மனிதர்களெல்லாம் விரைவாக வருக என்று பறையறைவித்து நம்மதுராபுரிக்கு இவ்வார்த்தையைப் பரப்புங்கள் என்று பணித்தருளினார். எ-று. (௧௭)

ஆரியர் கடிதி னோடி வன்பறை யறைவித் தம்பொற்
றேரியல் வீதி தோறுஞ் சென்றுரை பரப்பு முன்னே
கூரிய கொட்டு மண்சே கூடையுங் கொண்டு வைகை
நீரியல் கரைமேல் வந்து நின்றனர் மதுரை மாந்தர்

இ-ள். ஆரியர் கடிதின் ஓடி அம் பொன் தேர் இயல் வீதி தோறும் சென்று வன் பறை அறைவித்து உரை பரப்பு முன்னே - காரியகாரர் விரைந்தோடி அழகிய பொன்மயமாகிய தேரோடும் வீதிகடோறுஞ்சென்று வலிய பறை அறைவித்து இவ்வுரையைப் பரப்புதன்முன்னரே,—மதுரை மாந்தர் கூரிய கொட்டும் மண்சே கூடையும் கொண்டு வைகை நீர் இயல் கரை மேல் வந்து நின்றனர் - மதுரை மாந்தர்களெல்லாம் கூரிய மண் வெட்டிகளையும் கூடைகளையுங் கொண்டு வைகைநதியின் நீரையுடைய கரையின்கண் வந்துநின்றனர். எ-று. (௧௮)

நீறுகொண் டிலங்கு மேனி மறையவர் நியமஞ் செய்த
வீறுகொண் டிடங்க டோறு மாரியர் விரைவிற் சென்று
கூறுகொண் டெவர்க்கும் வேறு கோலறை யளந்து செங்கை
மாறுகொண் டுறுக்கி வைகை வன்கரை யடைக்க லுற்றார்.

இ-ள். நீறு கொண்டு இலங்கும் மேனி மறையவர் நியமம் செய்த வீறு கொண்டு இடங்கள் தோறும் ஆரியர் விரைவில் சென்று - விபூதியினால் விளங்குந் திருமேனியையுடைய வேதியராகிய திருவாதவூரர் தமக்கு நியமித்த அதிகாரத்தைப் பெற்றுக்கொண்டு, இடங்கடோறும் காரியகாரர் விரைவாகச்சென்று,—கூறு கொண்டு எவர்க்கும் வேறு கோலறை அளந்து - பிரித்து யாவர்க்கும் வேறு வேறு கோலறையாக அளந்துவிட்டு,—செங்கை மாறு கொண்டு உறுக்கி வைகை வன்கரை அடைக்கலுற்றார் - சிவந்த கைகளிற் பிரம்பைக்கொண்டு உறுக்கி வைகைநதியின் வலிய கரையை அடைப்பாராயினார். எ-று. (௧௯)

கண்பெறு கழையின் முத்துங் கடகரி மருப்பின் முத்தும்
வெண்பணி லத்தின் முத்து மேதகு கரும்பின் முத்தும்
வண்புனற் றிரைகள் வீசி வரையெனக் குவைகள் செய்யப்
பண்படப் பொருந்த நீருட் பதித்துயா வரம்பு செய்வார்.

இ-ள். கண் பெறு கழையின் முத்தும் - கணுக்களையுடைய மூங்கின் முத்துக்களையும்,—கடகரி மருப்பின் முத்தும் - மதயானைகளுடைய கோடுகளிலுள்ள முத்துக்களையும்,—வெண் பணிலத்தின் முத்தும் - வெண்மையாகிய சங்கின் முத்துக்களையும்,—மேதகு கரும்பின் முத்தும் - மேன்மைபொருந்திய கரும்பின் முத்துக்களையும்,—வண் புனல் திரைகள் வீசி - அழகிய நீர்த்திரைகள் கொடுவந்தொதுக்கி,—வரை எனக் குவைகள் செய்ய - மலைபோலக் குவித்துவிட,—பண்படப் பொருந்த நீர் உள் பதித்து உயர் வரம்பு செய்வார் - தம்முளியைபுபடப் பொருந்துமாறு நீரின்கீழ்ப்படுத்து உயர்ந்த அணைகளைக் கட்டுவாராயினர். எ-று. (உ0)

பரித்திர ணிறுத்து மென்பார் பாம்புக ளுருட்டு மென்பார்
திரைப்புனன் மிகுத்த தென்பார் தேவர்கட் கபய மென்பார்
நிரைப்படு மகிலோ டாரம் வரவர வொதுக்கி நீடு
வரைப்பிடைக் குவித்து நிற்பா ராயினர் மதுரை யுள்ளார்.

இ-ள். மதுரை உள்ளார் - மதுரைமாநகரவாசிகளெல்லாம்,—பரித்திரள் நிறுத்தும் என்பார் - குதிரைப்பாய்ச்சலாக மரங்களை நிறுத்தும் என்பாரும்,—பாம்புகள் உருட்டும் என்பார் - வைக்கோற்பழுதைகளை உருட்டும் என்பாரும்,—திரைப் புனல் மிகுத்தது என்பார் - திரைகளையுடைய நீர் அதிகரித்தது என்பாரும்,—தேவர்கட்கு அபயம் என்பார் - தெய்வங்கட்கு நாம் அடைக்கலம் என்பாரும்,—நிரைப்படும் அகிலோடு ஆரம் ஒதுக்கி வர வர நீடு வரைப்பு இடைக் குவித்து நிற்பார் ஆயினர் - வரிசையாகிய அகின் மரங்களோடு சந்தனமரங்கள் மென்மேலும் வர வர அவற்றை ஒருசாரொதுக்கி நெடிய கரையின்கட் குவித்து நிற்பாருமாயினர். (உக)

ஏருடைப் புதுநீர் வைகை யிவ்வகை யடைக்கு மெல்லை
நீருடைப் பொலிந்த வேணி நின்மலற் கன்பு மிக்காள்
சீருடைத் தவத்தின் மிக்காள் செம்மனச் செல்வி யென்னும்
பேருடை நரை மூதாட்டி பிட்டுவிற் றுணவு கொள்வாள்.

இ-ள். ஏர் உடைப் புது நீர் வைகை இவ்வகை அடைக்கும் எல்லை - அழகிய புதுநீரமைந்த வைகைநதியை இந்தப்பிரகாரம் அடைக்கும்பொழுது,—நீருடை பொலிந்த வேணி நின்மலற்கு அன்பு மிக்காள் - கங்காசலத்தையுடைய பொலிந்த சடையையுடைய மலரகிதராகிய சிவபெருமானிடத்துப் பேரன்புடையவள்,—சீருடைத் தவத்தின் மிக்காள் - புகழையுடைய தவநெறியின் மேம்பட்டவள்,—செம்மனச் செல்வி என்னும் பேர் உடை நரை மூதாட்டி - செம்மனச்செல்வி என்னும் பெயரையுடைய நரைத்த வயோதிகப்பெண்ணொருத்தி,—பிட்டு விற்று உணவு கொள்வாள் - பிட்டு விற்றுச் சீவனஞ்செய்பவள். எ-று. (உஉ)

ஆங்கவட் களந்து நீக்குங் கோலறை யடைப்ப தின்றி
ஓங்கலைப் புதுநீர் வைகை யுடைப்பெலா மடைக்கு மெல்லைக்

தீங்குள தறுகணாளர் சென்றவட் குறுகண் செய்ய
ஈங்கெனக் குறுதி யாவார் யாவரோ வென்றி ரங்கி.

இ-ள். ஆங்கவட்கு அளந்து நீக்கும் கோலறை அடைப்பது இன்றி - அந்த வயோதிகப்பெண்ணுக்குக் கோலாலளந்துவிடப்பட்ட பங்கொன்று மாத்திரம் அடைக்கப்படுவதின்றி,—ஓங்கு அலைப் புது நீர் வைகை உடைப்பு எலாம் அடைக்கும் எல்லை - உன்னதமாகிய திரைகளையுடைய புதிய நீர் பொருந்திய வைகைநதியின் உடைப்புகளெல்லாம் அடைக்கப்படும்பொழுது,—தீங்கு உள தறுகணாளர் சென்று அவட்கு உறுகண் செய்ய - கொடுமையையுடைய வன்கணணர்களாகிய கருமவதிகாரிகள்போய் அவளுக்குத் துன்பஞ்செய்ய,—ஈங்கு எனக்கு உறுதி ஆவார் யாவரோ என்று இரங்கி - அவ்வம்மை இங்கே தமியேனுக்குறுதுணையாவார் யாவரோ என்று சொல்லி அழுது. எ-று. (௨௩)

பிட்டினைக் கூலி கொண்டு பெருங்கரை யடைப்பா ரின்றி
நெட்டிலைச் சூல மேந்து நின்மலன் கோயி லெய்தி
மட்டறத் தளர்ந்த கொங்கை மார்பினிற் கண்ணீர் வார
எட்டுருத் திரண்ட பாத மிறைஞ்சிநின் றினைய கூறும்.

இ-ள். பிட்டினைக் கூலி கொண்டு பெரும் கரை அடைப்பார் இன்றி - பிட்டினையே கூலியாகப்பெற்றுக்கொண்டு பெரிய வைகைநதிக் கரையை அடைக்குங் கூலியாளர் ஒருவருமில்லாமையால்,—நெட்டு இலைச் சூலம் ஏந்தும் நின்மலன் கோயில் எய்தி - நெடிய இலைபோன்ற சூலப்படையைத் தாங்கும் நிருமலராகிய சோமசுந்தரக்கடவுள் வீற்றிருக்குங் கோயிலை அடைந்து,—மட்டு அறத் தளர்ந்த கொங்கை மார்பினில் கண்ணீர் வார - அளவின்றித் தளர்ந்த தனங்களையுடைய தன்மார்பிலே கண்ணீரொழுகிவர,—எட்டுருத் திரண்ட பாதம் இறைஞ்சி நின்று இனைய கூறும் - அஷ்டமூர்த்தந்திரண்ட அக்கடவுளுடைய திருவடிகளை வணங்கிநின்றிவைகளைச் சொல்வாளாயினள். எ-று. (௨௪)

வேறு

நெட்டரவக் கச்சுடையாய் நீலநிறத் திருமாதின்
வட்டமுலைத் தழும்புபட வந்தணையுந் திருமார்பா
கட்டியசெஞ் சடையாயுன் கண்ணருள்கொண் டெப்பொழுதும்
பிட்டினவிற் றுண்பேற்கும் பேரிடும்பை யுளதாமோ.

இ-ள். நெட்டு அரவக் கச்சு உடையாய் - நெடிய சர்ப்பக்கச்சையுடையவரே,—நீல நிறத் திருமாதின் வட்ட முலைத் தழும்பு பட வந்து அணையும் திருமார்பா - பசிய நிறத்தையுடைய காமாட்சியம்மையின் வட்டவடிவையுடைய ஸ்தனங்களினாலே தழும்புண்டாக வந்தணைந்த திருமார்பையுடையவரே,—கட்டிய செம் சடையாய் - கட்டப்பட்ட சிவந்த சடையை

யுடையவரே,—நின் கண் அருள் கொண்டு எப்பொழுதும் பிட்டினை விற்று உண்பேற்கும் - தேவரீரது கிருபாநோக்கத்தினாலே எப்போதும் பிட்டுவிற்றுச் சீவிக்கும் தமியேனுக்கும்,—பேர் இடும்பை உளது ஆமோ - பெருந் துன்பம் சம்பவிக்குமோ. எ-று. (உ௫)

யாருடனி னிப்புகல்வே னெனையுடையாய் வைகையினன்
னீருடையா தடைக்கும்வகை நீசிறிதின் றருளாயேற்
சீருடையா யுனக்கடிமை செய்யுமவர்க் கெளிமையெனும்
பேருடையா யெனப்பலரும் பேசுமொழி பழுதாமோ.

இ-ள். எனை உடையாய் - என்னை அடிமையாகவுடையவரே,—வைகையின் நல் நீர் உடையாது அடைக்கும் வகை நீ சிறிது இன்று அருளாயேல் - வைகைநதியின் நீர் உடையாதடைத்தற்குத் தேவரீர் சிறிது அநுக்கிரகஞ் செய்யாதொழிவீராயின்,—நான் இனி ஆருடன் புகல்வேன் - யான் இனி வேறு யாரோடு சொல்வேன்,—சீருடையாய் - சிறப்பையுடையவரே,—உனக்கு அடிமை செய்யும் அவர்க்கு எளிமை எனும் பேர் உடையாய் எனப் பலரும் பேசும் மொழி பழுது ஆமோ - தேவரீருக்கு அடிமைசெய்யுந் தொண்டர்களுக்கெல்லாம் தேவரீர் எளியராயிருக்கின்றீர் என்னும் பொருளமைந்த பேருடையீர் என்று பலரும் பேசும் வார்த்தை இன்று என்னளவிற் பிழைபட்டுவிடுமோ. எ-று. (உ௬)

தாயுமிலைத் தந்தையிலைத் தமருமிலைத் தமியேனைப்
பேயினுட னின்றாலும் பிரிகதறிய வொண்ணாது
தீயதென திலம்பாடென் சிந்தையில்வெந் துயர்தீர
நீயருளா தொழியினுயிர் நீப்பேன்மற் றென்செய்கேன்.

இ-ள். தாயும் இலை தந்தை இலை தமரும் இலை - எனக்கு மாதாவும் இல்லை, பிதாவும் இல்லை, உறவாகளும் இல்லை —பேயினுடன் நின்றாலும் தமியேனைப் பிரிதது அறிய ஒண்ணாது - பேயோடொருங்குநிற்பினும் தனித்தவளாகிய என்னைப் பிரிததுணர ஒருவாக்குங்கூடாது,—எனது இலம்பாடு தீயது - என் வறுமை மிகக் கொடியது,—என் சிந்தையில் வெம் துயர் தீர நீ அருளாது ஒழியின் உயிர் நீப்பேன் - என் மனத்துள்ள வெய்ய துயர் தீரத் தேவரீர் அநுக்கிரகஞ்செய்யாதொழியின் பிராணத்தியாகஞ்செய்வேன்,—மற்று என் செய்கேன் - அஃதொழிந்து வேறியாதுசெய்வேன். எ-று. (உ௭)

வேறு

இன்றெனக் குறுதி யாகி யாணிடம் பிட்டு வாங்கி
வன்றிறற் கூலி யாளாய் வன்கரை யடைப்பா ரில்லை
உன்றனக் கடிமை யானென் றுரைப்பவ டன்மே லன்பு
சென்றவட் காளா மாறு துணிந்தனர் தேவ தேவர்.

இ-ள். இன்று எனக்கு உறுதி ஆகி யான் இடும் பிட்டு வாங்கி - இன்றைக்கு எனக் குறுதுணையாகி யான் கொடுக்கும் பிட்டினையே கூலியாகப் பெற்று,—வன் திறல் கூலி ஆளாய் வன் கரை அடைப்பார் இல்லை - மிக்க வலிமையுடைய கூலியாளாகி வலிய அணையைக்கட்டுவார் ஒருவரும் இல்லை ஆகலான்,—யான் உன்தனக்கு அடிமை என்று உரைப்பவள்மேல் அன்பு சென்று - அடியேன் தேவரீருக்கடிமை என்று சொல்லும் அவளிடத்தே அன்பு சென்று,—தேவ தேவர் அவட்கு ஆளாமாறு துணிந்தனர் - மகாதேவராகிய சோமசுந்தரக்கடவுள் அவளுக்குத் தாங் கூலியாளாகும்படி திருவுளங்கொண்டருளினார். எ-று. (௨௮)

ஆடையுந் துணிந்த சீரை யாக்கியே கூலி யாளாய்க்
கூடையுந் தலைமேற் கொண்டு கொட்டுடைத் தோள ராகிப்
பீடைகொண் டயர்வாள் காணப் பெரும்பசி யுடையார் போல
வேடைகொண் டொல்லை வந்தார் வேண்டிய வடிவங் கொள்வார்.

இ-ள். வேண்டிய வடிவம் கொள்வார் - ஆங்காங்குத் தமக்குவேண்டிய உருவங்கொள்ள வல்லவராகிய சிவபிரான்,—ஆடையும் துணிந்த சீரை ஆக்கி - வஸ்திரமுங் கிழிந்த வஸ்திரமாகக்கொண்டு,—கூலியாளாய் - கூலியாளாகி,—கூடையும் தலை மேல் கொண்டு - கூடையையுஞ் சிரமேற்கொண்டு,—கொட்டு உடை தோளர் ஆகி - மண்வெட்டி தங்குந் தோளையுடையவராகி,—பெரும் பசி உடையார் போல வேடை கொண்டு - மிக்க பசியுடையார்போல விருப்பங்கொண்டு,—பீடை கொண்டு அயர்வாள் காண ஒல்லை வந்தார் - துன்பங்கொண்டயரும் அவள் காண விரைவாக வந்தருளினார். எ-று. (௨௯)

வந்தெனை யேவல் கொள்வா ருளர்கொலோ மற்றிங் கென்று
புந்தியின் மகிழ்ந்து கோயில் வாயிலிற் புகன்ற போதில்
அந்தநன் மொழியைக் கேளா வன்னைதன் னயர்ச்சி கூருஞ்
சிந்தனை யொழிந்து கூலி யாளரைச் சென்று சேர்ந்தாள்.

இ-ள். வந்து எனை ஏவல் கொள்வார் இங்கு உளர் கொலோ என்று புந்தியின் மகிழ்ந்து கோயில் வாயிலில் புகன்ற போதில் - அங்கே வந்து என்னைக் கூலியாளாகக்கொள்வார் இங்கே யாரும் உளரா என்று மனமகிழ்ந்து கோயில்வாயிலினின்று வினவியபோது,—அன்னை அந்த நல் மொழியைக் கேளா அயர்ச்சி கூரும் தன் சிந்தனை ஒழிந்து - அவ்வம்மை அந்த நல்ல வசனத்தைக் கேட்டு மனக்கமிக்க சிந்தை நீங்கி,—கூலியாளரைச் சென்று சேர்ந்தாள் - அக்கூலியாளரைச்சென்று சமீபித்தனள். எ-று. (௩௦)

புடையின்மே லுடையா ளின்றிப் புனைந்துள புலித்தோ லாடை
உடையின்மே லரைக்குங் கச்சா யோங்குநச் சரவ மின்றிச்
சடையின்மேன் மதிய மின்றித் தாங்கிய மழுவா னின்றி
விடையின்மே லின்றி நின்ற வெளியனை வெளியிற் கண்டாள்.

இ-ள். புடையின் மேல் உடையாள் இன்றி - பாகத்திலே உமையம் மையின்றியும்,—புனைந்துள புலித்தோல் ஆடை உடையின்மேல் அசைக்கும் கச்சாய் ஓங்கும் நச்சு உரகம் இன்றி - புனையப்பெற்ற புலித்தோலாகிய வஸ்திரவுடையின்மேலே கச்சாய் விளங்கும் நஞ்சையுடைய பாம்பு இன்றியும்,—சடையின்மேல் மதியம் இன்றி - சடையின்மீதே பாலசந்திரன் இன்றியும்,—தாங்கிய மழு மான் இன்றி - திருக்கரங்களிலே தாங்கிய மழுவு மானுமின்றியும்,—விடையின் மேல் இன்றி நின்ற வெளியனை - இடபவாகனத்தின்மேல் இவர்தலின்றியும் வந்து நிற்கின்ற சிதாகாச வடிவையுடைய சிவபெருமானாகிய கூலியாளரை,—வெளியில் கண்டாள் - வெளியே நிற்பக் கண்டாள். எ-று. (ருக)

மைந்தநீ யெனக்கிங் காளாய் வருகென முன்னர்க் கூலி
தந்தியேல் வருவ னென்று சாற்றலு நுகர விப்போ
திந்தவா ரமுதம் போலு மினியபிட் டளிப்பே னல்லால்
அந்திவா யிதனை விற்றா லளிப்பனின் கூலி யென்றாள்.

இ-ள். மைந்த நீ எனக்கு இங்கு ஆளாய் வருக என - மகனே நீ எனக்கு இப்பொழுது கூலியாளாய் வரக்கடவை என்று கேட்ப - முன்னர் கூலி தந்தியேல் வருவன் என்று சாற்றலும் - அதற்கவர் முன்னர்க் கூலி தருவாயாயின் வருவேன் என்று கூறுதலும்,—நுகர இப்போது ஆர் அமுதம் போலும் இனிய இந்தப் பிட்டு அளிப்பேன் - நீ உண்ணும்பொருட்டு இப்போது அரிய அமிர்தம்போலும் இனிய பிட்டை உனக்கு முற்கூலியாகத் தருவேன்,—அல்லால் அந்திவாய் இதனை விற்றால் நின் கூலி அளிப்பன் என்றாள் - அல்லாமல் அஸ்தமயனகாலத்தில் இப்பிட்டை விற்றால் நின் கூலியைத் தருவேன் என்று கூறினாள். எ-று. (ருஉ)

இரும்பசி யுடையே னன்னே யினியபிட் டளிப்பை யாகிற்
குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுது மென்னக்
கரும்புறத் துகின்மே லிட்ட பிட்டினைக் கரத்தா லள்ளி
விரும்பியிங் கிதனைக் கொள்வா யென்றனள் விருப்ப மிக்காள்.

இ-ள். அன்னே இரும் பசி உடையேன் இனிய பிட்டு அளிப்பை ஆகில் - மாதாவே! நான் இப்பொழுது பெரும்பசியுடையேன் இனியனவான பிட்டினைத் தருவாயானால் அதனை உண்டு பசிதீர்ந்து,—கோலறை முழுதும் யானே குரம்பு கொண்டு அடைப்பன் என்ன - கோலால் வரையறுக்கப்பட்ட நின்பாகமுழுவதையும் யானே வரம்புகட்டி அடைப்பேன் என்று கூற,—கரும்புறத் துகில்மேல் இட்ட பிட்டினைக் கரத்தால் அள்ளி விரும்பி இங்கு இதனைக் கொள்வாய் என்றனள் விருப்ப மிக்காள் - கறுத்த புறத்தையுடைய வஸ்திரத்தை மேலே இட்டு மூடிய பிட்டைக் கைகளால் அள்ளி மகனே நீ இதனை விரும்பி உண்ணுதி என்று கூறினாள் விருப்பம் மிக்க செம்மனச்செல்வி. எ-று. (ருங)

கூற்றடுங் கமல பாதர் குறுந்துணிக் கரிய சீரை
ஏற்றிடும் பிட்டு வாங்கி யின்புற வமுது செய்து
மாற்றரும் பசியை யன்னே மாற்றினை யினிப்போய் வைகை
ஆற்றினின் கூற்றி லுண்டா மருங்கரை யடைப்ப னென்றார்.

இ-ள். கூற்று அடும் கமல பாதர் - இயமனைக்கொன்றருளுந் திருவடித்தாமரையினையுடைய சிவபெருமானாகிய கூலியாளர்,—குறும் கரிய துணி சீரை ஏற்று - குறுத்த கரிய கந்தைவஸ்திரத்தை விரித்து ஏந்தி,—இடும் பிட்டு வாங்கி இன்பு உற அமுது செய்து - கொடுத்த பிட்டை வாங்கி இனிதாக அமுது செய்தருளி,—மாற்று அரும் பசியை அன்னே மாற்றினை - மாற்றுதற்கரிய பசியை அன்னையே மாற்றினாய்,—இனி வைகை ஆற்றிற் போய் நின் கூற்றில் உண்டாம் அரும் கரை அடைப்பன் என்றார் - இனி நான் வைகைநதிக் கரையிற்சென்று நின் பங்குக்குளதாகிய பெரிய அணையைக் கட்டுவேன் என்று கூறியருளினார். எ-று. (நக)

நன்றுநன் றின்னு மன்னே நயந்துபிட் டளித்தல் வேண்டும்
என்றுதந் துணிந்த சீரை யேற்றது நிறைய வாங்கித்
தின்றுதின் றலைநீர் வைகைச் செழுங்கரை யதனிற் சென்று
குன்றெனுந் தவத்தா யுன்றன் கோலறை காட்டு கென்றார்.

இ-ள். அன்னே பிட்டு நன்று நன்று நயந்து இன்னும் அளித்தல் வேண்டும் என்று தம் துணிந்த சீரை ஏற்று அது நிறைய வாங்கி - மாதாவே! இப்பிட்டு மிகவு நன்று என்மேல் விருப்பங்கொண்டு இன்னுந் தரல்வேண்டும் என்று தமது கந்தைவஸ்திரத்தை விரித்தேந்தி அது நிறையவாங்கி,—தின்று தின்று அலை நீர் வைகைச் செழும் கரை அதனில் சென்று - அதனைத் தின்று தின்று அலைமறிகின்ற நீரையுடைய வைகைநதியினழகிய கரையின்கட்போய்,—குன்று எனும் தவத்தாய் உன்றன் கோலறை காட்டு கென்றார் - மலையென்று சொல்லத்தகுந் தவத்தையுடையாளே! உன் பங்கைக் காட்டுக என்று கூறியருளினார். எ-று. (நரு)

மெய்த்தவம் புரிவார் தமமின் விழுப்பமிக் குடைய வன்னை
இத்தடங் கரையை வல்லே யெம்பிநீ யடைப்பா யென்னப்
பைத்தவெம் பகுவாய் நாகம பனிமதிப் பாதி கொன்றைக்
கொத்துடன் முடிக்க வல்லார் கோலறை யடைக்க லுற்றார்.

இ-ள். மெய்த் தவம் புரிவார் தம்மின் விழுப்பம் மிக்குடைய அன்னை - மெய்ம்மையாகிய தவத்தைச் செய்பவர்களுள் மிகவும் மகிமையையுடைய மாதாவாகிய வந்தியானவள்,—இ தடம் கரையை வல்லே எம்பி நீ அடைப்பாய் என்ன - இவ்விசாலமாகிய கரையினை விரைவாக என்றம்பி நீ அடைப்பாயாக என்று கூற,—பைத்த வெம் பகுவாய் நாகம் பனி மதிப் பாதி கொன்றைக் கொத்துடன் முடிக்க வல்லார் - படம்பொருந்திய பகுவாயை

புடைய பாம்பையும் குளிர்ச்சிபொருந்திய பாலசந்திரனையும் கொன்றைப் பூக்கொத்தோடு சூட்டவல்ல சிவபெருமானாகிய கூலியாளர்,—கோலமுற அடைக்கல் உற்றார் - அவ்வம்மையின் பங்கினை அடைப்பாராயினர். எ-று. ()

பேர்ப்பர்மண் கூடை பெய்வர் பிறைதவிர் முடிச் சும்மாடு
சேர்ப்பர் பின் சுமந்து சென்றச் செய்கரை சொரிந்து மீள்வர்
வேர்ப்பர்மெய் யிளைப்பர் முன்போல் மென்றுபிட் டிரத நாவிற்
பார்ப்பரவ் வன்னை தன்மேற் பரிந்தருட் பார்வை செய்வர்.

இ-ள். மண் பேர்ப்பர் - மண்ணை வெட்டுவார்,—கூடை பெய்வர் - அதனைக் கூடையின்கணிடுவார்,—பிறை தவிர் முடி சும்மாடு சேர்ப்பர் - பிறைதவிர்ந்த முடியின்மேற் சுமையடைகோலிவைப்பர்,—பின் சுமந்து சென்று அச செய்கரை சொரிந்து மீள்வர் - பின்னர் அதனைச சுமந்து சென்று கட்டப்படும் அவ்வரம்பிற் கொட்டித் திரும்புவர்,—மெய் இளைப்பர் முன்போல் வேர்ப்பர் - சரீரம வருந்தி இளைப்பர் முன்போலக் குறுவேர்வை கொள்வர்,—பிட்டு மென்று இரதம் நாவிற் பார்ப்பர் - பிட்டை அள்ளி வாயி லிட்டு மென்று தின்று சுவையை நாவினாலுணர்வர்.—அ அன்னை மேல் பரிந்து அருள் பார்வை செய்வர் - அப்பிட்டமுதைத் தமக்குக்கொடுத்த அவ்வம்மைமீது முன்னையினும் மிக அன்புகூர்ந்து கிருபாநோக்கஞ் செய்வார். எ-று. (௩௭)

பிட்டுநன் றென்று கூறிப் பிறைமுடி யசைப்பர் வேடன்
இட்டமென் றசையிற் சால வீசனுக் காமி தென்பர்
கொட்டுடன் கவித்த கூடை கொண்டுநின் றாடல் செய்வர்
வெட்டுமண் குவிப்ப ரோடி விரைந்தடிப் பாய்ந்து மீள்வர்.

இ-ள். பிட்டு நன்று என்று கூறிப் பிறை முடி அசைப்பர் - இப்பிட்டு மிக நன்றாயிருக்கின்றதென்று உபசாரங்கூறிப் பிறையையுடைய சிரசை அசைப்பர்,—வேடன் இட்ட மென் தசையின் ஈசனுக்கு இது சால ஆம் என்பர் - கண்ணப்பநாயனாராகிய வேடுவர் படைத்த மென்தசையமுதினும் இஃது இம்மதுரைச சோமசுந்தரககடவுட்குப் பிரீதியாகுமென்பர்,—கொட்டு உடன் கவித்த கூடை கொணடு நின்று ஆடல் செய்வர் - தோளின்க ணிட்ட மண்வெட்டியுடன் சிரசிற்கவித்த கூடையையுங் கொண்டுநின்று ஆனந்தக் கூத்தாடுவர்,—வெட்டும் மண் குவிப்பர் - வெட்டிய மண்ணைக் குவிப்பர்,—விரைந்து ஓடி அடிப் பாய்ந்து மீள்வர் - விரைந்தோடி அடிப் பாய்ந்து திரும்புவர். எ-று. (௩௮)

பரிவுடை மனத்தி னாளும் பரமர்தஞ் செய்தி கண்டு
கரையினை யடைத்தல் வேண்டு மென்றுதன் கருமங் கூறாள்
உரனுடை வழுதி தூதர் காண்பரே லுறுகண் செய்வார்
இருவினை யுடையேன் மற்றிங் கென்செய்வே னென நினைந்தாள்.

இ-ள். பரிவு உடை மனத்தினாளும் பரமர்தம் செய்தி கண்டு - அன்பு பொருந்திய மனத்தையுடைய வந்தியுஞ் சோமசுந்தரக்கடவுளினது திருவிளையாடலைக் கண்டு,—கரையினை அடைத்தல் வேண்டும் என்று தன் கருமம் கூறாள் - அணைகட்டுதல் செய்யவேண்டும் என்று தன் காரியத்தைக் குறித்தொன்றும் பேசாதவளாய்,—உரன் உடை வழுதி தூதர் காண்பரேல் உறுகண் செய்வார் - வலியையுடைய பாண்டியனது தூதுவர் காண்பாராயின் எமக்குத் துன்பஞ்செய்வார்,—இரு வினை உடையேன் மற்றிதற்கு என் செய்வேன் என நினைந்தாள் - இருவினையையுடைய தமியேன் இதற்கு யாது செய்வேன் என்று பலவற்றையும் எண்ணினாள். எ-று. (ருக)

மற்றவ ணிலைமை வெள்ளி மன்றுணின் றாடு கின்ற
சொற்றவ ரறிந்து பின்னுங் கூடைமண் கரைமேற் கொட்டி
உற்றவிக் கரையை யின்னே யொல்லையி லடைப்ப னன்னே
சற்றிதற் கிரங்கா தேகுன் றகவுடை மனையி லென்றார்.

இ-ள். அவள் நிலைமை வெள்ளி மன்றுள் நின்று ஆடுகின்ற கொற்றவர் அறிந்து - அவ்வந்தியினது நிலைமையை வெள்ளியம்பலத்தின்கணின்று திருநடனஞ்செய்தருளுஞ் சோமசுந்தரக்கடவுள் என்னும் கூலியாளர் திருவுளத்தடைத்து —பின னும கூடை மண கரை மேல் கொட்டி - பின்னரும் ஒருகூடைமண்ணைக் கரையிலே கொட்டிவிட்டு,—உற்ற இக்கரையை இன்னே யான் ஒல்லையில் அடைப்பன் - உனக்காக விடப்பட்ட இக்கரையை இப்போது நான் விரைவாக அடைப்பேன்,—நீ சற்றும் இதற்கு இரங்காது உன் தகவு உடை மனையில் அன்னே ஏகு என்றார் - சிறிதும் இதன்பொருட்டு மனமிரங்காது உன் தகுதியையுடைய வீட்டிற்கு மாதாவே! செல்வாய் என்று கூறியருளினார். எ-று. (சo)

நீறணி புனித மேனி நின்மலன் விடுப்ப வேகித்
தோறிரை முகத்தி னோடன் றொன்மனை புகுது மெல்லைக்
கூறருந் தவத்தின் மிக்காள் கோலறை யடைப்ப வஞ்சி
மாறிடு திரைக்கை தன்னாற் றொழுதனள் வைகை மங்கை.

இ-ள். நீறு அணி புனித மேனி நின்மலன் விடுப்ப - விபூதியை அணிந்த சுத்தமாகிய திருமேனியையுடைய சோமசுந்தரக்கடவுளனுப்ப,—தோல் திரை முகத்தினாள் ஏகித் தன் தொல் மனை புகுதும் எல்லை - தோல்திரைந்த முகத்தையுடைய வந்தி சென்று தன் பழையவீட்டிற் புகும்பொழுது,—கூறு அரும் தவத்தின் மிக்காள் கோல் அறை அடைப்ப - கூறுதற்கரிய தவத்தால் மேம்பட்ட வந்தியினது பாகமாகிய கோலறையைச் சிவபெருமான் அடைக்கும்பொழுது,—அஞ்சி வைகை மங்கை மாறிடு திரைக் கையால் தொழுதனள் - பயந்து வைகைநதியாகிய பெண் வேகந்தணிகின்ற திரைகளாகிய கைகளினாலே சுவாமியை அஞ்சலி செய்தனள். எ-று. (சக)

சிறந்தமண் கூடை வேணித் திருமுடிக் கொட்டை யாக
நிறந்திகழ் கொன்றை நீழ னிறைமண லணையே யாக
உறுந்தொழின் முயற்சி யாலே யுயங்கிமெய் யிளைத்தார் போல
மறைந்துல கெங்கு மான வள்ளலார் பள்ளி கொண்டார்.

இ-ள். சிறந்த மண கூடை வேணி திருமுடிக் கொட்டை ஆக - சிறந்த மண்சுமக்குங்கூடை சடையையுடைய திருமுடிக்குத தலையணையாகவும்,—நிறம் திகழ் கொன்றை நீழல் நிறை மணல் அணையே ஆக - பொன்னிறம் விளங்கும் பூவையுடைய கொன்றைமரநீழலிலேயே நிறைநத மணல் சயனமாகவும்,—உறும் தொழில் முயற்சியால் உயங்கி மெய இளைத்தார் போல - உற்றதொழின்முயற்சியாலே வருந்திச சரீரமிளைததார்போன்று,—உலகு எங்கும் மறைந்து ஆன வள்ளலார் பள்ளிகொண்டார் - உலகெஙகும் வியாபித்து மறைந்துநிற்கும் வள்ளலாராகிய சோமசுந்தரக்கடவுள் பள்ளிகொண்டருளினர். எ-று. (௪௨)

ஆங்கவர் துயிலு மெல்லை யருட்பெரு வாழ்வின் மிக்கார்
ஓங்கிய கருமஞ் செய்வா ராகிப் பொன் பிரம்பு தாங்கிப்
பாங்குநின் றவரை நாடிப் பகிர்ந்தகோ லறையி னுள்ள
தீங்குநன் குணர்வீ ரென்னச் சென்றகன் கரையிற் சேர்ந்தார்.

இ-ள். ஆஙகு அவர் துயிலும் எல்லை - அஙஙனமவர் நித்திரைசெய்தருளுஞ் சமயததது,—அருள் பெரு வாழ்வின் மிககார் - திருவருளானுய பேரானந்தப் பெருவாழ்வின் மிக மகிழ்பவராகிய திருவாதவூரர்,—ஓஙகிய கருமம் செய்வார் ஆகி ஒண பிரம்பு தாஙகிப் பாஙகு நின்றவரை நாடி - உயர்வாகிய காரியஙகளைத தஙகீழ்நினறு நடததுபவராகிக் கையில் அழகிய பிரம்பைக்கொணடு பக்கததேநிறகுங கருமவதிகாரிகளைப் பார்த்து,—பகிர்ந்த கோலறையில் உள்ள தீஙகு நன்கு உணர்வீர் என்ன - வகுத்துக் கொடுக்கப்பட்ட பாகஙகளிலுள்ள குற்றஙகளையுங குணஙகளையும் பார்த்தறிமினென்று பணிக்க,—சென்று அகன கரையில் சேர்ந்தார் - அவர் சென்று விசாலமாகிய கரையையடைந்தார். எ-று. (௪௩)

நன்குற வடைத்தல் செய்தார் யாவரு மென நயந்து
சங்கர னடைக்கு நீடு தடங்கரை யதாக வெய்தி
எங்கணு முயர்ந்து தாழ்ந்த திவ்விடம் யார்க்கு நேர்ந்த
பங்கிது மொழிமி னென்ன நின்றவ ரிவை பகர்ந்தார்.

இ-ள். அவர்கள் யாவரும் நன்கு உற அடைத்தல் செய்தார் என நயந்து - கருமவதிகாரர் பஙகாளரனைவரும உடைகரையைச செவ்விதாகக் கட்டினர்களென்று மனமகிழ்ந்து,—சங்கரன் அடைக்கும் நீடு தடம் கரை எய்தி - சுந்தரேசராகிய கூலியாளர் நின்றடைக்கும் நெடிய விசாலமாகிய கரையையடைந்து,—எங்கணும் உயர்ந்து இவ்விடம் தாழ்ந்தது - இவ்வணை

மற்றெவ்விடங்களுமுயர்ந் திவ்விடமாத்திரந் தாழ்ந்திருக்கின்றது,—இது யார்க்கு நேர்ந்த பங்கு மொழிமின் என்ன - இஃதியார்க்கு வகுத்துவிடப் பட்ட பங்கு சொல்லுங்கள் என்று வினவ,—நின்றவர் இவை பகர்ந்தார் - அங்கே நின்றவர்கள் இவைகளைக் கூறினார்கள். எ-று. (௪௪)

பெருவள நீடு கூடற் பிட்டுவிற் றுணவு கொள்வாள்
ஒருமுது மடந்தைக் காளா யொருவன்வந் திங்ங னெய்தி
இருநில மகழ்ந்து கூடை யுட்சொரிந் திரங்கி நிற்பன்
சிரமிசை யெடுப்பன் மீள்வன் சிந்துவன் குவித்தல் செய்வான்.

இ-ள். பெரு வளம் நீடு கூடல் பிட்டு விற்று உணவு கொள்வாள் ஒரு முது மடந்தைக்கு ஆளாய் ஒருவன் வந்து இங்ஙன் எய்தி - பெருஞ்செல் வத்தான்மிக்க இம்மதுரைமாநகரததிலே பிட்டுவிற்றுணபவளாகிய வந்தி என்னுமொரு வயோதிகப்பெண்ணுக்குக் கூலியாளாய் ஒருவன்வந்திவ்வி டத்தையடைந்து,—இரு நிலம் அகழ்ந்து கூடையுள் சொரிந்து இரங்கி நிற் பன் - பெருமைபொருந்திய மணணைவெட்டிக் கூடையின்கணிட்டு ஆரவா ரித்து இரங்கிநிற்பன்,—சிரமிசை எடுப்பன் மீள்வன் - பின்பு தலைமீதெ டுப்பான் மீள்வான்,—சிந்துவன் - சிதறுவான்,—குவித்தல் செய்வான் - பின் குவிப்பான். எ-று. (௪௫)

பாடுவ னாடல் செய்வன் பையவோர் கூடை மண்ணை
நீடுதிண் கரையி லேறிச் சொரிகுவ னெடிது நிற்பன்
ஓடுவ னோடி மீள்வ னொருகைமண் கரையி லேறப்
போடுவன் போக வென்னில் வருவன்வா வென்னிற் போவன்.

இ-ள். பாடுவன் ஆடல் செய்வன் - பாடுவான் கூத்தாடுவான்,—பைய ஓர் கூடை மண்ணை நீடு திண் கரையில் ஏறிச சொரிகுவன் - பின்பு மெல்ல ஒருகூடைமண்ணை நெடிய திண்ணிய கரையில் ஏறிக் கொட்டுவான்,— நெடிது நிற்பன் - நெடுநேரம் அசையாது நிற்பான்,—ஓடுவன் ஓடி மீள்வன்- பின்னர் விரைந்தோடுவான் ஓடிக்கடிதுதிரும்புவான்,—ஒரு கை மண் கரை யில் ஏறப் போடுவன் - ஒரு கைப்பிடிமணணை மறித்துங் கரையில் வீழப் போடுவான்,—போக என்னில் வருவன் - நீ போ என்றால் வருவான்,— வா என்னில் போவன் - நீ வா என்றாற் போவான். எ-று. (௪௬)

பிட்டினை நுகர்வ னையா பெரிதுநன் றென்று கையைக்
கொட்டுவன் செங்கை காணி லரசிளங் குமர னொப்பான்
நெட்டலர்க் கொன்றை நீழ னெடுந்துயில் கொள்கின் றானங்
கட்டுரை சிறிதுங் கேளா னன்னவன் காண்மி னென்றார்,

இ-ள். பிட்டினை நுகர்வன் - பின்னர்ப் பிட்டை அள்ளி உண்பான்,— ஐயா பெரிதும் நன்று என்று கையைக் கொட்டுவன் - ஐயா இப்பிட்டு

மிகவும் நன்றென்று கூறிக் கையோடு கையைக் கொட்டுவான்,—செங்கை காணில் அரசு இளம் குமரன் ஒப்பான் - அவனது செங்கைகளை நாமுற்று நோக்குமிடத்து அரசிளங்குமரனையே ஒக்கின்றான்,—நெட்டு அலர்க் கொன்றை நீழல் நெடும் துயில் கொள்கின்றான் - அவன் நெடிய பூங்கொத்துக்களையுடைய கொன்றைமரநிழலிலே நெடுநித்திரை செய்கிறான்,—நம் கட்டுரை சிறிதும் கேளான் - நாங்கூறும் உறுதிமொழிகளை ஒருசிறிதும் கேளான்,—அன்னவன் காண்மின் என்றார் - அவன் பாருங்களென்று சுட்டிக்காட்டிக் கூறினார். (௪௭)

என்றலு மவனை யிங்கே கொணர்மினென் றவரு ணின்ற
வன்றிற லொருவன் கூற வாரியன் வல்லை யோடிச்
சென்றலு ஞான யோகச் செழுந்துயி லொழிந்து மூன்று
துன்றிய புரங்கள் செற்றார் துண்ணென விழித் தெழுந்தார்.

இ-ள். என்றலும் - என்றிவ்வாறவர்கள் கூறுதலும்,—அவருள் நின்ற வன் திறல் ஒருவன் அவனை இங்கே கொணர்மின் என்று கூற - அக்கருமவதிகாரிகளுள் நின்ற மிக்க வலிமையுடைய ஓர் அதிகாரி அக்கூலியாளனை இங்கே எம்முன் கொடுவருக என்று பணிக்க,—ஆரியன் ஓடிச் சென்றலும் - அதுகேட்ட கருமவதிகாரிகளில் ஒருவன் விரைந்தோடிச் சென்று சமீபித்தலும்,—மூன்று துன்றிய புரங்கள் செற்றார் ஞான யோகச் செழும் துயில் ஒழிந்து துண்ணென விழித்து எழுந்தார் - சிவபெருமானாகிய கூலியாளர் ஞானயோகமாகிய ஆனந்தநித்திரைசெய்தலை நீக்கி விரைந்து கண்களைவிழித்தெழுந்தார். எ-று. (௪௮)

விழித்தலுங் கடிது சென்ற வாரியன் வெருவ நோக்கி
மொழிக்கனல் சிந்தி யந்த முன்னவன் றன்னை யெய்த
அழைத்தலும் வருதல் செய்யா தஞ்சிநின் றிரங்கல் கண்டு
பழிப்பருஞ் செங்கை பற்றி யீர்த்தனன் பரிவி லாதான்.

இ-ள். விழித்தலும் - அவர் நித்திரைவிட்டெழுதலும்,—கடிது சென்ற ஆரியன் வெருவ நோக்கி - விரைந்துசென்ற அக்கருமவதிகாரி அவர் அஞ்சும்படி பார்த்து,—மொழிக் கனல் சிந்தி - கொடுஞ்சொற்களாகிய அக்கினியைச் சிந்தி,—அந்த முன்னவன் தன்னை எய்த அழைத்தலும் - அவ்வதிகாரியிடத்து வரும்படி அழைத்தலும்,—வருதல் செய்யாது அஞ்சி நின்று இரங்கல் கண்டு - அவர் வாராது பயந்துநின்று அழுதலைக்கண்டு,—பரிவு இலாதான் பழிப்பு அரும் செம் கை பற்றி ஈர்த்தனன் - அன்பில்லாத அக்கருமவதிகாரி குற்றமற்ற அவருடைய சிவந்த கையைப் பிடித்திழுத்தான். எ-று. (௪௯)

ஆங்கவன் கடிதிற் றள்ளி யண்ணலை யெண்ணி லாத
தீங்கினன் முன்னர்க் கொண்டு சேறலும் வெகுட்சி யெய்திப்

பாங்குநின் றவரு ணின்ற பாவியைப் பாவி நோக்கி
ஈங்குவெங் குருதி சோர வடித்திடுங் கிவனை யென்றான்.

இ-ள். ஆங்கவன் அண்ணலை கடிதில் தள்ளி - அவன் கூலியாளாகிய சிவபிரானை விரைந்து தள்ளி,—எண இலாத தீயகினன் முன்னர் கொண்டு சேறலும் - அளவில்லாத தீவினையுடைய அதிகாரிக்கு முன்னே கொண்டு சென்றவளவில்,—பாவி வெகுட்சி எய்தி - பாவியாகிய அவ்வதிகாரி கோபங்கொண்டு,—பாஙகு நின்றவருள் நின்ற பாவியை நோக்கி - தன்பக்கத்து நிற்பவர்களுள் ஒரு பெரும் பாவியைப் பார்த்து,—ஈங்கு வெம் குருதி சோர இஙகு இவனை அடிக்திடு என்றான் - இஙகே வெவ்விய இரத்தமொழுகும்படி நீ இவனுக்கு அடியென்றான். எ-று. (௬0)

கடுத்தசொல் வன்க ணாளன் கதத்துடன் மாறு கையில்
எடுத்தனன் முனிவர் விண்ணோ ரெடுத்தனர் தொழுது செங்கை
அடித்தன னடித்த போதி லன்புடை யரிவை பாகங்
கொடுத்திலர் துணுக்க மெய்த மறைந்தனர் குறைவி லாதார்.

இ-ள். கடுத்த சொல் வன்கணாளன் கதத்துடன் மாறு கையில் எடுத்தனன் - கடுஞ்சொலலைப்பேசும் அததறுகண்ணன் கோபத்துடன் கையிற் பிரம்பை எடுததான்,—முனிவர் விணணோர் செம் கை எடுத்துத் தொழுதனர் - அதுகண்ட இருடிகளுந் தேவர்களுந் தமது சிவந்தகைகளை உயர்த்திக் கூப்பிச சிரசில்வைத்துக் கும்பிட்டனர்,—அடித்தனன் - அப்பொழுது அடித்தான்,—அடித்த போதில் - அடித்தசமயத்திலே,—அன்புடை அரிவை பாகம் கொடுத்திலர் குறைவிலாதார் - அன்பையுடைய உமாதேவிபாகங் கொடாதவராகிய சிவபெருமான் ஒரு குறையுமிலாதவராகி,—துணுக்கம் எய்த மறைந்தனர் - யாவரும் நடுஙகும்படி மறைந்தார். எ-று. (௬க)

வேறு.

தார்மேனின் றிலங்குபுய வழுதி மேலுந்
தன்மனை மங்கையர்மேலு மமைச்சர் மேலும்
ஆர்மேலுஞ் சென்றபொருஞ் சேனை மேலு
மயன்மேலு மரிமேலு மறவோர் மேலுந்
தேர்மேல்வெம் பகன்மேலு மதியின் மேலுஞ்
சிறந்துளவிந் திரன்மேலுந் தேவர் மேலும்
பார்மேலுங் கனன்மேலு நீரின் மேலும்
பட்டதரன் மெய்யிலடி பட்ட போதே.

இ-ள். அரன் மெய்யில் அடி பட்டபோது - சிவபெருமானது திருமேனியில் அடிபட்டபோது அவ்வடி —தார் மேல் நின்று இலங்கு புய வழுதி மேலும் - மாலைபுனைது மேனின்று விளங்குதற்குக் காரணமாகிய

புயங்களையுடைய பாண்டியராசன்மீதும்,—தன் மனை மங்கையர் மேலும் - அவ்வரசனது தருமபத்தினிகண்மீதும்,—அமைச்சர் மேலும் - அவனது மந்திரிகண் மீதும்,—ஆர் மேலும் சென்று பொரும் சேனை மேலும் - வலிமையுடைய பகைவர்மாட்டும் அஞ்சாது சென்று யுத்தஞ்செய்யும் அவனுடைய சேனைகளின்மீதும்,—அயன் மேலும் - பிரமாவின்மீதும்,—அரி மேலும் - விஷ்ணுவின் மீதும்,—அறவோர் மேலும் - முனிவர்கணமீதும்,—தேர் மேல் வெம் பகல் மேலும் - தேரின்கணிவர்ந்துசெல்லும் வெவ்விய சூரியன்மீதும்,—மதியின் மேலும் - சந்திரன்மீதும,—சிறந்துள இந்திரன் மேலும் - சிறப்பையுடைய இந்திரன்மீதும,—தேவர் மேலும் - ஒழிந்த தேவர்கண்மீதும்,—பார் மேலும் - பூமியின்மீதும்,—கனல் மேலும் - நெருப்பின்மீதும்,—நீரின் மேலும் பட்டது - நீரின்மீதும் ஒருங்கே பட்டது. எ-று. (கூஉ)

> தந்தமுரு வொழிந்துபிறி துருவ மாகிச்
>
> சதுர்முகனுஞ் சங்காழி தரித்த மாலும்
>
> அந்தமுத லறிவரிதாய் வெளியே நின்ற
>
> வண்ணலார் வடிவிலடி பட்ட போதில்
>
> எந்தவுல கங்களினு மிருநது ளோராக
>
> ளெமமுடலி லடியுறைத்த தென்று கூற
>
> முந்தியெழும பன்மொழிக ளுகாநத வெல்லை
>
> மோகரிக்கு மெழுகடலின் முழக்கம போன்ற.

இ-ள். சதுர் முகனும் சஙகு ஆழி தரித்த மாலும் தம் தம் உரு ஒழிந்து பிறிது உருவம் ஆகி - நான்கு முகஙகளையுடைய பிரமாவுஞ் சஙகுசக்கரங்களைத் தாஙகும் விஷ்ணுவுந் தததம் உருவஙகளைவிட்டு முறையே அன்னமும் பன்றியுமாகிய வேறறுருக்கொணடு தேடி,—அந்தம் முதல் அறிவு அரிது ஆய் வெளியே நின்ற அணணலார் வடிவில் அடி பட்டபோது - முடிவும் முதலும் அறிதற்கரிதாகி வெளிப்பட்டு நின்றருளும் எப்பொருட்கும் இறைவராகிய சோமசுந்தரக்கடவுளினது திருமேனியில அவ்வடிபட்ட போது,—எந்த உலகஙகளினும இருநதுளோாகள் எம் உடலில் அடி உறைத்தது என்று கூற முநதி எழும பல மொழிகள் - எல்லாவுலகஙகளினும் வசிப்பவர்களும் எஙகள் சரீரததில் அடிபட்டதென்று கூறுதலான் முற்பட்டெழும் பலதிறசசொற்களினொலிகள்,—உகாந்த எல்லை மோகரிக்கும எழு கடலின் முழககம் போன்ற - உகமுடிவின்கண முழஙகுஞ் சததசமுத்திரஙகளின் பேரொலிபோன்றன. எ-று. (கூந)

> மாயையெனுங் கரும்பெரிய புனன்மேன் மொக்குள்
>
> வண்ணமெனு மென்னிலா வண்டத் துள்ளும்
>
> ஏயவகை யெண்பத்து நான்கு நூறு
>
> யிரமான பலயோனி யெவற்றி னுள்ளும்

ஆயவுயிர்க் குயிராகி நிற்குந் தன்மை
யவனிதலத் தஞ்ஞான ரறிந்து பாதச்
சேயமலர் வழுத்துதற்கோ கூலி யாளாய்ச்
சென்றுமுடி மண்சுமந்தார் தில்லை நாதர்.

இ-ள். மாயை எனும் கரும் பெரிய புனல் மேல் மொக்குள் வண்ணம் எனும் எண் இலா அண்டத்து உள்ளும எய - மாயை என்று சொல்லப்படுமெ கருமையாகிய பெரிய கடலிலே தோன்றும் குமிழிகள்போலும் அளவற்ற அண்டஙகடோறுமுள்ள,—பல எண்பததுநான்கு நூறுயிரயோனி வகை ஆன எவற்றின் உள்ளும் ஆய உயிர்க்கு உயிர் ஆகி நிற்குந் தன்மை - பலவாகிய எணபததுநான்கு நூறுயிரயோனி பேததழையுடைய ஆன்மவர்க்கஙகட்கெல்லாம் பரமான்மாவாகி உண்ணின்றியக்குந் தமது சூக்குமத் தன்மையை,—அவனிதலதது அஞ்ஞானர் அறிந்து பாதச சேயமலர் வழுத்துதற்கோ - இந்நிலவுலகததுள்ள அஞ்ஞானிகளும அறிந்து தமது சிவந்த திருவடித்தாமரைகளைவணஙகித துதிதது உய்தற்பொருட்டேயோ,—தில்லை நாதர் கூலியாளாய்ச சென்று முடி மண சுமந்தார் - சிதம்பரசபாநாயகர் கூலியாளாகிச சென்று தந்திருமுடியில் மண்சுமந்தருளினர். எ-று. (௫௪)

வேறு.

மையணையுந் திருமிடற்றார் மெய்யிலடி வாதவூர்
ஐயருடம் பினுமவந்து படுதலுமே யயர்வெய்தி
உய்யவெனை யாட்கொள்வா னுவநதொருவர்க் காளாகி
மெய்யரெழுந் தருளினரோ வென்றென்று மிகநொந்து.

இ-ள். மை அணையும் திரு மிடற்றார் மெய்யில் அடி வாதவூர் ஐயர் உடம்பினும் வந்து படுதலும அயர்வு எய்தி - நஞ்சக்கறைபொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானது திருமேனியின்கட்பட்ட அவ்வடி திருவாதவூரருடைய திருமேனியினும் வந்து படுதலும் அவர் அறிவழிந்து பின்னர்த் தேறி,—உய்ய எனை ஆட்கொள்வான் உவந்து ஒருவர்க்கு ஆள் ஆகி மெய்யர் எழுந்தருளினரோ என்று என்று மிக நொந்து - உய்யும்பொருட்டு என்னை ஆட்கொண்டருளும்படி நாயேனை உவந்து தாமொருவர்க்குக் கூலியாளாகி மெய்ப்பொருளாகிய நஞ்சிவபெருமான் ஈண்டெழுந்தருளினரா என்றென்று சிந்தித்து மனம் மிகவுமிரஙகி. எ-று. (௫௫)

தம்பெருமை யறியாத தம்மிறைவர் தமக்கிரங்கிக்
கம்பிதமும் கண்ணீரும் வரக்கவற்சி யுறும்போதில்
வெம்பிறவி தொலைத்தார்முன் ஞரியர்கள் விரைந்தோடி
உம்பர்பிரான் றிருவிளையாட் டெல்லாமங் குரைத்தார்கள்.

இ-ள். தம் பெருமை அறியாத தம் இறைவர் தமக்கு இரங்கி - திருவாதவூரர் தம்பெருமையைத் தாம் அறியாத தம் கடவுளாகிய சிவபெருமான் பொருட்டு மனமிரங்கி,—கம்பிதமும் கண்ணீரும் வரக் கவர்சி உறும்போதில் - சரீரநடுக்கமும் கண்ணீரும் உண்டாக மனம் கவலைமிகுஞ்சமயத்தில்,—ஆரியர்கள் வெம் பிறவி தொலைத்தார் முன் விரைந்து ஓடி - கருமவதிகாரிகள் கொடிய பிறவியை நீக்குந் திருவாதவூரடிகளுக்குமுன் விரைந்தோடிச் சென்று,—உம்பர்பிரான் திருவிளையாட்டு எல்லாம் அங்கு உரைத்தார்கள் - தேவநாயகராகிய சிவபெருமானுடைய திருவிளையாடல்களையெல்லாம் அங்கே சொன்னார்கள். எ-று. (நிசு)

வேட்டுருகும் பெருங்காதல் வித்தகரித் தன்மையெலாங்
கேட்டுமனந் தளர்ந்துமிகக் கிளர்ந்துவிழிப் புனல்பெருக
வாட்டிகழுஞ் சடையண்ணல் மண்சுமந்த விடங்கொடுபோய்க்
காட்டுமென மொழிந்தவரோ டவ்வயினே கடிதெய்தி.

இ-ள். வேட்டு உருகும் பெரும் காதல் வித்தகர் இத் தன்மை எலாம் கேட்டு - மனம் நெக்குநெக்குருகும் பேராசையையுடைய சாதுரியராகிய திருவாதவூரர் இச்சம்பவங்களையெல்லாங் கேட்டு,—மனம் மிகத் தளர்ந்து விழிப்புனல் கிளர்ந்து பெருக - மனமிகமெலிந்து கண்ணீர்ததும்பிப் பெருக,—வாள் திகழும் சடை அண்ணல் மண சுமந்த இடம் கொடுபோய்க் காட்டும் என மொழிந்து - செவ்வொளிவிளங்குஞ் சடையையுடைய சொக்கநாதசுவாமி மணசுமந்தருளிய இடத்தை என்னைக்கொண்டுசென்று நீவிர் காட்டுங்கள் என்று,—அவரோடு அவ்வயின் கடிது எய்தி - அக்கருமவதிகாரிகளோடு அவ்விடத்து அதிசீக்கிரத்திற் சென்று. எ-று. (நிஎ)

அழுங்கியருப் பெருநரகி லடியேனும் வீழாமல்
எழுந்தருளும் பெரியோனே யெங்கணுளா யென்றென்று
தொழுங்கரமுங் கண்ணீருந் துளங்கியமெய்ப் புளகமுமாய்
விழுந்துபுரண் டிவ்வாறு புலம்பினர்மெய் யன்பாளர்.

இ-ள். மெய் அன்பாளர் - மெய்யன்பையாளுந் திருவாதவூரர்,—அடியேனும் அரும் பெரு நரகில அழுந்தி வீழாமல் எழுந்தருளும் பெரியோனே - தமியேனும் ஏறுதற்கரிய பெரிய நிரயமாகிய படுகுழியின்கண் வீழ்ந்து வருந்தி அழுந்தாவண்ணம் முன்னர்க் குருமூர்த்தங்கொண்டெழுந்தருளிவந்த பெருந்தகைமையையுடையவரே,—எங்கண் உளாய் என்றென்று - எங்கே இருக்கின்றீர் எங்கே இருக்கின்றீர் என்று,—தொழும் கரமும் கண்ணீரும் துளங்கிய மெய்ப்புளகமும் ஆய் - கும்பிடுங் கைகளும் கண்ணீரும் நடுங்குகின்ற சரீரத்தில் அரும்பிய புளகமுமாகி,—விழுந்து புரண்டு இவ்வாறு புலம்பினர் - வீழ்ந்து புரண்டு இந்தப்பிரகாரம் வியாகுலங்கொண்டு புலம்புவாராயினர். எ-று. (நிஅ)

நீறுபடும் பொன்மேனி நின்மலனே நெடுங்கங்கை
ஆறுபடுஞ் சடைமுடியா யடிவர்கட் கெளியானே
மாறுபடும் புரமெரித்தாய் மாறுபடும போதுடலிற்
கூறுபடுஞ் சிவஞானக் கொம்பினுளங் குழையாதோ.

இ-ள். நீறு படும் பொன் மேனி நின்மலனே - விபூதிதரித்த பொன் போலுந் திருமேனியையுடைய மலரகிதரே,—நெடும் கஙகை ஆறு படும் சடைமுடியாய் - நெடிய கஙகாநதி பிரவாகிக்குஞ் சடாமுடியையுடையவரே,—அடியவாகட்கு எளியானே - அடியவாகட்கு எளியவரே,—மாறுபடும் புரம் எரிததாய் - மாறுபட்ட புரஙகளை எரிததவரே,—உடலில மாறு படும்போது - தேவரீருடைய திருமேனியிற பிரமபடிபடுமபோது —உடலில் கூறுபடும் சிவஞானக கொமபின் உளம குழையாதோ - அததிருமேனியின்கட் கூறு பட்ட சிவஞானககொமபாகிய உமையமமையினது திருவுளம் வருந்திற் றில்லையோ. எ-று. (ருக)

கொங்கையான் மணிமாாபிற குறியிடுமவ் வீறுடைய
மங்கையாள் பெருமானை மண்சுமகக மதிததாளோ
கஙகையா ளலைககரததாற கரைததிலளோ புள்ளுருவாம்
பஙகையா சனனறியாப பணிமுடியென் றறியாளோ.

இ-ள். கொஙகையால் மணி மாாபில் குறியிடும் அவ் வீறு உடைய மங்கையாள் - தமது தனஙகளால திருமாாபிலே அழகிய தழும்புபடுத்திய அந்த மேன்மையையுடைய உமையமமையாா,—பெருமானை மண சுமக்க மதித்தாளோ - தமது பிராணநாயகரைககொணடு மணசுமப்பிக்கத திருவுளமிசைந்தாரா,—கஙகையாள அலைககரததால் கரைததிலளோ - மற்றைக் கஙகையானவள திரையாகிய கைகளால அமமணணைக் கரைததழிததாளில்லையோ,—புள உருவாம பஙகையாசனன அறியாப் பணி முடி என்று அறியாளோ - அன்னபபறவைவடிவாகிய பிரமாவால அறியப்படாத பாம்பினை அணிந்த திருமுடியெனறு அறியாளோ. எ-று. (கூ0)

பிரமனுடன் றிருமாலும பிறபபகலப் பலநாலும்
பரவியிடுநறு மலரோ பததரிடும பசசிலையோ
புரிதருசெஞ் சடையோநற புதுமதியோ வாயிரவாய்
வரியரவின பலபடமோ மணசுநத சுமமாடு.

இ-ள். மண சுமநத சுமமாடு - தேவரீர் மணசுமந்தருளிய சுமையடையானது,—பிரமனுடன் திருமாலும பிறப்பு அகலப் பலகாலும் பரவி இடும் நறு மலரோ - பிரமவிஷ்ணுககளாகிய இருவருந தம் பிறவியறும்படி பல முறையும் சாததிய பூககளோ,—பததா இடும பசசிலையோ - அன்பர்கள் அருசசிதத பசசிலைகளோ,—புரி தரு செஞ் சடையோ - முறுக்கைததரும் சிவந்தசடையோ,—நல புது மதியோ - நல்ல புதிய சந்திரனோ,—வரி அரவின் பல படமோ - இரேகையையுடைய சாப்பததினது பலபடங்களோ. எ-று.

கலையெறியும் புகழ்வைகைக் கரைதிருவம் பலமாக
அலையெறியும் புனலோசை யந்தரதுந் துபியாகத்
தலைவனடங் கண்டார்க ளரவமெனுந் தவமுனியுங்
கொலைதவிரும் புலியென்னுங் குலமுனியு மானுரோ.

இ-ள். கலை எறியும் புகழ் வைகைக் கரை திரு அம்பலம் ஆக - தேவாரப்பதிகம் எழுதிய ஏடிடப்பட்ட புகழையுடைய வைகைநதிக்கரை அழகிய வெள்ளியம்பலமாக,—அலை எறியும் புனல் ஓசை அந்தர துந்துபியாக - திரைமறிகின்ற நீரினதொலி தேவதுந்துபிகளாக,—தலைவன் நடம் கண்டார்கள் - பசுபதியாகிய சோமசுந்தரக் கடவுளினுடைய திருநடனத்தை நேரே தரிசித்தவர்கள்,—அரவம் எனும் தவமுனியும் கொலை தவிரும் புலி என்னும் குல முனியும் ஆனுரோ - பதஞ்சலியென்னுந் தவத்தையுடைய முனிவரும் கொலையில்லாத வியாக்கிரபாதர் என்னும் உயர்ந்த முனிவருமாயினார்களோ. எ-று. (சுஉ)

மீனேறுங் கொடித்தென்னன் விழிக்கேற விரைதுரகந்
தானேறு வதுகண்டு தருங்கலைபொற் செண்டேறத்
தேனேறு மலர்க்கொன்றைத் திருமுடிமேன் மண்ணேற
யானேறுஞ் சிவபதமு மெனக்கேற வின்றுது.

இ-ள். மீன் ஏறும் கொடித் தென்னன் விழிக்கு ஏற - மீனை எழுதும் கொடியையுடைய பாண்டியராசனது கண்களுக்குப் புலப்பட,—விரை துரகம் தான் ஏறுவது கண்டு தரும் கலை பொன் செண்டு ஏற - விரைந்துசெல்லுமியல்பையுடைய குதிரையின்மீது தாமிவர்தலைக் கண்டு அவ்வரசன் பரிசாகக் கொடுக்கும் பீதாம்பரம் அழகிய செண்டின்மீது தங்குதலானும்,—தேன் ஏறு கொன்றை மலர்த திருமுடிமேல் மண் ஏற - தேன்பொருந்திய கொன்றைப்பூமாலையைத் தரித்த திருமுடியின்மீதே மண்சுமை யேறுதலானும்,—யான் ஏறுஞ் சிவபதமும் எனக்கு ஏற இன்றுது - யான் எய்தக்கடவதாகிய இனிய சிவபதப்பேறும இனி எனக்கின்றுமையை யுடையதாயிற்று. எ-று. (சுங)

பொன்னுலகத் துள்ளோரும் புரந்தரனுந் திருமாலும்
மன்னுமறைக் குரியோனும வழியடிமைத் தொழில்செய்ய
அன்னானைக் காளாகி யணிவைகை யடைத்தடியுண்
டென்னையருட் பணிகொள்ள விசைந்தனையோ விறையோனே.

இ-ள். பொன் உலகத்து உள்ளோரும் - சுவர்க்கலோகவாசிகளாகிய தேவர்களும்,—புரந்தரனும் திருமாலும் மன்னும் மறைக்கு உரியோனும் வழி அடிமைத் தொழில் செய்ய - இந்திரனும் விஷ்ணுவும் நிலைபெற்ற வேதங்கட்குரிய பிரமாவுந் தேவரீருக்கு வழித்தொண்டு செய்யாநிற்கவும்,—

இறையோனே அன்னை தனக்கு ஆள் ஆகி அணி வைகை அடைத்து அடியுண்டு என்னை அருள் பணி கொள்ள இசைந்தனையோ - சுவாமீ! மாதா வாகிய வந்திக்குக் கூலியாளாகி அழகிய வைகைநதிக்கரையை மண்சுமந் தடைத்துப் பிரமபடியுண்டு கடையேனாகிய தமியேனையுந் திருவுளத்து மகிழ்ந்த பெருங்கருணைத் திறத்தினாலே அடிமைகொண்டருளத் திருவுளம் பொருந்தினீரோ. எ-று (சுசு)

கட்டுமரைத் துணிச்சீரைக் கச்சையுமத் திருத்தோளிற்
கொட்டுமுடித் தலைமீது கவித்ததொரு கூடையுமாய்ப்
பிட்டுநேற் றவமுடையாள் பின்புவருந் திருக்கோலம்
இட்டமுறத் தொழும்படிநான் கண்டிலே னிறையோனே.

இ-ள். அரை கட்டுமத் துணிச் சீரைக் கச்சையும் - திருவரையிற் கட்டிய கந்தையாகிய வஸ்திரக்கச்சையும்,—அத் திரு தோளில் கொட்டும் - அந்த அழகிய திருப்புயத்தினைக்கட்கொண்ட மண்வெட்டியும்,—முடித் தலை மீது கவித்தது ஒரு கூடையும் ஆய - சடையே முடியாகக்கட்டிய சிரசின்மீது கவிக்கப்பட்டதொரு கூடையுமாகி,—பிட்டு இடு நல தவம் உடையாள் பின்பு வரும் திருக்கோலம் - பிட்டமுதுகொடுத்த நல்ல தவத்தையுடைய வந்தியின் பின் வந்தருளிய திருக்கோலத்தை,—இட்டம் உறத் தொழும்படி இறையோனே நான் கண்டிலேன் - என் திசைப்படியெல்லாம் தரிசித்து வணங்குதற்குத் தமியேன் அத்தருணத்துத் தேவரீரைத் தரிசிக்கப்பெற்றே னில்லையே. எ-று. (சுஎ)

தாரூருஞ் சடைமுடியாய் தவம்பெரிது முயன்றவர்கள்
நீரூரும் புகழ்வைகை நெடுங்கரைமே னின்றீரோ
சீரூருங் கனகமுடித் தென்னவனே மதுரையெனும்
பேரூரி லிருப்பவரோ பிட்டமுதிட் டருளவாரோ.

இ-ள். தார் ஊரும் சடை முடியாய - கொன்றைமாலை அசைகின்ற சடைமுடியையுடையவரே,—தவம் பெரிதும் முயன்றவர்கள் - தவத்தினை மிகவுஞ் செய்தவர்கள்,—நீர் ஊரும் புகழ் வைகை நெடும் கரைமேல் நின்றீரோ - நீர் பிரவாகிக்கும் புகழையுடைய இவ்வைகைநதியினது நெடிய கரையின்கண் நின்றவர்களோ,—சீர் ஊரும் கனகமுடித் தென்னவனே - அழகொழுகும் பொன்முடியையுடைய பாண்டியராசனே,—மதுரை எனும் பேர் ஊரில் இருப்பவரோ - மதுரை என்னும் பெயரையுடைய இவ் விராசதானியின்கணுள்ளவரோ,—பிட்டு அமுது இட்டருளவாரோ - தேவரீருக்குப் பிட்டமுதிட்டருளிய அவ்வம்மையோ பணித்தருளுக. எ-று. (சுஅ)

பொன்மவுலிந் தலைமீது புண்ணியமண் சுமந்தேறுங்
கொன்மலியுங் கோலறையுங் குளிர்வைகைப் பேராறுங்
கன்மமெனும் பகைநீங்கக் கண்ணுதல்வெம் பரியேறுந்
தென்மதுரை மூதூரு மலவோ சிவலோகம்.

இ-ள். புண்ணியர் பொன் மவுலித் தலை மீது மண் சுமந்து ஏறும் கோன் மலியும் கோலமறையும் - அறவியல்பினராகிய சோமசுந்தரக்கடவுள் பொன்போலுஞ் சடாமுடியையுடைய திருமுடியின்மீது மண்சுமந்தேறி யருளப்பெறும் பெருமைமிகுந்த வந்தியினது இப்பகுதிநிலமும்,—குளிர் வைகைப் பேர் ஆறும - குளிர்ச்சிபொருந்திய வைகை என்னும் பெயரை யுடைய இந்நதியும்,—சன்மம் எனும் பகை நீங்கக் கண்ணுதல் வெம் பரி ஏறும் தென் மதுரை மூதூரும அல்லவோ சிவலோகம் - தரிசித்த தம் மெய்யன்பரைச் சன்மம் என்னும் பகை விட்டு நீங்கும்படி சிவபிரான் வெவ்விய குதிரையின்மீதேறப்பெறுந் தெற்கின்கணுள்ள மதுரையாகிய பழைய இந்நகரமுமன்றோ சிவலோகமாவது. எ-று. (௬௭)

இன்னவகை யன்புடையா ரிரங்கினரா யிடைவைகைத்
துன்னுதிரைப் பேராறுந் தொலைபவடிந் ததுபின்னர்த்
தென்னவனுஞ் சிவன்செயலா மெனத்தெளிந்து வாதவூர்
மன்னவர்தம் பாலணைந்து வணங்கியிது கூறுவான்.

இ-ள். இன்னவகை அன்பு உடையார் இரங்கினர் - இந்தப்பிரகாரம் அன்பராகிய திருவாதவூரர் இரங்காநின்றனர்,—ஆயிடை துன்னு திரைப் பேர் வைகை ஆறும் தொலைய வடிந்தது - அங்கே நெருங்கிய அலைகளை யுடைய பெரிய வைகைநதியும் முற்ற வடிந்தது —பின்னர் தென்னவனும் சிவன் செயலாம் எனத் தெளிந்து - பின்னர் பாண்டியராசனும் சோம சுந்தரக்கடவுளுடைய திருவிளையாடலேயாமென்று நிச்சயித்தறிந்து,— வாதவூர் மன்னவர் தம்பால் அணைந்து வணங்கி இது கூறுவான் - திருவாதவூரரை அடைந்து வணங்கி இதனைச் சொல்வாராயினான். எ-று. (௬௮)

அந்தரர்தம் பதியினிழிந் தருள்புனைமாத் தியர்குலத்தில்
வந்தருளித் தமியேற்கு மந்திரியாய் மகிழ்வெய்தி
எந்தைவயப் பரியேறல் காட்டியெனக் கொழியாத
பந்தமறத் திருவுள்ளம் பற்றினைநற் றவத்தோனே.

இ-ள். நல் தவத்தோனே - சிறந்த தவத்தையுடையவரே,—அந்தரர் தம் பதியின் இழிந்து - மேலுலகத்தினின்றும் வந்து,—அருள் புனை மாத்தி யர் குலத்தில் வந்தருளி - அருளையுடைய ஆமாத்தியரது குலத்தின்கணே திருவவதாரஞ்செய்தருளி,—தமியேற்கு மந்திரி ஆய மகிழ்வு எய்தி - தமியேனுக்கும் மந்திரியாகி மகிழ்ச்சியை அடைந்து —எந்தை வயப் பரி ஏறல் காட்டி - எமபரமபிதாவாகிய சோமசுந்தரக்கடவுள் வலிய குதிரையின் மீதிவர்ந்தருளுதலைக் காட்டி இவ்வாறெல்லாம் —எனக்கு ஒழியாத பந்தம் அறத் திருவுள்ளம் பற்றினை - தமியேனுக்கிதுகாறும் நீங்காத பாசக்கட் டறும்படி தேவரீர் திருவுள்ளம்பற்றினீர். எ-று (௬௯)

கருமாளத் திருமேனி காட்டினனென் றுணராமற்
றிருமாலும் பரவரியான் றேவருடன் பரியேறும்

அருமாயச் சூழலினா லழுக்காடை யண்டர்தொழும்
பெருமானுக் களித்தேனென் பிழைசெய்தேன் பெரியோனே.

இ-ள். திருமாலும் பரவு அரியான் தேவருடன் பரி ஏறும் அருமாயச சூழலினால் - விஷ்ணுவாலும் இத்தன்மையா னென்றறிந்து துதித்தற்கரிய சிவபெருமான் தேவர்களோடு குதிரையின்மீதிவர்ந்தருளிவந்த அறிதற்கரிய மாயசசூழ்ச்சியினான் மயங்கி,—கருமாளத திருமேனி காட்டினன் என்று உணராமல் - தமியேனது பிறவியறும்படி உருவத்திருமேனிகொண்டு தம்மைத் தரிசிப்பித்தருளினாரென்று அறிந்துகொள்ளமாட்டாமை மேலும்,—அண்டர் தொழும் பெருமானுக்கு அழுக்கு ஆடை அளித்தேன் - தேவர்களுந்தொழும்பெருந்தகைமையினையுடைய அக்கடவுளுக்கு அழுக்குவஸ்திரம் ஒன்றைப் பரிசுகொடுத்தேன்,—பெரியோனே என பிழை செய்தேன் - எம்பெருமானே எத்துணைப்பெரும குற்றத்தைச் செய்தேன். எ-று. (எ0)

அப்பணிசெஞ் சடையானை யரும்பரிமே லாளாக்கும்
மெய்ப்பொருளென் றுணராமல வெய்யவினைப் பொருள்வேண்டிச்
செப்பருமித் தறுகண்மை செய்வித்தேன் சிறுமையுளேன்
எப்பிழையும் பொறுத்தருளா யானரகிற் புகுதாமல்.

இ-ள். அப்பு அணி செம் சடையானை அரும் பரிமேல் ஆள் ஆக்கும் மெய்ப் பொருள் என்று உணராமல் - கங்காநதியைத்தரித்த சிவந்த சடையையுடைய சிவபெருமானை அரிய குதிரையின்மேல் மனிதவடிவாக வரச்செய்யும் மெய்ப்பொருள் தேவரீர் என்பதுணரமாட்டாமல்,—வெய்ய வினைப் பொருள் வேண்டி - கொடிய வினையைத்தரும பொருளையே விரும்பி,—சிறுமை உளேன் செப்பு அரும இத் தறுகணமை செய்வித்தேன் - சிறுமையையுடைய பாவியேன் வாயாற சொலலுதறகரிய இக் கொடுந்தண்டங்களைச் செய்வித்தேன்,—யான் நரகில் புகுதாமல எப்பிழையும் பொறுத்தருளாய் - யானிரயத்தின்கட் பிரவேசியாதொழியும்பொருட்டு எவ்வகைக் குற்றங்களையுந் தேவரீர் பொறுத்தருளுக. எ-று. (எக)

தூநாக மணிந்தபிரான் றுங்கமிகும் பரியேறிப்
பூநாறுஞ் சடைமேன்மண் சுமந்தபுகழ் போதாதோ
யானாளு நின்பணியே செய்தொழுக விவ்வுலகந்
தானாள வேண்டுமினி யென்றிரந்தான் றமிழ்மாறன்.

இ-ள். தூ நாகம் அணிந்த பிரான் துங்கம் மிகும் பரி ஏறி - சுத்தமாகிய பாம்பையணிந்த சிவபிரான் உயர்ச்சிமிகுந்த குதிரையின்மீதிவர்ந்தருளி வரப்பெற்றதன்மேலும்,—பூ நாறும சடை மேல் மண் சுமந்த புகழ் போதாதோ - கொன்றைப்பூமணங் கமழுஞ் சடாமுடியின்மேன் மண்சுமந்தருளிய கீர்த்தி ஒன்றும் எனக்குப் போதாதோ,—யான் நாளும் நின் பணியே செய்து ஒழுக - தமியேன் நாடோறுந் தேவரீரது பணிகளையே செய்துகொண்டு திரிய,—இனி இவ்வுலகம் ஆளவேண்டும் என்று தமிழ்

மாறன் இரந்தான் - இனி இவ்வுலகத்தைத் தேவரீரே அரசாளுதல்வேண்டும் என்று தமிழையுடைய அரிமர்த்தனபாண்டியராசன் குறையிரந்து விண்ணப்பஞ்செய்தான். எ-று. (எஉ)

வேறு.

வன்றிறன் மன்ன னிவ்வா றிரத்தலும் வாத வூரர்
தென்றிசை புரக்கு நீதித் தென்னவன் றன்னை நோக்கிப்
பின்றிகழ் சடையான் மன்னும் பெருந்துறை நகரி லேக
இன்றெனை விடுப தேமற் றிவ்வுல களிப்ப தென்றார்.

இ-ள். வன் திறல் மன்னன் இவ்வாறு இரத்தலும் - மிக்க வலிமையையுடைய பாண்டியராசன் இவ்வாறு குறையிரந்து கூறுதலும்,—வாதவூரர் தென் திசை புரக்கும் நீதித் தென்னவன் தன்னை நோக்கி - திருவாதவூரர் தென்றிசையைக் காக்கும் நீதியையுடைய பாண்டியராசனைப் பார்த்து,—பின் திகழ் சடையான் மன்னும் பெருந்துறை நகரில் ஏக - பின்றாழ்ந்து விளங்காநின்ற சடையையுடைய கடவுள் வீற்றிருக்கப்பெறுந் திருப்பெருந்துறையாகிய நகரிற் செல்லுமாறு,—இன்று எனை விடுப்பதே மற்று இவ்வுலகு அளிப்பது என்றார் - இன்றைக்கு என்னை விடுவதே இவ்வுலகத்தைத் தருதலாமென்று கூறினர். எ-று. (எங)

தென்புலத் தலைவன் றானுஞ் சிந்தையி னோர்ந்து முன்னோன்
அன்பருக் கரசர் வாழ்வி லாசையிங் குளதோ வென்று
மென்பதத் திறைஞ்சி யையா வேண்டிய செய்க வென்று
தன்புகழ்க் கூடன் மூதூர் புகுந்தனன் றானை சூழ.

இ-ள். தென்புலத் தலைவன் தானும் - தென்றிசைக்கு அரசனாகிய பாண்டியனும் அதுகேட்டு,—முன்னோன் அன்பருக்கு இங்கு அரசர் வாழ்வில் ஆசை உளதோ என்று சிந்தையில் ஓர்ந்து - சிவபத்தருக்கு இங்குள்ள அரசவாழ்க்கையில் இன்பம் உளதோ என்று மனத்திலே ஆலோசித்தறிந்து,—மென் பதத்து இறைஞ்சி ஐயா வேண்டிய செய்க என்று - மெல்லிய திருவடிக்கீழ் வணங்கிச் சுவாமீ நீர் வேண்டியவைகளைச் செய்தருளுக என்று விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு,—தானை சூழத் தன் புகழ்க் கூடல் மூதூர் புகுந்தனன் - சேனைகள்சூழத் தனது புகழையுடைய கூடலாகிய பழைய ஊரினுள்ளே பிரவேசித்தான்.

சற்றவத் தொழில்செய் யாத தானைமன் போன பின்னர்
அற்றவர்க் கற்ற சோதி யருட்பெரு வாழ்வு வேண்டிக்
கொற்றவர்க் குற்ற கோலங் குறையென நீத்து மேலாம்
நற்றவக் கோலங் கொண்டார் நம்பனுக் கன்பு மிக்கார்.

இ-ள். சற்று அவத் தொழில் செய்யாத தானை மன் போன பின்னர் - சிறிதும் வீண்டொழில் செய்யாத சேனைகளையுடைய பாண்டியராசன்

நன்னகருட் சென்றபின்னர்,—நம்பனுக்கு அன்பு மிக்கார் - சிவபெருமானிடத்து அன்புடைய திருவாதவூரர்,—அற்றவர்க்கு அற்ற சோதி அருள் பெரு வாழ்வு வேண்டி - பற்றற்றவர்கட்கு இரண்டற்ற சோதியாகிய சிவபெருமானது திருவருளினாலே பேரின்பவாழ்வைப் பெறவிரும்பி,—கொற்றவர்க்கு உற்ற கோலம் குறை என நீத்து - அரசர்கட்குரிய வேடம் குற்றமுடையதென்று அதனை ஒழித்து,—மேலாம் நல் தவக் கோலம் கொண்டார் - உயர்வாகிய நல்ல தவவேடத்தைக்கொண்டருளினார். எ-று. (எ0)

அத்தனை யால வாயி லண்ணலை யிறைஞ்சி யந்த
மைத்திகழ் சோலை நீடு மதுரையம் பதியை நீங்கி
வித்தகர் தம்மை யாண்ட மேனிகண் டிறைஞ்ச வேண்டும்
பித்தினர் கடிது சென்றார் பெருந்துறை பொருந்த வெண்ணி.

இ-ள். அத்தனை ஆலவாயில் அண்ணலை இறைஞ்சி - திருவாதவூரர் பரமபிதாவும் திருவாலவாயின்கண் வீற்றிருக்கும் தலைவருமாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்து வணங்கி அனுமதிபெற்றுக்கொண்டு,—மைத் திகழ் சோலை நீடு அந்த மதுரையம்பதியை நீங்கி - முகில்கள் விளங்குஞ் சோலைகளுயர்ந்த அம்மதுரையாகிய இராசதானியைவிட்டு நீங்கி,—வித்தகர் தம்மை ஆண்ட மேனி கண்டு இறைஞ்ச வேண்டும் பித்தினர் - சாதுரியராகிய கடவுள் வந்து தம்மை ஆட்கொண்டருளிய ஞானதேசிகத் திருமேனியைத் தரிசித்து வணங்கவேண்டுமென்னும் பிராந்தியையுடையவராய்,—பெருந்துறை பொருந்த எண்ணி கடிது சென்றார் - திருப்பெருந்துறையை அடையும்படி கருதி விரைந்துசென்றனர். எ-று. (எக)

மிடைகெட வைத்த பாத வித்தக ரூரை நோக்கி
நடையிடு மெல்லை தன்னி னன்மன விரைவுங் காற்றுந்
தடைபடு கன்றை நாடுங் கபிலையுந் ததும்பி நின்று
மடையிடை யுடைக்கு நீரு மாயினர் வாத வூரர்.

இ-ள். வாதவூரர் மிடை கெட வைத்த பாத வித்தகர் ஊரை நோக்கி நடை இடும் எல்லை தன்னில் - திருவாதவூரர் தமது வறுமை கெடத் திருவடி தீக்ஷைசெய்தருளிய பரமாசாரியர் வீற்றிருக்குந் திருப்பெருந்துறையை நோக்கி நடக்கும்பொழுது —நல்மன விரைவும் காற்றும் தடைபடும் கன்றை நாடும் கபிலையும் ததும்பி நின்று மடையிடை உடைக்கும் நீரும் ஆயினர் - நல்ல மனோவேகத்தையும் வாயுவேகத்தையும் தடைப்பட்டு காணாது நின்ற தன்கன்றை நாடிச்செல்லுந் தலையீற்றுப்பசுவினது வேகத்தையும் அணையை இடையே உடைத்தோடும் நீர்வேகத்தையும் ஒத்தார். எ-று. (எஉ)

கண்ணுழை யாத காவும் பதிகளுங் கடிது நீங்கி
எண்ணரு முனிவா மேவு மெழிற்பெருந் துறையி லெய்திப்
புண்ணிய விரதர் சூழ முன்புபோ லிருந்த போதில்
விண்ணவ ரதிபன் பொற்றாள் வீழ்ந்தது தாழ்ந்து சொல்வார்;

இ-ள். கண் நுழையாத கானும் பதிகளும் கடிது நீங்கி எண் அறு முனிவர் மேவும் எழில் பெருந்துறையில் எய்தி - திருவாதவூரர் கட்பார்வையும் நுழைதற்கரிய காடுகளையும் ஊர்களையும் சீக்கிரத்திற் கடந்துபோய் அளவில்லாத இருடிகள் வசிக்கும் அழகிய திருப்பெருந்துறையை அணட்ந்து,—விண்ணவர் அதிபன் புண்ணிய விரதர் சூழ முன்புபோல் இருந்த போதில் பொன் தாள் வீழ்ந்து தாழ்ந்து இது சொல்வார் - தேவநாயகராகிய சிவபெருமான் அப்புண்ணியபுருஷர்களாகிய அடியார் பக்கத்தே சூழ்ந்து சேவிப்ப முன்னரே போல வீற்றிருந்தருளுஞ் சமயத்து, அவரது பொன்போலுந் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி இங்ஙனஞ் சொல்வாராயினர். எ-று. (எஅ)

தீண்டுதற் கரிய மார்பிற் சேயிழை தனத்தி னாலும்
ஈண்டொரு மாற்றி னாலு மெய்திய தழும்ப போற்றி
வேண்டிய வடிவ மாகி வெம்பரி மேலகொண் டெம்மை
ஆண்டருள் செய்ய வந்த வண்ணலே போற்றி போற்றி.

இ-ள். தீண்டுதற்கு அரிய மார்பின் சேயிழை தனத்தினாலும் ஈண்டு ஒரு மாற்றினாலும் எய்திய தழும்ப போற்றி - தீணடுதற்கரிய மார்பினையுடைய உமாதேவியின் தனத்தினாலும் இங்கே ஒரு பிரம்பினாலும் வந்த தழும்பையுடையவரே காத்தருளக,—வேணடிய வடிவம் ஆகி வெம் பரி மேல் கொண்டு எம்மை ஆணடு அருள் செயய வந்த அணணலே போற்றி போற்றி - விரும்பிய வடிவை எடுத்து வெவ்விய குதிரையின்மேலிவர்ந்து அடியேஙகளை ஆட்கொணடனுக்கிரகஞ் செய்யும்பொருட்டு எழுந்தருளிவந்த எப்பொருட்குமிறைவரே தமியேனைக் காததருளுக காத்தருளுக. எ-று. ()

அண்டருக் கரியாய் போற்றி யடியவர்க் கெளியாய் போற்றி
வண்டமிழ்ப் பாண்டி நாடு வாழமண் சுமந்தாய் போற்றி
கண்டனக் கினிய மேனி காட்டியென் சென்னி மீது
முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி.

இ-ள். அண்டருக்கு அரியாய் போற்றி - தேவர்களுக்கரியவரே காத்தருளுக,—அடியவர்க்கு எளியாய் போற்றி - அடியவாகட்கு எளியவரே காத்தருளுக,—வண தமிழ்ப் பாண்டி நாடு வாழ மண் சுமந்தாய் போற்றி - செந்தமிழையுடைய பாண்டிநாடு வாழும்படி மண்சுமந்தருளினவரே காத்தருளுக,—கண் தனக்கு இனிய மேனி காட்டி என் சென்னிமீது முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி - என் கண்களுக்கினிய ஞானதேசிகத்திருமேனியைக் காண்பித்து என் புன்றலைமீது செந்தாமரைமலர்போலுந் திருவடிகளைச் சூட்டியருளிய அநாதிமலமுத்தரே தேவரீா அடியேனைக் காத்தருளுக. எ-று. (அ0)

போற்றியென் றின்ன வாறு புகன்றவர் முடிமேற் செங்கை
ஏற்றியங் கினிய கூறி யெழுகென வெழுந்த பின்னர்
நீற்றையும் புனைந்து ஞான நிறையருட் பார்வை நல்கி
வீற்றிருந் தன்பர் சூழ விளங்கினர் களங்க மில்லார்.

இ-ள். போற்றி என்று இன்னவாறு புகன்றவர் முடிமேல் செங்கை யேற்றி - தேவரீர் காத்தருளுக என்று இந்தப்பிரகாரம் தோத்திரஞ் செய்த திருவாதவூரராகிய சீடரது சிரசின்மீதே தமதருமைத்திருக்கரத்தை வைத்து,—நீற்றையும் புனைந்து ஞான நிறை அருள் பார்வை நல்கி - தமதருமைத்திருக்கரத்தினாலே விபூதியையுந் தரித்து ஞானத்தை முறுகுவிக்கும் பூரண கிருபாநோக்கமுஞ்செய்து,—அங்கு இனிய கூறி எழுக என எழுந்த பின்னர் - அங்கே இனிய வசனங்களைத் திருவாய்மலர்ந்து அன்பனே நீ எழுந்திரு என்று அருளிச்செய்ய எழுந்தபின்பு,—களங்கமில்லார் - குற்றமில்லாதவராகிய திருவாதவூரர்,—அன்பர் சூழ வீற்றிருந்து விளங்கினர் - திருத்தொண்டர் சூழ இனிதிருந்து விளங்கினர். எ-று. (அக)

அந்தமு முதலு மில்லா ரடியவர் தம்மை நாடி
வந்துள கருமமெல்லா முடித்தன மகிழ்ச்சி கூர
நந்திகழ் வடிவங் காண வேண்டிநற் கயிலை யுள்ளார்
சிந்தனை செய்தார் வல்லே யாண்டுநாஞ் சேறல் வேண்டும்.

இ-ள். அந்தமும் முதலும் இல்லார் அடியவர் தம்மை நாடி - முடிவும்முதலுமில்லாதவராகிய சிவபிரான் தம்மடியார்களைநோக்கி,—வந்துள கருமம் எல்லாம் முடித்தனம் - நாம் உத்தேசித்துவந்த கருமங்களையெல்லாம் இனிது முடித்துக்கொண்டோம்,—நல் கயிலை உள்ளார் நம் திகழ் வடிவங் காணவேண்டி சிந்தனை செய்தார் - நல்ல கைலாசகிரியில் வசிக்கும் நம்மன்பர்களெல்லாம் நமது விளங்காநின்ற உருவத்திருமேனியை நேரே தரிசிக்கவிரும்பித் தியானிக்கின்றார்கள் ஆகலின்,—மகிழ்ச்சி கூர நாம் ஆண்டு வல்லே சேறல் வேண்டும் - அவர்கட்கு மகிழ்ச்சிமிக நாமினி அவ்விடத்து விரைந்து செல்லுதல்வேண்டும். எ-று. (அஉ)

வாழ்ந்திரு மின்பின் யாமு மேகுவ மென்ன வந்து
சூழ்ந்தரு ளுருவா மன்பர் தோத்திரம் பலவுஞ் செய்து
தாழ்ந்தெதி ரிறைஞ்சி யையா தரிப்பரி தென்று மண்மேல்
வீழ்ந்தயர்ந் தழுதா ரெம்மை விடுதியோ வென்று நொந்தார்.

இ-ள். இன்பின் வாழ்ந்து இரும் யாமும் ஏகுவம் என்ன - நீங்கள் இன்பத்தோடிங்ஙனம் வாழ்ந்திருங்கள் நாமுங் கைலாசகிரிக்குச்செல்வேம் என்று பரமாசாரியர் திருவாய்மலர்ந்தருள,—அருள் உருவாம் அன்பர் எதிர் வந்து தாழ்ந்து இறைஞ்சிச சூழ்ந்து தோத்திரம் பலவுஞ் செய்து

அன்புருவாகிய திருத்தொண்டர்கள் அதுகேட்டுச் சந்நிதியில்வந்து வீழ்ந்து வணங்கி வலம்வந்து பலதோத்திரங்களையுஞ் சொல்லித் துதித்து,—ஐயா தரிப்பு அரிது என்று மண்மேல் வீழ்ந்து அயர்ந்து அழுதார் - சுவாமீ! அடியேங்கள் தேவரீரது பிரிவைசசகித்திருப்பதரிது என்று விண்ணப் பஞ்செய்து மறித்தும் பூமியில்வீழ்ந்தழுது அறிவழிந்தார்,—எம்மை விடுதியோ என்று நொந்தார் - தேவரீர் அடியேங்களைக் கைவிடுகின்றீரோ என்று வருந்தினர். எ-று. (அங)

பரிந்தழு மடியார் தம்மேற் பரமரு மன்பு கூர்ந்து
வருந்துவ தொழிமி னிந்த மணமலி குருந்த நீழற்
பொருந்திய தெய்வ பீடம் பொலிவொடு குயிற்றி மீதே
திருந்திய மறையுந் தேடு நமபத மாகச் செய்து.

இ-ள். பரிந்து அழும் அடியார் தம்மேல் பரமரும் அன்பு கூர்ந்து - மனம்வருந்தி அழுகின்ற தம்மடியார்மீதே பரமாசாரியரும் அன்புகூர்ந்து,—வருந்துவது ஒழிமின் - நீவிர் வருந்துகலை இனி ஒழியுங்கள்,—மணமலி இந்தக் குருந்த நீழல் பொருநதிய தெய்வம் பீடம் பொலிவு ஒடு குயிற்றி - மணமிகுந்த இநதக் குருந்தமரநிழலிலே தெய்வத்தன்மை பொருந்திய பீடிகையொன்றை அழகோடுசெய்து,—மீதே திருந்திய மறையுந் தேடும் நம் பதம ஆகச செய்து - அப்பீடிகையின்மீதே திருததமாகிய வேதங்களும் இன்னுந் தேடும் நமமுடைய பாதஙகளை நிருமித்து. எ-று. (அச)

தாங்கரு மரநதை நீங்கி யாமெனுந் தன்மை கண்டு
நீங்கரு மன்பி னாலே நிததலு நயநதி றைஞ்சி
ஈங்கருண் மனத்த ரெல்லா மினிதிரு மொருநா ளிந்தத்
தீங்ககல் பொய்கை யூடே செநதழல் வநது தோன்றும்.

இ-ள். தாங்கு அரும் அரந்தை நீஙகி - சகித்தற்கரிய துன்பத்தினின்று நீஙகி,—யாம் எனுந் தன்மை கணடு - அவற்றை நாமே என்னும் பாவனைபண்ணி,—நீஙகு அரும் அன்பினாலே நிததலும நயந்து இறைஞ்சி - நீக்குதற்கரிய அன்பினாலே நாடோறும் விருமபி வணஙகி,—அருள் மனத்தர் எல்லாம் ஈஙகு இனிது இரும் - நமமாட்டன்புபொருந்திய மனததை யுடைய நீவிரெல்லாம் இஙகே இனிதிருஙகள்,—தீஙகு அகல் பொய்கை ஊடே ஒருநாள் செம் தழல் வந்து தோன்றும் - தீஙகற்ற இப்பொய்கையின்கண்ணே ஒருதினம செம்மையாகிய அக்கினி வந்து தோன்றும். (அரு)

எழுந்தழல் விளைந்த போதில் யாவருந் தடத்தி னூடு
விழுந்துபின் னெய்தும் நம்பால் வீடுறுங் கவற்சியென்று [ச்
தொழுந்தவ மியற்றுந் தொண்டர் சூழ்ந்துபின் செல்ல மெல்ல
செழுந்திருக் கயிலை நாடிச் சென்றனர் தில்லை நாதர்.

இ-ள். தடத்தின் ஊடு எழும் தழல் விளைந்த போதில் யாவரும் விழுந்து - அப்பொய்கையின்கண்ணே தோன்றும் அக்கினிசுவாலிக்குஞ்சமயத்தில் நீவிரெல்லாம் அதன்கண்வீழ்ந்து,—பின் நம்பால் எய்தும் - பின்னர் நம்மையடையும்,—நும் கவற்சி வீடும் என்று - நம்பிரிவாலுய நும் துன்பம் முழுவதும் நீங்கும் என்று திருவாய்மலர்ந்து,—தொழும் தவம் இயற்றுந் தொண்டர் சூழ்ந்து பின் செல்ல - எவருந் தொழத்தகுந் தவத்தை இயற்றுந் தொண்டர்கள் ஒருங்கு திரண்டு தம்பின்னுகவர,—தில்லைநாதர் செழும் திருக் கயிலை நாடி மெல்லச் சென்றனர் - சபாநாயகர் செழுமையாகிய திருக்கைலாசகிரியைநோக்கி மெல்லச் சென்றருளினூர். எ-று. (அசு)

நீங்கரு மன்ப ரெல்லா நில்லுமி னென்று கூற
ஆங்கவ ரிறைஞ்சி யைந நாளையநிற் காண்ப தென்று
தாங்கரு மிரக்க மெய்தித் தாயகன் மகவு போலப்
பூங்கழல் வணங்கி நின்றார் போயினர் மாயை வல்லார்.

இ-ள். நீங்கு அரும் அன்பர் எல்லாம் நில்லுமின் என்று கூற - பிரிதற்கரிய நம்மன்பர்களெவரும் இனி நில்லுங்கள் என்று சிவபெருமான் பணித்தருள,—ஆங்கவர் இறைஞ்சி ஐய நின் காண்பது எந்நாள் என்று - அத்தொண்டர்கள் வணங்கிச் சுவாமி! அடியேங்கள் தேவரீரை இனிக் காணப்பெறுவது எந்நாள் என்று வருந்தி,—தாய் அகல் மகவு போல தாங்கு அரும் இரக்கம் எய்தி - தாயைநீங்குங் குழந்தைகளைப்போலச் சகித்தற்கரிய துயர் அடைந்து,—பூங் கழல் வணங்கி நின்றார் - அழகிய திருவடிகளை வணங்கி அவரது பணிமறுக்க அஞ்சிநின்றனர்,—மாயை வல்லார் போயினர் - அப்பொழுது மாயங்களில் வல்ல சிவபெருமான் சென்றருளினூர். எ-று. (அஎ)

இங்கிவர் நின்ற பின்னு மின்னருள் வாதவூரர்
தங்கிளை வாழ வந்த தலைவர்பின் சென்ற போதிற்
பொங்கிள முலையாள் பங்கர் புரிந்திவர் வரவு காணு
அங்கொரு கொன்றை நீழ லிருந்தன ரரந்தை நீக்க.

இ-ள். இங்கு இவர் நின்ற பின்னும் - இங்கே இவ்வடியார்கள் செல்லாது நின்றபின்னரும்,—இன் அருள் வாதவூரர் தம் கிளை வாழ வந்த தலைவர் பின் சென்றபோதில் - இனிய திருவருளையுடைய திருவாதவூரர் தமது சுற்றம் வாழும்படி குருமூர்த்தங்கொண்டெழுந்தருளிவந்த சிவபெருமானுக்குப் பின்னுகச் செல்லுகின்ற சமயத்தில்,—பொங்கு இள முலையாள் பங்கர் புரிந்து இவர் வரவு காணு - மேலெழுகின்ற இளமையாகிய தனங்களையுடைய உமையம்மையினது வலப்பாகராகிய சிவபெருமான் விரும்பி இவர் வருதலைக்கண்டு,—அரந்தை நீக்க அங்கு ஒரு கொன்றை நீழல் இருந்தனர் - இவரது துன்பத்தை நீக்கும்பொருட்டு அங்கே ஒரு கொன்றைமரநீழலிலே வீற்றிருந்தருளினர். எ-று. (அஅ)

தன்புடைக் கவடு கொண்டோர் நடங்கிரி நிரந்த மாலைப்
பொன்படைத் தனைய கொன்றை பொலிவுற விருந்த போதின்
மென்பதத் திறைஞ்சிக் கண்ணீர் விழவிழத் தொழுது நிற்கும்
அன்பரைப் பரிவா லைய ரருகுவைத் தருளிச் செய்வார்.

இ-ள். ஓர் நடங் கிரி தன்புடைக் கவடு கொண்டு - ஒரு பெரிய மலையானது தன்பக்கத்தே விசாலமான கொம்பர்களைக்கொண்டு,—நிரந்த பொன்மாலை படைத்து அனைய கொன்றை பொலிவு உற இருந்த போதில் - நிறைவுபொருந்திய பொன்மாலைகள் தூங்கப்பெற்று நின்றாற்போன்ற கொன்றைமரமானது பொலிவுபெறப் பரமாசாரியார் வீற்றிருக்குஞ்சமயத்தில்,—மெல் பதத்து இறைஞ்சிக் கண்ணீர் விழ விழத் தொழுது நிற்கும் அன்பரை - மென்மையாகிய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி எழுந்து கண்ணீரானது இடையறாதொழுக அஞ்சலிசெய்து நிற்கும் மெய்யன்பராகிய திருவாதவூரரை,—பரிவால் ஐயர் அருகு வைத்து அருளிச்செய்வார் - அன்போடும் பரமாசாரியர் தம்பக்கத்திருத்தித் திருவாய்மலர்ந்தருளுவாராயினர். எ-று. (அக)

அவ்விய மில்லார் தங்கட் கருடர முன்று மன்னும்
திவ்விய தலமா மிந்தச் சிறந்துள குருந்த நீழல்
எவ்வுல கெங்கு முள்ளே மாயினு மிங்கு ளோர்கள்
வெவ்வினை யகற்றி யாள வேண்டியீண் டுறைவோ மென்றும்.

இ-ள். இந்த சிறந்துள குருந்த நீழல் - இந்தச்சிறந்த குருந்தமரத்தின் நிழலானது,—அவ்விய மில்லார் தங்கட்கு அருள் தர முன்று மன்னும் திவ்விய தலம் ஆம் - பொறாமையில்லார்க்கு அருள் செய்யும்படி முதன்மையாக வீற்றிருக்குந் தைவிகதலமாகும்,—எவ்வுலகு எங்கும் உள்ளேம் ஆயினும் - எவ்வுலகத்தும் வியாபித்திருப்பேமாயினும்,—இங்குளோர்கள் வெம் வினை அகற்றி ஆள வேண்டி - இங்குள்ளாருடைய வெவ்விய வினைகளை அகற்றி ஆளும்படி விரும்பி,—ஈண்டு என்றும் உறைவோம் - இங்கே விசேடமாக என்றும் வசிப்பேம். எ-று. (கூ0)

பொங்கொளிச் சுழுனை யூடு புலம்பிசைக் குறியே யான
மங்கல சங்க மல்லால் வாய்ந்தபல் லியங்கள் யாவும்
இங்கெமக் காகா வோசை யடங்கிட மாத லாலும்
நங்குலக் கவுரி காணு நடமில தாத லாலும்.

இ-ள். ஓசை அடங்கு இடம் ஆதலாலும் - இஃது நாதமடங்கும் ஸ்தானமாதலினாலும்,—நம் குலக் கவுரி காணும் நடம் இலது ஆகலாலும் - நம் குலமகளாகிய பார்ப்பதிகாணும் நிருத்தமில்லாதது ஆதலினாலும்,—பொங்கு ஒளிச் சுழுனை ஊடு புலம்பு இசைக் குறியே ஆன சங்கம் அல்லால் வாய்ந்த பல் இயங்கள் யாவும் இங்கு எமக்கு ஆகா - மேனோக்கிக் கிளரா நிற்கும்

ஒளியையுடைய சுழுமுனைநாடியிலே ஒலிக்கும் இசைக்குறியான சங்கநாதியமொன்றல்லது வாய்ந்த பலவிதமாகிய வாச்சியங்களெல்லாம் இந்தத் தலத்தின்கண்ணே நமக்காகாவாம். எ-று. (கக)

ஒழுங்குட னின்ன வாறிங் குணர்ந்துநற் குருந்த நீழற்
செழுந்தவர் குழுவி னீயு நங்கழல் சேவை செய்தே
எழுங்கனன் மடுவிற் காணில் யாவரு மதனிற் சென்று
விழுமபொழு தூடன்வீ ழாம லவ்வுழை விரைவி னீங்கி.

இ-ள். ஒழுஙகு உடன் இன்னவாறு இஙகு உணர்ந்து - கிரமமாக இத்தன்மைகளை இஙகே அறிந்து,—நல் குருந்த நீழல் செழுந் தவர் குழுவின் நீயும் நம் கழல் சேவை செயது - நலல குருந்தமரநிழலிலே செழுமையாகிய தபோதனாகூட்டத்தோடு நீயும் நமமுடைய பாதஙகளை வழிபட்டுக்கொணடிருந்து,—மடுவில் எழும கனல காணின் யாவரும் அதனில் சென்று விழும்பொழுது உடன் வீழாமல் - பொய்கையின்கட் சுவாலிக்கும் அக்கினி கணகளுக்குப் புலப்படின் நம்மன்பாகளெலலாம் அவ்வக்கினியிற் பிரவேசிக்கும்போது நீயுமவருடன் பிரவேசியாமல்,—அ உழை விரைவின் நீஙகி - அவ்விடததை விரைவாக விட்டு நீஙகி. எ-று. (க௨)

உத்தர கோச மஙகை யென்னுநம் மூரிற் சென்று
சித்தியங் கெவையு மெய்தித தெய்விக லிங்க மேனி
வைத்தநம பதிக டம்மி லிவையிவை வணங்கி னங்கங்
கித்திகழ் வடிவே காண்டி காட்டுது மென வியம்பி.

இ-ள். உததரகோசமஙகை என்னும் நம் ஊரில் சென்று அங்கு சித்தி எவையும் எய்தி - உததரகோசமஙகை என்னும நம்முடைய தலத்திற் போய் அங்கே சிததிகளெவைகளையும் பெற்று,—தெய்விகலிஙகமேனி வைத்த நம் பதிகள் தமமில் இவை இவை வணஙகின் - தெய்வத்தன்மைபொருந்திய இலிஙகப்பிரதிட்டை செயப்பெறற நமமுடைய தலஙகளுள் இன்ன இன்ன தலங்களை அடைந்து வழிபடின்,—அஙகு அஙகு திகழ் இவ்வடிவே காண்டி - அவ்வத்தலஙகளிலெல்லாம் விளஙகாநின்ற இக்குருவடிவத்தையே நீ தரிசிப்பாய்,—காட்டுதும் - உனக்குத தரிசிப்பிப்பேம்,—என இயம்பி - என்று சொல்லி. எ-று. (கங)

இந்நகர் வணங்கி நீங்கி யெழுங்கழுக் குன்ற மென்னும்
அந்நெடும் பதியி றைஞ்சி யாண்டுநின் றீண்டுப் போந்து
பொன்னினம் பலத்தி லெய்திப் புத்தரை வாதில் வென்று
பின்னரெம் பதமே யான பெருமபதம் பெறுதி யென்றார்.

இ-ள். இந்நகர் வணங்கி நீஙகி - நீ இந்தத் தலஙகளையெல்லாந் தரிசித்து வணங்கி நீஙகி,—எழும் கழுக்குன்றம் என்னும் அந்நெடும்பதி இறைஞ்சி - உயர்ந்த திருக்கழுக்குன்றம் என்னும் அந்தப் பெரிய தலத்தைத்

தரிசித்து வணங்கி,—ஆண்டு நின்று ஈண்டுப் போந்து - அவ்விடத்தினின்றும் இங்கே மீண்டு வந்து,—பொன்னின் அம்பலத்தில் எய்தி புத்தரை வாதில் வென்று பின்னர் - சிதம்பரத்திலே கனகசபையையடைந்து புத்தர்களைத் தருக்கத்திற் செயித்துப் பின்னர்,—எம் பதமே ஆன பெரும் பதம் பெறுதி என்றார் - நம் பாதக்கலப்பாகிய சாயுச்சியத்தைப் பெறக்கடவை என்று அருளிச்செய்தார். எ-று. (௧௪)

மன்னுமன் புடையார் தெய்வ வாசகம் புகலு மாறும்
பன்னகம புனைவோன மேவும பதியல வணஙகு மாறும்
பொன்னினம பலததி லெய்திப புததரை வென்று மன்றன்
தன்னருங கமல பாதஞ் சார்தலும பகாத லுற்றும.

இ-ள். மன்னும அன்புடையார தெய்வ வாசகம் புகலும் ஆறும் - நிலைபெற்ற அன்பையுடைய திருவாதவூரா தெயவததன்மைபொருநதிய திருவாசகம் பாடியருளுநதிறததையும்,—பனனகம புனைவோன் மேவும் பதி பல வணஙகும ஆறும - சாபபததை ஆபரணமாகததரிதத சிவபெருமானுடைய தலஙகள் பலவறறைத தரிசிதது வணஙகுநதிறததையும்,—பொன்னின் அமபலததில எயதிப் புததரை வெனறு - சிதமபரததிலே கனகசபையையடைந்து புததாகளைத தருககததிலே செயிதது,—மனறன அரும் கமல பாதம் சாாதலும பகாதல உறறும - சபாநாயகரது அருமையாகிய தாமரை மலாபோன்ற திருவடிகளை அடையுநதிறததையும கூறுவாம. எ-று. (௧௫)

மண்சுமந்தசருக்கம் முற்றிற்று.

ஆகத திருவிருததம - ௩௪௪.

# திருவம்பலச்சருக்கம்.

வரந்தர விருந்தார தமமை வாதவூ ரிறைவா போற்றிப்
பெருநதுறை நகரி லனறிப பிஞஞகா புலியூா மன்றிற்
பொருந்துவை முததி யென்று புகன்றதிங கெவனோ வென்னத்
திருந்திய தவததாய் கேட்டி யென்றவா செப்ப லுற்றார்.

இ-ள். வரம் தர இருந்தார் தமமை வாதவூா இறைவர் போற்றி - தமக்கு வரஙகொடுததருளுமபொருட்டு வீற்றிருநத பரமாசாரியரைத் திருவாதவூரர் வணஙகித துதிதது,—பிஞஞகா - சுவாமீ,—பெருந்துறைநகரில் அன்றிப் புலியூர் மன்றில் முததி பொருந்துவை என்று இஙகு புகன்றது எவனோ என்ன - திருப்பெருந்துறையாகிய புண்ணியக்ஷேத்திரத்தின்கணன்றிச் சிதம்பரததுள்ள கனகசபையிலே முததிபெறுவை என்று

தேவரீர் இங்கே சொன்னது என்னையோ என்று வினவ,—திருந்திய தவத்தாய் கேட்டி என்று அவர் செப்பலுற்றார் - திருத்தமாகிய தவத்தை யுடையவனே கேட்கக்கடவை என்று பரமாசாரியர் திருவாய்மலர்ந்தரு ளுவாராயினர். எ-று. (௧)

இத்தலத் திடையே கீட மெடுத்துள விடத்தி லன்றி
வைத்துள விடத்தே யந்த வேட்டுவன் வடிவங் கொள்ளும்
வித்தக வுனக்கிங் கன்பான் மெய்யுணர் வுரைத்தே மேன்மை
ஒத்திடுஞ் சிவாநு பூதி முத்தியம் பலத்தி லுண்டாம்.

இ-ள். இத்தலத்து இடையே கீடம் எடுத்துள இடத்தில் அன்றி - இப்பூமியின்கணணே புழுவானது தாமெடுக்கப்பட்ட இடத்தின்கணன்றி,— வைத்துள இடத்தே அந்த வேட்டுவன் வடிவங் கொள்ளும் - வைக்கப்பட்ட இடத்தின்கணணேயே அவ்வேட்டுவனது வடிவத்தை அடையும், அது போல,—வித்தக - சதுரப்பாட்டையுடையவனே,—இங்கு அன்பான் மெய் யுணர்வு உனக்கு உரைத்தேம - நீ எதிர்ப்பட்ட இந்தத் தலத்தின்கண்ணே அன்புகாரணமாக நாம் உனக்கு மெய்ஞ்ஞானத்தை உபதேசித்தேம்,— மேன்மை ஒத்திடுஞ் சிவாநுபூதி முத்தி அம்பலத்தில் உண்டாம் - மேன்மை பொருந்திய சிவாநுபூதியாகிய பரமுத்தி சிதம்பரத்தின்கணுள்ள கனக சபையிலே உனக்குளதாம். எ-று. (௨)

இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
உடன்கிள ரொளியே யாகி யொளியிலஞ் செழுத்துமொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடும்அம் பலம தாகும்.

இ-ள். இடம்படும் உடம்பின் மூலத்து எழுந்த நல் சுழுனை நாடி உடன் கிளர் ஒளியே ஆகி - விசாலமாகிய இசசரீரத்தின்கண் மூலாதாரத் தினின்றும் எழுகின்ற நல்ல சுழுமுனாநாடியோடு ஒருங்கெழாகின்ற ஒளி மயமாகியும்,—ஒளியில அஞ்சு எழுத்தும் ஒன்றாய் - அவ்வொளியிலே பஞ்சாக்ஷரமும் ஏகாக்ஷராகாரமாகியும,—நெடும குழல் ஓசையாகி - நெடிய நாததாரையினியங்குமொலியாகியும்,—நிலவும் அ ஓசை போய் அங்கு அடங் கிய இடமே - விளங்கும் அவ்வோசை மேனோக்கிச சென்றங்ஙனம் ஒடுங் குந்தானமே,—என்றும் ஆடும அம்பலம் ஆகும - நாம் என்றுந் தாண்டவஞ் செய்தருளுங் கனகசபையாகும். எ-று. (௩)

எண்டரும் பூத மைந்து மெய்திய நாடி மூன்றும்
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்டமாகும் பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டிலுங் காண லாமே.

இ-ள். எண் தரும் பூதம் ஐந்தும் - எண்ணத்தக்க பூதங்களைந்தும்,— எய்திய நாடி மூன்றும் - பொருந்திய இடை பிங்கலை சுழுமுனை என்னும் நாடிகண்மூன்றும்,—மண்டலம் மூன்றும் ஆகி மன்னிய புணர்ப்பினாலே - சோமசூரியாக்கினிகள் என்னும் மண்டலங்கள் மூன்றுமாகி நிலைபெற்ற சம்பந்தத்தினாலே,—பிண்டமும் அண்டம் ஆகும் - பிண்டமும் அண்டமும் தம்முளொப்பனவாம்,—பிரமனோடு ஐவர் ஆக கண்டவர் நின்ற ஆறும் இரண்டிலுங் காணலாம் - பிரமா விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னும் பஞ்சகர்த்தாக்களும நிற்கின்ற முறைமையும் இவ்விரண்டிடத்திலுங் காணலாம். எ-று. (ச)

ஆதலா லிந்த வண்டத் தறிவரும் பொருளா யென்றுந்
தீதிலா மூல நாடிற் றிகழ்சிவ லிங்க மேனி
மீதிலா மந்த நாத வெளியின்மே லொளிமன் றங்குக்
காதலான் மடவாள் காணக் கருத்துற நிருத்தஞ் செய்வோம்.

இ-ள். ஆதலால் - இங்ஙனமாதலான்,—இந்த அண்டத்து - இப்பிரமாண்டத்தின்கணணே,—என்றும் அறிவு அரும் பொருள் ஆய் தீது இலா மூலம் நாடில் - என்ஞான்றும் அறிதற்கரிய பொருளாய்த் தீதற்ற மூலத்தை ஆராயுமிடத்து,—திகழ் சிவலிங்க மேனி - அது பிரகாசியாநிற்குஞ் சிவலிங்கவடிவமேயாம்,—மீதில் ஆம் அந்த நாதவெளியின் மேல் ஒளி மன்று - மேலாகவுள்ள அந்த நாதவெளியில் ஒளிமயமாகிய கனகசபை விளங்குகின்றது,—அங்கு காதலான் மடவாள் காண கருத்து உற நிருத்தம் செய்வோம் - அச்சபையின்கண்ணே விருப்பத்தோடும் சிவகாமி தரிசிக்க நாம் கருத்தமைய நடனஞ்செய்வோம். எ-று. (௫)

அந்தநன் னடமே தென்னி னைந்தொழி னடத்த லாகும்
பந்தம கற்று மிந்தப் படிவமு மதுவே யாகும்
வந்துல கத்தில் யாருங் காண்பரேல் வழுவா முத்தி
தந்தரு ளளிக்குந் தெய்வத் தலமுமத் தலமே யாகும்.

இ-ள். அந்த நல் நடம் ஏது என்னில் - அந்த நல்ல நடனந்தான் யாதென்று நீ வினவின்,—ஐந்தொழில் நடத்தல் ஆகும் - சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் ஐந்தொழிலுஞ் செய்தலேயாம்,—பந்தம் அகற்றும் இந்தப் படிவமும் அதுவே ஆகும் - பக்குவான்மாக்களது பாசக்கட்டைநீக்கும் இக்குருவடிவமும் அந்நடனவடிவமேயாம்,—உலகத்தில் யாரும் வந்து காணபரேல் வழுவா முத்தி தந்து அருள் அளிக்கும் தெய்வ தலமும் அததலமே ஆகும் - உலகத்தில் யாவராயினும் வந்து தரிசிக்கின் தவறாது முத்தியைக் கொடுத்து அருள்செய்யும் தெய்வத் தன்மைபொருந்திய தலமும் அந்தச சிதம்பரமேயாகும். எ-று. (௬)

தாவரும் பணில நேமி தரிப்பவர் பிரம ரென்போர்
யாவரும் புலிபாம் பென்னு மிருவரும் புரத்தி னுள்ளார்

மூவருந் தெய்வ மூவா யிரவரு முனிவர் தாமுந்
தேவருந் தொழுது போற்று மெல்லையத் தில்லை மூதூர்.

இ-ள். தா அரும் பணிலம் நேமி தரிப்பவர் பிரமர் என்போர் யாவ ரும் - கேடற்ற சங்குசக்கரஙகளைத் தாஙகிய விஷ்ணு பிரமாக்கள் எனப் படுவோர் யாவரும்,—புலி பாம்பு என்னும் இருவரும் - வியாக்கிரபாதர் பதஞ்சலி என்னும் முனிவரிருவரும்,—புரத்தில் உள்ளார் மூவரும் - தார காக்கன், கமலாக்கன், விதியுன்மாலி என்னும் முப்புரத்தசுரர் மூவரும்,— தெய்வ மூவாயிரவரும் - தெய்வத்தன்மைபொருந்திய தில்லைமூவாயிரவ ரும்,—முனிவர் தாமும் - இருடிகளும்,—தேவருந் தொழுது போற்றும் எல்லை - தேவர்களுந் தரிசித்து வணஙகித் துதிக்கப்பெறும் இடமாயுள் ளது,—அத் தில்லை மூதூர் - அந்தப் பழைய தில்லைமாநகரம். எ-று. (எ)

மற்றிவை தெளிவா யென்று பணிந்தெதிர் வணங்கி நிற்பார்
நெற்றியி னீறு சாத்தி நிற்றியென் றகல நில்லார்
சற்றிடஞ் சென்றார் பின்னு மிங்கிவர் தன்மை கண்டு
கற்றையஞ் சடையார் நின்று கண்ணருள் செய்து போந்து.

இ-ள். இவை தெளிவாய் என்று - இவைகளை நீ நிச்சயித்தறிந்துகொள் வாயாக என்று போதித்து,—எதிர் பணிந்து வணஙகி நிற்பார் நெற்றியில் நீறு சாத்தி நிற்றி என்று அகல - தமது சந்நிதியிலே தாழ்ந்து வணஙகி எழுந்து நிற்கும் திருவாதவூரரது நெற்றியில் விபூதிதரித்து ஈண்டு நில் லென்று பரமாசாரியா நீஙகுதலும்,—நில்லார் சற்று இடம் சென்றார் - திருவாதவூரர் பிரிந்துநிற்கமாட்டாதவராய்ச சிறிதுதூரம் பின்றொடர்ந்து சென்றனர்,—பின்னும் கற்றை அம் சடையாா இஙகிவர் தன்மை கண்டு நின்று அருள் செய்து போந்து - பின்னரும் தொகுதியாகிய சடையையு டைய சிவபெருமானவர் இவரது தன்மையைக்கணடு தஙகிநின்று கிரு பாநோக்கஞ்செய்து சென்று. எ-று. (அ)

கண்ணெதிர் நடக்கு மாறு கண்டுளங் களித்து நிற்கும்
புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் புலியூ ரையர்
துண்ணென விரக்க மெய்தித் தொழுதுகை தலைமேற் கொண்டு
நண்ணரு மன்பர் கூட்ட நணுகினர் வாத வூரர்.

இ-ள். புலியூர் ஐயர் - சபாநாயகரானவர்,—கண் எதிர் நடக்கும் ஆறு கண்டு உளம் களித்து நிற்கும் புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் - கண்ணுக்கெதிரே நடந்தருளுமாற்றைக்கணடு களித்துநிற்கும் புண்ணிய புருஷராகிய திருவாதவூரர் காண எதிரே மறைந்தனர்,—வாதவூரர் துண் ணென இரக்கம் எய்தி கை தலைமேற் கொணடு தொழுது - அப்பொழுது திருவாதவூரர் விரைந்து மனமிரஙகிக் கைகளைச சிரசில்வைத்துக் கும்பி ட்டு,—நண் அரும் அன்பர் கூட்டம் நணுகினர் - நணுகுதற்கரிய பத்தர்க ளது திருக்கூட்டத்தை அடைந்தருளினர். எ-று. (க)

அருந்தவ மகலா நெஞ்சத் தன்பருந் தாமு மந்தத்
திருந்திய குருந்தின் கீழோர் தெய்வபீ டிகையுஞ் செய்து
வரந்தரு செய்ய பாத மலர்வகுத் திறைஞ்சி யாங்கே
இருந்தன ரிருந்த நாளி லெய்திய தியம்ப லுற்றும்.

இ-ள். அரும் தவம் அகலா நெஞ்சத்து அன்பரும் தாமும் - அரிய தவவொழுக்கம் நீங்காத மனத்தையுடைய தொண்டர்களுந் தாமுமாக,—திருந்திய அந்த குருந்தின் கீழ் தெய்வ ஓர் பீடிகையும் செய்து - திருத்தமாகிய அக்குருந்தமரத்தின்கீழே தெய்வத்தன்மைபொருந்திய ஒரு பீடமுஞ் செய்து,—வரம் தரு செய்ய பாத மலர் வகுத்து இறைஞ்சி ஆங்கு இருந்தனர் - அதனமீதே தமக்கு வரததைத்தருஞ் செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை நிருமித்து அருச்சனைசெய்து வணங்கிக்கொண்டு அவ்விடத்திருந்தார்,—இருந்த நாளில் எய்தியது இயம்பல் உற்றும் - அவ்வாறிருக்குங்காலத்து நிகழ்ந்த சரித்திரத்தை யாம் கூறுவாம். எ-று. (கo)

வெண்பிறை முடித்த வேணி விண்ணவ னன்பி லாத
பண்பின ரெனினுந தம்மைப் பாடினர்க் கிரங்கு மென்றே
எண்பெறு நமசசி வாய வாழ்கவென் றெடுத்து நாதன்
வண்பதம் புகழ்ந்து ஞான வாசகம் புகல லுற்றார்.

இ-ள். (திருவாதவூரரானவா) வெண பிறை முடித்த வேணி விண்ணவன் - வெண்மையாகிய பிறையைமுடிதத சடையையுடைய சிதாகாசரூபராகிய நமதிறைவா,—அன்பு இலாத பண்பினா எனினும் தம்மைப் பாடினர்க்கு இரஙகும் என்று - தம்மிடததன்பற்ற அபக்குவர்களாயினும் தம்மைப் பாடித் துதிப்பவர்களுக்குத் திருவுளமிரஙகி அனுக்கிரகஞ்செய்தருளுவார் என்று,—எண பெறு நமசிவாய வாழ்க என்று எடுதது - நினைக்கப்படுகின்ற நமசிவாய வாழ்க என்று தொடஙகி,—நாதன் வண பதம் புகழ்ந்து ஞான வாசகம் புகலல் உற்றார் - சிவபெருமானது வண்மையையுடைய திருவடிகளைத துதித்து ஞானபாதப்பொருளையுடைய திருவாசகத்தைப் பாடுவாராயினர். எ-று. (கக)

சொற்பதங் கடந்து நின்ற சோதிவந் தருளை நல்கும்
அற்புத மறியே னென்று மதிசயங் கண்டா மென்றும் [றுஞ்
எற்பொலி சடையாய் நெஞ்சங் குழைததனை யென்னையென்
சிற்பரன் றனது பாதஞ் சென்னியின் மன்னு மென்றும்.

இ-ள். சொல் பதம் கடந்து நின்ற சோதி வந்து அருளை நல்கும் அற்புதம் அறியேன் என்றும் - சொல்லும் பொருளுமாகிய இரண்டையுங் கடந்துநின்ற நின்மலவொளிவடிவாகிய சிவம் தானேவந்து திருவருள் சுரந்த "அற்புதமறியேனே" என்றும்,—அதிசயம் கண்டாம் என்றும் - தன்னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே" என்றும்,—எல் பொலி

சடையாய் நெஞ்சம் என்னைக் குழைத்தனை என்றும் - செவ்வொளியாற் பொலிகின்ற சடையையுடையவரே மனம் "என்னைக் குழைத்தாயே" என்றும்,—சிற்பரன் தனது பாதம் சென்னியில் மன்னும் என்றும் - ஞானநீதராகிய சிவபெருமானுடைய "சேவடிக்கணஞ்சென்னிமன்னிசசுடருமே" என்றும். எ-று. (கஉ)

ஐயனே நின்னைக் காண வாசைப்பட் டேனு னென்றும்
உய்கிலேன் வாழே னென்று முனக்கடைக் கலமே யென்றுஞ்
செய்யுமா றறியே னந்தோ செதகிலே னென்றும் பொய்யர்
பொய்யனே நின்பொற் பாதம் புணருநா ளெந்நா ளென்றும்.

இ-ள். ஐயனே நின்னைக் காண நான் ஆசைப்பட்டேன் என்றும் - சுவாமீ! தேவரீரைத தரிசிக்க அடியேன் "ஆசைப்பட்டேன்" என்றும்,— உய்கிலேன் வாழேன் என்றும் - தமியேனுயிருய்யேனுய் "வாழ்கிலேன் கண்டாய் வருகவென்றருள்புரிவாயே" என்றும்,—உனக்கு அடைக்கலமே என்றும் - "அடியேனுனக்கடைக்கலமே" என்றும்,—செய்யும் ஆறு அறியேன் செத்திலேன் அந்தோ என்றும் - செயற்பாலது இன்னதென்றறியாது மயஙகுகின்றேன் 'செத்திலேனந்தோ" என்றும்,—பொய்யர் பொய்யனே நின் பொன் பாதம் புணரும் நாள் எந் நாள் என்றும் - பொய்யர்கட்குப் பொய்யராய் நிற்பவரே தேவரீரது பொன்போலுந் திருவடிகளை அடியேன் "புணருநாள் எந்நாளோ" என்றும். எ-று. (கங)

ஆதரித் தழைத்தா லிங்கே யதெந்துவென் றருளா யென்றும்
போதமிக் குடைய பாட லிவையிவை புகன்ற பின்னர்
மாதிரத் தெவரும் போற்ற வருந்திரு வார்த்தை யெண்ணந்
தீதறச் சிறந்த வெண்பா விருபதுந் திகழ வோதி.

இ-ள். இஙகே ஆதரித்தழைத்தாலதெந்துவென்றருளாய் என்றும் போதம் மிக்கு உடைய பாடல் இவை இவை புகன்ற பின்னர் - இவ்விடத்து "அடியேனுதரிததழைதா லதெந்துவேயென்றருளாயே" என்றும் ஞானபாதப் பொருளை மிகவுமுடைய பாடல்கள் இவ்விவற்றைப் பாடியருளியபின்னர்,—மாதிரதது எவரும் போற்ற வரும் திருவார்த்தை - அட்டதிக்கின்கணுள்ள எவருந் துதிக்கத்தகுந் திருவார்த்தையும்,—எண்ணம் - எண்ணப்பதிகமும்,—தீது அறச சிறந்த வெண்பா இருபதும் திகழ ஓதி - குற்றமறச சிறந்த வெணபா இருபதுமாகிய திருவாசகங்களையும் பாடியருளி. எ-று. (கச)

இயல்புடன் மொழியும் பள்ளி யெழுச்சி யேசறவு நெஞ்சத்
தயர்வற வுரைக்கு மின்னே ரனையபூங் கழலாம் பாடல்
உயிருணி யெனுநற் செய்யுள் பிரார்த்தனை யோங்கு நீதி
வியனெடுங் கூட்டற் பாண்டி விருத்தமெய்த் தமிழுங் கூறி.

இ-ள். இயல்பு உடன் மொழியும் பள்ளி எழுச்சி - விதிப்படி ஓதத் தகும் திருப்பள்ளியெழுச்சியும்,—ஏசறவு - திருவேசறவும்,—நெஞ்சத்து அயர்வு அற உரைக்கும மின்னேரனைய பூங்கழலாம் பாடல் - பத்தர்களாயினோர் தம்மனத்தின்கணுள்ள பிறவித்துன்பநீங்கப் பாராயணஞ் செய்யத் தகும் "மின்னே ரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்" என்னும் சொற்றொடரை முதலாகவுடைய ஆனந்தமாலையும்,—உயிருணி எனும் நல் செய்யுள் - உயிருணி என்று சொல்லப்படும் நல்லபாடலும்,—பிரார்த்தனை - பிரார்த்தனைப்பத்தும்,—ஓங்கு நீதி வியல் நெடும் கூடல் விருத்தம் பாண்டி,மெய்த் தமிழும கூறி - உயர்வாகிய நீதியினாலே வியக்கற்பாலதாகிய நெடிய மதுரையைக்குறிக்கும் விருத்தமாகிய திருப்பாண்டிப் பதிகமென்னும் மெய்ப்பொருளையுடைய திருவாசகங்களையுந் திருப்பெருந்துறையின்கண்ணே திருவாயமலர்ந்தருளி. எ-று. (கங)

வேறு.

மருவுந் தொண்ட ருடன்கூடி வைகிச் சிலநாட் செல்லமுதற்
பரமன் சொல்லும் படியேபின் பயிலும் பொய்கைத் தழல்கண்டு
கருதுந் திருவஞ் செழுத்தோதிக் காணக் கிளரக் கனன்மீது
விரவும் பேரன் புடையார்க ளெல்லாருஞ் சென்று வீழ்ந்தார்கள்.

இ-ள். மருவும் தொண்டர் உடன் கூடி வைகிச் சிலநாள் செல்ல - மாணிக்கவாசகசுவாமிகள் அக்குருந்தின்கீழ் வசிக்குந் தொண்டர்களோடு கூடி வசித்துச் சிலதினஞ்செல்ல,—முதல் பரமன் சொல்லும்படியே - முன்னரே பரமாசாரியர் அருளிச்செய்த பிரகாரமே,—பின் பொய்கை பயிலும் தழல் கண்டு - பின்பு தடாகத்திற்றோன்றும் ஞானாக்கினியைக் கண்டு,—கருதும் திரு அஞ்செழுத்து ஓதி - உயிர்க்குறுதுணையாகக் கருதப்படும் பஞ்சாக்ஷரத்தையுஞ் செபித்துக்கொண்டு,—காணக் கிளர் அக் கனல் மீது - காணும்படி சுவாலிக்கும் அவ்வக்கினியின்மேல் —விரவும் பேர் அன்பு உடையார்கள் எல்லாம சென்று வீழ்ந்தார்கள் - அக்கடவுளிடத்துச் சென்று கலக்கும் பேரன்புடைய தொண்டர்களெல்லாருஞ் சென்று குதித்தார்கள். எ-று. (கச)

வீழ்ந்த போதிற் புலியூரர் விடைமே லேறிக் கவுரியுடன் [தனும்
சூழ்ந்தங் கிமையோர் மலர்சிந்தித் தொழவின் னிடையே தோன்று
ஆழ்ந்த தடத்துட் கனன்மூழ்கு மன்ப ரடங்கத் துயர்நீங்கி
வாழ்ந்து வணங்கிக் கணநாதர் வடிவாய்த் திருமுன் வந்தார்கள்.

இ-ள். வீழ்ந்த போதில் - அக்கினியில் வீழ்ந்த சமயத்தில்,—புலியூரர் கவுரி உடன் விடைமேல் ஏறி - சபாநாயகர் சிவகாமியம்மையோடு இடபத்திலேறி,—அங்கு இமையோர் சூழ்ந்து மலர் சிந்தித் தொழ - அங்கே

தேவர்கள் தம்மைச்சூழ்ந்து புஷ்பாஞ்சலிசெய்து வணங்க,—விண்ணிடையே தோன்றுதலும் - ஆகாயத்திலே தோன்றுதலும்,—ஆழ்ந்த தடத்துள் கனல் மூழ்கும் அன்பர் அடங்கத் துயர் நீங்கி வாழ்ந்து வணங்கி - ஆழமாகிய அத் தடாகத்தில் அக்கினியிற்பிரவேசித்த தொண்டர்களெல்லாம் பிரிவாற்றாமை யான்வந்த துன்பத்தைவிட்டு நீங்கிப் பேரின்பவாழ்வையடைந்து நமஸ்கரித்து,—கணநாதர் வடிவாய்த் திருமுன் வந்தார்கள் - பழைய சிவகணநாதர்களாகிச் சந்நிதியிலே வந்துசேர்ந்தனர். எ-று. (கஎ)

துரியத் தலையிற் பயில்வாருந் தொழுதங் கெழுவார் முகநாடி-
ஒருசற் றகலா தமர்நீரிங் கொழியத் தனிநா மெய்தியதுங்
கரையிற் றிரைபோய் விழவீசுங் கழுநீர் வாசங் கமழ்வாவி
எரியிற் புகுவீ ரென்றதுவும் யாதோ வெனினிங் கிதுவாகும்.

இ-ள். துரியத் தலையில் பயில்வாரும் அங்குத் தொழுது எழுவார் முகநாடி - நின்மலதுரியமுடிவில் விளங்குஞ் சிவபெருமானும் அங்கே தம்மை வணங்கி எழுகின்ற தொண்டர்களைப் பார்த்து,—ஒரு சற்று அகலாது அமர் நீர் இங்கு ஒழிய தனி நாம் எய்தியதும - ஒருசிறிதும் எம்மை விட்டகலாத நீர் இங்கிருப்பத் தனித்து நாம் கைலாசத்திற்குச் சென்றமையும்,—கரையில் திரை போய் விழ வீசும் கழுநீர் வாசம கமழ் வாவி எரியில் புகுவீர் என்றதுவும் - கரையின்கண்ணே திரைபோய்விழும்படி வீசுகின்ற கழுநீரினது நறுமணங்கமழும் இத்தடாகத்திலே தோன்றும் அக்கினியிற் பிரவேசியுங்கள் என்று உமக்கு நாம் கூறியதும்,—யாதோ எனின் - யாதுகாரணம்பற்றியெனின,—இங்கு இது ஆகும் - அது இங்கே கூறும் இதுவாகும். எ-று. (கஅ)

வேறு

உத்தம னென்னுந் திருவாத வூரனை மன்னும் புலியூரிற்
புத்தரை வெல்லும படிநாமிப புவிமிசை வைத்தோம யாமேகிற்
சித்த மயர்ந்தே துயர்கூருஞ் செய்திய னுமென் பதுதேரா
இத்தல மீதே சின்னாளிங் கெமமுடன வாரா திருமென்றும்.

இ-ள். உத்தமன் என்னும் திருவாதவூரனை மன்னும் புலியூரில் புத்தரை வெல்லும்படி நாம இப் புவிமிசை வைத்தோம - உத்தமபுருஷனாகிய திருவாதவூரனை நிலைபெற்ற சிதம்பரத்தின்கண்ணே புத்தரை வாதில் வெல்லும்படி உமமுடன் வாராது தவிர்த்து நாம் இப்பூமியின்கணிருத்தினேம்,—யாம் ஏகில - நாம் போனால்,—சித்தம் அயர்ந்து துயர் கூரும் செய்தியன் ஆம் என்பது தேரா - அவன் மனம் நொந்து துன்பமிகுந்தன்மையையுடையனும் என்னும உண்மையை அறிந்து,—எம்முடன் வாராது இத் தல மீதே சில் நாள் இங்கு இரும் என்றும் - எம்முடன் கைலைக்கு வாராது அவனோடு இத்திருப்பெருந்துறையின்கண்ணே சிலதினம் இருங்களென்று உங்கட்கு முன்பணித்தேம். எ-று. (கக)

மலமகல் பவரும் புவிமீதே மானுட வடிவந் தனையெய்திச்
சிலபக லெனினும் பயில்காலைச் சேர்தரு மலவா தனையென்றே
பலமலர் கமழுந் தடமீதிற் பரவரு ஞான வனல்சேர்வித்
திலதென நீடுஞ் சடம்வேவித் திவ்வுட லீந்தோ மிந்நாளில்.

இ-ள். மலம் அகல்பவரும் மானுட வடிவந்தனை எய்தி சில பகல் எனினும் புவி மீது பயில் காலை - ஆணவம் மாயை காமியம் என்னு மும் மலங்களும் நீங்கப்பெற்ற சிவஞானிகளும் எடுத்த மனிதசரீரத்தோடு சில தினமேனும் பூமியிற் சீவிக்கும்போது,—மல வாதனை சேர் தரும் என்று - அம்மலவாசனை மீளவந்து தாக்கும் என்று கருதி,—பல மலர் கமழும் தட மீதில் பரவு அரு ஞான அனல் சேர்வித்து - பலவித மலர்கள் நறுமணங் கமழும் இத்தடாகத்திலே சொல்லுதற்கரிய ஞானக்கினியை வருவித்து,— நீடும சடம் இலது என வேவித்து இந் நாளில இவ் உடல் ஈந்தோம் - மாயாகாரியமாகிய தூலசரீரத்தை இல்லை என்னும்படி தகித்து இப்பொழுது இந்தத் திவ்விய சரீரத்தை உமக்குத் தந்தேம். எ-று. (௨௦)

என்று விளம்பிக் கணநாத ரெங்கணும் மல்கப் புலியூரின்
மன்று விளங்கப பயில்வாரும வானின் மறைந்தா ரவ்வெல்லைத்
துன்றிய ஞானச சிவநாமச சொற்றமிழ் வல்லா வேறுகச்
சென்றொரு கொன்றைச செழுநீழற றிகழ விருந்தார் சிவயோகம்.

இ-ள். என்று விளம்பிப் புலியூரின் மன்று விளங்கப் பயில்வாரும் கண நாதர் எங்கணும் மல்க வானின் மறைந்தார் - என்றிங்ஙனமருளிச்செய்து சிதம்பரத்திலே கனகசபைவிளங்கத் திருநடனஞ்செய்தருளும் சபாநாயக ரும் கணநாதர்கள் எவ்விடத்தும் பரவிவர ஆகாயத்தின்கண் மறைந்தருளி னர்,—அவ் எல்லைத் துன்றிய ஞானச சிவநாமச சொல் தமிழ் வல்லார் வேறுகச சென்று - அப்பொழுது பூரணஞானத்தைத்தரும் சிவநாமங்களி னாலே திருவாசகமாகிய தமிழ்வேதத்தைப் பாடியருளவல்லவராகிய திரு வாதவூரர் தனியே சென்று,—ஒரு கொன்றை செழு நீழல திகழ சிவ யோகம இருந்தார - ஒருகொன்றைமரத்தினது செழுமையாகிய நிழலிலே விளக்கமுறச சிவயோகஞ் செய்துகொண்டிருந்தார். எ-று. (௨௧)

அன்ப ரழற்கே புகுமாறு மையர் விடைக்கே வருமாறும்
முன்பு தமக்கா முருவெய்து முன்னவ னற்றா டொழுமாறும்
பொன்பொது விறகே யன்பாளர் புகுவது மெல்லா மொருகாலத்[ர்.
தின்புறு மெய்ப்போ தகயோகத் தியல்பொடு கண்டா ரன்செய்தா

இ-ள். அன்பாளர் - திருவாதவூரர்,—அன்பர் அழற்கே புகும் ஆறும் - தொண்டர்கள் ஞானக்கினியிற் பிரவேசித்தமையும்,—ஐயர் விடைக்கே வரும் ஆறும் - சிவபெருமான் இடபாரூடராய் எழுந்தருளிக் காட்சிகொ டுத்தமையும்,—முன்பு தமக்கு ஆம் உரு எய்தும் முன்னவன் நல் தாள்

தொழும் ஆறும் - முன்னரே தமக்கேற்ற குருவடிவைக்கொண்ட சிவ பெருமானுடைய நல்ல திருவடிகளைத் தலங்கடோறுஞ் சென்று தாம் தரிசித்துவணங்குந் தன்மையும்,—பொன் பொதுவிற்கே புகுவதும் எல்லாம் - கனகசபையிலே தாம் புகுந்து கலப்பதுமாகிய எல்லாவற்றையும்,—ஒருகாலத்து - நிகழ்காலமொன்றிலே,—இன்பு உறு மெய்ப் போதக யோகத்து இயல்பு ஓடி கண்டார் - இன்பமிகும் மெய்ஞ்ஞானத்தைத்தரும் சிவயோகததில் உள்ளபடி கண்டறிந்தார்,—என் செய்தார் - அவர் வேறு யாதுசெய்தார். எ-று. (உஉ)

செங்கை குவித்தார் விழிநீரைச் சிந்தின ரெந்தாய் வந்தாய்பின்
எங்க ணொளித்தா யெனமாலுற் றெய்தினர் பொய்கைக் கரைமீதே
கங்கை முடித்தார் விடையேறிக் கண்ணுற நண்ணுந் தலமோவென்
றங்க ணிலத்தே போய்வீழ்வுற் றழுதழு தந்தோ வெனநொந்தார்.

இ-ள். செங்கை குவித்தார் - சிவந்த கைகளைக்கூப்பிக் கும்பிட்டார்,—விழி நீரைச் சிந்தினர் - கண்ணீர் சொரிந்தார்.—எந்தாய் வந்தாய் பின் எங்கண் ஒளித்தாய் என மால் உற்றுப் பொய்கைக் கரைமீது எய்தினர் - எம் பரமபிதாவே! ஈண்டுவெந்தருளினீர் பின்னர் எங்கே ஒளித்தீர் என்று மனமயங்கி அத்தடாகக்கரையையடைந்தார்,—கங்கை முடித்தார் விடை ஏறிக் கண் உற நண்ணும் தலமோ என்று - கங்கையைத்தரித்த சிவபெருமான் இடபவாகனத்தின்மேலிவர்ந்து கண்களுக்குப் புலப்பட எழுந்தருளிவரப் பெறுந் தலமோ என்று வியந்து,—அங்கண் நிலத்தே போய் வீழ்வுற்று அழுது அழுது அந்தோ என நொந்தார் - அகநிழ்நிலத்தின்கட்போய் விழுந்து அழுதழுது அந்தோ என்றிரங்கி வருந்தினர். எ-று. (உ௩)

வேறு.

அன்னை நிகர்ப்பீ ரென்னை யொழித்தே யன்பாளர்
பொன்னடி பெற்றே பொய்கை யழற்கே புகலாமோ
மின்னுரு வத்தீர் நும்மருள் கூடா வினையேனுக்
கின்ன லளித்தீ ரெங்ங னொளித்தீ ரெனநொந்தார்.

இ-ள். அன்னை நிகர்ப்பீர் - மாதாவை ஒத்தவரே,—அன்பாளர் என்னை ஒழித்து பொய்கை அழல் பெற்றுப் பொன் அடிக்கே புகல் ஆமோ - தொண்டர்கள் தமியேனை இங்கே நீக்கிவிட்டுத் தடாகத்தக்கினியின் மூழ்கித் தேவரீருடைய பொன்போலுந் திருவடிகளை அடையலாமா,—மின் உருவத்தீர் - மின்னலைப்போலச் செவ்வொளிவிளங்குந் திருமேனியையுடையவரே,—நும் அருள் கூடா வினையேனுக்கு இன்னல் அளித்தீர் எங்ஙன் ஒளித்தீர் என நொந்தார் - தேவரீருடைய திருவருளோடு கூடவிடாது தடுத்த தீவினையையுடைய தமியேனுக்குத் துன்பத்தைத் தந்தீர் எங்கே மறைந்தருளினீர் என்று வருந்தினர். எ-று. (உ௪)

வேறு.

அந்நிலை தெளிந்து பொய்கை யகன்றுயர் குருந்த நீழற்
பன்னரு மறைகள் காணாப் பதமலர் பற்றி வீழ்ந்து
மன்னிய நிலத்தி னுள்ளார் வல்வினைப் பிறவி மாள
இன்னருட் சதக மெய்தா னரும்பியென் றெடுத்துச் சொன்னார்.

இ-ள். அந்நிலை தெளிந்து பொய்கை அகன்று - திருவாதவூரர் அத்துக்கநிலையினின்று மனந்தெளிந்தெழுந்து அத்தடாகக்கரையைவிட்டு நீங்கி,—உயர் குருந்த நீழல் பன் அரும் மறைகள் காணாப் பதமலர் வீழ்ந்து பற்றி - உயர்வாகிய குருந்தமரநிழலிலே சொல்லுதற்கரிய வேதங்களும் காண்டற்கரிய பாததாமரைமலர்களைக் கீழே வீழ்ந்திறுகப் பற்றிக்கொண்டு,—நிலத்திலுள்ளார் வல்வினை மன்னிய பிறவி மாள - இப்பூமியின்கணுள்ளாரது வலியவினையால் நிலைபெற்ற பிறவிகெட்டொழிய,—இன் அருள் சதகம் மெய்தானரும்பி என்று எடுத்துச சொன்னார் - இனிய திருவருளையுடைய சதகத்தை "மெய்தானரும்பி" என்று தொடங்கிப் பாடியருளினார். எ-று. (உரு)

இத்திறங் கூறி யாங்குப் புலம்பிநின் றிரங்கு மெல்லை
நித்தனன் றுரைத்த நீர்மை நெஞ்சினு ணினைந்து பின்னர்
அத்தலத் திறைஞ்சி யெங்கோ னருட்பெரு விடைபெற் றேகி
உத்தர கோச மங்கை யூர்தனி னொல்லை புக்கார்.

இ-ள். இ திறம் கூறி ஆங்கு புலம்பி நின்று இரங்கும் எல்லை - திருவாதவூரர் இந்தப்பிரகாரம் பாடியருளி அங்ஙனம் புலம்பி நின்று இரங்குகின்றுழி,—நித்தன் அன்று உரைத்த நீர்மை நெஞ்சினுள் நினைந்து - நித்தியராகிய சிவபெருமான் அன்றருளிச்செய்ததனைத் தம்மனத்தின்கணினைந்து,—பின்னர் - அதன்பின்னர்,—அத்தலத்து இறைஞ்சி எம் கோன் அருள் பெரு விடை பெற்று ஏகி - அத்திருப்பெருந்துறையின்கண் வணங்கி நம் பதியினது அருளையுடைய பெரிய விடைபெற்று நடந்து,—உத்தரகோசமங்கை ஊர் தனின் ஒல்லை புக்கார் - திருவுத்தரகோசமங்கை என்னும் ஸ்தலத்திலே விரைவிற் சென்றார். எ-று. (உசு)

சடையவர் கோயி லெய்தித் தம்மைவந் தடிமைக் கொண்ட
வடிவது காணா ராகி மயங்கிவெய் துயிர்த்து வீழ்ந்து
விடுதிகொ லென்னை யென்று நீத்தல்விண் ணப்ப மென்னுந்
தொடைநெடு பாட லோதக் காட்டினர் தொல்லை மேனி.

இ-ள். சடையவர் கோயில் எய்தி தம்மை வந்து அடிமைக் கொண்ட வடிவு காணார் ஆகி - திருவாதவூரர் சடையையுடைய சிவபெருமானது ஆலயத்தையடைந்து தம்மை வலியவந்தடிமைக்கொண்ட பரமாசாரியவடிவத்தைத் தரிசிக்கப்பெறுதவராகி,—மயங்கி வெய்துயிர்த்து வீழ்ந்து - மயக்க

மடைந்து நெட்டுயிர்த்து விழுந்து,—என்னை விடுதிகொல் என்று நீத்தல் விண்ணப்பம் என்னும் தொடைகெழு பாடல் ஓத-"என்னை விடுதிகண்டாய்" என்று நீத்தல்விண்ணப்பம என்னுந் திருவாசகத்தைப் பாடித் துதிக்க,—தொல்லை மேனி காட்டினர் - சிவபெருமான் பழைய தேசிகத் திருமேனியை அவருக்குத தரிசிப்பித்தருளினர். எ-று. (உஎ)

கன்னலை யமுதை யங்கே கண்டுகொண் டிறைஞ்சிச் சின்னாள்
அங்கண் ரிருந்து தங்கோ னருண்மொழிப படியே சென்று
தாங்கி ரில்லாத் தெய்வத் தலம்பல வணங்கி நீங்கிச
சென்னிநன் னாட்டி லெகித திருவிடை மருதூா சேர்ந்தார்.

இ-ள். கன்னலை அமுதை அஙகே கணடு இறைஞ்சிக்கொண்டு சில் நாள் அங்ஙகர் இருந்து - திருவாதவூரா கரும்பையும அமுதையும்போன்ற சிவபிரானை அஙகே தரிசிதது வணஙகி வழிபட்டுக்கொணடு அத்தலத்திலே சிலதினமிருந்து,—தம் கோன் அருள் மொழிப்படியே சென்று - அதன் பின்பு தம் நாயகராகிய சிவபெருமான் அருளிசசெய்த வாக்கின்படியே அப்பாற்சென்று,—தம் நிகா இல்லாத தெயவத தலம் பல வணஙகி நீங்கி - தமக்கொப்புயர்வில்லாத தெய்வததன்மைபொருந்திய தலஙகள் பலவற்றை அடைந்து தரிசிதது வணஙகி அவைகளையுங்கடந்து,—நல் சென்னி நாட்டில் எகித் திருவிடைமருதூர் சேர்ந்தா - நல்ல சோழநாட்டிற்போய்த் திருவிடைமருதூர் என்னும் தலததை அடைந்தார். எ-று. (உஅ)

அப்பதி தொழுத பின்ன ரன்புட னாரூ ரெய்திச்
செப்பரு மலர்த்தாள் போற்றித் திகழ்திருப புலம்ப லோதி
எய்ப்பற விறைஞ்சி யண்ண லியம்பிய பதிக ளெல்லாந்
தப்பற வணங்கி நீங்கித தடமதிற் புகலி சார்ந்தார்

இ-ள். அப்பதி தொழுத பின்னர் - திருவாதவூரர் அத்தலத்தைத் தரிசித்து வணஙகியபின்னா,—அன்பு உடன் ஆரூா எயதி செப்பு அரு மலர்த் தாள் போற்றித திகழ் திருப்புலமபல் ஓதி எய்ப்பு அற இறைஞ்சி - அன்போடு திருவாரூரையடைந்து அஙகே வீற்றிருந்தருளுந் தியாகராசசுவாமியினது துதிததற்கரிய பொற்றாமரைமலாபோலுந் திருவடிகளைத் தரிசித்து வணஙகித் துதித்து, "பூஙகமலததயனொடுமா லறியாதநெறியானே" என்னுஞ் சொற்றொடரை முதலாகவுடைய திருப்புலம்பல் என்னுந் திருவாசகத்தைப் பாடியருளி இளைப்புநீஙகும்வண்ணம் வணஙகிச சென்று,—அண்ணல் இயம்பிய பதிகள் எல்லாம் தப்பு அற வணஙகி நீஙகி - மூன் பரமாசாரியர் கூறியருளிய தலஙகளையெல்லாந் தவறறத் தரிசித்து வணங்கி நீங்கி அப்பாற்சென்று,—தட மதில் புகலி சார்ந்தார் - பெரிய மதில்சூழ்ந்த சீர்காழியையடைந்தார். எ-று. (உகூ)

குன்றென விளங்குங் கோயிற் கோபுர வாயி னீங்கிச்
சென்றுயர் கயிலை யான செய்திகண் டிறைஞ்சி மெல்ல
மன்றிடை நடித்த காதன் மலரடி பிடித்துக் கொண்டு
பின்றிகழ் சடையோன் முன்னாப் பிடித்தபத் தருளிச்செய்தார்.

இ-ள். குன்று என விளங்கும் கோயில் கோபுர வாயில் நீங்கிச் சென்று - திருவாதவூரர் அங்கே மலையைப்போல விளங்காநிற்கும் சிவாலயத்தினது கோபுரவாயிலைக்கடந்து உள்ளேசென்று,—உயர் கயிலை ஆன செய்தி கண்டு இறைஞ்சி மெல்ல - அஃது உயர்ச்சிபொருந்திய கைலாசகிரியாகிய செயல் பொருந்தக்கண்டு வீழ்ந்து வணங்கி மெல்ல,—மன்று இடை நடித்த காதல் மலர் அடி பிடித்துக் கொண்டு - கனகசபையிலே நடனஞ்செய்தருளுகின்ற விரும்பத்தகும் செந்தாமரைமலர்போலுந் திருவடிகளைப் பற்றிக்கொண்டு,—பின் திகழ் சடையோன் முன்னாப் பிடித்த பத்து அருளிச்செய்தார் - பின்றாங்கி விளங்காநிற்குஞ் சடையையுடைய தோணியப்பரது சந்நிதியிலே "உம்பர்கட்கரசே யொழிவறநிறைந்த யோகமே" என்று தொடங்கி "உன்னைச் சிக்கெனப்பிடித்தேனெங்கெழுந் தருளுவதினியே" என்றிறுதிதோறு முடித்துப் பிடித்தபத்தென்னுந் திருவாசகத்தைப் பாடியருளினார். எ-று. (௩௦)

தொல்வினைப் பகைமை யுள்ளா ரியாவருந் தொழுதா லிங்கு
வெல்லவாப் பகையை யென்று விருப்புடன் சிலநாள் வைகி
மல்குமத் தலத்தை நீங்கி வண்கழுக் குன்றி லன்பாற்
செல்வதற் கிசைந்து தில்லைத் திசைகுறித் திறைஞ்சி யேகி.

இ-ள். தொல் வினைப் பகைமை உள்ளார் யாவரும் இங்கு தொழுதால் - பழைய வினைப்பகையையுடையார் யாவரும் ஈண்டுவந்து சுவாமியைத் தரிசித்து வணங்கினால்,—அப் பகையை வெல்லவர் என்று - அப்பகைமையை வெல்வரென்று திருவாதவூரர் சிந்தித்து,—விருப்புடன் சில நாள் வைகி - விருப்பத்தோடு சிலதினம் அங்கிருந்து,—மல்கும் அத்தலத்தை நீங்கி வண் கழுக்குன்றில் அன்பால் செல்வதற்கு இசைந்து - திருவருள்நிறைந்த அச்சீர்காழியை விட்டுநீங்கி வளவிய திருக்கழுக்குன்றம் என்னுஞ் சிவக்ஷேத்திரத்தில் அன்போடு செல்வதற்கு இயைந்து,—தில்லைத் திசை குறித்து இறைஞ்சி ஏகி - சிதம்பரத்தைத் திக்குநோக்கி வணங்கிச்சென்று. எ-று. ()

வேறு

உத்தர நெடுந்திசையி லோங்கியொளி குன்று
முத்தநதி சூழுமுது குன்றினை வணங்கி
அத்தல மகன்றுய ரருட்டுறை யிதென்றே
மெய்த்தவர்க ளெண்ணியுறை வெண்ணெயி லடைந்தார்.

இ-ள். நெடும் உத்தர திசையில் ஏகி - திருவாதவூரர் நெடிய உத்தர திக்கின்கட்சென்று,—ஒளி குன்று முத்த நதி சூழும் முதுகுன்றினை வணங்கி - வெள்ளொளிமிக்க மணிமுத்தநதிசூழ்ந்த திருமுதுகுன்றினைத் தரிசித்து வணங்கி,—அத் தலம் அகன்று - அத்தலத்தைவிட்டு நீங்கி,—மெய் தவர்கள் இது உயர் அருட்டுறை என்று எண்ணி உறை வெண்ணெயில் அடைந்தார் - மெய்ம்மையான தபோதனர் இது சிவபெருமானது திருவருட்டுறையென்றுட்கொண்டு இருக்கப்பெற்ற திருவெண்ணெய்நல்லூரை அடைந்தருளினார். எ-று. (௩௨)

> அந்நகர் வணங்கியபி னன்புட னகன்றே
> நன்னர்வழி சென்றுபல நாடுமுயர் காடுங்
> கொன்னிப மடங்கலுறை குன்றமு மிகந்தே
> மன்னுமரு ணாபுரி மருங்கணைய வந்தார்.

இ-ள். அன்பு உடன் அந்நகர் வணங்கிய பின் - திருவாதவூரர் அன்போடு அத்திருவெண்ணெய்நல்லூரைத் தரிசித்து வணங்கிய பின்னர்,—அகன்று நன்னர் வழி சென்று பல நாடும் உயர் காடும் கொன் இபம் மடங்கல் உறை குன்றமும் இகந்து - அத்தலத்தைவிட்டகன்று நல்ல நெறியின்கட் போய்ப் பலநாட்டையும் உயர்ந்த காட்டையும் அச்சத்தைத் தரும் யானைகளும் சிங்கங்களும் வசிக்கும் மலைகளையுங் கடந்து,—மன்னும் அருணாபுரி மருங்கு அணைய வந்தார் - திருவண்ணாமலைக்கு அதிசமீபமாக வந்தருளினார். எ-று. (௩௩)

> மாடமொடு கோபுரமு மன்னுமணி முத்தஞ்
> சூடுமதி லும்பெரிய தோரண முகப்பும்
> நீடுகமு காடவி நெருங்கியுள தண்கா
> வூடுயர்தல் கண்டுவகை கொண்டுதொழு துய்ந்தார்.

இ-ள். மாடமொடு கோபுரமும் - மண்டபங்களுங் கோபுரங்களும்,—மன்னும் மணிமுத்தம் சூடும் மதிலும் - நிலைபெற்ற அழகிய முத்துக்களை மேற்கொண்ட மதில்களும்,—தோரணம் பெரிய முகப்பும் - தோரணங்களையுடைய பெரிய முகப்புமாகிய இவைகளெல்லாம்,—நீடு கமுக அடவி நெருங்கி உள தண் கா ஊடு உயர்தல் கண்டு - நெடிய கமுகங்காடு தம்முணெருங்கிய குளிர்ந்த சோலையின் மத்தியிலே உயர்ந்து தோன்றுதலைக் கண்டு,—உவகை கொண்டு தொழுது உய்ந்தார் - திருவாதவூரர் மனமகிழ்ச்சிகொண்டு வணங்கிக் கும்பிட்டு உய்ந்தார். எ-று. (௩௪)

> அன்றிருவர் தேடவழ லானதொரு வெற்பாய்
> நின்றவடி வோமன நிறைந்தபெரு வாழ்வோ
> வென்றுமலை யண்ணலை யிறைஞ்சியருள் கொண்டே
> சென்றருணை யாகிய செழும்பதி புகுந்தார்.

இ-ள். அன்று இருவர் தேட அழல் ஆனது ஒரு வெற்பு ஆய் நின்ற வடிவோ - அக்காலத்துப் பிரம விஷ்ணுக்களாகிய இருவரும் முடியையும் அடியையுந் தேட அகப்படாது அக்கினிப்பிழம்பாகியதொரு மலையாய் நின்றவடிவோ,—மனம் நிறைந்த பெரு வாழ்வோ என்று மலை அண்ணலை இறைஞ்சிச் சென்று - மனத்தின்கணிறைந்த பேரின்பவாழ்வோ என்று துதித்துத் திருவண்ணாமலையைத் தரிசித்து வணங்கிச் சென்று,—அருணை ஆகிய செழும் பதி புகுந்தார் - திருவருணையாகிய செழுமை நிறைந்த நகரத்திற் பிரவேசித்தருளினார். எ-று. (கசு)

வேறு.

சோலையு மதிலும் பல்பூந் தோரண மறுகுந் தெய்வச்
சாலைகள் பலவு நீங்கிச் சந்நிதி மறுகிற் சென்று
மாலையு மதியும் பாம்பு மத்தமு முடியில் வைத்தோன்
ஆலய மிறைஞ்சிக் கண்டார் தம்மையன் றாண்ட மேனி.

இ-ள். சோலையும் மதிலும் பல் பூந் தோரண மறுகும் தெய்வ சாலைகள் பலவும் நீங்கி சந்நிதி மறுகில் சென்று - திருநாதவூரர் சோலைகளும் மதில்களும் அழகிய பல தோரணங்களையுடைய திருவீதிகளும் தேவாலயங்களுமாகிய இனமேனன பலவற்றையுங் கடந்து கோயில்வீதியிற் போய்,—மாலையும் மதியும் பாம்பும் மத்தமும் முடியில் வைத்தோன் ஆலயம் இறைஞ்சி - கொன்றை மாலையையும் பிறையையும் சர்ப்பத்தையும் பொன்னூமத்தமலரையும் முடியின்கண்ணே தரித்த அருணாசலேசுவரரது ஆலயத்தைத் தரிசித்து வணங்கி,—தம்மை அன்று ஆண்ட மேனி கண்டார் - தம்மைமுன்னடிமைகொண்ட ஞானதேசிகத திருமேனியைக்கண்டார். எ-று.

மாலுடன் பிரமன் றேவர் வந்துனக் கபய மென்றென்
றோலிடும் பொழுதி லால முண்டிருள் கண்ட போற்றி
மேலிடும் பவநோய் தீர விண்ணவர் மண்ணோர் பச்சைப்
பாலுடன் கலந்துட் கொள்ளும் பனிமலை மருந்தே போற்றி.

இ-ள். மாலுடன் பிரமன் தேவர் வந்து உனக்கு அபயம் என்று என்று ஓலிடும் பொழுதில் - அரிபிரமேந்திராதிதேவர்கள் வந்து தேவரீருக்கு அடைக்கலம் என்று முறையிடுங்காலத்து,—ஆலம் உண்டு இருள் கண்ட போற்றி - அவர்பொருட்டிரங்கி ஆலகாலவிஷத்தையுண்டு கறுத்த கண்டத்தையுடையவரே அடியேனைப் பாதுகாக்க,—விண்ணவர் மண்ணோர் மேலிடும் பவநோய் தீர - தேவர்களும் மனிதர்களுந் தம்மையடர்த்து மீறும் பவரோகம் நீங்க,—பச்சைப் பாலுடன் கலந்து உட்கொள்ளும் பனி மலை மருந்தே போற்றி - பசுமையாகிய திருமேனியையுடைய உமையம்மையாகிய பாலுடன் கலந்து உட்கொள்ளுகின்ற குளிர்ந்த மலைமருந்தே! பாதுகாத்தருள்க. எ-று. (கஎ)

நெடியவன் கேழ லாகி நீணில மகழ்ந்துங் காணு
அடிகளொன் றலைமேல்வைத்த வருட்பெருங் கடலே போற்றி

படியிடம் புரக்கு முண்ணு முலையெனும் பச்சை மேனிக்
கொடியிடங்கொண்டசெம்பொற் குன்றமேபோற்றிபோற்றி.

இ-ள். நெடியவன் கேழல் ஆகி நீள் நிலம் அகழ்ந்தும் காணு அடிகள் என் தலைமேல் வைத்த பெரும அருள் கடலே போற்றி - நெடிய வடிவத்தையுடைய விஷ்ணு பன்றியாகி நீண்டபூமியை அகழ்ந்தும் காணுதற் கரிய திருவடிகளை என தலைமீது வைத்துத் தீக்ஷித்தருளிய பெரிய கிருபா சமுத்திரமே பாதுகாத்தருளுக,—படியிடம் புரக்கும உணணுமுலை எனும் பசசை மேனிக் கொடி இடம் கொண்ட செம பொன் குன றமே போற்றி போற்றி - பூமியைப் பரிபாலனஞ்செய்யும் உண்ணுமுலையம்மைஎன்னும் பசிய திருமேனியையுடைய கொடியை வாமபாகத்திற்கொணட செய்மையாகிய பொன்மலையாயுள்ளவரே பாதுகாததருளுக பாதுகாத்தருளுக. எ-று. (௫௮)

வென்றிடுங் கன்னி மேதிச் சென்னிவிக் கிரமன் றன்னைக்
கொன்றதன பாவந் தீரக் குறித்திட வருள்வாய் போற்றி
அன்றுவந் தென்னை யாளு மண்ணமலையாய் போற்றி
என்றுதம் பரிவா லேத்தி யிறைஞ்சியங் குறையு நாளில.

இ-ள். வென்றிடும் கன்னி - வெல்லுமியல்புடைய துர்க்கை.—மேதிச் சென்னி விக்கிரமன் தன்னைக் கொன்ற தன் பாவம் தீரக் குறித்திட - மகிடாசுரனைக்கொன்ற தன் கொலைப்பாவந் தவிரும்படி வழிபட,—அருள்வாய் போற்றி - அத்துர்க்கைக்கு அநுக்கிரகஞ்செய்தவரே பாதுகாத்தருளுக — அன்று வந்து என்னை ஆளும் அணணாமலையாய் போற்றி என்று தம் பரிவால் இறைஞ்சி எத்தி - அன்று பரமாசாரியராக எழுந்தருளிவந்து தமியேனை அடிமைகொணடருளிய அழகிய அண்ணாமலையாய் பாதுகாத்தருளுக என்று தம்மெய்யன்பினுலே வணஙகித் துதித்து.—அஙகு உறையும் நாளில் - அஙகே வசிக்குங காலத்தில். எ-று. (௫௯)

மாதர்கொண் மாத ரெல்லா மார்கழித் திங்க டன்னில்
ஆதிரை நாண்முன் னீரைந் தாகிய தினங்க டம்மின்
மேதகு மனைக டோறு மழைத்திரு ளிடிவ தான
போதவர் தம்மிற் கூடிப் புனற்றட மாடல் செய்வார்.

இ-ள். மாதர் கொள் மாதர் எல்லாம் மார்கழி திங்கள் தன்னில் ஆதிரைநாள் முன் ஈரைந்து ஆகிய தினஙகள் தம்மில் - அழகையுடைய மகளிரெல்லாம் மார்கழிமாசத்துத் திருவாதிரை நக்ஷத்திரத்துக்கு முற்பத்துத் தினங்களிலெல்லாம்,—இருள் விடிவது ஆன போது மேதகு மனைகள் தோறும் அழைத்து அவர் தம்மில் கூடி புனல் தடம் ஆடல் செய்வார் - இருள்புலருகின்ற விடியற்காலத்திலே மேன்மைபொருந்திய வீடுகடோறும் போய் ஒருவரையொருவர் அழைதது அவர் தம்முளொருங்குகூடி நீரையுடைய தடாகத்திலே ஸ்நானஞ்செய்வார்கள். எ-று. (௬0)

அன்னவ ரியல்பு கண்டா ரங்கவர் புகன்ற தாக
மன்னிய திருவெம் பாவை வாசகம் பேசிப் பின்னர்க்
கன்னியர் பாடி யாடுங் கவின்கொளம் மனைகண் டன்னோர்
பன்னிய பாட லாக வம்மனைப் பாடல் சொன்னார்.

இ-ள். அன்னவர் இயல்பு கண்டார் - அம்மகளிரது தன்மையைக் கண்ட திருவாதவூரர்,—ஆங்கு அவர் புகன்றது ஆக மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசி - அவர் கூறிய கூற்றாக நிலைபெற்ற திருவெம்பாவை என்னுந் திருவாசகத்தை "ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ் சோதியை" என்றெடுத்துப்பாடி,—பின்னர் - அதன்பின்னர்,—கன்னியர் பாடி ஆடும் கவின் கொள் அம்மனை கண்டு - மகளிர் பாடி விளையாடுகின்ற அழகையுடைய அம்மனை விளையாட்டைக் கண்டு,—அன்னோர் பன்னிய பாடல் ஆக அம்மனைப் பாடல் சொன்னார் - அம்மகளிர் கூறிய கூற்றாகத் திருவம்மானை என்னுந் திருவாசகத்தை, "செங்கணெடுமாலுஞ் சென்றிடந்துங் காணரிய, பொங்கு மலர்ப் பாதம் பூதலத்தே போந்தருளி" என்றெடுத்துப் பாடியருளினார். எ-று. (சக)

விரவுமன் புடையா ரந்த மேதகு தலத்தை நீங்கிப்
பரிவுடன் போகி யேகாம் பரந்தனிற் பரனை யேத்தித்
தெரிவருங் காமக் கோட்டி சீறடி வணங்கித் தேவர்
வரநினைந் திறைஞ்சுந் தெய்வ வண்கழுக் குன்றிற் சென்றார்.

இ-ள். விரவும் அன்பு உடையார் அந்த மேதகு தலத்தை நீங்கி - பொருந்திய பேரன்பையுடைய திருவாதவூரர் அந்த மாட்சிமைபொருந்திய திருவண்ணாமலை என்னும் தலத்தை விட்டு நீங்கிச் சென்று,—ஏகாம்பரந்தனில் போகி பரனை பரிவு உடன் ஏத்தி - காஞ்சீபுரத்தையடைந்து திருவேகம்பம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதசுவாமியை அன்போடு வணங்கித் துதித்து,—தெரிவு அரும் காமக்கோட்டி சீறு அடி வணங்கி - இத்தன்மையினரென் றியாவராலும் அறிந்து கோடற்கரிய காமக்கோட்டம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற காமாக்ஷியம்மையினது சிறிய திருவடிகளை வணங்கித் துதித்து,—தேவர் வரம் நினைந்து இறைஞ்சும் தெய்வ வண் கழுக்குன்றில் சென்றார் - அதன்பின்பு தேவர்களெல்லாம் வரத்தைப் பெறும்பொருட்டெண்ணி வணங்குந் தெய்வத்தன்மையையுடைய வளவிய திருக்கழுக்குன்றத்திற் சென்றருளினார். எ-று. (சஉ)

கோட்டிதழ் கமழுங் கொன்றைச் சென்னியன் குலவு மன்பர்
சூட்டிய மலர்த்தாள் போற்றித் துணைவநின் செய்ய மேனி
காட்டினை கலங்கா வண்ண மிக்கழுக் குன்றி லென்னும் [தார்.
பாட்டினை மொழிந்து சின்னாட் பயின்றபின் பணிந்து போந்

இ-ள். கோடு இதழ் கமழும் கொன்றை சென்னியன் குலவும் அன்பர் - கொம்பர்களிலே இதழ்கள் நறுமணங்கமழும் கொன்றை மாலையைத்

தரித்த முடியையுடைய சிவபெருமானுக்கு மெய்யன்பராகிய திருவாதவூரர்,—சூட்டியமலர்த்தாள் போற்றி - தஞ்சிரசிலே முன்னரே சூட்டியருளிய செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை வணங்கித் - துதித்து,—துணைவா - உயிர்த்துணைவரே,—இக் கழுக்குன்றில் கலங்காவண்ணம் நின் செய்ய மேனி காட்டினை என்னும் பாட்டினை மொழிந்து - இக்கழுக்குன்றத்திலே தமியேன் மனங்கலங்காமல் உமதுசிவந்த திருமேனியைக் காண்பித்தீரென்னுந் திருவாசகத்தைப் பாடி,—சில நாள் பயின்று - சிலதினம் அங்கே வசித்து —பின் பணிந்து போந்தார் - அதன்பின்பு சுவாமியை வணங்கித் திரும்பிச் சென்றருளினார். எ-று. (௪௩)

அத்தல முதலா நாப்பணடைந்துள பதியுங் கானும்
மைத்தடங் கிரியுங் காவும் வாவியு நதியு நீங்கிப்
பைத்தவெம் பாம்பொ டாடு நரியெலாம் பரிக ளாக்குஞ்
சித்தர்தென் றில்லை மூன்று காவத மென்னச் சென்றார்.

இ-ள். அத்தலம் முதலா நாப்பண் அடைந்துள பதியும் கானும் மைத்தடம் கிரியும் காவும் வாவியும் நதியும் நீங்கி - திருவாதவூரர் அந்தத் தலம் முதலாக மத்தியிலெதிர்ப்படுகின்ற தலங்களையும் காடுகளையும் கரிய விசாலமாகிய மலைகளையும் சோலைகளையும் தடாகங்களையும் நதிகளையும் கடந்து,—பைத்த வெம் பாம்பு ஒடு ஆடி - படத்தையுடைய வெவ்விய சர்ப்பாபரணத்தோடு நடித்து,—நரி எலாம் பரிகள் ஆக்கும் சித்தர் தென் தில்லை மூன்று காவதம் என்ன சென்றார் - நரிகளையெல்லாம் குதிரைகளாக உருத்திரித்த சித்துவித்தையையுடையவராகிய சபாநாயகரது தெற்கின்கணுள்ள தில்லைமாநகரம் இனி முக்காவத தூரத்திலதென்று கண்டோர் தம்முட்கூறச் சமீபமாகச் சென்றருளினார். எ-று. (௪௪)

வேறு.

தூமூரன் மடப்பாவையர் தோளாசையி லாளாம்
மாமூகரு மிட்டுண்டுயிர் வாழாதவர் தாமுந்
தீமூள்கர வரன்மேலருள் செய்யாதவர் பலரும்
போமூர்வழி போகாதவர் புலியூர்வழி போனார்.

இ-ள். தூ மூரல் மடம் பாவையர் தோள் ஆசையில் ஆள் ஆம் மாமூகரும் - சுத்தமாகிய முறுவலையுடைய இளமைபொருந்திய மகளிரது தோள்களைத் தழுவும் ஆசையொன்றனே அம்மகளிருக்குத் தாம் ஆட்படுகின்ற முழுமூடரும்,—இட்டு உண்டு உயிர் வாழாதவர் தாமும் - பிறருக்குக் கொடுத்துத் தாமும் உண்டு உயிர்வாழாத லோபிகளும்,—தீ மூள் கர அரன் மேல் அருள் செய்யாதவர் பலரும் போம் ஊர்வழி போகாதவர் - அக்கினிசுவாலிக்கும் கையையுடைய சிவபெருமான்மாட்டன்பு செய்யாத பாவிகள் பலரும் செல்லும் நிரயநெறிக்கட் செல்லாத திருவாதவூரர்,—புலியூர் வழி போனார் - சிதம்பரத்துக்குச் செல்லும் நெறிக்கட் சென்றருளினார். எ-று. (௪௫)

செல்லுஞ்சுர மிருபாலொளி திகழ்கொன்றையின் மலரால்
எல்லொன்றிய விமையோருல கெனநின்றன வெங்கும்
புல்லுஞ்சிவ நாமத்தமிழ் போல்வண்டிசை பாடச்
சொல்லும்பொருள் வல்லார்தம கைபோன்றன தோன்றி.

இ-ள். செல்லும் சுரம் இரு பால் ஒளி திகழ் கொன்றையின் மலரால் எல் ஒன்றிய இமையோர் உலகு என எங்கும் நின்றன - திருவாதவூரர் செல்லும்வழி இருமருங்கினும் செவ்வொளிவிளங்காநின்ற கொன்றையின் பூவினாலே பொற்பிரகாசத்தையுடைய தேவருலகென்று சொல்லும்படி எங்கும் பரந்துநின்றன,—சிவ நாமம் புல்லும் தமிழ் போல் வண்டு இசை பாட - சிவநாமத்தோடு பொருந்துந் தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் போல இனிதாக வண்டுகள் கீதம்பாட,—தோன்றி பொருள் சொல்லும் வல்லார் தம கை போன்றன - செங்காந்தண்மலர்கள் அவ்விசைப்பாட்டிற் குப் பொருள்சொல்லுஞ் சாதுரியத்தையுடைய நாடகமகளிரது அபிநயங் காட்டுங் கைகளையொத்தன. எ-று. (சகூ)

தெள்ளுஞ்சிவ ஞானஞ்சிறி தில்லார்தவ வேடங்
கொள்ளுஞ்செய லெனவொண்மலர் குலவுங்கவி ரெல்லாம்
பள்ளம்பட ர் புனல்போற்புலன் வழியேபயில் சிறியோர்
உள்ளந்தமை யொக்குந்திகழ் மைங்கொண்டொளிர் காயா.

இ-ள். தெள்ளும் சிவஞானம் சிறிது இல்லார் தவவேடம் கொள்ளும் செயல் என - தெளிவைத்தருஞ் சிவஞானஞ் சிறிதுமில்லாத கபடிகள் தவ வேடத்தைக்கொள்ளுந் தன்மைபோல,—கவிர் எல்லாம் ஒள் மலர் குலவும் - முருக்குக்களெல்லாம் வாசனையற்ற செவ்வொளிமிக்க மலர்களாற் சிறந்து விளங்கும்,—திகழ் மைக்கொண்டு ஒளிர் காயா - மிக விளங்காநின்ற கருநிறத்தைக்கொண்டு பிரகாசிக்குங் காயாமலர்களானவை,—பள்ளம் படர் புனல் போல் புலன் வழியே பயில் சிறியோர் உள்ளம்தமை ஒக்கும் - பள்ளத்தைநோக்கித் தானே செல்லும் நீரைப்போலச் சத்தாதி ஐம்புலன் வழியே தடையற்றுச்செல்லுங் கீழ்மக்களது கரிய மனங்களைநிகர்க்கும். எ-று.

பாயுங்குல மந்தித்திரள் பயிலும்பணை யசையா
ஈயின்குழு வெழுதேனி னிருல்சேர் மலர்நாகம்
ஆயந்திகழ் தாராகண மகல்வான்மிளிர் மதியம்
ஏயும்படி கிளர்பொங்கரி னிடைநின்றன வெங்கும்.

இ-ள். பாயும் குல மந்தித் திரள் பயிலும் பணை அசையா ஈயின் குழு எழு தேனின் இருல் மலர் சேர் நாகம் - பாயுஞ்சாதியாகிய குரங்குக் கூட்டங்கள் சஞ்சரிக்குங் கொம்புகள் அசைதலான் ஈயினது கூட்டங்கள் எழப்பெறுந் தேன்கூடும் மலர்களும் பொருந்தப்பெற்ற புன்னைமரங்கள்,— ஆயம் திகழ் தாராகணம் அகல் வான் மிளிர் மதியம் ஏயும்படி கிளர்

பொங்கரின் இடை எங்கும் நின்றன - கூட்டமாக விளங்குகின்ற நட்சத்திரங்களும் வானில் விளங்கும் பூரணசந்திரனும் ஒக்கும்படி கிளராநின்ற சோலைகளில் எவ்விடத்தும் நின்றன. எ-று. (சஅ)

பக்கங்கிளர் கமுகின்றிரள் பலசாமரை வீசக்
கொக்கின்றளிர் கோதும்பல குயில்காகள மூதத்
தொக்கன்பொடு விண்ணோதியர் சொரியும்பல பொற்பூ
ஒக்கும்படி மலர்சிந்தின வொண்சண்பகச் சோலை.

இ-ள். பக்கம் கிளர் கமுகின் திரள் பல சாமரை வீச - திருவாதவூரர் செல்லுநெறியின் இருபக்கங்களிலும் கிளராநிற்கும் கமுகுகளின் கூட்டங்கள் பாளையாகிய பல சாமரங்களை இரட்டவும்,—கொக்கின் தளிர் கோதும் பல குயில் காகளம் ஊத - மாவினது இளந்தளிர்களைக் குடையும் பல குயில்கள் சிறுசின்னங்களை ஊதவும்.—பல விண் ஆதியர் தொக்கு அன்பு ஒடு சொரியும் பொன் பூ ஒக்கும்படி - பல தேவத்தலைவர்கள் ஒருங்குதிரண்டு அன்போடும் அவர்மீது சொரியும் சுவர்ணபுஷ்பாஞ்சலியை ஒக்குமென்று கூறும்படி,—சண்பகச் சோலை ஒண் மலர் சிந்தின - சண்பகச்சோலைகள் பொன்னிறம்பொருந்திய மலர்களைச் சிதறின. எ-று. (சக)

நீங்காவள மிவ்வாறுள நீள்சூத நரந்தந்
தேங்காரளி முரல்பாதிரி தெங்கின்றிரள் வகுளங்
கோங்காசினி கொந்தார்செழு மந்தார நெருங்கும்
பூங்காவை யகன்றார்புலி யூராநகர் கண்டார்.

இ-ள். நீங்கா வளம் இவ்வாறு உள - நீங்காத வளங்களை இவ்வாறு கொண்ட.—நீள் சூதம் நரந்தம் தேங்கு ஆர் அளி முரல் பாதிரி தெங்கின் திரள் வகுளம் கோங்கு ஆசினி கொந்து ஆர் செழும் மந்தாரம் நெருங்கும் - நெடிய மாவும் நாரத்தையும் நிறைவுபொருந்திய வண்டுகள் சத்திக்கின்ற பாதிரியும் தெங்கின்கூட்டமும் மகிழும் கோங்கும் பலாவும் கொத்தார்ந்த செழிய மந்தாரமுமாகிய மரங்களெருங்கிய,—பூங்காவை அகன்றார் புலியூர் ஆம் நகர் கண்டார் - பூஞ்சோலையைத் திருவாதவூரர் நீங்கிச் சிதம்பரமாகிய நகரைக் கண்டார். எ-று. (ருo)

சேணொன்றிய மதிலும்பணி திகழ்கோபுர நிரையுஞ்
சோணந்தரு கும்பங்கிளர் துணைமாளிகை பலவுங்
காணுந்தொறு மெழில்செய்வது கண்டஞ்சலி கொண்டே
பூணுந்திரு வருளன்பர் புகழ்ந்தாருண் மகிழ்ந்தார்.

இ-ள். சேண் ஒன்றிய மதிலும் - ஆகாயத்திலுயர்ந்த மதிலும்,—பணி திகழ் கோபுர நிரையும் - சிற்பத்தொழில் விளங்கும் கோபுரவரிசைகளும்,—

சோணம் தரு கும்பம் கிளர் துணைமாளிகை பலவும் - பொற்கும்பங்கள் பிரகாசியாநின்ற இணைமாடங்கள் பலவும்,—காணும் தோறும் எழில் செய்வது கண்டு அஞ்சலி கொண்டு - பார்க்குந்தோறுங் கண்களுக்கு அழகுசெய்வதைக்கண்டு அஞ்சலிசெய்து,—திரு அருள் பூணும் அன்பர் புகழ்ந்தார் உள் மகிழ்ந்தார் - சபாநாயகரது திருவருளைப்பெறத்தகும் அன்பையுடைய திருவாதவூரர் அவற்றைத் தமவாக்கால் புகழ்ந்து மனமகிழ்ச்சியுடையராயினார். எ-று. (௯௧)

வேதந்தரு மொலியுந்தொழும் விண்ணோர்தம தொலியுங்
கீதந்தரு மொலியுங்கிளர் முழவங்களி னொலியும்
போதந்தரு சிவஞானிகள் புகலாகம வொலியும்
ஓதுந்தமி ழொலியுங்கட லொலிசெய்தன புலியூர்.

இ-ள். புலியூர் - அந்தச் சிதம்பரத்திலே,—வேதம் தரும் ஒலியும் - வேதாத்தியயனந்தருமொலியும்,—தொழும் விண்ணோர் தமது ஒலியும் - வழிபாடுசெய்யுந் தேவர்களது தோத்திரவொலியும்,—கீதம் தரும் ஒலியும் - சங்கீதங்களினொலியும்,—கிளர் முழவங்களின் ஒலியும் - கிளர்கின்ற மிருதங்கங்களினொலியும்,—போதம் தரு சிவஞானிகள் புகல் ஆகம ஒலியும் - அறிவைத்தருஞ் சிவஞானிகள் படிக்கும் சைவாகமங்களினொலியும்,—ஓதும் தமிழ் ஒலியும் கடல் ஒலி செய்தன - ஓதுகின்ற தமிழ்ப்பிரபந்தங்களினொலியும் சமுத்திரம்போல ஒலித்தன. எ-று. (௯௨)

நிரையொன்றிய மணிமாளிகை நெடுவீதிக ளகலா
வரையொன்றிய வுயர்கோபுர மணிவாயில் புகுந்தே
உரையொன்றிய சிவஞான முணர்தருநற் சிவநூற்
கரைகண்டவர் மணிமன்றெதிர் கண்டா ரருள் கொண்டார்.

இ-ள். உரை ஒன்றிய சிவஞானம் உணர்தரும் நல் சிவநூல் கரை கண்டவர் - உயர்ச்சிபொருந்திய சிவஞானத்தைவிளக்கும் நல்ல சைவாகம சமுத்திரத்தின் கரைகண்ட திருவாதவூரர்,—நிரை ஒன்றிய மணி மாளிகை நெடு வீதிகள் அகலா - வரிசையாகப்பொருந்திய திருமாளிகைகளையுடைய நெடிய வீதிகளைக் கடந்து,—வரை ஒன்றிய உயர் மணி கோபுர வாயில் புகுந்து - மலைபோல உயர்ந்த அழகிய கோபுரவாயிலின்வழியாக ஆலயத்தினுட் பிரவேசித்து,—மணி மன்று எதிர் கண்டார் அருள் கொண்டார் - அழகிய கனகசபையை நேரேகண்டு பத்திமிகுதியுடையராயினார். எ-று. (௯௩)

பொன்னார்பொது நின்றாடிய புனிதன்றனை முடிமேல்
அந்நாளடி வைகக்குமபர னருட்படி கண்டார்
மன்னாவுயி ரன்னாய்மணி மன்றாசர னென்றே
சொன்னார்பல காலன்பொடு தொழுதார்மிக வழுதார்.

இ-ள். பொன் ஆர் பொது நின்று ஆடிய புனிதன்தனை முடிமேல் அந் நாள் அடி வைக்கும் பரன் ஆகும்படி கண்டார் - திருவாதவூரர் கனக சபையின்கணின்று நடனஞ்செய்தருளுகின்ற நிருமலராகிய சபாநாயகரை முன்னரே தஞ்சிரசின்மீது திருவடிதீகைஷசெய்தருளிய பரமாசாரியராகக் கண்டார்,—அன்பு ஒடு தொழுதார் - அன்போடு வணங்கினார்,—மிக அழுதார் - பின் மிகவும் அழுதார்,—மன்னு - முழுமுதலே,—உயிர் அன்னாய் - உயிர்போன்றவரே,—மணி மன்று சரண் என்று பலகால் சொன்னார் - அழகிய சபாநாயகரே அடியேன் தேவரீருக்கு அடைக்கலம் அடைக்கலம் என்று பலமுறை சொன்னார். எ-று. (கசு)

விண்டேயிரு கண்ணீர்விழ வீழ்ந்தின்னடி முடிமேற்
கொண்டேபி னெழுந்தன்பொடு குறையாவரு ணிறையா
வண்டேர்குழ லுமைபங்கனை வண்டில்லையு ளின்னே
கண்டேனென நற்பாடல் கருத்தார வுரைத்தார்.

இ-ள். இரு கண் விண்டு நீர் விழ வீழ்ந்து இன் அடி முடி மேல் கொண்டு பின் எழுந்து - திருவாதவூரர் இருகண்களும் இமையாது ஆனந்தபாஷ்பம்பொழியச் சந்நிதியில்வீழ்ந்து தம்மினுமினிய திருவடிகளைச் சிரசின்மேற்கொண்டு வணங்கி எழுந்துநின்று,—அன்பு ஒடு குறையா அருள் நிறையா - தம் பேரன்பினோடு குறைந்துநின்று திருவருள் நிறையப்பெற்று,—வண்டு ஏர் குழல் உமை பங்கனை - வண்டுகள் எழுகின்ற கூந்தலையுடைய சிவகாமியம்மை சமேதராகிய சபாநாயகரை,—வண் தில்லையுள் இன்னே கண்டேன் என நல் பாடல் கருத்து ஆர உரைத்தார் - வளவிய தில்லைமாநகரத்திதுபொழுது "கண்டேனே" என்று நல்ல பாடலாகிய கண்டபத்து என்னுந் திருவாசகத்தை மனங்கொளப் பாடியருளினார். எ-று. (கரு)

குன்றாவருண் மூலந்திகழ் குறியாகிய சுடரும்
மன்றாகிய வெளியூடு மகிழ்ந்தாடிய வொளியும்
ஒன்றாகிய வநுபூதியி லுற்றார்செய லற்றார்
நின்றா ரசை விலலாவொரு நிலையோவிய மானார்.

இ-ள். குன்றா அருள் மூலம் திகழ் குறி ஆகிய சுடரும் மன்று ஆகிய வெளி ஊடு மகிழ்ந்து ஆடிய ஒளியும் ஒன்று ஆகிய அநுபூதியில் உற்றார் - திருவாதவூரர் குறைவற்ற கிருபையுடைய மூலஸ்தானத்தில் விளங்குஞ் சிவலிங்கப்பெருமானாகிய சோதியும், கனகசபையாகிய சிதாகாசத்திலே மகிழ்ந்து நிருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகராகிய சோதியுந் தம்முளிரண்டற்ற சிவாநுபூதியையடைந்து,—செயல் அற்றார் நின்றார் - ஆன்மசேட்டைகளற்று நின்றார்,—அசைவு இல்லா ஒரு நிலை ஓவியம் ஆனார் - அசைவில்லாத நிலையையுடைய ஒரு சித்திரவடிவமாயினார். எ-று. (கசு)

மைகால்குழ லுமைபங்கினன் வழிபாடு மறந்தே
கைகாலசை விலவாயின கண்ணுஞ்சிறி திமையா
செய்காரிய மென்னோவிது தெருளாமரு ளென்னா
மெய்காவலர் மணிமன்றை விடப்போமினி யென்றார்

இ-ள். மை கால் குழல் உமை பங்கினன் வழிபாடும் மறந்து - கருமையைக் காலுகின்ற கூந்தலையுடைய சிவகாமிசமேதராகிய சபாநாயகருக்குச் செய்யும் வழிபாட்டையும் மறந்து,—கை கால் அசைவு இல ஆயின - கைகளுங் கால்களும் அசைவில்லாதனவாயின,—கண்ணும் சிறிது இமையா - கண்களுஞ் சிறிதும் இமைக்கின்றில,—செய் காரியம என்னோ - இதற்கு நாம் செய்யுங்காரியம் யாதோ,—இது தெருளாம் மருள் என்னா - இதனைத் தெளியோம்; இது மயக்கமாமென்று கவலைகூர்ந்து,—மெய்காவலர் மணி மன்றை விடப் போம் இனி என்றார் - மெய்காப்பாளர் அழகிய கனகசபையைவிட்டு இனி அகலப்போம் என்று கடிந்து கூறினார். எ-று. (௫௭)

வேறு.

பூண்டருள் கொண்ட காவல் புரிபவ ருரைத்தல் கேளார்
தாண்டவ நிகழு ஞானத் தன்மையின் றொன்மை நாடிக்
காண்டகு துரியா தீதக் களிபரத் தொளியின் மூழ்கி
நீண்டதோர் தம்ப மாகி நின்றனர் நெடிது போது.

இ-ள். பூண்டு அருள் கொண்ட காவல் புரிபவர் உரைத்தல் கேளார் - ஏவலைப்பூண்டு அருள்கொண்ட மெய்காவலர்கூறிய வார்த்தையைத் திருவாதவூரர் கேளாராய்,—நிகழும் தாண்டவம தொன்மைத தன்மை ஞானத்தின் நாடி - நிகழ்கின்ற அநவரததாண்டவத்தைப் பழைய திவ்விய ஞானத்தாலே தம்முளொப்பத் தரிசித்து,—காண தகு துரியாதீதக் களி பரத்து ஒளியில் மூழ்கி - காணத்தக்க துரியாதீதமாகிய ஆநந்தசிவசின்மயவொளியின்கட் புக்கழுந்தி,—நெடிது போது நீண்டது ஓர் தம்பம் ஆகி நின்றனர் - நெடுநேரம நீண்டதொரு தம்பம்போல அசைவற நின்றார். எ-று. (௫௮)

போமெனப் போகா ரொன்றும் புகல்கிலர் பித்தங் கொண்டார்
ஆமெனக் காவ லாள ரஞ்சிநின் றழுங்கு மெல்லை
சாமுடற் குயிர்வந் தெய்துந் தன்மைபோற் குவிந்த கஞ்சத்
தேமலர்க் கரமேற் கொண்டு சிவசிவ போற்றி யென்றார்.

இ-ள். போம் எனப் போகார் ஒன்றும் புகல்கிலர் - நாம் போமென்று சொல்லவும் போகின்றிலர் ஒன்றும் பேசுகின்றிலர்,—பித்தம் கொண்டார் ஆம் எனக் காவலாளர் அஞ்சி நின்று அழுங்கும் எல்லை - பித்தங் கொண்டவராகும் என்று மெய்காப்பாளர் அச்சமுற்றுநின்று வருந்துகின்றுழி,—சாம் உடற்கு உயிர் வந்து எய்தும் தன்மை போல் குவிந்த தேம்

கஞ்ச மலர் கரம் மேல் கொண்டு சிவசிவ போற்றி என்றார் - இறந்தவுடம்பினுள் மீள அவ்வுயிர்வந்தெய்துமாறுபோல குவிந்த தேனையுடைய செந்தாமரைமலர்போலுந் திருக்கரங்களைச் சிரசின்மேல்வைத்து, "சிவசிவ போற்றி" என்றார். எ-று. (௫௯)

முன்னவன் செம்பொன் மன்றை மும்முறை வலங்கொண் டங்
தன்னிக ரில்லா மூலத் தலைவனை வணங்கிப் பின்னர் [குத்
அன்னையம் பிகைதன் பாத மன்புட னிறைஞ்சி யந்தப்
பொன்னவிர் கோயின் மேல்பாற் புலீச்சுரஞ் சென்று சேர்ந்து.

இ-ள். முன்னவன் செம்பொன் மன்றை மும்முறை வலம் கொண்டு - மூழுமுதலாகிய சபாநாயகரது செம்பொன்மயமாகிய சபையை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து அதன்பின்பு,—அங்கு தன் நிகர் இல்லா மூலத் தலைவனை வணங்கி - அங்கே தமக்குநிகரில்லாத சிவலிங்கப்பெருமானாகிய திருமூலட்டானேசுரரை வணங்கி,—அன்னை அம்பிகைதன் பாதம் அன்பு உடன் இறைஞ்சி - அகிலலோகமாதாவாகிய உமையம்மையினது திருவடிகளை அன்போடு வணங்கி —பின்னர் பொன் அவிர் அந்தக் கோயில் மேல் பால் புலீச்சுரம் சென்று சேர்ந்து - அதன்பின்னாப் பொன்மயமாய் விளங்குகின்ற அவ்வாலயத்தின் மேலைத்திக்கிலுள்ள திருப்புலீச்சுரத்திற் போய்ச்சேர்ந்து. எ-று. (௬௦)

வரந்தர விருந்த நாதன் மலரடி வணங்கி நாகேச்
சரந்தனி லிருந்த வண்ண றன்பத மிறைஞ்சி நீங்கித்
திருந்திய மறையோர் வாழுந் தில்லையம் பலஞ்சூழ் வீதி
பொருந்துழி யமிர்த மான வாசகம் புகல லுற்றார்.

இ-ள். வரம் தர இருந்த நாதன் மலர் அடி வணங்கி - தமமெய்யன்பர்களுக்கு வேண்டியவரங்களைப் பிரசாதித்தருளும்பொருட்டுச் சிவலிங்கத் திருமேனிகொண்டு எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது செந்தாமரை மலர்போலுந் திருவடிகளைவணங்கி,—நாகேச்சரந்தனில் இருந்த அண்ணல் தன் பதம் இறைஞ்சி நீங்கி - திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானுடைய திருவடிகளைவணங்கி அவ்விடத்தினின்று நீங்கி,—திருந்திய மறையோர் வாழும் தில்லையம்பலம் சூழ் வீதி பொருந்துழி - திருத்தமாகிய அந்தணர்வசிக்கின்ற கனகசபையைச்சூழ்ந்த வீதியிலே தாம் செல்கின்றுழி,—அமிர்தம் ஆன வாசகம் புகலல் உற்றார் - கேட்போரது செவிப்புலன்களுக்கு அமிர்தமயமாகிய திருவாசகங்களைப் பாடியருளுவாராயினர். எ-று. (௬௧)

ஆடுமிக் குலாநற் றில்லை யாண்டவன் றனைக்கொண் டென்னும்
பாடலைப் புகன்று கோயி லிருவகைப் பதிகங் கூறி

நாடுமச் சிவபு ராண மொழிந்தநல் லகவன் மூன்றாய்
நீடுமெய்த் தமிழு மன்பா லோதினர் நீதி மிக்கார்.

இ-ள். நீதி மிக்கார் - ஒழுக்கத்தின்மிக்க திருவாதவூரர்,—ஆடும் குலாத் தில்லை ஆண்டவன் தனைக் கொண்டு என்னும் இந் நல் பாடலைப் புகன்று - "ஆடுகின்ற குலாத்தில்லை யாண்டானைக்கொண்டன்றே" என்னும் இந்த நல்ல சொற்றொடரை ஈற்றடியாகவுடைய குலாப்பத்து என்னுந் திருவாசகத்தைப் பாடியருளி,—கோயில் இருவகைப் பதிகம் கூறி - கோயின் மூத்ததிருப் பதிகம் கோயிற்றிருப்பதிகம் என்னும் இவ்விருவகைப் பதிகங்களையும் பாடியருளி,—நாடும அச சிவபுராணம் ஒழிந்த நல் அகவல் மூன்றாய் மெய் நீடு தமிழும் அன்பு ஆல் ஓதினார் - ஆராயத்தக்கும அச்சிவபுராணமாகிய கலிவெண்பாவை ஒழித்தொழிந்த நல்ல கீர்த்தித்திருவகவல், திருவண்டப் பகுதி, போற்றித்திருவகவல் என்னும் ஆசிரியப்பா மூன்றுமாகி உண்மை மிக்க தமிழ்வேதங்களையும் அன்போடும் பாடியருளினார். எ-று. (சுஉ)

கைவளை சிலம்பச் செம்பொற் கிங்கிணி கறங்கச் சூழ்ந்து
மைவளர் குழன்மேல் வண்டு மருண்டிசை திரண்டு பாட
மெய்வியர் வரும்ப வெம்போர் விழிக்கயல் புரட்டி ஞாங்கர்
இவ்வகை நின்று சுண்ண மிடித்தனர் மடந்தை நல்லார்.

இ-ள். மடந்தை நல்லார் - மடந்தைப்பருவத்தையுடைய மகளிர்கள்,—கைவளை சிலம்ப - கைகளிற்றரித்த வளையல்கள் சத்திக்கவும்,—செம்பொன் கிங்கிணி கறங்க - மாற்றுயர்ந்த பொன்னாலாகிய சதங்கைகள் ஒலிக்கவும்,—மை வளர் குழன் மேல வண்டு மருண்டு திரண்டு சூழ்ந்து இசை பாட - கருமைவளராநின்ற கூந்தலின்மீது வண்டுகள்மயங்கி ஒருங்குதிரண்டு சூழ்ந்து கீதம்பாடவும்,—மெய் வியர்வு அரும்ப - சரீரத்திலே வெயர்வை அரும்பவும்,—வெம் போர் விழிக் கயல் புரட்டி - குழையோடு வெவ்விய போரையுடைய கண்களாகிய கயல்களைப் பிறழச்செய்து,—ஞாங்கர் இவ் வகை நின்று சுண்ணம் இடித்தனர் - பக்கத்தே இந்தப்பிரகாரம் நின்று பொற்சுண்ணம் இடித்தார்கள். எ-று. (சுங)

அத்திரு வனையார் பாடல் கேட்டவ ரிசைத்த தாக
மெய்த்தமி ழதனா னன்கு மிகுதிருச் சுண்ண மோதி
மைத்திகழ் காவி னூடு வருதலு மாங்கே பொய்தல்
தத்தமின முயலுங் காதற் சிறுமியர் தம்மைக் கண்டார்.

இ-ள். அத் திரு அனையார் பாடல் கேட்டு - திருவாதவூரர் இலக்குமி போலும் அம்மகளிர்பாடுகின்ற வள்ளைப்பாட்டைக்கேட்டு,—அவர் இசைத்தது ஆக - அம்மகளிர்கூறிய கூற்றாக,—மெய் தமிழ் அதனால் நன்கு மிகு திருச்சுண்ணம் ஓதி - மெய்ம்மையாகிய தமிழ்மொழியினாலே "முத்துநற் றாமம்பூமாலைதூக்கி" என்றெடுத்த நன்மைமிக்க திருப்பொற்சுண்ணம்

என்னும் திருவாசகத்தைப் பாடியருளி,—மைத் திகழ் காவின் ஊடு வருத லும் - கருநிறம்விளங்காநிற்கும் சோலையின்கட் செல்கின்றுழி,—ஆங்கே பொய்தல் தத்தமில் முயலும் காதல் சிறுமியர் தம்மைக் கண்டார் - அவ் விடத்தே விளையாட்டைத் தம்முட்கூடித் தனித்தனி முயலும் விருப்பத்தை யுடைய சிறுபெண்களைக் கண்டார். எ-று. (சுச)

கண்டபின் வறிது கூறுங் கசட்டுரை சிறிது மற்றெம்
அண்டனை யுரைமி னீரென் றவரவ ருரைத்த தாக
எண்டரு திருத்தெள் ளேணந் திருவுந்தி யெழிற்றோ ணோக்கம்
பண்டிகழ் திருப்பூ வல்லிப் பாடல்பொன் னூசல் சொன்னார்.

இ-ள். கண்ட பின் - திருவாதவூரர் அச்சிறுமியர்களைக் கண்டபின் னர்,—நீர் வறிது கூறும் கசட்டு உரை சிறிதும் அற்று எம் அண்டனை உரைமின் என்று அவர் அவர் உரைத்தது ஆக - நீவிர் வீணேகூறும் குற்ற முடைய இப்பாடல்களை முழுவதுங் கைவிட்டு அண்டவடிவினராகிய நஞ் சிவபெருமானையே பாடுங்கள் என்று அம்மகளிர் ஒருவருக்கொருவர் கூறிய கூற்றாக,—எண் தரு திருத்தெள்ளேணம் - நன்குமதிப்பைத்தருந் திருத் தெள்ளேணமும்,—திருவுந்தி - திருவுந்தியாரும்,—எழில் தோணோக்கம் - திருத்தோணோக்கமும்,—பண் திகழ் திருப்பூவல்லி பாடல் - பண்விளங்கா நிற்கும் திருப்பூவல்லி என்னும் பாடலும்,—பொன்னூசல் சொன்னார் - திருப்பொன்னூசலுமாகிய திருவாசகங்களைப் பாடியருளினார். எ-று. (சுரு)

ஆங்கொரு சிறுமி தன்சீ ரன்னையை நோக்கிக் கூறுந்
தாங்கிசை மொழியே யாகத் தருமவை யீரைந் தோதி
ஞாங்கரின் முரலுந் தும்பி தன்னையு நயந்து நாதன்
பூங்கழல் வழுத்து தென்று புனிதர்கோத் தும்பி சொன்னார்.

இ-ள். புனிதர் - சுத்தராகிய திருவாதவூரர்,—ஆங்கு ஒரு சிறுமி தன் சீர் அன்னையை நோக்கிக் கூறும் தாங்கு இசை மொழியே ஆக - அங்ஙனம் ஒரு சிறுபெண் தன் நற்றாயைநோக்கிக் கூறும் ஏந்திசையையுடைய கூற் றாக,—தருமவை ஈரைந்து ஓதி - தருதியையுடைய அன்னைப்பத்தைப் பாடி யருளி,—ஞாங்கரில் முரலும் தும்பி தன்னையும் (நோக்கி) - தம்பக்கத்தே மலர்மீதூதிப்பாடுகின்ற தும்பியையும் விளித்து,—நாதன் பூம் கழல் நயந்து வழுத்துக என்று - சிவபெருமானது பொலிவாகிய திருவடிகளை விரும்பிப் பாடக்கடவை என்று,—கோத்தும்பி சொன்னார் - திருக்கோத்தும்பி என் னுந் திருவாசகத்தையும் பாடியருளினார். எ-று. (சுசு)

பொங்கரி னிடையே வாழும் பொற்பிளங் குயிலை கூவி
இங்கழை யெம்பிரானை யென்பதுங் கிளியை நோக்கித்
திங்களஞ் சடையான் பாதஞ் செப்பெனத் தசாங்க மென்னுந்
தங்கிசைத் தமிழுஞ் சொன்னார் தந்நிக ரொருவ ரில்லார்.

இ-ள். தம் நிகர் ஒருவர் இல்லார் - தமக்குநிகரொருவருமில்லாத திருவாதவூரர்,—பொஙகரின் இடையே வாழும் பொற்பு இளம் குயிலே - சோலையின் மத்தியில்வாழும அழகையுடைய இளமையாகிய குயிலே,— கூவி எம் பிரானை இஙகு அழை என்பதும் - நீ கூவி எம்முடைய சிவ பெருமானை இஙகே அழையென்பதாகிய குயிற்பத்தும்,—கிளியை நோக்கி திங்கள் அம் சடையான் பாதம் செப்பு என - கிளியைப்பார்த்து நீ பிறை தவழும் அழகிய சடையையுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதி யென்று,—தசாஙகம் என்னும் தஙகு இசை தம்மும் சொன்னர் - திருத்த சாஙகம் என்னும் தஙகிய இசையையுடைய திருவாசகமும் பாடியருளி னர். எ-று. (சுஎ)

மண்ணிடத் தெம்மை யாண்ட வடிவினை யன்றி மற்றோர்
அண்ணலைக் கடவு ளென்பார்க் கஞ்சதும் வினையே மென்று
பண்ணுறச் சிறநத பாடல் பகர்நதுநற் பன்ன சாலை
ஒண்ணகர்ப் புறம்பு செய்தாங் கிருந்தன ருண்மை மிக்கார்.

இ-ள். உண்மை மிக்கார் - மெய்யுணர்வின்மிக்க திருவாதவூரர்,— மண்ணிடத்து எம்மை ஆண்ட வாழ்வினை அன்றி - இம்மணணுலகின்கண் எம்மை அடிமைகொணட பெருவாழ்வாகிய சிவபெருமானையல்லது,—மற்று ஓர் அண்ணலைக் கடவுள் என்பார்க்கு வினையேம் அஞ்சுதும் என்று - மற்றொரு தலைவனைப் பதி என்னும் பாவிகட்கே தீவினையையுடைய தமியேம் அஞ்சுவேமென்று —பண் உறச சிறந்த பாடல் பகர்ந்து - பண் பொருந்தச சிறந்த அசசப்பத்தாகிய திருவாசகமும் பாடியருளி,—நல் பன்னசாலை ஒள் நகர்ப் புறம்பு செய்து ஆஙகு இருந்தனர் - நல்ல பன்ன சாலையை அழகிய அந்நகரின்புறத்தே அமைதது அதன்கண் இருந் தருளினர். எ-று. (சுஅ)

பரம்பரப் பொருளா மிந்தப் பைந்தமி ழோதி வையம்
பெரும்பிறப் பகல வந்து பிறந்தவர் செய்தி யெல்லாம்
இருந்தநற் றொகுதி தோறு மியம்பிநன் மகிழ்ச்சி யெய்தி
அரும்புகழ்த் தில்லை யுள்ளா ரியாவரு மதிச யித்தார்.

இ-ள். வையம் பரம்பரப் பொருள் ஆம் இந்தப் பைந்தமிழ் ஓதி பெரும் பிறப்பு அகல வந்து பிறந்தவர் செய்தி எல்லாம் - உலகமானது பரம்பரனுகிய சிவனையே பொருளாகவுடைய இத்திருவாசகத்தைப் பாரா யணஞ்செய்து பெரிய பிறவிநீஙக வந்து திருவவதாரஞ்செய்த திருவாத வூரரது செய்கைகளையெல்லாம்,—அரும் புகழ் தில்லை உள்ளார் யாவரும் இருந்த நல் தொகுதி தோறும் இயம்பி நல் மகிழ்சசி எய்தி அதிசயித் தார் - அரிய புகழையுடைய தில்லைமாநகரவாசிகளெல்லாம் தாமொருங்கு கூடி இருக்குஞ் சபைகடோறும் எடுத்தினிதுபாராட்டி நல்ல மனமகிழ்ச்சி யோடதிசயமடைந்தார்கள். எ-று. (சுகூ)

தத்துவ முடிவி லாடுந் தாண்டவந் தம்முட் கண்டு
நித்தலுஞ் சென்று மன்றி னிமலனை யிறைஞ்சி யன்பால்
இத்திற மையர் தில்லை யெல்லையி லிருந்தா ரிப்பாற்
புத்தரை வாதில் வென்ற புகழினை யுரைத்தல் செய்வாம்.

இ-ள். தத்துவ முடிவில் ஆடும் தாண்டவம் தம்முள் கண்டு - தத்துவங்களின்முடிவில் ஆடும் சூக்குமநடனத்தைத் தம்முளே தரிசித்தும்,—நித்தலும் சென்று மன்றில் நிமலனை அன்பு ஆல் இறைஞ்சி - நாடோறுஞ் சென்று கனகசபையின்கண் நிருமலராகிய சபாநாயகரை அன்பினாலே வணங்கித் துதித்தும்,—இத் திறம் ஐயர் தில்லை எல்லையில் இருந்தார் - இந்தப்பிரகாரம் திருவாதவூரர் சிதம்பரத்தின் எல்லையிலே வீற்றிருந்தருளினார் அதுநிற்க,—இப்பால் புத்தரை வாதில் வென்ற புகழினை உரைத்தல் செய்வாம் - இனி இவர் புத்தரை வாதில்வென்ற புகழையுடைய சரித்திரத்தை யாங் கூறுவாம். எ-று. (எ0)

திருவம்பலச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - சகச.

# புத்தரைவாதில்வென்றசருக்கம்.

தாழுநீடு வேணியண்ண றாள்விடாவொர் மாதவன்
ஆழிஞால வண்மையுண்மை யாயுநேய நெஞ்சினான்
சோழநாடு கண்டுதில்லை தொழுதபின்பு பழுதிலா
ஈழநாடு தன்னைநாட வெண்ணியங்கு நண்ணினான்.

இ-ள். தாழு நீடு வேணி அண்ணல் தாள் விடா ஓர் மாதவன் - தாழ்ந்த நெடிய சடையையுடைய சிவபெருமானது திருவடிகளை ஒருபோதும் மறவாத பெருமைபொருந்திய ஒரு தபோதனர்,—ஆழி ஞால வண்மை உண்மை ஆயும் நேய நெஞ்சினன் - சமுத்திரஞ்சூழ்ந்த பூமியின்கண் நாநாவித வளங்களையும் உண்மையையும் ஆராய்ந்தறியும் விருப்பம்பொருந்திய மனத்தையுடையவர்,—சோழ நாடு கண்டு தில்லை தொழுத பின்பு - அவர் சோழநாட்டுவளங்களைக்கண்டறிந்து தில்லைமாநகரைத் தரிசித்து வணங்கிய பின்னர்,—பழுது இலா ஈழ நாடு தன்னை நாட எண்ணி அங்கு நண்ணினான் - குற்றமற்ற ஈழநாட்டுவளங்களையுங் கண்டறியும்படி கருதி அந்நாட்டையடைந்தார். எ-று. (க)

நண்ணுமாதி மாதவ னலங்கொளீழ நாடனும்
அண்ணலா னிருந்தவூ ரடைந்துசே ரிடநதொறும்

எண்ணிலாத காலம்வாழி தில்லைமன்ற மென்றுகூர்
உண்ணிலாவு மன்பினு லுரைக்குமா தொடங்கினன்.

இ-ள். நன்னும் ஆதி மாதவன் - அபயனம் வந்தடைந்த முதன்மையையுடைய அத்தபோதனர்,—நலம் கொள் ஈழ நாடன் ஆம் அண்ணல் இருந்த ஊர் அடைந்து - நன்மைகள்பொருந்திய ஈழநாட்டையுடைய அரசனிருக்கும் இராசதானியையடைந்து,—சேர் இடம் தொறும் தில்லை மன்றம் எண் இலாத காலம் வாழி என்று கூர் உள் நிலாவும் அன்பினுல் உரைக்குமா தொடஙகினன் - தாம்போயிருக்கும் இடங்கடோறும் சிதம்பரத்துள்ள பொன்னமபலம் நீடூழிவாழ்க என்று மிகத் தம்மனத்தின்கணிகழும் பேரன்பினுலே சொல்லும்படி தொடஙகினர். எ-று. (௨)

சென்றுசே ரிடந்தொறுஞ் சிறந்தசெம்பொ னம்பலம்
என்றுகூறி வைகுநாளி னீழநாடன் முன்புபோய்
நன்றிலாத மூகர்தா நயந்திறைஞ்சி மன்னகேள்
ஒன்றியா முரைத்துமென் றுவந்திவ்வாறு கூறினர்.

இ-ள். செ ்று சேர் இடம் தொறும் சிறந்த செம் பொனம்பலம் என்று கூறி வைகு நாளில் - அத்தபோதனர் தாம்போயிருக்கும் இடங்கடோறும் அழகிய சிறந்த "பொன்னம்பலம் வாழ்க" என்றிங்ஙனமுச்சரித்துக்கொணடிருக்கப்பெறு மிந்நாட்களில் ஒருநாள்,—நன்று இலாத மூகர் ஈழ நாடன் முன்பு போய நயந்து இறைஞ்சி - நன்மையில்லாத ஊமர்களாகிய புத்தர்கள் சிலர் அவ்வீழதேசத்தரசன் முன்னரேபோய் அவனை விரும்பி வணஙகி,—மனன யாம் ஒன்று உரைத்தும் உவந்து கேள் என்று இவ்வாறு கூறினர் - நம்மரசனே யாம் ஒன்று கூறுதும் அதனை மகிழ்ந்து கேள் என்று இவ்வாறு கூறுவாராயினர். எ-று. (௩)

ஒற்கமி றிருத்தனு மொருத்தனிந் நகர்க்குளான்
நற்கலன்க ளக்குமாலை நாளுமுண்ப தையமே
நிற்பினும்மி ருப்பினு நிலாவுசெம்பொன் மன்றெனுஞ்
சொற்கிளந்து ரைக்குமென்று சொல்லிமுன் வணங்கினர்.

இ-ள். ஒறகம இல் திருத்தனும் ஒருத்தன் இ நகர்க்கு உளான் - தளர்ச்சியில்லாத திருத்தத்தையுடையனுகிய ஒருவன் இந்நகரத்தின்கண் வந்திருக்கின்முன்,—நல கலன்கள் அக்குமாலை - அவனுக்கு நல்ல ஆபரணங்கள் உருத்திராக்ஷமாலைகள்,—நாளும் உணபது ஐயமே - அவன் நாடோறும் உண்பது பிசசையே,—நிற்பினும இருப்பினும் நிலாவு செம் பொன் மன்று எனும் சொல் கிளந்து உரைக்கும் என்று முன் சொல்லி வணங்கினுர் - அவன் நிற்கும்போதும் இருக்கும்போதும் விளஙகாநின்ற "பொன்னம்பலம்" என்னுஞ்சொல்லை விதந்துரைப்பான் என்று எதிரே கூறி வணங்கினுர். எ-று. (௪)

வேறு

இன்றிங் கவனைக் கொணர்வீரென் றிசைத்தா னிருப னுங்கவருஞ்
சென்றன் புடையாய்வருகவுனை யழைத்தான் றிறன்மன்னவனென்ன
நன்றென் பதுவுந் தீதுமின்றி நாளும் பலிபெற் றுண்பதொழிற் [ன்.
றொன்றுங் கருதா ரொடுங்கருமமுளதோ வேந்தற் கெனவுரைத்தா

இ-ள். நிருபன் இன்று அவனை இங்குக் கொணர்வீர் என்று இசைத்தான் - அரசன் அதுகேட்டு இத்தினம் அவனை இங்கே அழைத்துக்கொண்டு வருக என்று பணித்தான்,—ஆங்கு அவரும் சென்று அன்பு உடையாய் திறன் மன்னவன் உனை அழைத்தான் வருக என்ன - அவ்விடத்தவர்களுஞ் சென்று அன்பையுடையவரே! வலியையுடைய நமமரசன் உம்மை அழைக்கின்றான் வருக என்றுகூற,—நன்று என்பதுவும் தீதும் இன்றி நாளும் பலிபெற்று உண்பது ஒழிந்து ஒன்றும் கருதார் ஒடும் வேந்தற்குக் கருமம் உளதோ என உரைத்தான் - நன்மை என்பதும் தீங்கு என்பதுமின்றி நாடோறும் பிச்சையேற்றுண்ணுதலும இஃதொன்றல்லது பிறிதொன்றுஞ் சிந்தியாதவர்களுமாட்டும் நம்மரசனுக்குக் காரியம் உண்டோ என்று கூறினார். எ-று (௫)

ஊரிற் பலிகொண் டுண்கினுமற் றொன்றுங் கருமமில்லெனினும்
பாரிற் பயில்வா ருயிர்புரத்தல் பரமா நிருபர்க் காதலினால்
வேரிக் கமழ்தா ரெம்மரசன் றன்பால் வருதல் வேண்டுமெனச்
சீரிற் றிகழ்வே றூதருடன் சென்றா னொன்றுந் தீமையிலான்.

இ-ள். ஊரில் பலி கொண்டு உண்கினும் - ஊரிலே பிச்சை எடுத்து உண்டாலும்,—மற்று ஒன்றும் கருமம் இல் எனினும் - உலகத்து ஒருகாரியமும் இல்லையெனினும்,—பாரில் பயில்வார் உயிர் புரத்தல் நிருபர்க்குப் பரம் ஆம் ஆதலினால் - தமது நாட்டின்கட் சஞ்சரிக்கும் பிரசைகளது உயிரைப் பாதுகாத்தல் அரசருக்கு முக்கியகடனாகும் ஆதலினால்,—வேரி கமழ் தார் எம் அரசன் தன் பால் வருதல் வேண்டும் என - நறுமணங் கமழும் மாலையையுடைய நம்மரசன்மாட்டு நீர் வருதல்வேண்டும் என்று தூதுவர் கூற,—ஒன்றும் தீமை இலான் சீரின் திகழ் வேல் தூதர் உடன் சென்றான் - ஒருதீமையுமில்லாத அத்தபோதனார் அழகுடன்விளங்கும் வேலையுடைய தூதுவரோடு சென்றார். எ-று. (௬)

மூன்றும் பிடக மூன்றுணர்ந்து செயிர்நான் கொழிந்து முதுசீலம்
ஐந்தும் புனைந்து பாரமிதை யாறைந் தடக்கு மியல்புடையோன்
கந்தங் கெடுந்தன் முத்தியெனக் காட்டுங் குரவ னுடனிருப்பச்
சந்தஞ் சிறந்த புயநிருப னிருந்தான் றவை புடைசூழ.

இ-ள். மூன்றும் பிடகம் மூன்று உணர்ந்து - மிக்க பிடகநூல் மூன்றையுங் கற்றுத்தெளிந்து,—செயிர் நான்கு ஒழிந்து - குற்றங்கள் நான்கையுந்

தவிர்த்து,—முது சீலம் ஐந்தும் புனைந்து - பழைய சீலங்கள் ஐந்தையும் மேற்கொண்டு,—பாரமிதை ஆறைந்து அடக்கும் இயல்பு உடையோன் - பாரமிதை முப்பதையும் அடக்கும் இயல்புடையனாகிய,—கந்தம் கெடுதல் முத்தி எனக் காட்டும் குரவன் உடன் இருப்ப - பஞ்சகந்தமும் நீங்கக்கெடுவதே முத்தி எனச் சாதிக்கும் பௌத்தாசாரியன் ஒருங்கிருப்ப,—தானை புடை சூழ - சேனைகள் பக்கத்தே சூழ,—சந்தம் சிறந்த புய நிருபன் இருந்தான் - அழகு சிறந்த புயங்களையுடைய புத்தராசா வீற்றிருந்தான். எ-று.

பிடகம் மூன்றாவன விநயபிடகம், அபிதன்மபிடகம், சூத்திரபிடகம் என்பன. பாரமிதை என்றது பரிபக்குவர்கள் புத்தபதவியை அடைதற்கு வேண்டுவனவாகப் பௌத்தநூல்களிற் சொல்லப்பட்ட தானம், சீலம், பொறை, வீரியம், தியானம், உணர்ச்சி, உபாயம், தயை, பெலம், ஞானம், என்னும் பத்தினையும் இப்பத்தும் பிரோசசி, உறுப்புரோசசி, பொருணோசசி என்னும் வகையான் முப்பதாகும் என்பர். பாரமிதை என்பது கரையடைந்தது என்பொருள்படும். பாரம் - கரை. இதை - அடைந்தது. பாரமீதே என்ற பாடம் தவறு பாரமிதை என்ற பாடம் தவறு (எ)

உடுக்குந் தனிவெண் கோவணமு மொளிர் பொக்கணமு மாத்திரையு
மெடுக்குஞ் சதங்கை நெடும்பிரம்பு மிலகுந் திலகத் திருமுகமும [ம
அடுக்குஞ் சிறுபுன் முறுவலு நின் றசையுஞ் சடையுஞ் சனாடரசன
திடுக்கங் கொள்ள வந் தருகா கிருந்தான் றிருவம் பலமென்று

இ-ள். உடுக்கும் தனி வெண் கோவணமும் - அக்கபோதனார் அரையிற்கட்டிய ஒப்பற்ற வெண்மையாகிய கௌபீனமும்,—ஒளிர் பொக்கணமும் - விளங்காநின்ற பிச்சாபாத்திரமும்,—மாத்திரையும் - அளவையமைந்த தண்டமும்,—எடுக்கும் சதங்கை நெடும் பிரம்பும் - கையிலே தாங்கும் சதங்கை ஒலிக்கும் நெடிய பிரம்பும்,—இலகும் திலகத் திருமுகமும் - பிரகாசிக்கும் திலகப்பொட்டையுடைய திருமுகமும்,—அடுக்கும் சிறு புன் முறுவலும் - வாயினகண் அரும்புங் குறுமுறுவலும்,—நின்று அசையும் சடையும் அரசன் கண்டு திடுக்கம் கொள்ள வந்து - பின்றாழ்ந்து நின்றசையுஞ் சடையுமாகிய இவைகளைப் புத்தராசன் கண்டு நடுங்கும்படி வந்து,—திருவம்பலம் என்று அருகாக இருந்தான் - 'திருவம்பலம்' என்று சமீபமாக இருந்தார் எ-று. ()

இருக்குந் தலைவன் றனைநோக்கி யிப்போ திருவம் பலமெ
ன்றிங், குரைக்குந் தன்மை பெலவாமெய் சொல்லென் றுலகாளும் பவ
லூக்க கவனுரைப்பான், பெருகும் புகழார் திகழ்வளவன் பிரியா
விருக்கும் பேரருளார், பரந்த நித்த நாட் டுறந்தைநகரும் புலியூ
ரென்ப தொன்றுளதால்

இ-ள். இருக்கும் தலைவன் தனை நோக்கி - இங்ஙனம் வந்திருக்கும் போதனாரை அரசன் நோக்கி,—இப்போ திருவம்பலம் என்று இங்கு

உரைக்கும் தகைமை எவன் கொல் என - இப்போது நீர் "திருவம்பலம்" என்று சொல்லுந் தகைமை என்கொலோ என்று வினவ,—உலகாள்பவனுக்கு அவன் உரைப்பான் அவ்வரசனுக்கு அவர் கூறுவாராயினர்,—பெருகும் புகழால் திகழ் வளவன் பிரியா இரு கண் பேர் அருளால் புரக்கும் திரு நாட்டு அறம் தழைக்கும் புலியூர் என்பது ஒன்று உளது - வளர்கும் புகழான்விளங்குஞ் சோழராசா பிரிவில்லாத இருகண்களின் பூரணகிருபாநோக்கத்தாற் பாதுகாக்கின்ற காவிரிநாட்டின்கணே தருமம் விருத்தி எய்தப்பெறும் சிதம்பரம் என்றொரு சிவஸ்தலம் இருக்கின்றது. எ-று. (௯)

அந்தப் பதிமுன் றில்லைவன மஃதே புவன மனைத்தினுக்கும்
முந்தக் கிளருந் தெய்வதல மதனான் மூல தானமதாம்
இந்தப் புவிக்கு நாப்பணென விலங்கும் பொதுவா மிடமதனிற்
சந்தத் தனத்தா ளுமைகாண்டத் தலைவன் றிருத்தாண் டவம்புரியும்.

இ-ள். அந்தப் பதி முன் தில்லை வனம் - அத்தலம் முன்னரே தில்லைவனம்,—அஃதே புவனம் அனைத்தினுக்கும் முந்தக் கிளரும் தெய்வ தலம் - அதுவே சகலபுவனங்களுக்கும் முதற்கணுண்டாகிய தேவதலம்,—அதனால் அது மூல தானம் ஆம் - அந்தக்காரணத்தால் அது மூலஸ்தானம் என்று சொல்லப்படும்,—இந்தப் புவிக்கு நாப்பண் என இலங்கும் பொதுவாம் இடமதனில் - இப்பூமிக்கு நடு என்று சொல்லும்படி விளங்கும் பொதுவாகிய அவ்விடத்திலே,—சந்தத் தனத்தாள் உமை காண த் தலைவன் திருத்தாண்டவம் புரியும் - சந்தனக்குழம்பு பூசிய தனங்களையுடைய சிவகாமியம்மை தரிசிக்கச் சபாநாயகர் திருநடனம் செய்தருளுவர். எ-று. (௧௦)

மன்னுந் திறலான் மனுமைந்தன் வடிவிற் றொழுநோய் மாற்றிநெடும்
பொன்னங் கிரிபோ லுருநல்கும் புனிதத் தடமுண் டதின்மூழ்கி
முன்னம் புவியிற் றவமொன்று முயலா தவருமைந் தொழில்
என்னுந் திருத்தாண் டவம்புரிதல் கண்டா லுலகி லினிப்பிறவார்.

இ-ள். மன்னும் திறலான் மனு மைந்தன் வடிவில் தொழு நோய் மாற்றி நெடும் பொன்னம் கிரிபோல உரு நல்கும் புனிதத் தடம் உண்டு - நிலைபெற்ற வலியையுடைய சிங்கவன்மன் என்னு மனுகுமாரனது சரீரத்தின்கணுள்ள குட்டநோயை நீக்கி நெடிய மேருவைப்போலும் பொன்மயமாகிய மேனியைக்கொடுத்த சிவகங்கை என்னும் ஒரு தீர்த்தம் அங்கே இருக்கின்றது,— முன்னம் புவியில் தவம் ஒன்றும் முயலாதவரும் அதில் மூழ்கி ஐந்தொழில் என்னும் திருத்தாண்டவம் புரிதல் கண்டால் - பூர்வசன்மங்களிலே இப்பூமியில் ஒருசிறிதுந் தவஞ்செய்யாத பாவிகளும் பஞ்சகிருத்தியத்துக்கு நிமித்தமாகிய நிருத்தத்தை அங்கே தரிசிக்கப்பெற்றால்,—உலகில் இனிப் பிறவார் - அவர்கள் இவ்வுலகின்கண் இனி ஒருபோதும் பிறவார்கள். எ-று.

நண்ணும் பிறவி யொழித்துயிர்க்குநலஞ்சேர்முத்திகொடுப்பதற்கிங்
கெண்ணுஞ் சமயக் கடவுளரில் யானேவல்ல னெனப் பதமேல்
வண்ணந் திகழ்பொற் கழலணிந்து மதுகைக்கொடியுங்கட்டியருட்
பெண்ணம் பிகைகண் காணநடஞ் செய்வானந்தப்பெருந்தருக்கால்.

இ-ள். நண்ணும் பிறவி ஒழித்து உயிர்க்கு நலம் சேர் முத்தி கொடுப்பதற்கு இங்கு எண்ணும் சமயக் கடவுளரில் யானே வல்லன் என - அநாதியாக வரும் பிறவியைநீக்கி ஆன்மாக்கட்குப் பரமுத்தியைக் கொடுத்தற்கு இங்கே நன்குமதிக்கப்படும் பலசமயகருத்தாக்களுள் நாமேவல்லேம் என்பதற்கறிகுறியாக,—பதமேல் வண்ணம் திகழ் பொன் கழல் அணிந்து மதுகைக்கொடியும் கட்டி - திருவடியின்மீது அழகுவிளங்காநின்ற பொன்னாலாகிய வீரக்கழலைத்தரித்து விருதுக்கொடியையுங் கட்டி,—அந்தப் பெரும் தருக்கால் - அந்தப் பெருமகளிப்போடு—அருள் பெண் அம்பிகை கண் காண நடம் செய்வான் - அருட்சத்தியாகிய சிவகாமியம்மை தரிசிக்கச் சபாநாயகர் நிருத்தஞ்செய்தருளுவார். எ-று. (கஉ)

தேக்குஞ் சடில முடிக்கடவு ளிருதாள் கருதாத் தீமனமும் [னின்
வாக்குஞ் செயலுங் கொடியோரு மொருகாற் பொன்னம் பலமென்
ஆக்கந் தருமஞ் செழுத்திருபத் தோராயிரத்தோ டறுநூறு
நாக்கொண் டுரைக்கு மதற்குநிக ரென்றான் குன்ற நற்புகழான்.

இ-ள். தேக்கும் சடிலம் முடிக் கடவுள் இருதாள் கருதா தீமனமும் வாக்கும் செயலும் கொடியோரும் ஒருகால் பொன்னம்பலம் என்னில் - கங்காசலம் நிறையப்பெற்ற சடாமுடியையுடைய சிவபெருமானது இரு திருவடிகளையுந் தியானியாத நன்மையற்ற மனமும் வாக்குஞ் செய்கையும் கொடியபாவிகளும் ஒருதரம் "பொன்னம்பலம்" என்றுச்சரிக்கப்பெறின்,—நாக்கொண்டு ஆக்கம் தரும் அஞ்செழுத்து இருபத்தோராயிரத்தோடறுநூறு உரைக்கும் அதற்கு நிகர் என்றான் - நாவினாலே மோக்ஷத்தைத்தரும் சிவமூலமந்திரமாகிய பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத்தறுநூறுதரம் செபிப்பதற்கு நிகராகும் என்றார்,—குன்ற நல் புகழான் - குறையாத நல்ல கீர்த்தியையுடைய அத்தபோதனர். எ-று. (கங)

நீறுந் திருவஞ் செழுத்துமிலா நிருபா திருவம் பலமென்று
கூறும் பொருளிங் கிதுவாகு மென்றான் குன்று மெனுங்குணத்தான்
தேறும் பிடகம் மூன்றுமுறை செய்யுந் தலைவ னல்லாது [ன்.
வேறுங் கடவு ளொன்றுளதோ வென்றே புத்தன் வெகுண்டுரைப்பா

இ-ள். குன்று ஆம் எனும் குணத்தான் - மலையென்று சொல்லத்தகுங் குணத்தையுடைய தபோதனர்,—நீறும் திரு அஞ்செழுத்தும் இலா நிருபா - விபூதியைத்தரித்தலும், பஞ்சாக்கரத்தைச் செபித்தலுமில்லாத அரசனே!,—

திருவம்பலம் என்று இங்குக் கூறும் பொருள் இது ஆகும் என்றான் - பொன்னம்பலம் என்றிங்கே நாங்கூறியபொருள் இதுவேயாகுமென்றனர்,—புத்தன் - புத்தகுரு,—தேறும் பிடகம் மூன்றும் உரைசெய்யும் தலைவன் அல்லாது வேறு கடவுள் ஒன்று உளதோ என்று செருக்கொண்டு உரைப்பான் - தெளிவுபொருந்திய பிடகநூன் மூன்றையுஞ் செய்த நங்கடவுளேயல்லது உலகத்திற்கு வேறுமொருகடவுளுண்டோ என்று செருக்கொண்டு கூறுவான். எ-று. (௧௪)

சென்றே தில்லை யெனும்பதியிற் சேர்வேன் வாது செய்தவன்றான்
நின்றே நடிக்குங் கழலீடு நீடுங் கொடியு மீங்கறுப்பேன்
ஒன்றே கடவுள் புத்தனென வுலகோ ரறிய வுரைத்தந்த
மன்றே போதி நிழற்பெருமான் பள்ளி யெனவும் வழங்குவிப்பேன்.

இ-ள். சென்றே தில்லை எனும் பதியில் சேர்வேன் - நானிப்பொழுதே சென்று சிதம்பரம் எனனும் தலத்தையடைவேன்,—வாது செய்து அவன் தான் நின்றே நடிக்கும் கழலீடும் நீடும் கொடியும் ஈங்கு அறுப்பேன் - அங்குள்ள சைவர்களோடு வாதஞ்செய்து அக்கடவுளானவர் நடனஞ்செய்கின்ற பாதத்திற்பிணித்த வீரக்கழலின் வலிமையும நீண்ட விருதுக்கொடியையும் இங்கே அறுப்பேன்,—கடவுள் ஒன்றே - உலகத்திற்குப் பதி ஒன்றே,—புத்தன் என உலகோர் அறிய உரைத்து - அப்பதியும் புத்தகடவுளே என உலகிலுள்ளார் அறியச் சொல்லிச் சாதித்து,—அந்த மன்றே போதி நிழல் பெருமான் பள்ளி எனவும் வழங்குவிப்பேன் - அக்கனகசபையினையே அரசமரநிழலிலிருக்கும் நம்புத்தகடவுளது பள்ளி எனவும் வழங்கச் செய்வேன். எ-று. (௧௫)

இந்தக் கருமந் தினமூன்றில் யானே முடிப்பனெனவெழுந்து
சந்தச் சிவிகை மேல்கொண்டு தன்றாள் வணங்குங் கணஞ்சூழ
நந்தங் கிளருந் திரைக்கடலு நாடுங் காடு மகன்றேகிப்
புந்தித் துயரங் கொண்டொல்லை சென்றான் புத்தன் புலியூரில்.

இ-ள். புத்தன் இந்தக் கருமம் தினம் மூன்றில் யானே முடிப்பன் என எழுந்து - புத்தகுருவானவன் இக்காரியத்தை மூன்றுதினங்களுள் யானே முடிப்பேன் என்று பிரதிஞ்ஞைசெய்தெழுந்து,—சந்தச் சிவிகை மேல் கொண்டு தன் தாள் வணங்கும் கணம் சூழ - அழகிய சிவிகைமேலிவர்ந்து தன்பாதங்களை வழிபடும் சீஷவர்க்கம் சூழ,—நந்தம் கிளரும் திரைக் கடலும் நாடும் காடும் அகன்று ஏகி - சங்குகள்கிளருந் திரைகளையுடைய கடலையும் நாட்டையுங் காட்டையுங் கடந்துசென்று,—புந்தித் துயரம் கொண்டு ஒல்லை புலியூரில் சென்றான் - மனவியாகுலங்கொண்டு விரைவாகச் சிதம்பரத்திற் சென்றான். எ-று.

நந்தங்கிளரும் என்பது எதுகை நோக்கி வலித்து நின்றது. (௧௬)

வேறு

மன்னனுந் தனது செல்வ மகட்குள மூமை நீங்கப
பொன்னினம் பலத்தி லேக வென்பது பொருந்த வுன்னித்
தன்னெடுந் தானை சூழத் தனிப்பெருஞ் சிவிகை யேறிச்
சென்னிநன் னாடு சேர்ந்து தில்லையி னெல்லை புக்கான்.

இ-ள். மன்னனும் தனது செல்வ மகட்கு உள மூமை நீங்க பொன்னின் அம்பலத்தில் ஏக என்பது பொருந்த உன்னி - புத்தராசனுந் தனது செல்வம்போன்ற மகட்குள்ள ஊமைத்தன்மைநீங்கக் கனகசபையிற் செல்லவேண்டுமென்பதை மனம்பொருந்த நினைந்து,—தன் நெடும் தானை சூழ தனிப் பெருஞ் சிவிகை ஏறி நல சென்னி நாடு சேர்ந்து தில்லையின் எல்லை புக்கான் - தனது மிக்க சேனைகள்சூழ ஒப்பற்ற பெரிய சிவிகையின் மீதிவர்ந்து நல்ல சோழநாட்டிற் சென்று சிதம்பரத்தினெல்லையை அடைந்தான். எ-று. (கசு)

இங்கிவன் செலவு முன்னா னெய்திய புத்த னங்குச்
சங்கரன் றில்லை யெல்லைச் சிவிகையி னிழிந்து சார்ந்து
பொங்குதண் புனல்சேர் சென்னிப் புலீச்சுர வான்பொற் கோயி[ல்]
தங்குசெங் கனக சாலந் தயங்குமண் டபத்தி லானான்.

இ-ள். இங்கிவன் செலவு முன்னா எய்திய புத்தன் - இப்புத்தராசன் செல்வதற்குமுன்சென்ற புத்தகுருவானவன்,—அங்கு சங்கரன் தில்லை எல்லைச் சிவிகையின் இழிந்து சார்ந்து - அங்கே சிவபிரானது தில்லைமாநகரத்தெல்லையிலே சிவிகையைவிட்டிறங்கிச் சார்ந்து,—பொங்கு தண் புனல் சேர் சென்னி அரன் புலீச்சுரப் பொன் கோயில் தங்கு செம் கனக சாலம் தயங்கு மண்டபத்தில் ஆனான் - மேலெழும் தண்ணிய கங்காநதி பொருந்திய முடியையுடைய சிவபெருமானது திருப்புலீச்சுரமாகிய அழகிய ஆலயத்துள்ள செம்பொற்கூட்டம்விளங்கும் ஒருமண்டபத்தை அடைந்திருந்தான். எ-று. (கஅ)

ஆங்கவ னிருப்பச் சென்ற வரசனு மிறைஞ்சி யேத்தி
ஓங்கிய மகிழ்ச்சி யெய்தி யமர்ந்துழி யுரக ராசி
தாங்கிய சடிலன் கோயி றன்னிலுட் கருமஞ் செய்வோர்
ஈங்கிவர் வரவு கண்டே யாவரு மொருங்கு சேர்ந்தார்.

இ-ள். ஆங்கு அவன் இருப்பச் சென்ற அரசனும் இறைஞ்சி ஏத்தி ஓங்கிய மகிழ்ச்சி எய்தி அமர்ந்துழி - அங்கே புத்தகுருவிருப்பச்சென்ற புத்தராசனும் அவனை வணங்கித் துதித்து மிக்க மகிழ்ச்சியடைந்திருந்தபோது,—உரக ராசி தாங்கிய சடிலன் கோயிறன்னில் உட் கருமம் செய்வோர் ஈங்கு இவர் வடிவு கண்டு யாவரும் ஒருங்கு சேர்ந்தார் - சர்ப்பக்கூட்டத்தைத்

தாங்கிய சடையையுடைய சிவபெருமானது ஆலயத்திலே உட்பணிசெய்பவர்கள் இவர்களது வரவைக்கண்டு யாவரும் ஒருங்குதிரண்டார்கள். எ-று.

வேறு.

தத்தமன நொந்துகன றானென வெகுண்டே
சித்தமயர் வெய்துட்வகை சின்மொழிகள் கூறு
அத்தனுறை தில்லைநக ரெல்லையை யகன்றே
புத்தகடி தேகிது பொமேறுமென வுரைத்தார்.

இ-ள். தத்தம் மனம் நொந்து கனல் தான் என வெகுண்டு - அங்ஙனந்திரண்ட சைவர்களெல்லாந் தங்கள் தங்கள் மனம்வருந்தி அக்கினி போலக் கோபங்கொண்டு,—சித்தம் அயர்வு எய்தும் வகை சில் மொழிகள் கூறு - அப்புத்தர்கள் மனந்திகைக்கும்படி சிலவார்த்தைகளைப் பேசி,—அத்தன் உறை தில்லை நகர் எல்லையை அகன்றே புத்த கடிது எகு - பரமபிதாவாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற இத்தில்லைமாநகரின் எல்லையை விட்டுப் புத்தனே! சீக்கிரம் ஓடிப்போய்விடு,—இது பொறேம் என உரைத்தார் - இக்குற்றத்தைச் சகிக்கமாட்டோம் என்று கூறினர். எ-று. (உ0)

தார்வளவன் முன்னருயர் தர்க்கவுரை கொண்டே
நீர்பரவு சைவநிலை யன்றென மறுத்துச்
சீர்மருவு புத்தனுயர் தெய்வமென விப்போ
தேர்பெற நிறுத்தியல தேகுவதி லென்றான்.

இ-ள். தார் வளவன் முன்னர் உயர் தர்க்க உரை கொண்டு - வெற்றிமாலையைத்தரித்த சோழராசாவுக்கெதிரே உயர்வாகிய தர்க்கவார்த்தையைக்கொண்டு,—நீர் பரவு சைவம் நிலை அன்று என மறுத்து - நீவிர் துதித்து அநுசரிக்கும் சைவசமயம் பொய்ச்சமயம் என்று நிராகரித்து,—சீர் மருவு புத்தன் உயர் தெய்வம் என இப்போது ஏர் பெற நிறுத்தி அலது - புகழையுடைய நம் புத்தனே முதற்கடவுளென்று இப்போதே தாபித்தல்லது,—எகுவது இல் என்றான் - யாமிவ்விடத்தை விட்டுப்போவதில்லை என்று கூறினன். எ-று. (உக)

புத்தனவ னின்னன புகன்றபி னெவர்க்கும்
இத்திற முரைக்குவ மெனக்கடி தகன்றே
மெய்த்தவர்கள் வேதமுத லோர்பரி கரத்தோர்
தத்தமனை தோறுமிது சாற்றினர்க ளன்னோர்.

இ-ள். புத்தனவன் இன்னன புகன்ற பின் - புத்தனானவன் இன்னோரன்ன வார்த்தைகளைக் கூறியபின்னர்,—அன்னோர் எவர்க்கும் இத்திறம் உரைக்குவம் எனக் கடிது அகன்று - அவர்கள் சிதம்பரவாசிகள் எவர்கட்கும்

இச்சம்பவத்தைச் சொல்வேமென்று விரைந்துபோய்,—மெய்த்தவர்கள் வேத முதலோர் பரிகரத்தோர் தத்தம் மனை தோறும் இது சாற்றினர்கள் - உண்மையாகிய தபோதனர்கள், வேதமுதல்வர்களாகிய தில்லைவாழந்தணர்கள், பரிவாரத்தோர் என்னும் இவர்களுடைய வீடுகடோறுஞ்சென்று இதனைச் சொன்னார்கள். எ-று. (உஉ)

புண்ணுழையும் வேனிகர் புகன்றமொழி கேளா
அண்ணலுறை கோயிலிடை யாவரு மடைந்தே
வண்ணமணி மண்டபம தெய்திவரு புத்தன்
எண்ணமது கேட்குவ மெனக்கடிது சென்றார்.

இ-ள். புண் நுழையும் வேல் நிகர் புகன்ற மொழி கேளா - புண்ணின்கணுழையும் வேற்படைபோலச சொல்லிய வார்த்தையை அவர்களனைவருங் கேட்டு,—அணணல் உறை கோயில் இடை யாவரும் அடைந்து - சிவபெருமான் வீற்றிருக்கின்ற கோயிலின்கண் யாவரும் போய்,—வண்ண மணி மண்டபம் எய்தி - இனி நாம் புலீச்சுரத்திலுள்ள அழகிய இரத்தின மண்டபத்தின்கட் போய்,—வரும் புத்தன் எண்ணம் அது கேட்குவம் எனக் கடிது சென்றார் - அம்மண்டபத்தின்கண் வந்திருக்கும் புத்தகுருவின்து மனக்கருத்தென்னை என்று கேட்டறிவோம் என்று விரைந்து சென்றார்கள். எ-று. (உங)

தெய்வமறை யந்தணர்கள் செல்லவெதிர் வாரா
மெய்யுணர்வில் புத்தனை வெகுண்டுபல சொல்லா
உய்வதறி யாதவொரு நீபயமு றாதே
இவ்வகை யிருந்தமதி யாமையெது வென்றார்.

இ-ள். தெய்வ மறை அந்தணர்கள் செல்ல - தெய்வதத்தன்மை அமைந்த வேதத்தில் வல்ல தில்லைவாழந்தணர்கள் செல்ல,—எதிர் வாரா மெய் உணர்வு இல் புத்தனை வெகுண்டு பல சொல்லா - எதிர்கொண்டு உபசரியாத மெய்யறிவற்ற புத்தகுருவைக் கோபித்துப் பலவற்றைப் பேசி,—உய்வது அறியாத ஒரு நீ பயம் உறாது இவ்வகை இருந்த மதியாமை எது என்றார் - உய்யுநெறியறியாத நீ ஒருசிறிதும் அச்சமின்றி இங்ஙனம் இறுமாந்திருந்த அவமதிப்புக்குக் காரணம் என்னை என்று வினவினார். எ-று.

அங்கமறை யாகம புராணமவை யாலே
நுங்கடவு ளேகடவு ளென்றுநுவல் வீரேல்
எங்கடவு ளேகடவு ளென்றுநவில் வேன்யான்
இங்கெனெதிர் கூறுமென வேயவ னிசைத்தான்.

இ-ள். அங்கம் மறை ஆகம புராணம் அவையாலே நும் கடவுளே கடவுள் என்று நுவல் வீரேல் - ஆறங்கம் நால்வேதம் இருபத்தெட்டாகமம்

பதினெண்புராணம் என்னும் நுஞ்சாஸ்திரங்களினாலே உமது சிவனே கடவுளென்று நீவிர் சொல்லிநிறுத்துதல் கூடுமாயின் அதனை நிராகரித்து,—எம் கடவுளே கடவுள் என்று யான் நவில்வேன் - நஞ்சமய சாத்திரங்களைக் கொண்டு எம்கடவுளே கடவுளென்று யான் சொல்லி நிறுத்துவேன்,—இங்கு என் எதிர் கூறும் எனவே அவன் இசைத்தான் - ஆதலின், இங்ஙெனக்கெதிரே நீவிர் நுங்கொள்கையைச சொல்லும் என்று அப் புத்தகுரு கூறினன். எ-று. (உ௬)

போற்றுமறை யந்தணர்கள் புத்தனை வெகுண்டே
தோற்றனை யெனக்கலைஞர் சொல்லவுனை வெல்வோம்
மாற்றமினி யுன்னுட னுரைக்குமது மற்றோர்
சேற்றினெதிா கல்லெறிதல் செய்வதல துண்டோ.

இ-ள். போற்றும் மறை அந்தணர்கள் புத்தனை வெகுண்டு - யாவராலுந் துதிக்கத்தகும் வேதங்களை அத்தியயனஞ்செய்யுந் தில்லைவாழந்தணர்கள் புத்தகுருவைக் கோபித்துப்பார்த்துக் கூறுவாராயினர்,—தோற்றனை எனக் கலைஞர் சொல்ல உனை வெல்வோம் - தோற்றனை என்று தார்க்கிகர் சொல்லும்படி நாம் உன்னை வெல்வோம்,—இனி மற்று ஓர் மாற்றம் நின்னுடன் உரைக்கும் அது - அஃதொழிந்து இனிப் பிறிதொருவார்த்தையை நின்னோடு கூறுவது,—சேற்றின் எதிா கல் எறிதல் செய்வது அலது உணடோ - சேற்றின்மீது கல்லுவிட்டெறிந்தவழி அசசேறு எறிந்தார்மீது தெறிததல்போல ஆவதல்லது பிரயோசனமாவதுண்டோ. எ-று.

நன்றிதரு வாருமொரு ஞாளிகுரை செய்தால்
நின்றதன் வெகுட்சியை நிறுததல்கட னுமால்
இன்றிழியு நின்னுட னிகழ்ச்சியெனி னுஞ்சீர்
ஒன்றுமிலை யானவுனை யோருரையில் வெலவேம்.

இ-ள். நன்றி தருவாரும் ஒரு ஞாளி குரை செய்தால் நின்று அதன் வெகுட்சியை நிறுத்தல் கடனும - நன்மையைசசெய்யும் பெரியோரும் ஒரு நாய் குரைக்கின் அவ்விடத்துத் தங்கிநின்று அதன் வெகுளியைத் தணித்தல் அவருக்கு முக்கியகடனாகும்,—இன்று இழியும் நின் உடன் இகழ்ச்சி எனினும் - இத்தினம் இழிவுபொருந்திய நின்னோடு வாதஞ்செய்தல் எமக்கிழிவாயினும்,—சீர் ஒன்றும் இலை ஆன உனை ஓர் உரையில் வெல்வோம் - ஒரு சிறப்புமில்லாத உன்னை ஓர் உரையில் வெல்வோம். எ-று. (உஎ)

மிக்கதிறன் மன்னவரு மெய்யுணர்வி னோருந்
தொக்கசபை முன்னர்நம தர்க்கவுரை சொன்னாற்
றக்கதென லாமிது தகாததிது வென்றால்
எக்கலக முமமிலை யிதேகரும மாமால்.

இ-ள். மிக்க திறல் மன்னவரும் மெய் உணர்விேனாரும் தொக்க சபை முன்னர் நம தர்க்க உரை சொனனல் - மிகக வலிமையையுடைய அரசர்களும மெயயுணர்வையுடைய பணடிதர்களும ஒருஙகுகூடின சபைக் கெதிரே நாமிருந்திறததேமும நமமுடைய தாககவாதஙகளைச சொன்னால,—இது தககது இது தகாதது எனலாம - இது தககது இது தகாதது என்று அவாகளே சித்தாநதஞ் செயதுவிடலாம,—என்றால - இஙஙனஞ் சிததாநதஞ் செயயபபடின்,—ஏககலககமும இலலை - ஒரு கலகமுமிலலை ஆத லின்,—இதே கருமம ஆம - இதுவே நணடிச செயறபாலதாகிய காரிய மாம். எ-று. (உஅ)

உத்தர முரைககவறி யாதுபுலி யூரா
புததனை முனிநதனா புடைததனாக ளென்றே
இததல முரைததுவிடு மெனறுவள வனபான
மெயததவா விரிததெழுது மோலையை விடுததாா

இ-ள். மெயததவா - மெயமமையாகிய தவததையுடைய தில்லைவா ழந்தணாகள்,—புலியூரா உததரம உரைகக அறியாது புததனை முனிநதனர் புடைததனாகள என்று இததலம உரைததுவிடும என்று - சிதமபரவாசிகள் வினாககட்கு விடைகூற அறியாமல புததகுருவை வெகுணடு புடைத்தார்க ளென்று இவ்வுலகம அபவாதஞ் சொல்லுமென்று —வளவனபால விரிதது எழுதும ஓலையை விடுததாா - சோழராசாவினிடததுச சமபவஙகளை விரித் தெழுதிய ஒரு திருமுகததை அனுபபினாாகள. எ-று. (உகூ)

அநதணாா பெருநதவ ரருஙகலை யுணாநதோா
வநதணுகு நாளைமணி மனறுதொழ வெனறே
புநதிமகி ழோலைபல போகவிடவெயயோன்
முநதுற வொளிததனன முனைததன னிராவோன்.

இ-ள் அநதணாா பெருநதவா அருமகலை உணாநதோா - பிராமணர் களும பெரிய தபோதனாகளும அரிய கலாபணடிதாகளும,—மணி மன்று தொழ நாளை வநது அணுகும என்று புநதி மகிழ் ஓலை பல போகவிட பின் - அழகிய கனகசபையைத தரிசிததுவணஙக நாளைககு வந்துசேருஙக ளென்று மனமகிழுததறகேதுவாகிய திருமுகஙகள பலவறறை அனுப்பிய பின்னா,—வெயயோன முநதுற ஒளிததனன - சூரியன முன்னா அஸ்த மயனமாயினன,—இராவோன முனைததனன - சநதிரன உதயஞ்செய் தான். எ-று (௩௦)

வேறு

துங்கவா ளென்னு மாதின் சுடாநுதற றிலகமென்னக [சு
கஙகுலா மடநதை பாாக்கு கவின்கொளகண் ணுடியென்ன
சஙகவாா குழையாாச கிடட தரளவெண் கவிகை யென்னத
திஙகண்மா கடலெ டோன்றச சிறநதது ஞால மெல்லாம.

இ-ள். தூங்கவான் என்னும் மாதின் சுடர் நுதல் திலகம் என்ன - உயர்ச்சிபொருந்திய ஆகாயம் என்னும் பெண்ணினது ஒளியையுடைய நெற்றியின்கண் விளங்குந் திலகம்போலவும்,—கங்குல் ஆம் மடந்தை பார்க்கும் கவின் கொள் கண்ணாடி என்ன - இராக்காலமாகிய பெண் தன் வடிவழகை நோக்கும் அழகிய கண்ணாடியைப்போலவும்,—சங்க வார் குழையார்க்கு இட்ட தரள வெண் கவிகை என்ன - நெடிய சங்கக்குண்டலத்தையுடைய சிவபெருமானுக்கு இந்திரன்கவித்த வெண்மையாகிய முத்துக்குடையைப்போலவும்,—மா கடவுள் திங்கள் தோன்ற - தெய்வத்தன்மையையுடைய சந்திரனுதிக்க,—ஞாலம் எல்லாம் சிறந்தது - இவ்வுலகமுழுதுஞ் சிறப்படைந்தது. எ-று. (௩௧)

இன்றொரு தினமு நேரா விங்கிரு நாளை யாங்கள்
உன்றன துயர்ச்சி யின்மை காட்டுவ முலகிற் கென்று
நன்றிகொண் மனையிற் சென்றே யாருநல் லுணவு மாந்தி
அன்றிருண் மேன்மை யாள ரருந்துயில் பயிலுங் காலை.

இ-ள். மேன்மையாளர் - மகிமையையுடைய தில்லைவாழந்தணர்கள்,—நேரா இன்றொரு தினமும் இங்கு இரு - புத்தனே இவ்வொருதினமாத்திரம் இங்கே இரு,—நாளை யாங்கள் உன்றனது உயர்ச்சியின்மை உலகிற்குக் காட்டுவம் என்று - நாளை நாம் உன்னுடைய இழிவை உலகிற்குக் காட்டுவேம் என்று கூறி,—நன்றி கொள் மனையில் சென்று யாரும் நல் உணவு மாந்தி - நன்மையையுடைய தம்மில்லங்களிற் சென்று யாவரும் நல்ல உணவுகளை உண்டு,—அன்று இருள் அரும் துயில் பயிலும் காலை - அன்றிரவில் அரிய நித்திரைசெய்யும்போது. எ-று. (௩௨)

அழகுற மன்றி லாடு மையர்கைப் பிரம்பு தாங்கித்
தழைசடை முடியு மேனி சாத்திய நீறு மாகி
விழைதரு வடிவங் கொண்டு வெளிப்படக் கனவில் வெய்யோன்
எழுவதன் முன்ன ரெய்தி யாவர்க்கு மிதுபு கன்றார்.

இ-ள். அழகு உற மன்றில் ஆடும் ஐயர் - அழகுபொருந்தக் கனகசபையின்கண்ணே நடனஞ்செய்தருளும் கடவுள்,—கைப் பிரம்பு தாங்கி - தமது கையிற் பிரம்பைத் தாங்கி,—தழை சடை முடியும் மேனி சாத்திய நீறும் ஆகி - தழைத்த சடாமுடியையும் திருமேனியிலே தரித்த விபூதியையுமுடையவராகி,—விழைதரு வடிவம் கொண்டு - விரும்பத்தகும் ஒரு வடிவங்கொண்டு,—கனவில் வெய்யோன் எழுவதன் முன்னர் வெளிப்பட எய்தி - அவ்வந்தணரது சொப்பனத்தில் சூரியோதயத்துக்குமுன்னர் வெளிப்பட வந்தருளி,—யாவர்க்கும் இது புகன்றார் - அவரனைவர்க்கும் இதனைத் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௩௩)

வருந்துவ தொழிமி னையமு றொல்லையில் வைகி யன்பால்
இருந்தனன் வாத வூர னியவுரை கேட்ட போதே

பொருந்திய தர்க்க நூலாற் புத்தரை வெல்வா னின்னே
அருந்தவ முடைய நீர்போ யழைத்திடு மவனை யென்றார்.

இ-ள். வருந்துவது ஒழிமின் - வருந்துதலை விடுங்கள்,—வாதவூரன் அன்பால் நம் ஊர் எல்லையில் வைகி இருந்தனன் - திருவாதவூரன் மெய்யன்போடும் நமது தில்லைமாநகரவெல்லையிற் சிவயோகஞ் செய்துகொண்டிருக்கின்றனன்,—இவ்வுரை கேட்டபோதே பொருந்திய தர்க்க நூலால் புத்தரை வெல்வான் - இவ்வார்த்தையை நீவிர் சொல்லக்கேட்ட துணையானே பொருந்திய தாக்கநூல் விதிப்படி பௌத்தர்களை வாதத்தில் வெல்வான்,—அரும் தவம் உடைய நீர் இன்னே போய் அவனை அழைத்திடும் என்றார் - அரிய தவத்தையுடைய நீவிர் இப்பொழுதே போய் அவனை அழையுங்கள் என்றார். எ-று. (௩௪)

கண்டனர் கனவு தன்னில் விழித்தனர் கனக மன்றில்
ஒண்டொடி பாக னன்பா லுரைத்தது கருத்தி லாய்ந்து
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் முடியிற் கோயின்
மண்டப மிசையே யெல்லா மாந்தரும் வநது தொக்கார்.

இ-ள். கனவுதன்னில் கண்டனர் விழித்தனர் - கனவிலே இங்ஙனங் கண்டு நிததிரைவிட்டெழுந்து,—கனக மனறில் ஒண தொடி பாகன் அன்பால் உரைததது கருததில் ஆய்ந்து மகிழ்சசி கொணடனர் - கனக சபையின்கணணே நிருததஞ்செய்தருளும் ஒளிபொருந்திய வளையலைத் தரித்த சிவகாமியம்மை சமேதராகிய சபாநாயகர் கருணைத்திறத்தாற் றமாகவே வந்து திருவாய்மலர்ந்தருளியதைத் தம்முள்ளத்தின்கட் பலகாற் சிந்தித்துத் தெளிந்து மனமகிழ்சசிகொணடார்கள்,—முடியில் செம் கை குவிததனர் - சிரசிலே சிவந்த கைகளைக் கூப்பிவைததஞ்சலிசெய்தார்கள்,—கோயில் மண்டப மிசையே எல்லா மாந்தரும் வந்து தொககார் - பின்னர் அவ்வாலயத்தில் மண்டபததின்கண அவரனைவருமவந்தொருஙகு கூடினார்கள். எ-று. (௩௫)

புல்லறி வுடைய புத்தன் புகன்றதற் கிரங்கிப் பின்னர்
எல்லையில் கருணை யான்வந் திருங்கன வதனி லெய்திச்
சொல்லிய மொழியி னாலே சோதிகொண் முகத்த ராகி
வல்லிருட் கொடுங்கி வெய்யோன் வரவிரி கமல மொத்தார்.

இ-ள். புல் அறிவு உடைய புத்தன் புகன்றதற்கு இரங்கி - தில்லைவாழந்தணர்கள் அற்பவறிவையுடைய புததகுரு முன்னர்க்கூறிய அக்கூற்றிற்கு இரஙகி,—பின்னர் எல்லை இல் கருணையான் வந்து இரும் கனவுதனின் எய்திச சொல்லிய மொழியினாலே சோதிகொள் முகத்தர் ஆகி - அதன் பின்னர் முடிவற்ற பேரருளையுடைய சபாநாயகர் வந்து பெரிய கனவில் அடைந்து சொலலிய வார்தலைதயினாலே ஒளிபொருந்திய முகமுடையவராய்,—வல் இருட்கு ஒடுஙகி வெய்யோன் வர விரி கமலம் ஒத்தார் -

செறிந்த இருளையுடைய இராக்காலத்திற்கு ஒடுங்கி சூரியனுதிக்க மலர் கின்ற தாமரைமலரை ஒத்தனர். எ-று. (௩௬)

தெய்விக மான மன்றிற் றிருநடம் புரியு நாதன்
றைவரு நீறுஞ் செய்ய சடையுநற் பிரம்புந் தாங்கி
மைவிரி கங்குற் காலை வந்துநன் மகிழ்ச்சி யெய்த
இவ்வகை மொழிந்தா ரென்றே யாவருங் கனவு சொன்னார்.

இ-ள். தெய்விகம் ஆன மன்றில் திரு நடம் புரியும் நாதன் - தெய்வத்தன்மைபொருந்திய கனகசபையின்கணணே நடனஞ்செய்தருளுஞ் சபா நாயகா,—தைவரு நீறும் செய்ய சடையும் நல் பிரம்பும் தாங்கி மை விரி கங்குல் காலை வந்து - பூசிய விபூதியும் சிவந்த சடாமுடியும் பொற்பிரம்புங் கொண்டு இருள்விரிந்த இவ்விராக்காலத்திலே நமது கனவின்கணவந்து,— இவ்வகை மொழிந்தார் என்று யாவரும் கனவு சொன்னார் - இந்தப்பிரகாரந் திருவாய்மலர்ந்தருளினரென்று அவரவைருங்கண்ட கனவுநிலையைத் தனித் தனி ஒருவருக்கொருவர் கூறினர். எ-று. (௩௭)

அத்தனை மன்று ளாடு மையனை வியந்துகூறித்
தத்தமி லன்பு கூர்ந்து தரித்துள வருத்த நீங்கி
மெய்த்தவ வாத வூரர் மேவிடத் தணுகு வோமென்
றுத்தம பன்ன சாலை யொல்லையிற் குறுகி னார்கள்.

இ-ள். அத்தனை மன்றுள் ஆடும் ஐயனை வியந்து கூறி - பரமபிதாவும் கனகசபையின்கணடிக்கும் பூசியருமாகிய சபாநாயகரை வியந்து பேசி,— தத்தமில் அன்பு கூர்ந்து தரித்துள வருத்தம் நீங்கி - தங்கடங்களுள் அன்பு மிக்குத் தாஙகொண்ட மனவருத்தத்தினின்று நீங்கி,—மெய்த்தவ வாத வூரர் மேவு இடத்து அணுகுவோம என்று - மெய்ம்மையாகிய தவத்தை யுடைய திருவாதவூரர் வீற்றிருக்கும் இடத்தை அடைவோமென்று கருதி,— உத்தம பன்னசாலை ஒல்லையில் குறுகினார்கள் - அவரது சிறந்த பன்ன சாலையைச சீக்கிரத்தில் அடைந்தார்கள். எ-று. (௩௮)

கூடினர் பன்ன சாலை கூரருட் குன்றை யன்பால்
நாடின ருவந்து கண்டார் நளினவா சனத்தின் மீது
பீடின ரிருந்த யோகம பெயர்ந்தனர் பிறங்கு மன்றில்
ஆடின ருரைத்த வெல்லா மாங்கவர்க் கியம்பி னார்கள்.

இ-ள். பன்னசாலை கூடினர் - இஙஙனம வில்லவனைத்துள்ள பன்ன சாலையையடைந்த தில்லைவாழந்தணாகள்,—கூர் அருள் குன்றை அன்பால் நாடினர் உவந்து கண்டார் - மிக்கோஙகுந் திருவருட்குன்றாகிய வாதவூர ரைப் பேரன்போநொடு மனமுவநது கணடார்கள்,—நளின ஆசனத்தின் மீது பீடினர் இருந்த யோகம் பெயாந்தனர் - பதுமாசனத்திலே பெரியோ

ர்ராகிய வாதவூரர் இருந்தயோகம் பெயர்ந்தார்,—பிறங்கும் மன்றில் ஆடினர் உரைத்த எல்லாம் - விளங்குகின்ற சபையில் நடிக்கும் நடராசர் சொன்ன வைகளையெல்லாம்.—ஆகவர்க்கு இயம்பினோர்கள் - அவ் வாதவூரர்க்குச் சொன்னார்கள். எ-று. (௩௧)

வேறு.

அந்தமொழி யன்பினர் செவிப்புல னிலங்குதலு
மன்றிறை பணித்த துணரா
வந்தவரு டன்கடிது சென்றுதிரு மன்றனை
வணங்கியருள் பெற்று மயலாஞ்
சிந்தைய ரிருந்தமணி மண்டபம தெய்தியவர்
தீயமுக நாடி லிடரே
நந்துமென வேயெழினி கொண்டுமறை வித்தெதி
ரிருந்தனர் நலங்கொ ளணைமேல்.

இ-ள். அந்த மொழி அன்பினர் செவிப்புலன் இலங்குதலும் - அவ் வார்த்தை சிவபத்திமானாகிய திருவாதவூரரது செவிப்புலனுக்கு விடய மாதலும்,—அன்று இறை பணித்தது உணரா - திருப்பெருந்துறையின்கண் ஞானோபதேசஞ்செய்த அக்காலத்துத் தமக்காஞ்ஞாபித்தருளிய அவ்வாஞ் ஞையை நினைந்து.—வந்தவர் உடன் கடிது சென்று திரு மன்றனை வணங்கி அருள் பெற்று - தம்மிடத்துவந்த தில்லைவாழந்தணர்களோடு விரைந்து சென்று அழகிய சபாநாயகரைத் தரிசித்து வணங்கித் திருவருள்பெற்று,— மயல் ஆம் சிந்தையர் இருந்த மணி மண்டபம் எய்தி - மயக்கம்பொருந்திய மனத்தையுடைய புத்தர்களிருக்கும் இரத்தினமண்டபத்தையடைந்து,— அவர் தீய முகம் நாடில் இடரே நந்தும் எனவே எழினி கொண்டு மறை வித்து - அப்புத்தர்களது தீயமுகத்தை நாம் நேரேநோக்கிற் பாவமே மிகு மென்று இடுதிரைகொண்டு அவர்களைத் தமக்கு வெளிப்படாதிருக்கும்படி மறையச்செய்து —எதிர் நலம்கொள் அணைமேல் இருந்தனர் - அவர்கட் கெதிரே அழகுபொருந்திய ஆசனத்தின்மீது வீற்றிருந்தருளினார். எ-று. ()

மன்னுமறை யந்தணர் புராணிக ருங்கலைகள்
வல்லவர்நல லோர்க ளுடனே
சென்னிவள வன்கடிது வந்துதிரு மன்றனெதிர்
சென்றுதொழு தங்க ணகலா
மின்னுமணி மண்டபம தெய்தியரு ளன்பரை
வியந்தடி வணங்கி யருகா
நன்னரணை யின்புற மிருந்தனன் விரிந்தகலை
நாணிறைவு கொண்ட மதிபோல்.

இ-ள். சென்னி வளவன் - சோழமகாராசா,—மன்னும் மறை அந்தணர் புராணிகர் அரும் கலைகள் வல்லவர் நல்லோர்கள் உடனே கடிது வந்து - நிலைபெற்ற வேதங்களிலே மகாபாண்டித்தியமுடைய பிராமணர்களும் பௌராணிகர்களும் அரிய கலைஞானங்களில் வல்ல விற்பன்னர்களுமாகிய நல்லவர்களுடனே விரைந்து சிதம்பரத்திற்கு வந்து —திரு மன்றன் எதிர் சென்று தொழுது அங்கண் அகலா மின்னு மணி மண்டபம் எய்தி - அழகிய சபாநாயகரது சந்நிதியையடைந்து தரிசித்து வணங்கி அவ்விடத்தைவிட்டகன்று திருப்புலீச்சுரத்துள்ள இரத்தின மணடபத்தையடைந்து,—அருள் அன்பரை அடி வணங்கி வியந்து - திருவருளையுடைய மெய்யன்பராகிய திருவாதவூரரது திருவடிகளை வணங்கித் தோத்திரஞ்செய்து.—விரிந்த கலை நாள் நிறைவு கொண்ட மதி போல் அருகா நன்னா அணையின்புறம் இருந்தனன் - சோடசகலைகளும் நிறைந்த பூரணசந்திரனைப்போல அவரது மருங்காக இடப்பட்ட நல்ல ஆசனததின்மீது வீற்றிருந்தான். எ-று. (சக)

ஈழவள நாடனு மெழுந்தடி பணிந்துதிறை
யிட்டகுறை நல்கி யிறைவா
வாழிமிக வாழியென நின்றபொழு தங்கவனை
மன்னர்பெரு மானு மகிழா
வேழமிவை நல்லவிலை யிலலையிம் மணிக்கென
வியந்தரு கிருத்தி யெவருஞ்
சூழுமவை தங்குதலு மங்கய லிருந்தனர்கள்
சூழ்நதுகரி சொல்லு மயலோர்.

இ-ள். வள ஈழ நாடனும் எழுந்து அடி பணிந்து திறை இட்ட குறை நல்கி - வளம்பொருந்திய ஈழமண்டலாதிபதியும் சோழமண்டலாதிபதியைக் கண்டு விரைந்தெழுந்து பாதங்களைவணங்கி முன்கொடுததெஞ்சிய திறைப்பொருட்குறையைக் கொடுதது,—இறைவா வாழி மிக வாழி என நின்ற பொழுது,—மகாராசாவே வாழ்க வாழ்க என்று துதித்துநிற்கும்போது,—அங்கவனை மன்னர் பெருமானும் மகிழா - அவ்வீழராசாவைச் சோழராசாவும் மனமுவந்து நோக்கி,—வேழம் இவை நல்ல - நீ தந்த இவ்வியானைகள் மிகவும் சிறந்தன,—இம்மணிககு விலை இல்லை என வியந்து அருகு இருத்தி - இவ்விரத்தினஙகட்கு விலைமதிப்பு இல்லையெனப் புகழ்ந்து தன் பக்கத்திருததி,—எவரும் சூழும் அவை தஙகுதலும் - அனைவரும் சூழ்ந்திருக்குமச சபையின்கண் தானும் வீற்றிருத்தலும,—சூழ்ந்து கரி சொல்லும் அயலோர் அஙகு அயல் இருந்தனர்கள் - ஆராய்ந்துணர்ந்து சான்று கூறும் மத்தியஸ்தர்களும் அவ்வரசனுக்குப் பக்கத்தே இருந்தார்கள். எ-று.

தில்லைநக ரந்தணர் தபோதனர் சிறந்தினி
திருந்துழி விரிந்த சிவநூல்
வல்லவ ரிழிந்தகுண புத்தனுடன் வாதுசெய
மன்னுசபை காண வருவோர்

தொல்லைமறை தந்தவன் முகுந்தன்முனி வோரெழுவர்
சூழுமிரு நான்கு திசைமேல்
எல்லையி லிருப்பவ ருருத்திரர்கள் விஞ்சைய
ரிராப்பக லிலங்கு கதிரோர்.

இ-ள். தில்லை நகர் அந்தணர் தபோதனர் சிறந்து இனிது இருந்துழி-தில்லைவாழந்தணர்களும் தபோதனர்களும் சிறந்தினிதாக வீற்றிருக்கும் பொழுது,—விரிந்த சிவ நூல் வல்லவர் இழிந்த குண புத்தன் உடன் வாது செயும் மன்னு சபை காண வருவோர்-பரந்த சிவாகமங்களில் வல்ல திருவாதவூரர் இழிந்தகுணம்பொருந்திய புத்தகுருவோடு வாதஞ்செய்யும் நிலைபெற்ற சபையைக்காணும்படி இன்னும் வந்தவர்கள் யாரெனில்,—தொல்லை மறை தந்தவன்-பழைய வேதங்களைத்தந்த பிரமாவும்,—முகுந்தன்-விஷ்ணுவும்,—முனிவோர் எழுவர்-சத்த இருடிகளும்,—சூழும் இரு நான்கு திசை மேல் எல்லையில் இருப்பவர்-இவ்வுலகைசசூழ்ந்த அட்ட திக்கின் முடிவுகடோறும் வசிக்கும் இந்திரன்முதலிய திக்குப்பாலகரெண்மரும்,—உருத்திரர்கள்-உருத்திரர்களும்,—விஞ்சையர்-வித்தியாதரர்களும்,—இராப் பகல் இலங்கு கதிரோர்-சந்திரசூரியர்களும் பிறருமாம். எ-று. (சங)

வேறு.

தன்பெருந் தானை சூழ விருந்ததண் பொன்னி நாடன்
தென்பெருந் துறைசூழ் நாடன் றிருவடி வணங்கி நின்று
நின்பரஞ் சைவஞான நிலைமையை நிறுத்தல் பின்னர்
என்பரம் புத்தர் தம்மை யீங்குயிர் செகுப்ப தென்றான்.

இ-ள். தன் பெரும் தானை சூழ இருந்த தண் பொன்னி நாடன்-தனது மிக்க சேனைகள்சூழ வீற்றிருந்த தண்ணிய காவிரிநாட்டையுடைய சோழமகாராசா,—தென் பெருந்துறை சூழ் நாடன் திருவடி வணங்கி நின்று-தெற்கின்கணுள்ள திருப்பெருந்துறைசூழ்ந்த பாண்டிநாட்டையுடைய திருவாதவூரருடைய திருவடிகளை வணங்கிநின்று,—சைவ ஞான நிலைமையை நிறுத்தல் நின் பரம்-சைவமாகிய ஞானம் அமைந்த நிலைமையைத் தாபித்தல் தேவரீரது பாரமாகும்,—பின்னர் புத்தர் தம்மை ஈங்கு உயிர் செகுப்பது என் பரம் என்றான்-பின்னர் ஈண்டுவந்த இப்புத்தர்களைத் தப்பாது உயிர்வதைசெய்வது தமியேனது பாரம் என்று விண்ணப்பஞ் செய்தான். எ-று. (சச)

வளவனிவ் வகையிற் கூற வந்தபொய்ப் புத்த ரெல்லாம்
உளமயர் வெய்த வாத வூரருண் மகிழ்ச்சி யெய்திக்
களவுரை பகர்வோய் வந்த காரண முரைநீ யென்னக் [ன்.
கிளர்செவி நுழைவே லென்னக் கேட்டவ னிதனைச் சொல்வா

இ-ள். வளவன் இவ்வகையில் கூற - சோழமகாராசா இந்தப்பிரகாரம் வாதவூரருக்கு விண்ணப்பஞ்செய்ய,—வந்த பொய் புத்தர் எல்லாம் உளம் அயர்வு எய்த - அங்கே வந்த பொய்யையுடைய பௌத்தர்களெல்லாம் மனமயர்ச்சியடைய,—வாதவூரர் உள் மகிழ்ச்சி எய்தி - திருவாதவூரர் மனமகிழ்ச்சியடைந்து,—களவு உரை பகர்வோய் நீ வந்த காரணம் உரை என்ன - கபடவார்த்தைகளைப் பேசும் புத்தனே நீ ஈண்டுவந்த காரணம் என்னை சொல்லென்று சொல்ல,—கிளர் செவி நுழை வேல் என்னக் கேட்டவன் இதனைச சொல்வான் - கிளராநின்ற செவிகளில் நுழையும் வேலைப்போலக் கேட்ட புத்தகுரு இதனைச சொல்வான். எ-று. (சரு)

மன்னுமெங் கடவு ளல்லான் மற்றிலை கடவு ளென்றே
இந்நெடும பதியி லெய்தி யியம்பியிங் கெவருங் காணப்
பொன்னினம பலத்தே யெங்கள் புத்தரை வைத்தல் வேண்டி
நென்னல்வந் திருந்தே னிங்கு வேறிலை நினைந்த தென்றான்.

இ-ள். இந் நெடும் பதியில் எய்தி - இப்பெரும்பதியின்கண் வந்து,—மன்னும் எம் கடவுள் அல்லால் மற்று கடவுள் இலை என்று இயம்பி - நிலைபெற்ற நம் கடவுள் அல்லது வேறுகடவுள் இல்லையென்று சொல்லி,—இங்கு எவரும் காண பொன்னின் அம்பலததே எஙகள் புத்தரை வைத்தல் வேண்டி - இஙகே யாவருஙகாணக் கனகசபையின்கண்ணே நம் புத்த கடவுளைத் தாபனஞ்செய்யும்படி கருதி,—நென்னல் வந்து இருந்தேன் - நேற்று வந்திருந்தேன்,—இஙகு நினைந்தது வேறு இலை என்றான் - இஙகே எண்ணி வந்தகாரியம் பிறிதொன்றில்லை என்று கூறினான். எ-று. (சசு)

என்றலும் வாத வூரெம் மிறைவர்புன் முறுவ லெய்தி
முன்றவ மொன்று மில்லாய் முயலிப மாவ துண்டோ
நன்றது நிற்க வுன்ற னற்பெருங் கடவு டானுஞ்
சென்றவ னடியிற் சேருஞ் செய்தியுஞ் செப்பு கென்றார்.

இ-ள். என்றலும் - என்று புத்தகுரு கூறுதலும்,—வாதவூர் எம் இறைவர் புன் முறுவல் எய்தி - நஞ்சமயகுரவராகிய திருவாதவூரர் புன்னகை செய்து,—முன் தவம் ஒன்றும் இல்லாய் - பூர்வதவம் சிறிதுமில்லாதவனே,—முயல் இபம் ஆவது உணடோ - முயல் யானையாவதுமுளதோ,—நன்று - நீகூறிய இது மிகவும் நன்று,—அது நிற்க - அஃதவ்வளவினிற்க,—உன்றன் நல் பெரும் கடவுடானும் அவன் அடியில் சென்று சேரும் செய்தியும் செப்புக என்றார் - உனது நல்ல பெரிய கடவுளினது இலக்கணத்தையும் அக்கடவுளடியிற் சென்றடையும் முத்தி இலக்கணத்தையும் சொல்லுக என்று வினவினார். எ-று. (சஎ)

அண்ணலா ருரைத்த போதி லாங்கவன் வெகுட்சி யெய்திக்
கண்ணிலா தவற்கு வெய்யோன் கதிரொளி காட்ட லாமோ

நண்ணலா வெங்க ளுத னற்புக ழுரைக்கி னன்று
எண்ணிலா யிரங்கள் வேண்டு மென்றுமுபி னிதுபு கன்றான்.

இ-ள். அண்ணலார் உரைதத போதில் - பெருமையிற்சிறந்த திருவாதவூரர் இவ்வாறு சொல்லியசமயத்தில்,—ஆஙகவன் வெகுட்சி எய்தி - அப்புத்தகுரு கோபங்கொண்டு,—கண இலாதவற்கு வெய்யோன் கதிர் ஒளி காட்டலாமோ - குருடனுக்குச் சூரியகிரணத்தின் ஒளியைக் காட்டுதல் கூடுமோ கூடாதன்றே,—நண்ணலா எங்கள் நாதன் நல் புகழ் உரைக்கின் - நும்மறிவு சென்றறிதற்கரிய எங்கடவுளது நற்புகழைச் சொல்லப்புகின்,—நல் நா எண இல ஆயிரங்கள் வேண்டும் என்று - நல்ல நாக்குக்கள் அளவில்லாத ஆயிரம் வேண்டுமென்று முன்னாப் பொதுவகையாற் கூறி,—பின் இது புகன்றான் - பின் சிறப்புவகையால் இதனைக் கூறத்தொடங்கினான். எ-று. (சஅ)

அறந்திகழ் பிடக நன்னூ லோதியன் புடைய னாகிப்
பிறங்குபல யோனி தோறும் பிறந்துயிர்க் குறுதி செய்து
மறந்தரு கோற லாதி நால்வகை யொழித்து மாண்பு
சிறந்துள போதி நீழற் சேர்வனெம் மிறைவ னாவான்.

இ-ள். எம் இறைவன் ஆவான் - எங்கடவுளாவார்,—அறம் திகழ் நல் பிடக நூல் ஓதி - கொல்லாமை முதலிய தருமங்களை விதித்து விளங்கும் நல்ல பிடகநூல்களைக் கூறி,—அன்பு உடையன் ஆகிப் பிறங்கு பல் யோனி தோறும் பிறந்து - உயிர்களிடத் தன்புடையவராகி விளங்காநின்ற பல யோனிகடோறும் பிறந்து,—உயிர்க்கு உறுதி செய்து - அவ்வுயிர்கட்கு நன்மைகளைச்செய்து,—மறம் தரு கோறல் ஆதி நால்வகை ஒழித்து - பாவத்தைத்தருகின்ற கொலை முதலிய குற்றங்கள் நான்கையும் நீக்கி,—மாண்பு சிறந்துள போதி நீழல் சேர்வன - மகிமை சிறந்துள்ள அரசமரநீழலில் வீற்றிருப்பர். எ-று. (சகூ)

மேவிய கருவிற் சேரு முருவம் வேதனை குறிப்புப்
பாவனை யுடன்விஞ் ஞானம பஞ்சகந் தங்கள் கூடி
ஒவில்பல் லுணர்வுண் டாகி யொழிவது பிறவித் துன்பம்
ஆவது பொன்றக் கேடா யழிவது முத்தி யென்றான்.

இ-ள். மேவிய கருவில் சேரும் உருவம் வேதனை குறிப்பு பாவனை உடன் விஞ்ஞானம் பஞ்ச கந்தங்கள் கூடி - உதரத்திற்பொருந்திய கருப்பத்தின்கட்சேரும் உருவம் வேதனை குறிப்புப் பாவனை விஞ்ஞானம் என்னும் பஞ்சகந்தங்களுங் கூடி,—ஓவில் பல் உணர்வு உண்டாகி ஒழிவது பிறவித்துன்பம் - ஒழிவற்ற பலதிற அறிவுகளுமுதித்துப் பின்பு தாங்கூடியவாறே அக்கந்தங்களின் கூட்டம் ஒழிவைப்பொருந்துவதே பிறவித்துன்பமாம்,—ஆவது பொன்றக் கேடாய் அழிவது முத்தி என்றான் - அப்பஞ்ச

கந்த கூட்டம முற்ற நாசமாயழிவதே முத்தி என்று புத்தகுரு கூறி ஞன். எ-று. (௯0)

வாதவூ ரண்ண லாரும் வண்புனற் பொன்னி நாடன்
தீதிலா முகத்தி னூடு சிறந்தருட் பார்வை நல்கிப
பேதையா யறிமால கொண்டு பித்துரை பகரும் புத்தற்
கேதியா மின்று சொலவ தென்றுபின் னிது புகன்றார்.

இ-ள். வாதவூா அணணலாரும் வண புனல் பொன்னி நாடன் - பெருமையிற்சிறந்த திருவாதவூரரும சிறந்த நீர்பொருந்திய காவிரிநாட்டை யுடைய சோழமகாராசாவினது,—தீது இலா முகத்தின் ஊடு சிறந்த அருள் பார்வை நலகி - தீஙகிலலாத முகத்தின்கட்பொருந்தத திவ்விய கிருபாநோககஞ்செயது,—பேதையாய அறிமால் கொணடு பித்து உரை பகரும புத்தற்கு - முழுமகனுய அறிமடமபூணடு பித்துரைகளை வசனிக்கும் இப்புத்தகுருவுககு,—யாம இனறு சொலவது ஏது என்று - யாம் இன்று சொல்லறபாலது யாதோ எனறு சிறிது சிந்தித்து,—பின இது புகன்றார் - பின்னர் இதனைக் கூறியருளுவார். எ-று. (௯க)

தருமமுண் டென்று நனனூல் சாற்றினன் றலைவ னென்னை
மருவிய வுணாவுண் டாகி மறைந்திடுங் கணத்தி னென்னைப்
பொருளுட னுரைதான் றேடிப் புகலுமுன் னுணர்வு போனல்
இருடரு நினனூல் சொலவ தெப்படி யியமபல வேண்டும்.

இ-ள். தருமம் உணடு எனறு நல நூல் தலைவன் சாற்றினன் என்னை - கொல்லாமை முதலிய அறஙகளுணடென்று நல்ல பிடகநூலகளை நஙகடவுள் கூறினா எனறு முறகூறினை,—மருவிய உணாவு உணடாகிக கணத்தில் மறைந்திடும எனனை - பொருநதிய அறிவுணடாகி அது கணப்பொழுதிற் கெடும் என்று பிறகூறினை,—உரை உடன பொருள் தேடிப் புகலும் முன் உணர்வு போனல - சொலலையும பொருளையுந் தேடி நூல் செய்வதன் முன்னமே அவ்வறிவு பஙகம் உறுமேயானல,—இருள் தரும் நின் நூல் சொல்வது எப்படி இயமபல் வேணடும - மயக்கத்தைததரும் நின் பிடக நூல்களை நஙகடவுள் கூறுவது எஙஙனம சொலவாயாக. எ-று. (௯உ)

ஆதலா லறநூ லென்ப துனக்கிலை யுயிர்கட் காசப்
பேதமாம யோனி தோறும பிறந்தன னிறைவ னென்றாய்
தீதுசே ரொருவா மாலைத் தீரககவந தவர்க டாமும்
போதமால் கொளளி னம்மால போவதங் குள்ள தாமோ.

இ-ள். ஆதலால் அற நூல் என்பது உனக்கு இலை - ஆதலினலே ருமசாஸ்திரம என்பது உனககில்லை, அதுநிற்க,—உயிர்கட்கு ஆகப் பேதம்

ஆம் யோனி தோறும் இறைவன் பிறந்தனன் என்றாய் - உயிர்கட்காக நானு பேதமாகிய யோனிகடோறும் நங்கடவுள் பிறந்தார் என்றனே,—தீது சேர் ஒருவர் மாலை தீர்க்க வந்தவர்கள் தாமும் போதமால் கொள்ளின் - தீமை பொருந்திய ஒருவரது மயக்கத்தை நீக்கும்படி வந்தவர்கள் தாமும் மிக மயக்கத்தைக்கொள்ளின்,—அம் மால் அஙகு போவது உள்ளது ஆமோ - அம்மயக்கம் அவரினின்றும் நீஙகுவது உண்மையாகுமோ. எ-று. (௩௩)

கொல்வது கருதா னெங்கள் கோவென வுரைத்தாய் முன்னம்
பல்வகை யோனி தோறும் பார்மிசைப் பிறக்கு நாளில்
வெல்புலி நரியே யாகி வெம்பசி யுற்றான் மற்றுப்
புல்லொடு தழையோ தின்பா னின்பெரும் போதி நாதன்.

இ-ள். எஙகள் கோ கொல்வது கருதான் என முன்னம் உரைத்தாய் - நங்கடவுள் உயிரகளைகொலைசெய்ய நினைக்கமாட்டார் என்று முன்னர்க்கூறினாய்,—நின் பெரும் போதிநாதன் பலவகை யோனி தோறும் பார்மிசை பிறக்கும் நாளில் - அக்கடவுள் நாநாவிதயோனிகடோறும் பூமியிற் பிறந்து திரியுஙகாலத்தில்,—வெல் புலி நரி ஆகி வெம் பசி உற்றால - தன்பகையை வெல்லும் புலியும் நரியுமாய்ப்பிறந்து கொடும்பசி பொருந்தப்பெறின்,— மற்றுப் புல் ஒடு தழையோ தின்பான் - ஊனறினபதைவிட்டுப் புலலையும் பசிலைகளையுமா தினபாா? சொலவாயாக. எ-று. (௩௪)

கரவெனு முன்ற னூலிற் கநதமைந் துடனே கூடி
உருவமு மழியு மென்று யுன்னிறைக் குருவ மெங்கே
விரவிய யோனி தோறு முயிாககருள் செய்ய வேண்டி
மருவொரு வடிவங கொண்டா னென்பதே மதியி லாதாய்.

இ-ள். கரவு எனும் உன்றன் நூலிற் கநதம் ஐந்து உடனே கூடி உருவமும் அழியும் என்றாய் - கபடமுடையது என்று சொலலப்படும் உனது நூலினுலே கந்தம் ஐந்துடனே கூடி உருவமும அழியும் என்றாய்,—உன் இறைக்கு உருவம் எஙகே - நின்கடவுட்கு நின்பிடகநூல் கூறுமுருவம் பின்னர் யாண்டையதோ,—மதி இலாதாய் - புத்தியில்லாதவனே,—விரவிய யோனி தோறும் உயிர்க்கு அருள் செய்ய வேணடி மருவு ஒரு வடிவம் கொண்டான் என்பதே - பொருந்திய பலயோனிகடோறும் ஆன்மாக்கட் கருள்செய்ய விரும்பி நஙகடவுள அதற்கியைந்த வடிவஙகொணடு பிறந்தா ரென்பது என்னே? எ-று. (௩௫)

காரண வுயிரிற் கூடுங் காரிய வுருவின் றேனுஞ்
சீரணி போதி நீழற் சேரிறைக் குருவ மில்லை
பூரண ஞான மில்லாய் பொன்றுதன் முத்தி யென்னும்
பேருணர் வில்லா வுன்றன் பிடகநூல் யாவர் சொன்னார்.

இ-ள். காரண உயிரில் கூடும் காரிய உரு இன்றேல் - காரணவஸ்துவாகிய ஆன்மாவோடு கூடும் காரியமாகிய உருவம் இல்லையாயின்,—சீர் அணி போதி நீழல் சேர் உன் இறைக்கு உருவம் இல்லை - அழகுபொருந்திய அரசமரநீழலிலிருக்கும் நின் கடவுட்கு உருவந்தான் இல்லையே,—பூரண ஞானம் இல்லாய் - அற்பவறிவையுடையவனே,—பொன்றுதல் முத்தி என்னும் பேர் உணர்வு இல்லா உன்றன் பிடகநூல் யாவர் சொன்னார் - பஞ்சகந்தமும் கெடுதலே முத்தி என்று கூறும் பேரறிவற்ற நின் பிடக நூலை யாவர் கூறினர், சொல்வாயாக. எ-று. (ருசு)

இருபதிற் றொருவ ராக வெண்ணு முன்புத்த ரெல்லாம்
வருவது சிறந்த தாயர் வயிற்றினைப் பீறி யென்பை
பரிவொடு சுமந்து பெற்ற ருயிர்கெடப் பழுது செய்தே
அரு நரகத்தில் வீழு மவர்களோ கடவு ளாவார்.

இ-ள். இருபதிற்று ஒருவர் ஆக எண்ணும் உன் புத்தர் எல்லாம் வருவது சிறந்த தாயர் வயிற்றினைப் பீறி என்பை - தணணங்காரன் மகாவீரன் முதலிய இருபதிற்றொருவராகச் சொல்லப்படும் நின் புத்தரெல்லாம் பிறப்பது சிறந்த தாயரது வயிற்றைப் பிளந்து என்று கூறுவை,—பரிவு ஒடு சுமந்து பெற்றார் உயிர் கெடப் பழுது செய்து அரு நரகத்தில் வீழும் அவர்களோ கடவுளாவார் - வருந்தத்தோடு சுமந்து தம்மைப்பெற்ற நற்றாயரை உயிர்துறக்கும்வண்ணங் கொன்று மீளுதற்கரிய நரகக்குழியின்கண் வீழ்ந்தழுந்தும் அவர்களோ கடவுளென்று கொள்ளத்தக்கவர். எ-று. (ருஎ)

கரவுடைப் பூத நான்கின் கலப்பினிற் பேத மலலா [நூலில்
துருவினுக் குயிரவே றின்றென் றுரைப்பைநின் பொய்ம்மை
இரவினிற் றுயிலுங் காலுன் முகத்தினி லேறிப் போகும்
அரவினைப் பூத பேத மறிந்ததோ வறிவி லாதாய்.

இ-ள். கரவு உடைப் பூதம் நான்கின் கலப்பினில் பேதம் அல்லாது உருவினுக்கு உயிர் வேறு இன்று என்று நின் பொய்ம்மை நூலில் உரைப்பை - மறைதலையுடைய பிருதிவிமுதலிய பூதங்கள் நான்கின் கலப்பிலே ஒரு வேறுபாடேயல்லது இவ்வுருவத்தின்கண் இதற்கு வேறாக உயிரென்றொருபதார்த்தமில்லை என்று நின் பொய்யாகிய பிடகநூற் கோட்பாடுபெற்றிக்கூறுவை,—இரவினில் துயிலுங்கால் உன் முகத்தினில் ஏறிப் போகும் அரவினை பூத பேதம் அறிந்ததோ அறிவு இலாதாய் - இராக்காலத்து நீ நித்திரைசெய்யும்போது நின்முகத்திலேறிச் செல்லும் பாம்பை அப்பூதபேதம் அறிந்ததோ? அறிவில்லாதவனே. எ-று. (ருஅ)

உருவமு முயிருங் கூடி முணர்வுனக் கில்லை யிந்த
உருவமிங் கிறந்த காலை யுயிர்கடி தகன்று போகும்
உருவமு முயிருங் கூடிய பிறக்குமே லிதனு முன்றன்
உருவமு முயிரும் வேறா மென்றுரை யுன்றன் வாயால்.

இ-ள். உருவமும் உயிரும் கூடும் உணர்வு உனக்கு இல்லை - மேற்கூறியவாறல்லது உடம்பும் உயிரும் கூடுதலானே அறிவு நிகழும் என்னும் உண்மையறிவு நின்மதத்திற்கில்லை,—உருவம் இங்கு இறந்த காலை உயிர் கடிது அகன்று போகும் - இவ்வுடம்பு இங்கே இறந்தவழி அவ்வுயிர் விரைந்து செல்லும், சென்றபின் யாதுசெய்யுமெனின்?,—மேல் உருவமும் உயிரும் கூடிப் பிறக்கும் - மேலும் அவ்வாறே தன்வினைக்கீடாகப்பொருந்துவதோர் தேகமும் அவ்வுயிருங்கூடிப் பிறக்கும்,—இதனால் உன்றன் உருவமும் உயிரும் வேறும் என்று உன்றன்வாயால் உரை - இதனால் உன் உடம்பும் உயிரும் தம்முள் வேறும் என்று நீயே உன்வாயால் சொல்லக்கடவை.

வானமு மில்லை வானத் தோசையு மில்லை வானம்
ஆனதில் வழக்கா தாமென் றரற்றுவை யுன்ற னூலிற்
காணிலம் புனறீ நான்கு கலப்பதற் கிடம தாகும்
நீநவி லோசை வானி னிகழ்ந்துள செய்தி யென்பாய்

இ-ள். வானமும் இல்லை வானத்து ஓசையும் இல்லை வானம் ஆனது இல் வழக்காம் என்று உன்றன் நூலில் அரற்றுவை - ஆகாயம் என்றொரு திரவியமில்லை அதனகட் சப்தமுமில்லை அவ்வாகாயமென்பது இல்வழக்காம் என்று நின் பிடகநூலைப் பாடிப் பிதற்றுவாய்,—கால் நிலம் புனல் தீ நான்கும் கலப்பதற்கு இடமது ஆகும் - (அவ்வாகாயம்) காற்று நிலம் நீர் நெருப்பு என்னும் நான்கும் கலப்பதற்கு இடமாகும்,—நீ நவில் ஓசை வானில் நிகழ்ந்துள செய்தி என்பாய் - நீ சொல்லுகின்ற சத்தமும் ஆகாயத்திலே நிகழ்ந்த செய்தி என்று சொல்லுக. எ-று. (௬௦)

இடமிகு திசைதா னென்ப தில்வழக் கென்னு நீயே
வடநெடுந் திசையிற் போதி மரமென வணக்கஞ் செய்வை
புடவியி லறிவி லாரும் பித்தரும் பொய்மை யோரும்
உடனிகழ் அவையிற் கூறி னொக்குநீ யுரைப்பவெல்லாம்.

இ-ள். இடம் மிகும் திசை என்பது தான் இல்வழக்கு என்னும் நீயே நெடும் வட திசையில் போதி மரம் என வணக்கம் செய்வை - மிகவும் விசாலமாகிய திசை என்பது இல்வழக்கென்று கூறும் நீயே அதனோடு மாறுபட உயர்வாகிய உத்தரதிக்கிலே அரசமரம் என நமஸ்காரஞ்செய்வாய்,—புடவியில் அறிவு இலாரும் பித்தரும் பொய்மையோரும் உடன் நிகழ் அவையில் கூறின் - இப்பூமியின்கண் மந்தர்களும் பித்தர்களும் பொய்யரும் ஒருங்கிருக்கும் அவைக்களத்தின்மாத்திரம் கூறப்படின்,—நீ உரைப்ப எல்லாம் ஒக்கும் - நீகூறுவனவெல்லாம் பொருந்தும். எ-று. (௬௧)

மரமுயி ரல்ல வென்பை மன்னுமைம் பூத மான
உருவினர் போல நன்னீ ருணவினாற் கிளைகொண் டோங்குஞ்
சருகெழு முணவின் றாயி னுதலாற் சனன பேதத்
தருவினை யருத்த வெங்கோ னுருயிர்க் கமைத்த தென்பாய்.

இ-ள். மரம் உயிர் அல்ல என்பை - மரம்முதலியவற்றை உயிரில்லாத சடப்பொருளென்று சொல்வாய்,—மன்னும் ஐம்பூதம் ஆன உருவினர் போல நல் நீர் உணவினால் கிளை கொண்டு ஓங்கும் - அவை நிலைபெற்ற பஞ்சபூத காரியமாகிய சரீரத்தையுடைய நம்மனோர்போல நல்ல நீராகிய உணவுண்டாயிற் கிளைகளை ஈன்று செழித்தோங்கி வளராநிற்கும்,—உணவு இன்று ஆயின் சருகு எழும் - அவ்வுணவில்லையாயிற் சருகாய் உலர்ந்தழியும்,—ஆதலால் - இங்ஙனமாதலினாலே,—சனன பேதத்து அருவினை அருத்த எங்கோன் ஆருயிர்க்கு அமைத்தது என்பாய - பலதிறத்தனவாகிய பூர்வசன்மங்களிற் செய்துகொண்ட தீர்தற்கரிய வினைப்பயன்களை நுகர்வித்தற்கு நம கடவுள் அரிய ஆன்மாக்கட்கு இயற்றியது மரம முதலிய அசரவடிவம் என்று நீயே சொல்வாயாக. எ-று. (சுஉ)

> வன்பெரும் பழுது கோறன் மண்மிசைப பிறர் செகுத்த
> புன்புலா றின்ன னன்றென் றுரைப்பை நின்பொய்ம்மை நூலிற்
> றின்மையென் றுனக்கு நல்லூ னுடலுயிர செகுத்தே யூட்டி
> உன்பசி தணித்தார் பாவ மெய்துவ துனக்கு நன்றோ.

இ-ள். கோறல் வன் பெரும் பழுது - யாதானும் ஒருயிரைக்கொல்லுதலே ஒருவர்க்குப் பெருங்கொடும பாவமாம்,—மண மிசைப் பிறர் செகுத்த புன் புலால் தின்னல நன்று என்று நின் பொய்மமை நூலில் உரைப்பை - அஃதன்றி இவ்வுலகத்து ஒருவர் கொன்ற புல்லிய ஊனை மற்றொருவர் உண்ணுதல் பாவமாகாது என்று நின் பொய்ம்மையாகிய பிடகநூல் பற்றிப் பேசுவை,—உடல உயிர செகுதது நல் ஊன் தின்பை என்று உனக்கு ஊட்டி உன் பசி தணிததார - உயிரை உடமபினின்றுங் கொன்று நீக்கி நல்ல ஊனை உணபாய என்று உனக்கு உணபிதது உன்பசியைத் தணித்தவர்,—பாவம எயதுவது உனக்கு நன்றோ - அக்கொலைப்பாவத்தை அடைவது அவ்வூனை உணட உனக்கு நலலதோ. எ-று. (சுங)

> காரண நிற்க வென்றுங் காரியங் கெடுதல் வீடென்
> றாரணம் பரவு மெங்கோ னாகமம புகல்வார் சொல்வார்
> பூரண வுயிருஞ் சேரப் பொன்றுதன் முத்தி யென்று
> பேரணங் குற்ற நீயே பிரிவறி யாது சொன்னாய்.

இ-ள். காரணம் நிற்க என்றும் காரியம் கெடுதல் வீடு என்று - காரணமாகிய ஆன்மா நிற்க எஞ்ஞான்றும் காரியப்பொருளாகிய சரீரம் கெடுதலே முத்தி என்று,—ஆரணம பரவும் எங்கோன் ஆகமம் புகல்வார் சொல்வார் - வேதங்களுந் துதிக்கும் எமது பதியாகிய சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்களை ஓதியுணர்ந்த மகான்கள் கூறுவர்,—பூரண உயிரும் சேரப் பொன்றுதல் முத்தி என்று - நிறைவையுடைய உயிரும் அசசரீரத்தோடு நீரககெடுதலே முத்தி என்று,—பேர் அணங்கு உற்ற நீயே பிரிவு

அறியாது சொன்னாய் - பெரும்பேய் தீண்டப்பெற்ற நீயே வேறுபாடுகளை உணராது இங்ஙனங் கூறினாய். எ-று. (௬௪)

அழிந்திடி லைந்து கந்த முத்தியென் றுரைத்தா யைந்தும்
அழிந்திடின் முத்தி பெற்றா ராரென வினவுங் காலை
அழிந்திடு மைந்தி னுண்டா முணர்வென வுரைக்கி னைந்தும்
அழிந்தன விலையாம் முத்தி யாவது மில்லை யென்றார்.

இ-ள். ஐந்து கந்தம் அழிந்திடின் முத்தி என்று உரைத்தாய் - பஞ்ச கந்தங்களுந் தீரக்கெடின் அதுவே முத்தி என்று கூறினாய்,—ஐந்தும் அழிந்திடின் முத்தி பெற்றார் ஆர் என வினவும் காலை - அவ்வைந்தும் அழிந்தவழி ஆண்டு முத்திபெற்றவர்தாம் யாவர் என்று வினவுமிடத்து,—அழிந்திடும் ஐந்தின் உண்டாம் உணர்வு என உரைக்கின் - அழிந்த பஞ்ச கந்தங்களிலும் உளதாகிய அறிவு என நீ சொல்லின்,—ஐந்தும் அழிந்தன இலையாம் - அப்பஞ்சகந்தங்களும் அழிந்தனவல்லவாகும்,—முத்தி ஆவதும் இல்லை என்றார் - ஆகவே, அம்முத்தி என்பதும் இல்லை எனத் திருவாதவூரர் சொல்லினர். எ-று. (௬௫)

வேறு.

பொங்குபுகழ் மங்கியுள புத்தனும் வெகுண்டே
எங்கடவு ளேதுபெறு முத்தியெது வென்றீர்
உங்கடவுள் யாதுமது முத்தியெது வென்னத்
தங்குசிவ ஞானமுணர் சைவரிது சொல்வார்.

இ-ள். பொங்கு புகழ் மங்கி உள புத்தனும் வெகுண்டு - மென்மேற் கிளரும் புகழ்மழுங்கப்பெற்ற புத்தகுருவும் கோபங்கொண்டு,—எம் கடவுள் ஏது பெறு முத்தி எது என்றீர் - நமக்குக் கடவுளும் நம்மாற் பெறப்படும் முத்தியும் இல்லையென்று இத்துணையுஞ் சாதித்தீர் அதுநிற்க,—உம் கடவுள் யாது உமது முத்தி எது என்ன - நுங்கடவுளிலக்கணம் யாது? நீர்பெறும் முத்தியாவது யாது? சொல்லும் என்று வினவ,—தங்கு சிவ ஞானம் உணர் சைவர் இது சொல்வார் - நிலைபெற்ற சிவஞானத்தை நன்குணர்ந்த சைவராகிய திருவாதவூரர் இதனைச் சொல்வார். எ-று. (௬௬)

ஆலமணி நீழலி லிருந்தற முரைக்குங்
கோலமது கண்டுபலர் கும்பிட நடிப்போன்
மேலணியு நீறனுமை கூறனருண் மேவுஞ்
சீலனவ னற்பெருமை செப்பவெளி தாமோ.

இ-ள். மணி ஆல நீழலில் இருந்து அறம் உரைக்கும் - நங்கடவுள் அழகிய கல்லாலவிருக்ஷநீழலிலே தக்ஷிணாமூர்த்தியாயிருந்து சனகர்முதலிய முனிவர்களுக்குத் தருமோபதேசஞ்செய்வர்,—கோலம் பலர் கண்டு கும்பிட

நடிப்போன் - தந்திருமேனியைத் தம்மடியவர் பலருந் தரிசித்து வழிபடும் பொருட்டுக் கனகசபையின்கண் நடனஞ்செய்தருளுவர்,—மேல் அணியும் நீறன் - திருமேனியிலணியும் விபூதியையுடையவர்,—உமை கூறன் - உமாதேவியை வாமபாகமாகவுடையவர்,—அருள் மேவும் சீலன் அவன் நல் பெருமை செப்ப எளிது ஆமோ - திருவருணிரம்புஞ் சுபாவகுணத்தையுடையவர் அக்கடவுளது நல்ல மகிமை இவ்வியல்பிற்றென்று சொல்வதற்கு எளியதோ. எ-று. (௬௭)

தில்லைமணி மன்றிலுறை திங்களணி யெங்கோன்
எல்லையுள னோமொழிய வென்றருள் புரிந்தே
சொல்லுமள விற்பல தொடுத்துமுய லாதே
நில்லுமிது கூறுமென நீசனி துரைத்தான்.

இ-ள். தில்லை மணி மன்றில் உறை திங்கள் அணி எம் கோன் - இத்தில்லைமாநகரின்கணுள்ள அழகிய கனகசபையில் வீற்றிருக்கும் நங்கடவுளானவர்,—மொழிய எல்லை உளனோ என்று அருள புரிந்து சொல்லும் அளவில் - இவ்வியல்பினரென்று வரையறுத்துக்கூற ஓர் வரையறையுள் அகப்பட்டவரோ என்று திருவாதவூரர் அருளசெய்து சொல்லுமளவில்,— பல தொடுத்து முயலாது நில்லும - பல சொற்பிரயோகஞ்செய்து முயலாது நில்லும்,—இது கூறும என நீசன் இது உரைத்தான் - இவ்வினாவிற்கு விடைகூறும் என்று பதிதனாகிய புத்தகுரு இதனைக் கூறுவானாயினன். எ-று. (௬௮)

முன்னாவட நீழலி லிருந்தற மொழிந்தான்
எனனிறைவ னெனனுமுரை யென்னெதி ருரைத்தீர்
ம ஜெப மாலைகொ டிருக்குமது மற்றோர்
உன்னரிய நற்கடவு ளுண்டென நினைந்தோ.

இ-ள். என் இறைவன் - நங்கடவுளானவர்,—வட நீழலில் இருந்து அறம் மொழிந்தான் என்னும உரை என் எதிர முன்னர உரைத்தீர் - கல்லாலவிருக்ஷநிழலிலிருந்து தருமோபதேசஞ்செய்தார் என்னும் வார்த்தையை நீர் எனக்கெதிரே முன்னாக் கூறினீர்,—மன்னு செப மாலை கொடு இருக்குமது-பொருந்திய செபமாலை கையிற்கொண்டிருக்கும் அத்தன்மை,—மற்று ஓர் உள் அரிய நல் கடவுள் உண்டு என நினைந்தோ - தமக்குத் தியானித்தற்கரிய பிறிதொரு நற்கடவுள் உண்டென்று கருதிப்போலும். எ-று.

மல்லலுல கத்தவர் வணங்கிட நடிப்பன்
தில்லையிறை யென்னவுரை செப்பினிர் செகத்தே
நல்லறிவி னோர்கள்சிலர் நாடுபவ ருண்டாய
அல்லதுந மிசசைதனி லாடுபவ ருண்டோ.

இ-ள். தில்லை இறை - சிதம்பர சபாநாயகர்,—மல்லல் உலகத்தவர் வணங்கிட நடிப்பன் என்ன உரை செப்பினிர் - வளம்பொருந்திய இவ்வுலகத்தவர் தரிசித்து வணஙகி வழிபடத் தாண்டவஞ் செய்தருளுவார் என்று கூறினீர்,—செகத்தே நல் அறிவிஞேர்கள் சிலர் நாடுபவர் உண்டாய் அல்லது தம் இசைதனில் ஆடுபவர் உண்டோ - இவ்வுலகின்கண்ணே தம்மினும் நல்லறிவை உடையோர் ஒருசிலராயினும் காண்போர் உள்ளவிடத்தல்லது தன்னிசசையான் நடனஞ்செய்பவருமஉணடோ இல்லையே. எ-று.

வையமுழு துய்யமணி மன்றினு ணடிப்போன்
மெய்யணியு நீறனென மேன்மைகொ டுரைத்தீர்
செய்யவொளி தங்குதிரு மேனிதனி னீறே
துய்யதென வோவுமது தொலலிறை புனைநதான்.

இ-ள். வையம் முழுது உய்ய மணி மன்றினுள் ரடிப்போன் - உலக முழுவதும் உயயும்வணணம அழகிய கனகசபையின்கணணே நடனஞ் செயதருளும் நஙகடவுளானவா,—மெய் அணியும் நீறன் என மேன்மை கொடு உரைதநீா - திருமேனியிலணியும விபூதியையுடையவா என மேம்பாடுகொண்டு கூறினீா,—உமது தொல் இறை - நும பழைய கடவுள்,—செய்ய ஒளி தஙகு திருமேனி தனில நீறு துயயது எனவோ புனைந்தான் - செவ்வொளிபொருந்திய திருமேனியிலே விபூதியைச சுததமுளதென்று கருதியோ தரிததாா. எ-று. (எக)

மங்கையொரு பங்கனென வண்மைகொ டுரைத்தீர்
பங்குபடு பெண்வடிவு பாரின்மிசை யுண்டோ
அங்கமொரு பாதிமட மாதினுரு வானுல்
உங்களிறை நீர்துறவி னுற்றதவ மன்றோ

இ-ள். மஙகை ஒரு பஙகன் என வண்மை கொடு உரைத்தீர் - நங் கடவுள் உமாதேவியை ஒருபாகமாகவுடையவா என்று மேம்பாடுகொணடு கூறினீர்,—பஙகுபடு பெணவடிவு பாரின்மிசை உணடோ - பஙகாகப்பொருந்திய பெணணையுடைய வடிவம பூமியில உளதோ? அதுநிற்க,—உஙகள் இறை அஙகம் ஒரு பாதி மட மாதின் உருவு ஆனுல - நுஙகடவுள் தந்திருமேனியிற் பாதி ஸ்திரீரூபமாயின்,—நீர் துறவில உற்றது அவம் அன்ருே - நீர் துறவறததை மேறகொணடநுட்டிப்பது பயனின்முபாரசியாய் முடியுமன்ருே. எ-று. (எஉ)

என்றவன் மொழிந்தபி னிகழ்ச்சிநகை செய்தே
மன்றனடி யார்கள்பெரு வாழ்வுபெற வந்தார்
நன்றியுப தேசமிது நற்றவ மிலாதாய்
உன்றனெதிர் சொல்வதல வென்றிது ரை செய்வார்.

இ-ள். என்று அவன் மொழிந்த பின் - என்றிங்ஙனம் அப்புத்தகுரு கூறியபின்னர்,—மன்றன் அடியார்கள் பெரு வாழ்வு பெற வந்தார் இகழ்ச்சி நகை செய்து - சிவனடியார்கள் பெருவாழ்வுபெற வந்தவதரித்த திருவாதவூரர் அவமதிச் சிரிப்புச்செய்து,—நல தவம இலாதாய-நல்ல தவமிலாதவனே,—நன்றி உபதேசம் இது உன்தன எதிர சொல்வது அல என்று - நன்றிபயக்கும உபதேசமாகிய இது உன முன்னிலையிற சொல்லற்பாலதன்று என்று சொலலியபின,—இது உரை செய்வார - இதனைச சொல்லுவார. எ-று. (எ௩)

ஓங்குசெப மாலையொ டிருந்த நலுல கெல்லாம்
ஈங்குயர் தவங்களசெய வென்றினிது கொள்ளாய்
தாங்கிய படைத்தொழில்கள் சாரபொடு பழக்கும
பாங்குள பணிக்கரகர பத்திரம தாகும

இ-ள். ஓங்கு செப மாலை கொடு இருந்தல் - நங்கடவுள் உயர்ந்த செபமாலையைக் கரத்திறகொண்டு கல்லாலவிருக்ஷநீழலில் வீற்றிருத்தல்,—ஈங்கு உலகு எலலாம உயர் தவங்கள செய என்று இனிது கொள்ளாய் - இவ்வுலகத்தவாகளெலலாம உயர்ந்த தவங்கள செயயுமபொருட்டு என்று நன்கறிந்துகொள்ளக்கடவாய,—தாங்கிய படைத் தொழில்கள் சார்பொடு பழக்கும பாங்கு உள பணிக்கர கர பத்திரம ஆகும - அது, கைகளிலே தாங்குகின்ற படைக்கல வித்தைகளை மாணாக்காக்கு அன்பொடுபயிற்றும் ஆசிரியாகளது கையினகணுள்ள வாட்படைபோலாகும என்று அறிந்து கொள்ளக்கடவாய. எ-று. (எச)

ஈட்டிய தவப்பய னிலாதவாகள் போலூன்
நாட்டமுடை யாரெதி நடித்திடுவ னென்றாய்
காட்டனல போலுடல் கலந்துயிரை யெலலாம
ஆட்டிடுமொரு நட்டுவனா மண்ணலென வெண்ணாய்.

இ-ள். ஈட்டிய தவப் பயன இலாதவாகள் போல் ஊன் நாட்டம் உடையார எதிர நடித்திடுவன என்றாய் - தேடிய புண்ணியப்பயனில்லாத இவ்வுலகத்து நாடகாகளைப்போல நங்கடவுள் ஊனககணணையுடைய இவ்வுலகத்தவாகட்கெதிரே நடனஞ்செயவாா என்று கூறினாய்,—எம் அணணல - நங்கடவுள,—காட்ட அனல போல உடல கலந்து உயிரை எல்லாம் ஆட்டும் ஒரு நட்டுவன் என எண்ணாய - விறகினகணணே கலந்திருக்குந் தீயைப்போல உடம்பினகண வியாபித்துநின்று உயிாகளை எல்லாம் ஆட்டுகின்ற ஒரு நட்டுவன என்று அறிந்துகொள்ளக்கடவாய. எ-று. (எரு)

நீறறினை யணிந்ததுவெ னின்னிறைவ னென்றே
சாறறினை யுயிர்க்கிடர் தணிக்கவென வெண்ணாய்

தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறும் வெந்நோய்
மாற்றும்வகை யன்னையர ருந்திய மருந்தாம்.

இ-ள். நின் இறைவன் நீற்றினை அணிந்தது என் என்று சாற்றினை - நுங்கடவுள் திருமேனியின்மீது விபூதியைப் பூசியது என்னை என்று வினவினை,—உயிர்க்கு இடர் தணிக்க என எண்ணுய் - அது, ஆன்மாக்களது பிறவித்துன்பத்தை நீக்கியருளும்பொருட்டென்று அறியக்கடவாய்,—தோற்றி உள தம் புதல்வர் துன்பம் உறும் வெம் நோய் மாற்றும் வகை அன்னையர் அருந்திய மருந்து ஆம் - அஃது, தோன்றிய தங்குழந்தைகளது துன்பமிக்க கொடிய நோயை நீக்கும்பொருட்டுத் தாயர் உட்கொண்ட மருந்துபோல்வதாம். எ-று. (எ௬)

புல்லறிவு கொண்டுபல பொத்துமொழி புத்தா
நில்லவன லாலொருவர் நீறணிவ துண்டோ
நல்லதிரு நீற்றினுள நன்குமறை தானே
சொல்லுமத லாலொருவர் சொல்லவெளி தாமோ.

இ-ள். புல் அறிவு கொண்டு பல பொத்து மொழி புத்தா நில் - அற்ப அறிவைக்கொண்டு பலபொய்வார்த்தைகளைக் கற்பித்துக்கூறும் புத்தகுருவே நில்,—அவன் அலால் ஒருவர் நீறு அணிவது உண்டோ - அக்கடவுளல்லது மற்றொருவர் தந்திருமேனியில் விபூதிதரிப்பதுமுண்டோ, இல்லையே,—நல்ல திருநீற்றின் உள நன்கு மறை தானே சொல்லும் - நல்ல விபூதியினிடத்துள்ள மகிமையை வேதங்களே எடுத்துச்சொல்லும்,—அது அலால் ஒருவர் சொல்ல எளிது ஆமோ - அவ்வேதமன்றி மற்றொருவர்சொல்ல அஃது எளியதோ. எ-று. (எஎ)

பாகமதி லுத்தமியை வைத்தல்பழு தென்றாய்
போகமுல குக்கருள் புரிந்தருள வென்றே
மாகமுகி லொத்தகுழல் மங்கையொ டிருந்தான்
யோகமுயிர் கட்குதவ யோகவுரு வானான்.

இ-ள். பாகமதில் உத்தமியை வைத்தல் பழுது என்றாய் - நங்கடவுள் தம்பாகத்தில் உமாதேவியை இருத்தியருளியது குற்றம் என்று கூறினாய்,—உலகுக்குப் போகம் புரிந்தருள என்றே மாக முகில் ஒத்த குழல் மங்கை ஒடு இருந்தான் - ஆன்மாக்கட்குப் போகமூட்டித் தொலைத்துப் பாகம்வருவித்தற்பொருட்டென்றே ஆகாயத்தின்கட்சஞ்சரிக்கும் முகிலையொத்த கூந்தலையுடைய உமாதேவியோடுகூடிப் போகவடிவாயிருந்தனர்,—உயிர்கட்கு யோகம் உதவ யோக உருவு ஆனான் - பக்குவான்மாக்கட்கு யோகமுத்தி உதவுதற்பொருட்டு யோகவடிவாயிருந்தருளினார். எ-று. (எஅ)

அந்தர்கர முற்றதடி யன்றியறி யார்போல்
இந்தமொழி கற்றனை யினிப்பிறிது தேராய்
மைந்துபுனை சந்தவிடை யான்மலரின் மன்னுங்
கந்தமென நின்றநிலை கண்டிலைக ணில்லாய்.

இ-ள். அந்தர் கரம் உற்ற தடி அன்றி அறியார் போல் - குருடர் தங் கையிலகப்பட்ட ஊன்றுகோலையலலது பிறிதொன்றை அறியமாட்டார் அதுபோல,—இந்த மொழி கற்றனை - இவ்வாக்ஷேபங்களைமாத்திரம் வினவக் கற்றுக்கொண்டனை,—இனிப் பிறிது தேராய் - இனி வேறொன்றும் அறிய மாட்டாய்,—கண் இல்லாய் - அறிவில்லாதவனே,—மைந்து புனை சந்த விடையான மலரின் மன்னும் கந்தம் என நின்ற நிலை கண்டிலை - வலிமை பொருந்திய அழகிய இடபத்தை வாகனமாகக்கொண்ட நஞ் சிவபிரான் மலரின்கண் மணம்போல உலகெங்கும் வியாபித்து மறைந்துநிற்கும் நிலையை நீ சிறிதும் அறிந்தாயில்லை. எ-று. (எக)

ஆதிசிவ யோகிமிகு போகியரு வாகுஞ்
சோதிவெகு ரூபிசுக வாரிதுய ரில்லா
நீதிமணி மன்றதனி னின்றநிலை யல்லால்
யாதுமுடி யாதுபதம் யாரறிவ ரென்றார்.

இ-ள். ஆதி - ஆதியும்,—சிவயோகி - சிவயோகியும்,—மிகு போகி - மிக்கபோகியும்,—அருவாகும் சோதி - அருவாகிய ஒளியும்,—வெகுரூபி - பலரூபமுடையவரும்,—சுகவாரி - இன்பக்கடலும்,—துயரில்லா நீதி - துய ரில்லாத நீதியுமாகிய கடவுள்,—மணி மன்றதனில் நின்ற நிலை அல்லால் - அழகிய கனகசபையின்கண் நிற்கும் தாண்டவநிலையை ஒருசிறிதறிவதல் லது,—முடி யாது பதம் யாது - அவருக்குத் திருமுடியாது திருவடியாது,—யார் அறிவர் என்றார் - யாவராயினும் அறியவல்லுநர் என்று கூறினர். எ-று.

மைந்தர்மட வார்தமது வாக்கிறைவி நீயே
இந்தவகை பொய்ம்மொழி யியம்புவதெ னென்றே
அந்தமில வாகிய வருங்கலைகள் வல்லார்
முந்துகலை மாதினை முனிந்தது மொழிந்தார்

இ-ள். அந்தம் இல ஆகிய அரும் கலைகள் வல்லார் - முடிவற்ற அரிய கலைஞானங்களில் வல்ல திருவாதவூரர்,—மைந்தர் மடவார் தமது வாக்கு இறைவி நீயே - ஆடவர் மகளிரது வாக்கிலிருந்து வசனிப்பிக்கும் தலைவியா கிய நாமகள் நீயே,—இந்தவகை பொய் மொழி இயம்புவது என் என்றே முந்து கலை மாதினை முனிந்து,—இந்தப் புத்தர்களது வாக்கிலிருந்து இந் தப்பிரகாரம் பொய்வார்த்தைகளைக் கூறுவது என்னை என்று முதன்மையா கிய சரசுவதியைக் கோபித்து,—இது மொழிந்தார் - பின்னர் இதனைக் கூறி யருளுவாராயினர். எ-று. (அக)

வேறு.

தொக்க நான்மறை சொல்லு நீயிவை சொல்வதென் கலைமாதராய்
தக்கன் வேள்வியி லுன்ற னாசி தடிந்த தின்று மறப்பதே
மூக்க ணருளி லில்லை யென்றிடு மூகர் நாவை யகன்றுநீ
நக்க னார்திரு வாணை யேகென நாம டந்தையு மஞ்சினாள்.

இ-ள். கலைமாதராய் - கலைமகளே,—தொக்க நால் மறை சொல்லும் நீ இவை சொல்வது என் - தொகுதியாகிய சதுர்வேதங்களையும் பிரமாவின் வாக்கிலிருந்துகூறியநீ ஈண்டு அதற்குமாறாக இப்புத்தகுருமுதலாயினோர் வாக்கிலிருந்து பொய்ம்மொழிகளாகிய இன்னோரன்னவற்றைக் கூறுகின்றது என்னையோ,—தக்கன் வேள்வியில் உன்றன் நாசி தடிந்தது இன்று மறப்பதே - சிவபிரானை நிந்தித்தியற்றிய தக்கனது யாகத்தில் உடம்பட்டிருந்த நின்மூக்கை வீரபத்திரருத்திரர் துணித்த தண்டத்தை நீ இப்பொழுது மறந்துவிடலாமா,—முக்கணன் அருள் இல்லை என்றிடு மூகர் நாவை அகன்று நீ நக்கனார் திருவாணை ஏகு என - மூன்றுகண்களையுடைய சிவபிரானது திருவருள் உலகிற்கில்லையென்று மறுக்கும் இப்பதிதர்களது நாக்கைவிட்டகன்று நீ சிவாஞ்ஞைப்படி போ என்று கூற,—நாமடந்தையும் அஞ்சினாள் - நாமகளும் அச்சங்கொண்டனள். எ-று. (அஉ)

அஞ்சி வஞ்சகர் நாவி னின்று மகன்ற பின்பவர் தாமெலாம்
நஞ்ச யின்றவர் போலொ டுங்கி நடுங்கி மூகர்க ளாயினார்
நெஞ்ச நொந்துபி னீழ நாட னிறைந்தி டுஞ்சிவ ஞான நூல்
எஞ்ச லின்றிய செல்வர் பாத மிறைஞ்சி நின்றிது கூறுவான்.

இ-ள். அஞ்சி வஞ்சகர் நாவில் நின்றும் அகன்ற பின்பு - நாமகள் அதற்கு அச்சங்கொண்டு கபடிகளாகிய புத்தர்களது நாக்கினின்றும் நீங்கிய பின்னர்,—அவர் எலாம் நஞ்சு அயின்றவர் போல் ஒடுங்கி நடுங்கி மூகர்கள் ஆயினார் - அப்புத்தர்களனைவரும் விஷத்தை உண்டவர்களைப்போல மனமொடுங்கிச் சரீரம் நடுங்கி ஊமைகளாயினர்,—பின் ஈழ நாடன் நெஞ்சம் நொந்து - அதன்பின்னர் ஈழமண்டலாதிபதி மனம்வருந்தி,—நிறைந்திடும் சிவஞான நூல் எஞ்சல் இன்றிய செல்வர் பாதம் இறைஞ்சி நின்று இது கூறுவான் - நிறைந்த சிவஞானநூல்களில் ஒருசிறிதுங் குறைவற்ற அருட்செல்வராகிய திருவாதவூரரது திருவடிகளை வணங்கி எழுந்துநின்று இதனைச் சொல்வான். எ-று. (அ௩)

சொல்ல வல்லவர் மூகை யாயினர் சொல்லி லாவொரு மூகையாம்
வல்லி யென்புதல் விக்கு மூகை மறைந்து நல்லுரை கூடினால்
நல்ல தொண்ட னுமக்கு நானென நாய னாரவ டன்னைநீ
ஒல்லை யிங்கழை யென்ன வந்தவ ளுண்மை சேரவை நண்ணினாள்.

இ-ள். சொல்ல வல்லவர் மூகை ஆயினர் - பேசவல்ல புத்தர்கள் இது பொழுது ஊமைகளாயினர்கள்,—சொல் இலா ஒரு மூகை ஆம் வல்லி என் புதல்விக்கு - பேசுஞ்சத்தியற்ற ஒரு ஊமைப்பெண்ணாகிய வல்லிபோலும் என் மகளுக்கு,—மூகை மறைந்து நல் உரை கூடினால் - அவ்வூமைத்தன்மை நீங்கி வாக்குவன்மை கைகூடுமோயின்,—நான் உமக்கு நல்ல தொண்டன் என - தமியேன் தேவரீருக்கு நல்ல அடிமையென்று சொல்ல,—நாயனார் அவள் தன்னை நீ இங்கு ஒல்லை அழை என்ன - திருவாதவூரர் அப்புதல்வியை நீ இங்கே விரைவாக அழையென்று பணித்தருள,—அவள் ஒல்லை வந்து உண்மை சேர் அவை நண்ணினாள் - அப்பெண் விரைவாக அழைக்கப்பட்டு வந்து உண்மைபொருந்திய அசசபையை அடைந்தாள். எ-று. (அச)

நண்ணி யங்குமு னின்ற கன்னியை நன்மை யாளரு நாடியே
கண்ணி னின்னருள் செய்து பின்னர் கரைந்து முன்ன ரிருத்தியே
உண்ண டுங்கியி ருந்த புத்த னுரைத்த தர்க்க மவைக்கெலாந்
தண்ண றுங்குழல் வல்லி நல்லுரை சாற்று கென்று விளம்பினார்.

இ-ள். அங்கு நண்ணி முன் நின்ற கன்னியை நன்மையாளரும் நாடியே கண்ணின் இன் அருள் செய்து - அங்கே வந்து முன்னின்ற அக்கன்னிகையை நன்மையாளராகிய திருவாதவூரரும் திருவுளங்கொண்டு கண்ணாலே நோக்கி —பின்னர் - அதன்பின்,—கரைந்து முன்னர் இருத்தி - அழைத்துத் தம்முன்னிலையில் இருத்தி,—தண் நறும் குழல் வல்லி - தண்ணிய நறிய கூந்தலையுடைய பெண்ணே.—உள் நடுங்கி இருந்த புத்தன் உரைத்த தர்க்கம் அவைக்கெலாம் நல் உரை சாற்றுக என்று விளம்பினார் - மனம் நடுங்கி ஈண்டிருக்கும் புத்தகுரு வினாவிய தருக்கவினாக்கட்கெல்லாம் இனி நீயே நியாயவார்த்தைகளைச் சொல்லுக என்று பணித்தருளினார். எ-று. (அரு)

பற்று நன்குண ராத புத்தர் பகர்ந்த தர்க்க மவைக்கெலாங்
கற்று ணர்ந்தவர் போல மன்னிய கன்னி மாறுரை கூறினாள்
மற்று மங்கையர் சாழ லாம்விளை யாட லாக மகிழ்ச்சியால்
உற்ற தன்பொரு டன்னை வாசக மாக வுண்மைய ரோதினார்.

இ-ள். பற்று நன்கு உணராத புத்தர் பகர்ந்த தர்க்கம் அவைக்கு எலாம் - தம்மாற் பற்றப்படும் நன்மையை அறியாத புத்தர்கள் வினாவிய தருக்க வினாக்கட்கெல்லாம்,—மன்னிய கன்னி கற்று உணர்ந்தவர்போல மாறு உரை கூறினாள் - ஈண்டு நிலைபெற்ற அக்கன்னிகை வேதசிவாகமங்களை ஓதியுணர்ந்த பண்டிதர்களைப்போல உத்தரம் கூறினாள்,—உண்மையர் - மெய்யுணர்வையுடைய திருவாதவூரர்,—அதன் பொருள்தன்னை உற்று - அவ்வினாவுத்தரங்களின் முடிந்தபொருளைத் திருவுளங்கொண்டு,—மற்றும் மங்கையர் சாழல் ஆம் விளையாடல் ஆக மகிழ்ச்சியால் வாசகமாக ஓதினார் - அக்கன்னியர்கள் தம்முட்கூடிக் கைகொட்டிவிளையாடும் சாழல்விளையாட்

டின் புயத்ததாக மனமகிழ்ச்சியோடு திருச்சாழலென்னும் திருவாசகமாகப் பாடியருளினர். எ-று. (அக)

ஈழ மன்னனு மஞ்செ ழுத்து மியம்பி நீறு புனைந்துபின்
தாழ நின்றடி மைத்தி றந்தவ ருத தொண்டின னாயினன்
சோழ னும்புலி யூரின் மன்னிய தொன்மை யாளரு மம்பலம்
வாழ வென்று துதித்து நின்றெழில் வாத வூரரை யேத்தினர்.

இ-ள். ஈழ மன்னனும் அஞ்செழுத்தும் இயம்பி நீறு புனைந்து - ஈழ மண்டலபதியாகிய புத்தராசனும் பஞ்சாக்ஷரத்தையுஞ் செபித்து விபூதியைத் தரித்து,—பின் தாழ நின்று அடிமைத்திறம் தவறாத தொண்டினன் ஆயினன் - அதன்பின்னர் நாயனாரை வணங்கிநின்று அடிமைத்தொழில்களில் வழுவாத தொண்டுடையனாயினன்,—சோழனும் புலியூரின் மன்னிய தொன்மையாளரும் அம்பலம் வாழ என்று துதித்து நின்று - சோழராசனும் சிதம்பரத்தில் வசிக்கும் பழையோரும் பொன்னம்பலம் வாழ்க என்று துதித்துப் பின்னர்,— எழில் வாதவூரரை ஏத்தினர் - திருவாதவூரரைத் துதித்தனர். எ-று. (அஎ)

தக்க சீர்பயி லீழ மன்னுயர் சைவ னாரெதிர் நின்றுநன்
கக்க மாலை புனைந்து நீறு மணிந்து தொண்டின னானபின்
துக்க மாகிய சீவ ரத்துவ ராடை மூடு முடம்பினார்
மிக்க காதர மூகை தீர்ந்திட வேண்டு மென்று வணங்கினன்.

இ-ள். தக்க சீர் பயில் ஈழ மன் உயர் சைவனார் எதிர் நின்று அக்க மாலை புனைந்து நீறும் அணிந்து நன்கு தொண்டினன் ஆன பின் - தக்க சிறப்பினையுடைய ஈழநாட்டரசன் உயர்ந்த சைவாசாரியராகிய திருவாதவூரருக்கு எதிரேநின்று உருத்திராக்கமாலையை அணிந்து விபூதியையுந் தரித்து நல்ல திருத்தொண்டையுடைய சைவனாகிய பின்னர்,—துவர் துக்கம் ஆகிய சீவரம் ஆடை மூடும் உடம்பினார் மிக்க காதர மூகை தீர்ந்திட வேண்டும் என்று வணங்கினன் - துவர்தோய்ந்த துக்கமாகிய சீவரவஸ்திரத்தினாலே போர்க்கப்படும் உடம்பையுடைய இப்புத்தர்களெல்லாம் மிக்க அச்சத்தைத்தரும் மூகத்துவத்தினின்றும் நீங்கவேண்டும் என்று பிரார்த்தித்து வணங்குகிறான். எ-று. (அஅ)

இன்ன வாறருள் செய்கு வாயினி யெம்பி ரானென வன்புடன்
பொன்னி சூழ்வள நாட னும்புலி யூரு ளாரு மிறைஞ்சினார்
மன்னு சீர்புனை வாதவூரர் மகிழ்ந்து பார்வையை நல்கவே
முன்ன ராக வணங்கி யேயவர் மூகை தீர்ந்தது கூறினார்.

இ-ள். பொன்னி சூழ் வளம் நாடனும் புலியூர் உளாரும் - அப்பொழுது காவிரி சூழ்ந்த வளம்பொருந்திய நாட்டையுடைய சோழமகாராசாவும் சிதம்பரவாசிகளும்,—இனி எம்பிரான் இன்ன ஆறு அருள் செய்குவாய்

என அன்பு உடன் இறைஞ்சினர் - இனி எம்பெருமானே ஈழராசன் வேண்டிக்கொள்கின்ற இந்தப்பிரகாரந் தேவரீர் அருள்செய்க என்று அன்போடு வணங்கினர்,—மன்னு சீர் புனை வாதவூரர் மகிழ்ந்து பார்வையை நல்க - நிலைபெற்ற புகழையுடைய திருவாதவூரர் மனமகிழ்ந்து கிருபாநோக்கஞ் செய்தருள,—அவர் மூகை தீர்ந்து முன்னர் ஆக வணங்கி இது கூறினர் - அவர்கள் ஊமை நீங்கப்பெற்றுச் சந்நிதியிலே வணங்கி இதனைச் சொல்வாராயினர். எ-று. (௮௯)

மாசி லாத மனத்தி னாய்முன மன்னு தீவினை செய்தலால்
ஆசி லாதவெ ணீற ணிந்துந லஞ்செ ழுத்துரை செய்திலேம்
பூச லாகிய நீறு டன்புனை யக்க மாலைகள் காவியாந்
தூசு தாதுவ ராடை யைச்சுடு வென்று துன்றி வணங்கினர்.

இ-ள். மாசு இலாத மனத்தினாய் - களங்கமற்ற மனத்தையுடையவரே,—முனம் மன்னு தீவினை செய்தலால் - நாம் பூர்வசன்மங்களிலே மிக்க தீவினைகள் செய்திருந்தமையினால்,—ஆசு இலாத வெண் நீறு அணிந்து நல் அஞ்செழுத்து உரை செய்திலேம் - குற்றமற்ற வெண்மையாகிய விபூதியைத்தரித்துப் பஞ்சாக்ஷரத்தையுஞ் செபிக்கப்பெற்றிலேம், ஆயினும்,—பூசல் ஆகிய நீறு உடன் புனை அக்கமாலைகள் காவி ஆம் தூசு தா - பூசத்தகும் விபூதியோடு புனையத்தகும் உருத்திராக்கமாலைகளையும் காவிவஸ்திரத்தையும் எமக்குத் தந்தருளும்,—துவர் ஆடையைச் சுடு என்று துன்றி வணங்கினர் - துவர்தோய்த்த எமது சீவரவஸ்திரங்களைத் தகித்துவிடும் என்று மிகச் சமீபித்து வணங்கினர். எ-று. (௯௦)

கோட்ட மின்றிய வுண்மை யார்நகை கோட்டு கின்ற முகத்தராய்
ஈட்டு முன்செய் தவத்தி னாரிவ ரென்று சிந்தையி லெண்ணியே
வாட்ட ருந்திரு நீற ணிந்து வயங்கு ருத்திர சாதனம்
பூட்டி யங்கவர் சீவ ரங்கிளர் பொங்கு தீக்கிரை யாக்கினர்.

இ-ள். கோட்டம் இன்றிய உண்மையார் - தன்னிலையினின்றுங் கோணுதலில்லாத மெய்யுணர்வையுடைய திருவாதவூரர்,—நகை கோட்டுகின்ற முகத்தராய் - நகையாலே கோட்டுகின்ற முகமுடையவராய்,—இவர் முன் செய் ஈட்டு தவத்தினர் என்று சிந்தையில் எண்ணி - இவர்கள் பூர்வசன்மங்களிற் செய்தீட்டிய தவத்தையுடையவர் என்று தந்திருவுள்ளத்திற் சிந்தித்து,—வாட்டு அரும் திருநீறு அணிந்து - மலவலியை வாட்டுகின்ற அரிய விபூதியை அவர்கட்கணிந்து,—வயங்கு உருத்திர சாதனம் பூட்டி - விளங்காநின்ற உருத்திராக்கமாலைகளைப் பூட்டி,—அங்கவர் சீவரம் கிளர் பொங்கு தீக்கு இரை ஆக்கினர் - அவரது சீவரவஸ்திரங்களைச் சுவாலிக்கின்ற அக்கினிக்கு இரையாகக் கொடுத்தருளினர். எ-று. (௯௧)

பொய்யி லாவரு ளையரும்புலி யூரு ளார்களு முன்புசேர்
மைய லாகிய வேடமின்றி வயங்கு நீறணி வார்களுந்
தூய்ய காவிரி நாட னுந்துக மரு மீழர்த மன்னனுஞ்
செய்ய மாமணி மன்று ளார்திரு முன்பு சென்று வணங்கினர்.

இ-ள். பொய் இலா அருள் ஐயரும் - மெய்ம்மையாகிய சிவகாருண்ணியத்தையுடைய திருவாதவூரரும்,—புலியூர் உளார்களும் - தில்லைவாசிகளும்,—முன்பு சேர் மையல் ஆகிய வேடம் இன்றி வயங்கு நீறு அணிவார்களும் - முன்னரேபொருந்திய மயக்கத்தைத்தரும் புத்தசமயவேடம் ஒழிந்து பிரகாசிக்கின்ற விபூதியையணிந்தவர்களும்,—தூய்ய காவிரி நாடனும் - சுத்தமாகிய காவிரிநாட்டையுடைய சோழமகாராசாவும்,—தூகள் தீரும் ஈழர் தம் மன்னனும் - குற்றம்நீங்கிய ஈழதேயத்தரசனும்,—செய்ய மாமணி மன்றுளார் திருமுன்பு சென்று வணங்கினர் - அழகிய மாணிக்கமணிகொண்டு குயிற்றிய சபையையுடைய நடிகடவுளை அவரது சந்நிதியிற் சென்று வணங்கினார்கள். எ-று. (கூஉ)

பொன்று கின்றது முத்தியென்று புகன்று நின்றுழல் புத்தர்தாம்
மன்று கண்டு வணங்கி யன்புடன் மாபெ ருந்தவ ராவதே
இன்றி தன்பொரு ளாய்வ தென்பல வாறுடன் கடன் மீதிலே
சென்ற தண்புன லல்லரோ வுயர் தில்லை யெல்லையை நண்ணினர்.

இ-ள். பொன்றுகின்றது முத்தி என்று புகன்று நின்று உழல் புத்தர் தாம் மன்று கண்டு அன்பு உடன் வணங்கி மா பெரும் தவர் ஆவதே - பஞ்சகந்தங்களும் முற்றக்கெடுகின்றதனையே முத்தி என்று கூறி நின்றுழலும் புத்தர்கடாம் இங்ஙனம் கனகசபையைத்தரிசித்து அன்போடு வணங்கி மிகவும் பெரிய சைவர்களாகியது என்னை,—இதன்பொருள் ஆய்வது என் - இதன்பொருளை ஆராய்வதென்,—உயர் தில்லை எல்லையை நண்ணினர் - உயர்ந்த தில்லைமாநகரினெல்லையை அடைந்தவர்கள்,—பல ஆறு உடன் கடல் மீதில் சென்ற தண் புனல் அல்லரோ - பலநதிகளாய் ஒருசேரச் சமுத்திரத்தின்கட் சென்ற நீரினியல்பையுடையரல்லரோ. எ-று. (கூங)

மன்ற கன்றபின் யாவ ருஞ்செல வாத வூருறை வள்ளலார்
சென்றி லங்கு திருப்பு லீசர் சிறந்த பாதம் வணங்கியே
நன்றி துன்றிய வங்கண் வைகினர் நல்ல தில்லையு ளாரெலாம்
என்று மிங்கிரு மையர் நீரினி யென்று தம்மனை யேகினர்.

இ-ள். மன்று அகன்றபின் யாவரும் செல - கனகசபையைவிட்டு நீங்கிய பின்னர் மற்றையனைவரும் தத்தம் உறைவிடங்கட்குச் செல்ல,—வாதவூர் உறை வள்ளலார் - வரையாதுகொடுக்கும் உதாரகுணசீலராகிய திருவாதவூரர்,—சென்று இலங்கு திருப்புலீசர் சிறந்த பாதம் வணங்கி - மறித்துஞ்சென்று விளங்காநின்ற திருப்புலீச்சுரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய அழகிய திருவடிகளை வணங்கி,—நன்றி துன்றிய அங்கண்

வைகினர் - நன்மைமிகும்படி அங்கே வீற்றிருந்தருளினார்,—நல்ல தில்லை உளார் எலாம் ஐயர் நீர் இனி என்றும் இங்கு இரும் என்று தம்மில் ஏகினர் - நல்ல தில்லைவாழந்தணர்களும் பிறரும் சுவாமீ நீர் இனி எம் பொருட்டு எப்பொழுதும் இங்கே இருமென்றுகூறித் தம்மில்லங்களிற் சென்றார். எ-று. (௯௪)

பொன்னி நாடனு மீழ நாடு புரந்த மன்னனு முன்புசேர்
மன்னு தீவினை தீர மன்று வணங்கி நீறணி வார்களும்
முன்ன ராக விறைஞ்சி ஞான முதிர்ந்த கோவை யகன்றுபோய்
மின்னு மாமணி மாட மாளிகை தம்மி லன்புடன் மேவினார்.

இ-ள். பொன்னி நாடனும் - காவிரிநாட்டையுடைய சோழமகாராசாவும்,—ஈழ நாடு புரந்த மன்னனும் - ஈழதேயத்தரசனும்,—முன்பு சேர் மன்னு தீவினை தீர மன்று வணங்கி நீறு அணிவார்களும் - பூர்வசன்மங்களிற் சேர்ந்த நிலைபெற்ற பாவம்நீங்கக் கனகசபையைத் தரிசித்து வணங்கி விபூதியை அணிந்தவர்களும்,—ஞானம் முதிர்ந்த கோவை முன்னர் ஆக இறைஞ்சி அகன்று போய் - ஞானத்தின்மிக்க குரவராகிய திருவாதவூரரைச் சந்நிதியில் வணங்கி அநுமதிபெற்று அவ்விடத்தைவிட்டகன்றுபோய்,—மின்னு மா மணி மாட மாளிகை தம்மில் அன்பு உடன் மேவினார் - பிரகாசிக்கின்ற இரத்தினங்கள்குயிற்றிய மாடங்களிலும் திருமாளிகைகளிலும் பத்தியோடங்கிருந்தனர். எ-று. (௯௫)

புன்மை வேட மகன்று நீறு புனைந்து ளார்களு மன்னனுந்
தொன்மை யார்திரு வாத வூரர் துலங்கு பாதம் வணங்கியே
நன்மை யார்மணி மன்றி றைஞ்சி நயந்து நெஞ்சினில் வஞ்சமாம்
வன்மை யான தொழிந்து தில்லை நமன்னு மூரென வைகினார்.

இ-ள். புன்மை வேடம் அகன்று நீறு புனைந்துளார்களும் மன்னனும் - புல்லிய புத்தசமயவேடத்தைக் களைந்து விபூதியைத்தரித்தவர்களும், அவர்கட்கரசனும்,—தொன்மை ஆர் திருவாதவூரர் துலங்கு பாதம் வணங்கி - பழைமைபொருந்திய திருவாதவூரரது விளங்காநின்ற திருவடிகளை வணங்கி,—நன்மை ஆர மணி மன்று இறைஞ்சி - நன்மைபொருந்திய அழகிய கனகசபையை அடைந்து சபாநாயகரைத் தரிசித்துவணங்கி,—நெஞ்சினில் வஞ்சம் ஆம் வன்மை ஆனது ஒழிந்து - தம்மனத்தின்கட் கபடமாகிய முரண் தானே நீங்கப்பெற்று,—தில்லை நயந்து தம் மன்னும் ஊர் என வைகினார் - தில்லைநகரைவிரும்பித் தமது சனனவூராகக்கொண்டு அங்கிருந்தனர். எ-று.

புத்தரைவாதில்வென்றசருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௫௪௦.

———

# திருவடிபெற்றசருக்கம்.

உடம்படப் பொய்யை மெய்யா வுரைத்திடுஞ் சமய மென்னுந்
தடங்கயத் திரளை வெல்லுந் தனிப்பெரு மடங்க லன்னார்
நெடுந்தவப் பெருமை யாலே நினைப்பருஞ் சைவ ஞானம்
இடம்படப் புகல்வார் பின்ன ரெய்திய செய்தி சொல்வாம்.

இ-ள். உடம்பட பொய்யை மெய்யா உரைத்திடும் சமயம் என்னும் தடம் கயம் திரளை வெல்லும் தனி பெரு மடங்கல் அன்னார் - (கேட்போர்) உடன்படுமாறு பொய்யை மெய்யாகச் சொல்லுகின்ற சமயங்கள் என்னும் பெரிய யானைத்திரளை வெல்லும் ஒப்பில்லாத பெருஞ் சிங்கம்போன்றவரும்,—நெடும் தவப் பெருமையாலே நினைப்பு அரும சைவ ஞானம் இடம் படப் புகல்வார் - மிக்க சிவபுண்ணிய விசேடத்தினாலே நினைத்தற்குமரிய சிவஞானத்தை விரிவுபடப் பாடுபவருமாகிய திருவாதவூரர்,—பின்னர் - புத்தரை வாதில் வென்றருளியபின்னர்,—எய்திய செயதி சொல்வாம் - திருவடிபெற்ற சரித்திரத்தை இனி யாங் கூறுவாம். எ-று. (க)

ஆடல்வெம் படையி னாட்சி யெழுச்சியோ டச்சோ வென்னும்
பாடலுந் தெய்வ லோக யாத்திரைப் பத்து மோதித்
தேட லுந் திகைப்பு மீளத் தெளிதலுஞ் சிறமை கொண்டு
வாட லுங களிபபு மில்லா நற்பெரு வாழ்வி லானார்.

இ-ள். ஆடல் வெம் படையினாட்சி எழுச்சியோடு அச்சோ என்னும் பாடலும் - திருவாதவூரர் வெற்றிபொருந்திய விரும்பத்தக்க திருப்படையாட்சி திருப்படையெழுச்சி அச்சோப்பதிகம் என்னும் பாடல்களையும்,— தெய்வ லோக யாத்திரைப்பத்தும் ஓதி - சிவலோக யாத்திரைப்பத்து என்னும் பாடலையும் பாடி,—தேடலும் திகைப்பும் மீளத் தெளிதலும் - தேடுதலும் திகைத்தலும் பின்னர்த் தெளிதலும்,—சிறுமை கொண்டு வாடலும் களிப்பும் இல்லா - துயர்கொண்டு வாடுதலும் களித்தலுமில்லாத,—நல் பெரு வாழ்வில் ஆனார் - நல்ல பேரின்பவாழ்விலே வாழ்பவராயினர். எ-று. (உ)

போற்றுமஞ் செழுத்து நீறும் புவிமிசை விளங்கத் துன்பம்
மாற்றிடுஞ் சைவ ஞான வாசகம் புகல வந்தார்
சீற்றமில் புலியும் பாம்புஞ் சீர்பெற வணங்கு மன்றில்
ஏற்றினன் புலியூர் மேலைச் சிவபத மென்று கண்டார்.

இ-ள். போற்றும் அஞ்செழுத்தும் நீறும் புவிமிசை விளங்க - துதிக்கப்படுகின்ற பஞ்சாட்சரமும் விபூதியும் இந்நிலவுலகெங்கும் பிரகாசிக்கும்படி,—

துன்பம் மாற்றிடும் சைவ ஞான வாசகம் புகல வந்தார் - ஆன்மாக்கட்குப் பிறவித்துன்பத்தை நீக்கவல்ல சிவஞானத்தையே பொருளாகவுடைய திருவாசகத்தைப் பாடியருளும்வண்ணம் அவதாரஞ்செய்த திருவாதவூரர், — சீற்றம் இல் புலியும் பாம்பும் சீர் பெற வணங்கும் மன்றில் ஏற்றினன் புலியூர் - கோபமில்லாத வியாக்கிரபாதமுனிவரும் பதஞ்சலிமுனிவரும் சிறப்புப்பெற வணங்குகின்ற கனகசபையையுடைய சிவபெருமானது சிதம்பரத்தை, — மேலைச் சிவபதம் என்று கண்டார் - மேலாகிய சிவலோகம் என்று கண்டு தெளிந்தார். எ-று. (௩)

ஐயரங் குறையு நாளி லாடக மன்றி லாடும்
மெய்யர்தங் கருணை யாலோர் வேதிய வடிவங் கொண்டு
துய்யமுப் புரிநூன் மார்புந் துலங்குபுத் தகமுந் தோன்றச்
செய்யமென் பாத நோவச் சென்றுமுன் னாக நின்றார்.

இ-ள். ஐயர் அங்கு உறையும் நாளில் - திருவாதவூரர் அங்கிருக்குங்காலத்தில் ஒருநாள், — ஆடக மன்றில் ஆடும் மெய்யர் - கனகசபையிலே திருத்தஞ்செய்தருளும் மெய்யராகிய சபாநாயகர், — தம் கருணையால் - தந் திருவுள்ளத்து முகிழ்த்த பெருங்கருணைத்திறத்தினாலே, — ஓர் வேதிய வடிவம் கொண்டு - ஒரு பிராமணவடிவங்கொண்டு, — துய்ய முப்புரி நூல் மார்பும் துலங்கு புத்தகமும் தோன்ற - திருமார்பிலே சுத்தமாகிய உபவீதந்தரித்த மார்பும் திருக்கரத்திலேவிளங்கும் புத்தகமும் வெளிப்பட்டுத்தோன்ற, — செய்ய மெல் பாதம் நோவ சென்று முன் ஆக நின்றார் - சிவந்த மெல்லிய திருவடிகள் வருந்த நடந்துசென்று அவர்க்கெதிராக நின்றருளினார். எ-று.

முன்புற நின்ற வேத முதல்வரை முகத்தி னோக்கி
இன்புற வாத வூர ரிருமென விருந்த பின்னர்க்
கொன்புனை மறையின் மிக்கீ ரெங்குளீர் கூறு மென்ன
மன்பெரு வளஞ்சேர் பாண்டி மண்டலத் திருப்பே னென்றார்.

இ-ள். முன்பு உற நின்ற வேத முதல்வரை - தமக்கெதிரே வந்து நிற்கின்ற வேதமுதல்வராகிய அவரை, — வாதவூரர் இன்புற முகத்தில் நோக்கி இரும் என - திருவாதவூரர் முகத்தில் இனிமைபொருந்த நோக்கி இங்கே இரும் என்று சொல்ல, — இருந்த பின்னர் - அவரிருந்தபின்னர், — கொன் புனை மறையின் மிக்கீர் எங்கு உளீர் கூறும் என்ன - பெருமை பொருந்திய வேதத்தில்வல்ல அந்தணரே யாண்டுள்ளீர் சொல்லும் என்று வினவ, — மன் பெரு வளம் சேர் பாண்டி மண்டலத்து இருப்பேன் என்றார் - அவர் நிலைபெற்ற பெரிய வளம்பொருந்திய பாண்டிமண்டலத்தின் கண் இருப்பேமென்று கூறினார். எ-று. (௫)

பாண்டிநா டென்ற பின்னர்ப் பரிவுடன் செறிவு கூறி
ஈண்டுநீர் வருதல் வேண்டுங் காரிய மியம்பு மென்ன

ஆண்டநா யகன்ற னாணை யாகிய கரும நம்மைக்
காண்டலே யென்று பின்னுங் கருத்துற விதனைச் சொன்னார்.

இ-ள். பாண்டி நாடு என்ற பின்னர் - அவ்வந்தணர் நந்தேயம் பாண்டி நாடு என்ற பின்னர்,—பரிவு உடன் செறிவு கூறி - அன்போடு கலப்பு வார்த்தைகளைக் கூறி,—ஈண்டு நீர் வருதல் வேண்டும் காரியம் இயம்பும் என்ன - இங்கே நீர் வரவேண்டுங்காரியம் என்னை சொல்லும் என்று வினவ,—ஆண்ட நாயகன்தன் ஆணை ஆகிய கருமம் - அடிமைக்கொண்ட ஆன்மநாதராகிய சிவபெருமானது ஆஞ்ஞையாகிய காரியம்,—நம்மைக் காண்டலே என்று - நம்மைக் காணுதலாம் என்று கூறி,—பின்னும் கருத்து உற இதனைச சொன்னார் - பின்னரும் மனத்திற் பதியுமாறு இதனைக் கூறியருளினார். எ-று. (௬)

மண்ணிடைப் புகுந்து மேலை வானிடைப் பறந்து முன்னர்க்
கண்ணனு மயனுந் தேடிக் காண்பதற் கரியார் தம்மைப்
புண்ணிய மன்றி லாடும் புனிதரைப் பரியி லேறப்
பண்ணுநும் பெருமை யாலே வாழ்ந்தது பாண்டி நாடு.

இ-ள். முன்னர்க் கண்ணனும் அயனும் - முன்னொருஞான்று விஷ்ணுவும் பிரமாவும்,—மண் இடைப் புகுந்தும் மேலை வான் இடைப் பறந்தும் - மண்ணின்கட் பன்றியாகி அகழ்ந்து புகுந்தும் மேலுள்ள ஆகாயத்தின் கண் அன்னமாகிப் பறந்தும்,—தேடிக் காண்பதற்கு அரியார் தம்மை - அடிமுடிகளைத் தேடியும் காணுதற்கரியவரும்,—புண்ணிய மன்றில் ஆடும் புனிதரை - சுத்தமாகிய சபையின்கணணே நடனஞ்செய்தருளுபவருமாகிய சோமசுந்தரக்கடவுளை,—பரியில் ஏறப் பண்ணும் நும் பெருமையாலே - குதிரையிலிவர்ந்து எழுந்தருளும்படிசெய்த உம்முடைய மகிமையினாலே,—பாண்டி நாடு வாழ்ந்தது - பாண்டிநாடு பெருவாழ்வடைந்தது. எ-று. (எ)

தென்பெருந் துறையி லையன் றிருவடி சேவை செய்து
துன்பமொன் றின்றி வாவி சூழ்கழுக் குன்றிற் சென்று
பொன்பொலி மன்றி லெய்திப் புத்தரை வாதில் வென்றீர்
என்பது கேட்டுப் பின்னர் யாவரு மகிழ்ச்சி கொண்டார்.

இ-ள். தென் பெருந் துறையில் ஐயன் திருவடி சேவை செய்து - தெற்கின்கணுள்ள திருப்பெருந்துறையிலே சிவபிரானுடைய திருவடிகளைத் தரிசித்து வணங்கித் துதித்து,—துன்பம் ஒன்று இன்றி வாவி சூழ் கழுக்குன்றில் சென்று - வருத்தஞ் சிறிதுமின்றித் தடாகங்கள்சூழ்ந்த திருக்கழுக்குன்றத்தையடைந்து சுவாமிதரிசனஞ்செய்து,—பொன் பொலி மன்றில் எய்தி - அதன்பின்னர் மீண்டுவந்து இச்சிதம்பரத்திலே கனக சபையையடைந்து,—புத்தரை வாதில் வென்றீர் என்பது கேட்டு - புத்தர்களைத் தருக்கத்திலே வென்றீர் என்பதனைக் கேட்டறிந்து,—பின்னர்

யாவரும் மகிழ்ச்சி கொண்டார் - அதன்பின்னர் அனைவரும் மிகப் பிரீதி கொண்டனர். எ-று. (௮)

ஆதியை மன்றா ளாடு மையனை யன்பி னாலே
ஓதிய தமிழின் பாட லுள்ளவை யோத வெண்ணி
மாதுய ரகல வின்னே வந்தன னெழுதல் வேண்டும்
வேதியர் பெருமா னின்று விளம்பிடும் விளங்க வென்றார்.

இ-ள். வேதியர் பெருமான் - பிராமணோத்தமரே,—ஆதியை - முதல்வரும்,—மன்றுள் ஆடும் ஐயனை - கனகசபையின்கண் நிருத்தஞ்செய்தருளும் பரமபிதாவுமாகிய சிவபெருமானைத் துதித்து,—அன்பினாலே ஓதிய தமிழின் பாடல் உள்ளவை - மெய்யன்புகாரணமாக நீர் பாடிய அருட்பாக்களனைத்தையும்,—மா துயர் அகல ஓத எண்ணி இன்னே வந்தனன் - பெரிய பிறவித்துன்பம் நீங்கப் பாராயணஞ்செய்யும்படி கருதி இங்கே வந்தேன்,—எழுதல் வேண்டும் - யானவற்றை எழுதல்வேண்டும்—விளங்க இன்று விளம்பிடும் என்றார் - அவைகளை விளங்க இப்போது சொல்லும் என்றனர். எ-று. (௯)

விண்ணகம் பரவு நாத னிவ்வகை விளம்பச் சிந்தை
நண்ணுமன் புடைய ராகி நற்சடை முடியார் தம்மை
எண்ணருந் தமிழின் பாட்டா லியம்பிய வைய ரப்போ
துண்ணெகிழ்ந் துளமெய்ஞ் ஞான வாசக முவந்து சொன்னார்.

இ-ள். விண்ணகம் பரவும் நாதன் இவ்வகை விளம்ப - விண்ணுலகவாசிகளாகிய தேவர்களுந் துதிக்குஞ் சிவபெருமானாகிய அவ்வந்தணர் இந்தப்பிரகாரம் சொல்ல,— நல் சடை முடியார் தம்மை - நல்ல சடாமுடியையுடைய சிவபெருமானை,—சிந்தை நண்ணும் அன்பு உடையர் ஆகி எண் அரும் தமிழின் பாட்டால் இயம்பிய ஐயர் - மனததின்கட்பொருந்தும் அன்புடையவராகி அளவற்ற தமிழ்ப்பாக்களினாலே முன்பு துதிசெய்த திருவாதவூரர்,—அப்போது உள் நெகிழ்ந்து - அதுகேட்டவுடன் மனம்நெக்குருகி,—மெய்ஞ்ஞானம் உள வாசகம் உவந்து சொன்னார் - மெய்ஞ்ஞானமாகிய பொருளையுடைய திருவாசகங்களை மனமுவந்து சொல்லியருளினார். எ-று.

அங்கவ ருரைத்த வெல்லா மம்பலத் தாடு மையர்
செங்கையி லேடு வாங்கித் தெளிவுற வரைந்த பின்னர்ப்
பொங்கிய வருளி னாரும் புகன்றிட ரகலத் தையல்
பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டு மென்றார்.

இ-ள். அங்கு அவர் உரைத்த எல்லாம் - அத்திருவாதவூரர் சொல்லிய திருவாசகங்களையெல்லாம்,—அம்பலத்து ஆடும் ஐயர் செம் கையில் ஏடு வாங்கி தெளிவு உற வரைந்த பின்னர் - கனகசபையிலே திருநடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமானவா தமது சிவந்த திருக்கரத்திலே

ஏட்டை எடுத்துத் தெளிவாக எழுதிமுடித்த பின்னர்,—பொங்கிய அருளி ஞரும் புகன்று இடர் அகல - மிக்க அருளையுடைய அக்கடவுளும் யாவரும் ஓதிப் பிறவித்துன்பத்தினின்று நீங்குமாறு,—தையல் பங்கினர் தம்மை கோவை பாடுதல் வேண்டும் என்றார் - சிவகாமியம்மை சமேதராகிய சபா நாயகரைத் தலைவராகக்கொண்டு ஒரு கோவை பாடுதல்வேண்டுமென் றனர். எ-று. (கக)

மன்னிய தவத்தின் மிக்கா ரதற்குள மகிழ்ந்து கூற
முன்னுற விருந்து கோவை யெழுதினர் முடிந்த பின்னர்ப்
பொன்னவிர் வேணி யார்தாம் புத்தகஞ் சேமித் தங்கண்
மின்னென மறைந்தார் சொன்ன வித்தக ரயர்ச்சிகொண்டார்.

இ-ள். மன்னிய தவத்தின் மிக்கார் அதற்கு உளம் மகிழ்ந்து கூற - நிலைபெற்ற தவத்தால் மேம்பட்ட திருவாதவூரர் அக்கேள்விக்கிசைந்து மனம் உவந்து சொல்ல,—பொன் அவிர் வேணியார் தாம் முன் உற இருந்து கோவை எழுதினர் - பொன்போல விளங்குஞ் சிவந்த சடையை யுடைய சபாநாயகர் தாம் எதிரேயிருந்து கோவையை எழுதினர்,— முடிந்த பின்னர் - அஃதெழுதி முடிந்தபின்னர்,—புத்தகம் சேமித்து அங் கண் மின் என மறைந்தார் - அத்திருமுறையைத் திருக்காப்புசெய்துகொ ண்டு அங்கே மின்னல்போல மறைந்தருளினர்,—சொன்ன வித்தகர் அயர் ச்சி கொண்டார் - அவைகளைச் சொல்லிய திருவாதவூரர் இவர் நம்பரமா சாரியர்போலும் என்று தம்வசமழிந்தார். எ-று. (கஉ)

எழுந்தன ரெங்கு மோடி நாடின ரிதென்கொ லென்று
அழுந்தினர் மன்று ளாடு மாதியென் றறிந்த பின்னர்ப்
பொழிந்தனர் கண்ணீ ரெங்குப் போயினை யென்று மண்மேல்
விழுந்தனர் பரமா னந்த வேலை வெள்ளத்து ளானார்.

இ-ள். எழுந்தனர் - பின்னர் அவ்வயர்சசி நீங்கி எழுந்தனர்,—எங்கும் ஓடி நாடினர் - அவரை எவ்விடங்களினும் ஓடித் தேடினர்,—இது என் கொல் என்று அழுந்தினர் - இஃதென்னை என்று மனம்வருந்தினர்,— மன்றுள் ஆடும் ஆதி என்று அறிந்தபின்னா - கனகசபையின்கண்ணே திருத் தஞ்செய்தருளும் சபாநாயகரேயாம் என்று நிச்சயித்தறிந்தபின்னர்,— கண்ணீர் பொழிந்தனர் - கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிந்தனர்,— எங்கு போயினை என்று மண் மேல் விழுந்தனர் - தேவரீர் இதுபொழுது எங்கே மறைந்தருளினீரென்று பூமியில் விழுந்தனர்,—பரம ஆனந்த வேலை வெள்ளத்துள் ஆனர் - சிவானந்தமாகிய சமுத்திரத்திற் படிவாராயினர். எ-று.

செந்தமிழ்க் கன்பு மிக்கார் சென்றுதம் மன்றி லெய்தி
அந்தரத் தவரை மாலை யயனையு முகந்து நாடி

நந்தமக் கடிமை பூண்டு நயந்தவ னொருவன் சொன்ன
இந்தநற் பாடல் கேண்மி னென்றவர்க் கருளிச் செய்தார்.

இ-ள். செந்தமிழ்க்கு அன்பு மிக்கார் - செந்தமிழ்மொழியிலே அன்பு மிக்க சிவபெருமானனவர்,—சென்று தம் மன்றில் எய்தி - சென்று தங் கனகசபையை அடைந்து,—அந்தரத்தவரை மாலை அயனையும் உகந்து நாடி - தேவரையும் விட்டுணுவையும் பிரமதேவரையும் மகிழ்ந்து நோக்கி,—நந்தமக்கு அடிமை பூண்டு நயந்தவன் ஒருவன் சொன்ன - நமக்கு அடிமைபூண்ட ஓர் அன்பன் பாடிய,—இந்த நல் பாடல் கேண்மின் என்று அவர்க்கு அருளிசசெய்தார் - இந்த நல்ல செந்தமிழ்ப் பாடல்களைக் கேளுஙகள் என்று அவர்கட்கு எடுதது வாசித்துக் காட்டியருளினர். எ-று. (கச)

மெய்த்தவ வாத வூரன் விளம்பிட வெழுது மிந்தப்
புத்தக மன்றா ளாடல் புரிந்தவ னெழுத்தா மென்று
முத்தியை யுதவுங் கோவை முடிவிடத் தெழுதிப் பின்னர்ச்
சித்திர மலர்க்கை யாலே திருந்தமைக் காப்புஞ் செய்தார்.

இ-ள். மெய் தவ வாதவூரன் விளம்பிட - மெய்ம்மையாகிய தவத்தை யுடைய வாதவூரன் கூற,—எழுதும் இந்த புத்தகம் - எழுதிய இப்புத்தகம்,—மன்றாள் ஆடல் புரிந்தவன எழுததாம் என்று - கனகசபையின்கண் நடனஞ்செய்யும் திருசசிற்றம்பலமுடையானது கையெழுத்தாம் என்று,— முத்தியை உதவும் கோவை முடிவு இடத்து எழுதி - முததியைக் கொடுக்க வல்ல திருக்கோவையின் முடிவிலே எழுதி,—பின்னர் - அதன்பின்,—சித்திரம் மலர்க் கையாலே திருந்த மைக்காப்பும் செய்தார் - சித்திரமாகிய தாமரைமலர்போலுந் திருக்கரஙகளினலே திருததமுற மைக்காப்புஞ் செய்தருளினர். எ-று. (கரு)

வெண்பிறை முடித்த வேணி வித்தக ருலகுக் கெல்லாம்
நண்புடை வாத வூரர் நறறவ முணர்த்த வெண்ணி
எண்பெறு முனிவர் விண்ணோ ரிறைஞ்சுமம் பலத்து வாயில்
வண்படி மீதே யுண்மை வாசக முறையை வைத்தார்.

இ-ள். வெண் பிறை முடித்த வேணி வித்தகர் - வெண்மையாகிய பாலசந்திரனையணிந்த சடையையுடைய சாதுரியராகிய சிவபெருமானனவர்,—உலகுக்கு எல்லாம் நண்பு உடை வாதவூரர் நல் தவம் உணர்த்த எண்ணி - இவ்வுலகிற்கெல்லாம் நட்பையுடைய திருவாதவூரரது நல்ல தவத்தை உணர்த்தத் திருவுளஙகொணடு,—எண பெறு முனிவர் விண்ணோர் இறைஞ்சும் அம்பலத்து வாயில் வண் படி மீதே - மூவாயிரமென்னுந் தொகைபெறுந் தில்லைவாழந்தணர்களுந் தேவர்களுந் தம்மைவணங்கி வழிபடுஞ் சிற்சபையின் வாயிலிலுள்ள வளவிய பஞ்சாக்ஷரப்படியின்மீதே,— உண்மை வாசக முறையை வைத்தாா - சத்தியஞானததையே பொருளாக வுடைய திருவாசகபுததகத்தை வைதருளினர். எ-று. (கசு)

வைத்தபின் பூசை செய்யு மந்தணர் வந்து கண்டிப்
புத்தக மிங்கு நண்ணும் புதுமைதை விகமா மென்று
சித்தமங் குருகி நின்று தில்லையுள் ளார்கட் கெல்லாம்
இத்திறங் கூறல வேண்டு மென்றுமன் றகன்று போந்து.

இ-ள். வைத்த பின் - திருமுறையை அங்கே வைத்தபின்னர்,—பூசை செய்யும் அந்தணர் வந்து கண்டு - பூசைசெய்யும் அந்தணர் ஒருவர் வந்து கண்டு,—இப் புத்தகம் இங்கு நண்ணும் புதுமை தைவிகம் ஆம் என்று - இப்புத்தகம் இங்கேவந்த அற்புதம் தேவசெயலேயாம் என்று நிச்சயித்து,—அங்கு சித்தம் உருகி நின்று - அங்கே மனம் நெகருருகிநின்று,—தில்லை உள்ளார்கட்கு எல்லாம் இத்திறம் கூறல வேண்டும் என்று - பின்னர் இச்சிதம்பரவாசிகட்கெல்லாம இச்சம்பவத்தைச் சொல்லுதல்வேண்டும் என்று கருதி,—மன்று அகன்று போந்து - அக்கனகசபையைவிட்டு நீங்கிச் சென்று. எ-று. (கஎ)

செந்திரு மருவுந் தொல்லைத் தில்லைநன் னகரி லுள்ளார்
தந்திரு முன்பு சென்று சாற்றினா ரிந்த நீர்மை
அந்தணர் மொழிந்த பின்ன ரதிசய மிதுவென் றோடி
வந்தவா படிமே லண்ணல் வைத்தபுத் தகங்கண் டார்கள்.

இ-ள். செந்திரு மருவும் தொல்லை தில்லை நல் நகரில் உள்ளார் தம் திரு முன்பு சென்று - இலக்குமிவசிக்கும் பழைய தில்லைமாநகரவாசிகளது சமீபத்திற் போய்,—இந்த நீர்மை சாற்றினா - இவ்வற்புத சம்பவத்தைக் கூறினா,—அந்தணா மொழிந்த பின்னா - அவ்வந்தணா கூறியபின்,—இது அதிசயம் என்று ஓடி வந்தவா - இது பேரற்புதம் என்று வல்விரைந்து வந்த வாகளெல்லாம,—அண்ணல் படிமேல வைத்த புத்தகம் கண்டாாகள் - சிவபிரான் பஞ்சாக்ஷரப்படியினமீது வைத்த திருமுறையை நேரே கண்டார்கள். எ-று. (கஅ)

யாவருந் தம்மு ளாடி யெமமிறை யுறையு மன்றுட்
டேவரும புகுத வொண்ணா தெய்விக மிதுவென் றெண்ணி
மேவுமன் பதனா லண்ணல விளம்பிய சைவ நூலோ
தாவுசெந் தமிழோ வென்று பாரபபது தக்க தென்றார்.

இ-ள். யாவரும் தமமுள் நாடி - அவரனைவருந் தம்முளாராய்ந்து,—எம் இறை உறையும் மன்றுள் தேவரும் புகுத ஒண்ணா - நம் முழுமுதலாகிய சபாநாயகர் வீற்றிருக்குங் கனகசபையினகண்ணே தேவர்களும் உட்பிரவேசித்தல்கூடாது,—இது தெய்விகம் என்று எண்ணி - ஆதலான் இது நங் கடவுள்செயலேயாம என்று நிச்சயஞ்செய்து,—மேவும் அன்பு அதனால் அண்ணல் விளம்பிய சைவ நூலோ - இத்திருமுறை நம்மேற்கொண்ட அன்பினாற் சிவபிரான் திருவாய்மலர்ந்தருளிய சைவாகமமோ,—தாவு செந்

தமிழோ என்று பார்ப்பது தக்கது என்றார் - பரவிய செந்தமிழ் நூலோ என்று பார்ப்பதுவே செயற்பாலது என்று கூறினார்கள். எ-று. (௧௯)

தேக்கிய வருளு மன்புஞ் சிறந்தவ ரெல்லாஞ் சொல்லும்
வாக்கினி லொருவர் சென்று மலர்கொடு வணக்கஞ் செய்து
பூக்கமழ் சடையோன் வைத்த புத்தகந் தன்னைச் சேமம்
நீக்கின ரோதி னார்முன் னீதிகொ ளகவ னான்கும்.

இ-ள். தேக்கிய அருளும் அன்பும் சிறந்தவர் எல்லாம் சொல்லும் வாக்கினில் - நிறைந்த அருளினாலும் அன்பினாலும் விசேடித்தவர்களெல்லாஞ் சொல்லிய சொல்லின்வண்ணமே,—ஒருவர் சென்று மலர் கொடு வணக்கம் செய்து - ஒருவர் சென்று மலர்களைக்கொண்டருச்சித்து வணங்கி,—பூ கமழ் சடையோன் வைத்த புத்தகம் தன்னைச் சேமம் நீக்கினர் - கொன்றைமாலை நறுமணங்கமழுஞ் சடையையுடைய சபாநாயகர் வைத்த அப்புத்தகத்தைக் கட்டவிழ்த்து,—முன் நீதி கொள் அகவல் நான்கும் ஓதினார் - முதற்கண் நீதியையுடைய ஆசிரியப்பா நான்கையும் வாசித்தனர். எ-று.

வேறு.

திருச்சதக முதலாகச் சிறந்ததமி ழறுநூறும்
விரித்தவகப் பொருட்கோவை விளங்கவொரு நானூறும்
உரைத்தனர்பின் முடிந்தவிடத் துயர்வாத வூரன்மொழி
தரித்தெழுது மம்பலவ னெழுத்தென்று சாற்றினார்.

இ-ள். திருச்சதகம் முதலாகச் சிறந்த தமிழ் அறுநூறும் - திருச்சதகம்முதலாகச் சிறந்து விளங்குகின்ற தமிழ்வேதமாகிய திருவாசகம் அறுநூறும்,—அகப்பொருள் விரித்த கோவை ஒரு நானூறும் விளங்க உரைத்தனர் - அகப்பொருட்டுறைகளை விரித்துக்கூறிய திருக்கோவை நானூறும் விளங்க வாசித்தனர்,—பின் முடிந்த இடத்து - பின்னர் முடிவின்கண்,— உயர் வாதவூரன் மொழி - உயர்ந்த வாதவூரன் கவிகளை,—தரித்து எழுதும் அம்பலவன் எழுத்து என்று சாற்றினர் - ஏற்று எழுதிய திருச்சிற்றம்பலமுடையானது கையெழுத்தென்று வாசித்தனர். எ-று. (௨௧)

கேட்டவர்க ளெல்லோருங் கிளர்புளகங் குறுவேர்வு
காட்டுடலுங் கண்ணீருங் கசிந்துருகு சிந்தையுமாய்
ஈட்டியமெய்த் தவமுடையோ னியம்பியவித் தமிழன்றி
வீட்டுநெறிக் கினிச்சிவநூல் வேறுளதோ வென்றார்கள்.

இ-ள். கேட்டவர்கள் எல்லோரும் - இப்பிரபந்தங்களைக் கேட்டவர்கள் அனைவரும்,—கிளர் புளகம் குறுவேர்வு காட்டு உடலும் - கிளராநின்ற புளகமும் குறுவேர்வையுங் காட்டுஞ் சரீரமும்,—கண்ணீரும் கசிந்து உருகு

சிந்தையும் ஆய் - ஆனந்தபாஷ்பமும் நெக்குருகும் மனமுமாய்,—ஈட்டிய மெய் தவம் உடையோன் இயம்பிய இத் தமிழ் அன்றி - பூர்வசன்மங்களிலே தேடிய மெய்ம்மையாகிய தவத்தையுடைய திருவாதவூரர் திருவாய்மலர்ந் தருளிய இத் தமிழ்ப்பிரபந்தங்களல்லது,—வீட்டு நெறிக்கு இனி சிவநூல் வேறு உளதோ என்றார்கள் - மோக்ஷவழிக்குச சிவசாத்திரம் இனி வேறும் ஒன்றுளதோ என வியந்து பேசினார்கள். எ-று. (உஉ)

பூணரவன் றிருநாமம் புகழுமருந் தவர்சொல்ல
யாணரிதன் பொருட்டேனை யின்றுணர்வோ மென்றெண்ணி
மாணுடைமன் றகன்றேகி மறைவல்லார் போதிநிழல்
வீணருடன் பெருவாது வென்றவர்முன் சென்றார்கள்.

இ-ள். இதன் பொருள் யாணர் தேனை - இந்நூற்பொருளாகிய புதிய தேனை,—பூண் அரவன் திருநாமம் புகழும் அருந்தவர் சொல்ல - சர்ப்பாபரணத்தையுடைய சிவபெருமானுடைய திருநாமங்களைத் துதிசெய்யும் அரிய தவத்தையுடைய திருவாதவூரர் சொல்லியருள,—இன்று உணர்வோம் என்று எண்ணி - நாம் இன்றறியக்கடவோம் என்று சிந்தித்து,—மாண் உடை மன்று அகன்று ஏகி - மாட்சிமைபொருந்திய கனகசபையை விட்டு நீங்கி,—மறை வல்லார் - வேதத்தில் வல்லவரும்,—போதி நிழல் வீணருடன் பெரு வாது வென்றவர் முன் சென்றார்கள் - அரசமரநிழலை நன்குமதிக்கும் வீணர்களாகிய புத்தர்களோடு வாதஞ்செய்து வென்றவருமாகிய திருவாதவூரரது சந்நிதியிற் சென்றனர். எ-று. (உ௩)

சென்றவர்தந் திருமுன்பு திருமுறைவைத் தண்டர்பிரான்
இன்றுசெயுஞ் செயலிதுவென் றியம்பினர்நின் றெல்லோரும்
ஒன்றியவென் புன்பாட லுவந்தருளப் புவிமீதில்
அன்றுசெயுந் தவமறியே னென்றழுதா ரன்பாளர்.

இ-ள். எல்லோரும் சென்று - யாவரும் சென்று,—அவர் தம் திரு முன்பு திருமுறை வைதது - அவர் சந்நிதியிலே அத்திருமுறையைவைத்து,—அண்டர் பிரான் இன்று செயும் செயல் இது என்று நின்று இயம்பினர் - தேவநாயகராகிய சிவபெருமான் இன்று செய்த செயல் இதுவேயாம் என்று வணங்கி எழுந்துநின்று சொல்லினர்,—அன்பாளர் - அன்பையாளுந் திருவாதவூரர்,—ஒன்றிய என் புன் பாடல் உவந்தருள - எளிமைபொருந்திய எனது புல்லிய பிரபந்தங்களை நமதான்மநாயகர் திருவுளமுவந்து தம தருமைத் திருக்கரங்களினாலே எழுதியருள,—புவி மீது அன்று செயும் தவம் அறியேன் என்று அழுதார் - பூமியிலே பூர்வசன்மங்களிற்செய்த தவத்தைத் தமியேன் இன்னது என்று அறியேனென்றழுதார். எ-று. (உச)

புண்ணியரிங் கிவ்வாறு புலம்பினர்பின் புலியூரில்
எண்ணருமன் புடையார்க ளிதமுடனஞ் சலிசெய்து

பண்ணுலவுஞ் சிவஞானப் பாடல்கொளும் படிநம்பால்
நண்ணுமரன் செய்ததென்னீர் நவிலுமெனச் சொன்னூர்கள்.

இ-ள். புண்ணியர் இங்கு இவ்வாறு புலம்பினர் - புண்ணியராகிய திருவாதவூரர் இங்கே இவ்வாறு புலம்பினர்,—பின் - அதன்பின்பு,—புலியூரில் எண அரும் அன்பு உடையார்கள் - சிதம்பரத்துள்ள அளவற்ற அன்புடையவர்கள்,—இதம் உடன் அஞ்சலி செய்து - பிரீதியோடு கைகுவித்துக் கும்பிட்டு வணங்கி,—பண் உலவும சிவ ஞானப் பாடல் கொளும்படி நம்பால் நண்ணும் அரன் - பண்பொருந்துஞ் சிவஞானப் பொருளையுடைய பாக்களைப் பாடுவித்துக்கொள்ளும்பொருட்டுத் தேவரீர்மாட்டெழுந்தருளுஞ் சபாநாயகர்,—செய்தது என் - செய்தருளிய செயல் யாது,—நீர் நவிலும் எனச் சொன்னூர்கள் - தேவரீர் சொல்லியருளும் என்று பிரார்த்தித்தார்கள். எ-று. (உ௫)

அல்லலெனும் பிறவியிலா ரண்ணல்செயுஞ் செயல்யாவுஞ்
சொல்லினர்பின் புலியூரர் தொழுதுமனங் களிகூர்ந்து
தில்லையிலெம் பெருமானைச் செப்பியவித் தமிழ்மாலை
நல்லவரும் பொருள்கூற வேண்டுமென நவின்றூர்கள்.

இ-ள். அல்லல் எனும் பிறவி இலார் - துன்பத்திற்கேது என்னும் பிறப்பற்ற திருவாதவூரர்,—அண்ணல் செயும் செயல் யாவும் சொல்லினர் - சிவபெருமான் தம்மாட்டெழுந்தருளிவந்து செய்தருளிய செயல்கள் அனைத்தையுஞ் சொல்லியருளினூ,—பின் - சொல்லியபின்னர்,—புலியூரர் மனம் களிகூர்ந்து தொழுது - தில்லைவாசிகள் அதுகேட்டு மனம் மிகமகிழ்ச்சியடைந்து வணஙகி,—எம் தில்லையில் பெருமானைச் செப்பிய இத் தமிழ் மாலை நல்ல அரும் பொருள் - நஞ் சிதம்பர சபாநாயகரையே தலைவராகக் கொண்டு தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய இத்தமிழ்ப்பிரபந்தங்களின் சிறந்த அரிய அர்த்தத்தை,—கூறவேண்டும் என நவின்றூர்கள் - தேவரீரே தமியேஙகட்குச் சொல்லியருளவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். எ-று.

ஓங்குபுகழ்த் திருவாதவூருறையும் பெருமானும்
தேங்கியமெய்ச் சிவஞானச் சிந்தையுடன் களிகூர்ந்து
பூங்கனகப் பொதுவெதிரே போய்ப்பகர்வே னெனப்போக
ஆங்கவர்முன் சென்றூரு மன்பொடுபின் சென்றூர்கள்.

இ-ள். ஓங்கு புகழ் திருவாதவூர் உறையும் பெருமானும் - மிக்க பெரும்புகழையுடைய திருவாதவூரிலே வசிக்கும் நஞ் சமயகுரவராகிய மாணிக்கவாசகசுவாமிகளும்,—களி கூர்ந்து - மிகக் களிப்படைந்து,—மெய் சிவஞானம் தேஙகிய சிந்தை உடன் - மெய்ம்மையாகிய சிவஞானம் பொங்கி வழிகின்ற இருதயத்துடன்,—பூ கனகப் பொது எதிரே போய்ப் பகர்வேன் எனப் போக - பொலிவாகிய கனகசபைக்கெதிரே போய் இவைகளின் பொருளை உஙகட்குச சொல்வேன் என்று கூறிச் சென்றருள,—

ஆங்கவர் முன் சென்றாரும் அன்பு ஒடி பின் சென்றார்கள் - அவர்மாட்டு முன் சென்றவர்களும் அவர்மீது அன்புகூர்ந்து பின்னாகச் சென்றனர். எ-று.

நின்றபுகழ்ப் புலியூரர் நேயமுடன் புடைசூழச்
சென்றருளுக் கிடமான செம்பொனினம் பலமெய்தி
ஒன்றியவித் தமிழ்மாலைப் பொருளிவரென் றுரைசெய்து
மன்றதனிற் கடிதேகி மறைந்தனரங் கவர்காண.

இ-ள். நின்ற புகழ்ப் புலியூரர் நேயமுடன் புடை சூழச் சென்று - நிலைபெற்ற கீர்த்தியையுடைய சிதம்பரவாசிகளெல்லாம் பத்தியோடு பக்கத்தே சூழ்ந்துவரச் சென்று,—அருளுக்கு இடம் ஆன செம்பொனின் அம்பலம் எய்தி - அருட்கிடமாகிய கனகசபையை அடைந்து,—ஒன்றிய இத் தமிழ் மாலைப் பொருள் இவர் என்று உரை செய்து - பொருந்திய இத் தமிழ்ப் பிரபந்தப்பொருள் இச்சபாநாயகரே என்று திருவாய்மலர்ந்து,—மன்றதனில் கடிது ஏகி அவர் காண அங்கு மறைந்தனர் - அச்சபையின்கண் விரைந்து சென்று அவர்கள் நேரே காண அங்கே மறைந்தருளினார். எ-று.

செய்காட்டுங் கமுகடவித் தில்லையுளார் பொருளென்றே
கைகாட்டித் தம்முருவங் காட்டாமன் மறைந்தாரைப்
பைகாட்டும் பேரரவப் பணியுடையார் தமக்கன்பு
மெய்காட்டிப் பாலுடனே மேவியநீ ராக்கினார்.

இ-ள். செய் காட்டும் கமுகு அடவி தில்லை உளார் பொருள் என்றே - வயல்களைக்காட்டுங் கமுகங்காடுசூழ்ந்த தில்லையிலுள்ளாராகிய சபாநாயகரே இப்பிரபந்தங்கட்குப் பொருள் என்று,—கை காட்டி தம் உருவம் காட்டாமல் மறைந்தாரை - கையினாலே சபாநாயகரைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தந்திருமேனியைக் காட்டாது மறைந்தருளிய திருவாதவூரரை,—பை காட்டும் பேர் அரவ பணி உடையார் - படத்தைக்காட்டும் பெரிய சர்ப்பத்தை ஆபரணமாகவுடைய சபாநாயகர்,—தமக்கு மெய் அன்பு காட்டி - தம்மிடத்தவர் கொண்ட மெய்யன்பை நம்மனோர்க்குக் காட்டி,—பால் உடனே மேவிய நீர் ஆக்கினார் - பாலோடுகலந்த நீர்போலத் தம்மோடு கலந்து பெருவாழ்வடையும்படி செய்தருளினார். எ-று. (உக)

வேறு.

ஈனமிகுந் துளதோலு மென்புநரம் புஞ்சீயும்
ஆனவுடல் சிவரூப மாமிதனைத் தெளியாமல்
ஊனவுடற் கிரைதேடி யுழன்றுலகிற் றடுமாறி
மாநரகிற் புகுவாரே மாயைவலைப் படுவார்கள்.

இ-ள். மாயைவலைப் படுவார்கள் - மாயாகாரியமாகிய பிரபஞ்சவலையிற் சிக்குண்டவர்கள்,—ஈனம் மிகுந்து உள தோலும் என்பும் நரம்பும் சீயும் ஆன உடல் - இழிவுமிகுந்துள்ள தோலும் எலும்பும் நரம்புஞ் சீயுமாகிய உடம்பும்,—சிவரூபம் ஆம் இதனைத் தெளியாமல் - சிவரூபமாகும் இதனைத் தெளியாமல்,—ஊன உடற்கு இரை தேடி உலகில் உழன்று தடுமாறி - தசைப்பொதியாகிய இவ்வுடம்பிற்கு உணவைத்தேடி உலகெங்குஞ் சுழன்று தடுமாறித் திரிந்து,—மா நரகில் புகுவாரே - முடிவிற் பெரிய நரகத்தின்கண் வீழ்ந்தழுந்துவாரே இஃதென்னை. எ-று. (ரு0)

வேறு.

அண்டனை யண்டர் கோனை யன்பின ரடையு மாறு
கண்டனர் புளக மெய்திக் கம்பித மாகி நின்று
விண்டனர் கசிந்து சிந்தை வேர்த்தனர் மேனி யெங்குங்
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் தில்லை யுள்ளார்.

இ-ள். தில்லை உள்ளார் - அப்பொழுது சிதம்பரவாசிகளெல்லாம்,—அண்டனை - சிதாகாசரூபனை,—அண்டர் கோனை - மகாதேவனை,—அன்பினர் அடையும் ஆறு கண்டனர் - பத்திமானாகிய திருவாதவூரர் அடையுந்தன்மையைக் கண்டார்கள்,—புளகம் எய்திக் கம்பிதம் ஆகி நின்று சிந்தை கசிந்து விண்டனர் - புளகங்கொண்டு சரீரம் விதிர்விதிர்த்துநின்று மனம்நெக்குருகினார்கள்,—மேனி எங்கும் வேர்த்தனர் - சரீரமெங்கும் வேர்வைகொண்டார்கள்,—மகிழ்ச்சி கொண்டனர் - பரமானந்தமடைந்தார்கள்,—செங்கை குவித்தனர் - சிவந்த கைகளைக் கூப்பிக் கும்பிட்டு வணங்கினார்கள். எ-று.

வேறு.

பூத நடங்க டொடங்கின போத மகிழ்ந்தணு குங்கண
நாதர் புகழ்ந்தனர் தும்புரு நாரத ரங்கிசை கொண்டனர்
வேதமொ டந்தர துந்துபி மீது முழங்கி யெழுந்தன
மாதவ ரிந்திர ரைந்தரு மாமலர் சிந்தி வணங்கினர்.

இ-ள். பூதம் நடங்கள் தொடங்கின - பூதங்கள் ஆனந்தக்கூத்தாடின,—போத மகிழ்ந்து அணுகும் - மிக மகிழ்ந்தணுகிய,—கணநாதர் புகழ்ந்தனர் - கணநாதர்கள் துதித்தார்கள்,—தும்புரு நாரதர் அங்கு இசை கொண்டனர் - தும்புருவும் நாரதரும் அங்கே கீதம்பாடினார்,—வேதம் ஒடு அந்தர துந்துபி மீது எழுந்து முழங்கின - வேதங்களுந் தேவதுந்துபிகளும் ஆகாயத்திலே எழுந்து மிக்கொலித்தன,—மாதவர் இந்திரர் ஐந்தரு மா மலர் சிந்தி வணங்கினர் - பெரிய தபோதனர்களும் இந்திராதிதேவர்களும் பஞ்சதருக்களின் பெருமையாகிய பூக்களைச் சிந்தி வணங்கித் துதித்தார்கள். எ-று. (ருஉ)

ஞான நடம்பயில் சங்கர நாம மிருந்துள நெஞ்சினர்
மோன சுகந்த முடன்சிவ பூசை முயன்று நயந்தவர்
ஊனமி லன்பொடு தென்புலி யூரி லுறைந்து சிறந்தவர்
வானக மும்பர வுந்திரு வாசக வின்ப நுகர்ந்தனர்.

இ-ள். ஞானம் நடம் பயில் சங்கரன் நாமம் இருந்துள நெஞ்சினர் - ஞானநடனஞ்செய்தருளுஞ் சிவபெருமானது பஞ்சாக்ஷரங் குடிகொண் டிருக்கும் மனத்தையுடைய யோகிகளும்,—மோன சுகந்தம் உடன் சிவ பூசை முயன்று நயந்தவர் - மௌனத்தோடும் சுகந்தவர்க்கங்களோடும் சிவ பூசையை முயன்றுசெய்து விருப்படைந்த கிரியாவான்களும்,—ஊனம் இல் அன்பு ஒடு தென் புலியூரில் உறைந்து சிறந்தவர் - குற்றமற்ற அன் பினுடனே தெற்கின்கணுள்ள சிதம்பரத்தில் வசித்தலாற் சிறந்த சரியாவா ன்களும்,—வானகமும் பரவும் திருவாசக இன்பம் நுகர்ந்தனர் - விண் ணுலகவாசிகளாகிய தேவர்களுந் துதிக்கத்தகுந் திருவாசகம் என்னுந் தமிழ் வேதச் சொற்சுவை பொருட்சுவைகளை நன்கனுபவித்தனர். எ-று. (௩௩)

வாதவூ ரந்தணர் தந்திரு வாய்மை விளங்கு திருக்கதை
ஓதின ரன்புட னொண்செவி யூடு முகந்தது கேட்டவர்
போதமெய்ஞ் ஞான முறுஞ்சுகபோக முடன்புகழ்பெறுவர்கள்
தீதில் பவங்க டொலைந்துபின் சேருவர் வண்சிவ லோகமே.

இ-ள். திரு வாதவூர் அந்தணர் தம் வாய்மை விளங்கு திருக்கதை - திருவாதவூரருடைய உண்மைவிளங்கும் இத் திருப்புராணத்தை,—அன்பு உடன் ஓதினர் - அன்போடு ஓதினவர்களும்,—ஒண் செவி ஊடு முகந்து அது கேட்டவர் - அழகிய செவிகளான் முகந்து அதனை உற்றுக் கேட்டவர் களும்,—போத மெய் ஞானம் உறும் சுக போகம் உடன் புகழ் பெறுவர் கள் - போதமாகிய மெய்ஞ்ஞானத்தையும் மிக்க சுகபோகவாழ்வையும் புக ழையும் இம்மைக்கட் பெறுவார்கள்,—பின் பவங்கள் தொலைந்து தீது இல் வண் சிவலோகம் சேருவர் - தேகாந்தத்திற் பிறவிதொலைந்து தீதற்ற சிறந்த சிவலோகத்தை அடைவார்கள். எ-று. (௩௪)

வேறு

பூதல மாதும் வாழ்க பொன்மழை பொழிந்து வாழ்க
வேதவா கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க
தீதிலைந் தெழுத்து நீறுஞ் சிவனடி யாரும் வாழ்க
வாதவூ ரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க.

இ-ள். பூதல மாதும் வாழ்க - பூமிதேவியும் வாழ்க,—பொன் மழை பொழிந்து வாழ்க - பொன்போலும் முகில்கள் மழைபொழிந்து வாழ்க,—

வேத ஆகமமும் வாழ்க - வேதாகமங்களும் வாழ்க,—வேந்தர் செங்கோலும் வாழ்க - அரசருடைய செங்கோலும் வாழ்க,—தீது இல் ஐந்து எழுத்தும் நீறும் சிவன் அடியாரும் வாழ்க - தீதற்ற பஞ்சாக்ஷரமும் விபூதியுஞ் சிவ பத்தர்களும் வாழ்க,—வாதவூரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க - இத்திருவாதவூரர் புராணத்தை அன்போடு படித்தவர்களும் கேட்டோர்களும் வாழ்க. எ-று. (௩௫)

திருவடிபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௪௬.

---

திருவாதவூரர்புராணம் முற்றுப்பெற்றது



# சுத்தி பத்திரம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௨௯ | களிற்றின் | கவளமாமுகத்தின் |
| ௨ | ௩௦ | என்பதற்கு | எனக்கொண்டு |
| ௪ | ௧௦ | மனபர் | மன்பர் |
| ௬ | ௯ | னருளநற் | னருளாற் |
| ௧௧ | ௩௫ | சிவபெரு | சிவபெருமா |
| ௧௩ | ௨௮ | தண்டேன | தண்டேன் |
| ௧௯ | ௭ | ஒலி | ஒலி |
| ௨௧ | ௧௪ | முன் | முன் முறைமுறை |
| ,, | ௧௫ | சந்நிதியில் | சந்நிதியில் முறைமுறை |
| ௨௨ | ௨௩ | மண்ணுல | மண்ணுலக |
| ௫௨ | ௨௦ | அரசன் | அரசா |
| ௬௯ | ௨௨ | முழைத்தது | முளைத்தது |
| ,, | ௩௭ | கண் | பின்னர் கண் |
| ,, | ,, | கண்களை | பின் கண்களை |
| ௭௧ | ௩௭ | கூறி. | கூறினர். |
| ௮௯ | ௫ | சோரனும் | சோரானும் |
| ௯௦ | ௩ | ஈர்த்தனர் | ஈத்தனர் |
| ,, | ௮ | ஈர்த்தனர் | ஈத்தனர் |
| ,, | ௯ | இழுத்து | கொடுத்தனர் |
| ௧௦௦ | ௧௪ | இடிய | இடித்து |
| ,, | ௩௬ | முனிவொழித | சினந்தணித |
| ௧௦௨ | ௨௮ | மூன்னே | முன்னே |
| ௧௦௩ | ௧௨ | மூன்னர் | முன்னர் |
| ,, | ௩௩ | முறையு | உறையு |
| ௧௧௪ | ௧௬ | ஆரவாரித்து இரங்கி | ஆரவாரித்து |
| ௧௨௦ | ௩௧ | மண்சுந்த | மண்சுமந்த |
| ௧௩௧ | ௩௫ | சங்கம் | மங்கலசங்கம் |
| ௧௩௨ | ௧ | சங்கம் | மங்கலசங்கம். |
| ௧௭௨ | ௧௮ | உயிர்சசி | உயர்சசி |
| ௧௭௬ | ௨௭ | வாழ்க | மிகவாழ்க |

# திருவெம்பாவை.



ஆதியுமந்தமுமில்லாவரும்பெருஞ்
சோதியையாம்பாடக்கேட்டேயும்வாட்டடங்கண்
மாதேவளருதியோவன்செவியோநின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள்வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க்கேட்டலுமேவிம்மிவிம்மிமெய்ம்மறந்து
போதாரமளியின்மேனின்றும்புரண்டிங்ஙன்
ஏதேனுமாகாள்கிடந்தாளென்னேயென்னே
யீதேயெந்தோழிபரிசேலோரெம்பாவாய். (௧)

பாசம்பரஞ்சோதிக்கென்பாயிராப்பகனாம்
பேசும்போதெப்போதிப்போதாரமளிக்கே
நேசமும்வைத்தனையோநேரிழையாய்நேரிழையீர்
சீசீயிவையுஞ்சிலவோவிளையாடி
ஏசுமிடமீதோவிண்ணோர்களேத்துதற்குக்
கூசுமலர்ப்பாதந்தந்தருளவந்தருளுந்
தேசன்சிவலோகன்றில்லைச்சிற்றம்பலத்து
ளீசனார்க்கன்பார்யாமாரேலோரெம்பாவாய். (௨)

முத்தன்னவெண்ணகையாய்முன்வந்தெதிரெழுந்தென்
னத்தனானந்தனமுதனென்றள்ளூறித்
தித்திக்கப்பேசுவாய்வந்துன்கடைதிறவாய்
பத்துடையீரீசன்பழவடியீர்பாங்குடையீர்
புத்தடியோம்புன்மைதீர்த்தாட்கொண்டாற்பொல்லாதோ
வெத்தோநின்னன்புடைமையெல்லோமறியோமோ
சித்தமழகியார்பாடாரோநஞ்சிவனை
யித்தனையும்வேண்டுமெமக்கேலோரெம்பாவாய். (௩)

ஒண்ணித்திலநகையாயின்னம்புலர்ந்தின்றோ
வண்ணக்கிளிமொழியாரெல்லாரும்வந்தாரோ
எண்ணிக்கொடுள்ளவாசொல்லுகோமவ்வளவுங்
கண்ணைத்துயின்றவமேகாலத்தைப்போக்காதே

விண்ணுக்கொருமருந்தைவேதவிழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப்பாடிக்கசிந்துள்ளம்
உண்ணெக்குநின்றுருகயாமாட்டோநீயேவந்
தெண்ணிக்குறையிற்றுயிலேலோரெம்பாவாய். (ச)

மாலறியாநான்முகனுங்காணாமலையினைநாம்
போலறிவோமென்றுள்ளபொக்கங்களேபேசும்
பாலூறுதேன்வாய்ப்படிறீகடைதிறவாய்
ஞாலமேவிண்ணேபிறவேயறிவரியான்
கோலமுநம்மையாட்கொண்டருளிக்கோதாட்டுஞ்
சீலமும்பாடிச்சிவனேசிவனேயென்
றோலமிடினுமுணராயுணராய்கா
ணேலக்குழலிபரிசேலோரெம்பாவாய். (ரு)

மானேநீநென்னலைநாளைவந்துங்களை
நானேயெழுப்புவனென்றலுநாணாமே
போனதிசைபகராயின்னம்புலர்ந்தின்றோ
வானேநிலனேபிறவேயறிவரியான்
தானேவந்தெம்மைத்தலையளித்தாட்கொண்டருளும்
வானவார்கழல்பாடிவந்தோர்க்குன்வாய்திறவாய்
ஊனேயுருகாயுனக்கேயுறுமெமக்கு
மேனோர்க்குந்தங்கோனைப்பாடேலோரெம்பாவாய். (சா)

அன்னேயிவையுஞ்சிலவோபலவமர
ருன்னற்கரியானொருவனிருஞ்சீரான்
சின்னங்கள்கேட்பச்சிவனென்றேவாய்திறப்பாய்
தென்னாவென்னாமுன்னந்தீசேர்மெழுகொப்பாய்
என்னானையென்னரையனின்னமுதென்றெல்லோமுஞ்
சொன்னோங்கேளவெவ்வேறாயின்னந்துயிலுதியோ
வன்னெஞ்சப்பேதையர்போல்வாளாகிடத்தியா
லென்னேதுயிலின்பரிசேலோரெம்பாவாய். (எ)

கோழிசிலம்பச்சிலம்புங்குருகெங்கு
மேழிலியம்பவியம்பும்வெண்சங்கெங்குங்
கேழில்பரஞ்சோதிகேழில்பரங்கருணை
கேழில்விழுப்பொருள்கள்பாடினோங்கேட்டிலையோ
வாழியீதென்னவுறக்கமோவாய்திறவா
யாழியானன்புடைமையாமாறுமிவ்வாறோ

ஊழி முதல்வனாய்நின்ற வொருவனை
யேழைபங்காளனையே பாடேலோ ரெம்பாவாய். (அ)

முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளே
பின்னைப்புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப்பிரானாகப் பெற்றவுன் சீரடியோ
முன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே யெங்கணவ ராவாரவருகந்து
சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்னவகையே யெமக்கெங்கோ னல்குதியே
லென்னகுறையு மிலோமேலோ ரெம்பாவாய். (௯)

பாதாள மேழினுங்கீழ்ச் சொற்கழிவு பாதமலர்
போதார்புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதையொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்
ஓதவுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில்குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்
ஏதவனூரேதவன்பே ராருற்றா ரயலா
ரேதவனைப் பாடும்பரிசேலோ ரெம்பாவாய். (௧௦)

மொய்யார் தடம்பொய்கை புக்குமுகே ரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன்கழல் பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காணாரழல்போற்
செய்யாவெண்ணீ றாடி செல்வா சிறுமருங்குன்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
வையாநீ யாட்கொண்டருளும் விளையாட்டின்
உய்வார்க ளுய்யும்வகையெல்லா முய்ந்தொழிந்தோ
மெய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். (௧௧)

ஆர்த்தபிறவித் துயர்கெட நாமார்த்தாடுந்
தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தனிவ் வானுங் குவலயமு மெல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசிவளை சிலம்ப வார்கலைக
ளார்ப்பரவஞ் செய்ய வணிகுழன்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாத
மேத்தியிருஞ் சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். (௧௨)

பைங்குவளைக்கார்மலராற்செங்கமலப்பைம்போதா
லங்கங்குருகினத்தாற்பின்னுமரவத்தால்
தங்கண்மலங்கழுவுவார்வந்துசார்தலினா
லெங்கள்பிராட்டியுமெங்கோனும்போன்றிசைந்த
பொங்குமடுவிற்புகப்பாய்ந்துபாய்ந்துநஞ்
சங்கஞ்சிலம்பச்சிலம்புகலந்தார்ப்பக்
கொங்கைகள்பொங்கக்குடையும்புனல்பொங்கப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய். (கங)

காதார்குழையாடப்பைம்பூண்கலனாடக்
கோதைகுழலாடவண்டின்குழாமாடச்
சீதப்புனலாடிச்சிற்றம்பலம்பாடி
வேதப்பொருள்பாடியப்பொருளாமாபாடிச்
சோதிதிறம்பாடிச்சூழ்கொன்றைத்தார்பாடி
யாதிதிறம்பாடியந்தமாமாபாடிப்
பேதித்துநம்மைவளர்த்தெடுத்தபெய்வளைதன்
பாதத்திறம்பாடியாடேலோரெம்பாவாய். (கச)

ஓரொருகாலெம்பெருமானென்றென்றேநம்பெருமான்
சீரொருகால்வாயோவாள்சித்தங்களிகூர
நீரொருகாலோவாநெடுந்தாரைகண்பனிப்பப்
பாரொருகால்வந்தனையாள் விண்ணோரைத்தான்பணியாள்
பேரரையற்கிங்ஙனேபித்தொருவராமாறு
மாரொருவரிவ்வண்ணமாட்கொள்ளும்வித்தகர்தாள்
வாருருவப்பூண்முலையீர்வாயாரநாம்பாடி
யேருருவப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய். (கரு)

முன்னிக்கடலைச்சுருக்கியெழுந்துடையா
ளென்னத்திகழ்ந்தெம்மையாளுடையாளிட்டிடையின்
மின்னிப்பொலிந்தெம்பிராட்டிதிருவடிமேற்
பொன்னஞ்சிலம்பிற்சிலம்பித்திருப்புருவம்
என்னச்சிலைகுலவிநந்தம்மையாளுடையா
டன்னிற்பிரிவிலாவெங்கோமானன்பர்க்கு
முன்னியவணமக்குமுன்சுரக்குமின்னருளே
யென்னப்பொழியாய்மழையேலோரெம்பாவாய். (கசு)

செங்கணவன்பாற்றிசைமுகன்பாற்றேவர்கள்பா
லெங்குமிலாததோரின்பநம்பாலதாக்

கொங்குண்கருங்குழலிநந்தம்மைக்கோதாட்டி
யிங்குநம்மில்லங்கடோறுமெழுந்தருளிச்
செங்கமலப்பொற்பாதந்தந்தருளுஞ்சேவகனை
யங்கணரசையடியோங்கட்காரமுதை
நங்கள்பெருமானைப்பாடிநலந்திகழப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய். (கஎ)

அண்ணாமலையானடிக்கமலஞ்சென்றிறைஞ்சும்
விண்ணோர்முடியின்மணித்தொகைவீறற்றாற்போற்
கண்ணாரிரவிகதிர்வந்துகார்கரப்பத்
தண்ணாரொளிமழுங்கித்தாரகைகடாமகலப்
பெண்ணாகியாணாயலியாய்ப்பிறங்கொளிசேர்
விண்ணாகிமண்ணாகியித்தனையும்வேறாகிக்
கண்ணாரமுதமுமாய்நின்றான்கழல்பாடிப்
பெண்ணேயிப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய். ()

உங்கையிற்பிள்ளையுனக்கேயடைக்கலமென்
றங்கப்பழஞ்சொற்புதுக்குமெம்மச்சத்தால்
எங்கள்பெருமானுனக்கொன்றுரைப்போங்கே
ளெங்கொங்கைநின்னன்பரல்லார்தோள்சேரற்க
எங்கையுனக்கல்லாதெப்பணியுஞ்செய்யற்க
கங்குல்பகலெங்கண்மற்றொன்றுங்காணற்க
இங்கிப்பரிசேயெமக்கெங்கோனல்குதியே
லெங்கெழிலென்ஞாயிறெமக்கேலோரெம்பாவாய். (ககூ)

போற்றியருளுகநின்னாதியாம்பாதமலர்
போற்றியருளுகநின்னந்தமாஞ்செந்தளிர்கள்
போற்றியெல்லாவுயிர்க்குந்தோற்றமாம்பொற்பாதம்
போற்றியெல்லாவுயிர்க்கும்போகமாம்பூங்கழல்கள்
போற்றியெல்லாவுயிர்க்குமீறாமிணையடிகள்
போற்றிமானான்முகனுங்காணாதபுண்டரிகம்
போற்றியாமுய்யவாட்கொண்டருளும்பொன்மலர்கள்
போற்றியாமார்கழிநீராடேலோரெம்பாவாய். (உ0)

திருச்சிற்றம்பலம்.

---